# இளையோர் உளவியல்

(PSYCHOLOGY OF ADOLESCENCE)

அ. அப்துல்கரீம்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க. வெ.) வரிசை எண்—641

# இளையோர் உளவியல்

[பட்டப்படிப்பிற்குரியது]

(திருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகின்றது)

ஆசிரியர்

அ. அப்துல் கரீம், எம்.ஏ.,
உளவியல் துணைப் பேராசிரியர்,
மாநிலக் கல்லூரி,
சென்னை



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினைந் தாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பட்டப் படிப்பு வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத் தையும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். 1969ஆம் ஆண்டி லிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறை களில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண் டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறி வியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்ப தற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக் கழகமும், சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்து வரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், மெய்ப் பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டம் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூல நூல்கள் மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகின்றது.

இவற்றுள் ஒன்றான 'இளையோர் உளவியல்' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 641 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 676 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப் படுகின்றது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும், கலையியற் பாடங்களை யும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங் களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளரவேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல், எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ் எங்கும் தமிழ்' என்ற குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு, தமிழகத்து ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களை யும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல் வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

# 1. இளையோர் பருவம்: முக்கியத்துவமும் ஆய்வு முறைகளும்

சிக்கலமைப்பு வாய்ந்த ஒரு சமூகத்தில், அச் சிக்கலமைப்புகளையும், அதற்கேற்ற நடத்தை முறைகளையும் மேலும் மனித வாழ்விற்குத் தேவையான நடத்தைகளையும் ஒரே நாளில் ஒருவன் கற்றுணர்ந்து மறுநாள் ஒரு புது மனிதனைகத் தோன்றுவது இயலாததொன்றாகும். குழந்தையாய்ப் பிறந்த மனிதன், இவைகளையெல்லாம் பல நாள்கள் கற்றுப் படிப் படியாகத் தேர்ந்து, தொடர்ச்சியாக மாற்றங்களைத் தன்னுள் விளைவித்துக் கொண்ட பின்னரே, இறுதியில் வளர்ச்சியடைந்த முதிர்ந்தவனை, சமூக அங்கீகரிப்பைப் பெறுகின்றான். பாலின முதிர்ச்சி, இளையோர் பருவத்தைத் தோற்றுவிக்கின்றதென்றாலும், பாலின முதிர்ச்சி ஏற்பட்டவுடனே முதிர்ந்த வாழ்க்கைக்குத் தேவையான ஏனைய தன்மைகளின் முதிர்ச்சிகளும் தாமாகவே தோன்றிவிடுவதில்லை. எண்ணற்றவைகளை அனுபவித்து, பல தரப்பட்ட வாழ்க்கை முறைகளை, படிப்பினைகளை அறிந்து, உணர்ந்த பிறகே ஒரு தனியன் முழு மனிதனைக மாற முடிகின்றது. எனவே, ஒரு தனியன் குழந்தைப் பருவத்திலிருந்து முதிர்ச்சிப் பருவத்திற்கு மாறுவதற்குத் தேவையானவற்றைத் தோற்றுவித்துக் கற்பிப்பது இளையோர் பருவமாகும்.

'சக்தி பெற்றிருந்தும் அறியாதது இளமை; அறிந்திருந்தும் சக்தியற்றது முதுமை' என்பது முதுமொழி. இக் கூற்று இளையோர் பருவ வாழ்க்கையினைப் பற்றிய ஒரு முக்கிய உண்மையினை எடுத்துரைக்கின்றது. இளையோர் பருவத்தில், வாழ்க்கை எனும் கடலில் கொந்தளித்தெழும் அலைகள் உச்சக் கட்டத்தை அடைகின்றன. காதல், வலிமை ஆகியவற்றைப் பற்றிய இளமையின் கனவுகள் வாழ்க்கையின் உண்மைகளால் குலைக்கப்படுவதில்லை. எனவே, இளையோன் பலவகைகளில் வாழ்க்கையின்

வசந்தகாலத்திற்கும் கோடைக்காலத்திற்கும் இடைப்பட்ட மதுரமான பருவத்தில் வாழ்கின்ருன்.

பொதுவாக, இளையோர் பருவம் பலவற்றைச் சாதிக்கும் ஆற்றல் நிறைந்த காலமாக இருப்பினும், மிகப் பலருக்கு இடுக்கண்கள் நிறைந்த சோதனைக் காலமாகவும் இருக்கின்றது. தன் வாழ்க்கையினை நன்கு அனுபவிப்பதற்கும், தன்னுடைய ஆற்றல்களை நிரூபித்து மனநிறைவு அடைவதற்கும், தனக்குள்ள சுதந்திரத்தில் தனக்கு உள்ளிருந்தும் வெளியிலிருந்தும் பல கட்டுப்பாடுகளும் தடைகளும் எழுவதை இளையோன் காண்கின்ருன். அவன் கடைப்பிடிக்கவேண்டிய ஒழுங்கு முறைகள், பொருந்தி நடக்கவேண்டிய நியதிகள் ஆகியவை புறத்தே எழும் கட்டுப்பாடுகளாகும். இப் புறக்கட்டுப்பாடுகள் வெளிப்படையாகப் புலப்படக்கூடியவை. இவை தனியனின் ஆளுமைத்தன்மையினை வெகுவாகப் பாதிக்கக்கூடியவையாகும். இளையோனின் உள்ளிருந்து எழும் கட்டுப்பாடுகள் புலப்படாதவைகளாயிருப்பினும், பல வகைகளில் அவை மிகுந்த செல்வாக்குடையனவாயிருக்கின்றன.

இளையோர்களை நாம் பார்க்கும்பொழுது அவர்கள் கவலையற்று வாழ்வதாகத் தோன்றும். இன்றைய இளைஞர்களைப் பொறுப்பற்றவர்கள் என்றும் சிலர் கருதுவதுண்டு. ஆனால், இவ்வித எண்ணங்கள் தவறானவை. வாழ்க்கையின் மற்றப் பருவங்களைப் போலவே இளையோர் பருவத்திலும் ஒரு தனியன் தன்னைப் பற்றிய பல பிரச்சினைகளுக்குள்ளாகின்ருன். சான்ருக, தான் என்னவாக இருக்கின்ருன்? தன்னைப்பற்றி அவன் என்ன எதிர்பார்க்கின்ருன்? மற்றவர்கள் தன்னிடமிருந்து என்ன எதிர்பார்க்கின்ருர்கள்? எவற்றைத் தான் அடைய முடியும்? எவற்றை அடைய முடியாது? புதிய, அனுபவமற்ற வாழ்க்கைப் பகுதிகளில் எந்த அளவிற்குத் தான் துணிந்து ஈடுபட முடியும்? எந்த அளவிற்குத் தான் குழந்தைப் பருவத்துப் பழக்கவழக்கங்களையே மேற்கொண்டு நடக்கவேண்டும்? என்பது போன்ற பிரச்சினைகளை இப்பொழுது அவன் தன் எதிரில் கொண்டு தீர்க்கவேண்டியவனுயிருக்கின்ருன். அவனது வளர்ச்சியில் இதுவரை எல்லாம் நன்ருக நடந்திருந்தாலும், இளையோர் பருவமானது ஓர் புதையலைப் போன்றதால், அதனில் புகுந்து ஆராய்ந்த பின்னரே, அதன்கண் இருக்கும் செல்வக்குவியலை அவன் கண்டுபிடித்து அவற்றை அனுபவிக்கமுடியும். வெளியுலகத்தோடும், மற்றவர்களோடும் அவன் பொருந்தி நடக்கவேண்டிய அவசியத்தைத் தவிர அவன் தன் ஆற்றல்களையும் வரம்புகளையும் நன்குணர்ந்து, தன்னையறிந்து, சமூகத்தின்பாலான தன் கடமைகளை உணர்ந்து நடப்பதே அவனுடைய முக்கியப் பணிகளாகும்.

**இளையோர் பருவம்**

இனப்பெருக்கச் சக்தியற்றுச் சிறு குழந்தையாய்க் கருதப்பட்ட ஒரு தனியன், பூப்பெய்தி இனப்பெருக்கச் சக்தியைப் பெறும் பொழுது, இளையோர் பருவத்தையடைகின்றான். இப் பருவத்தை மேலைநாட்டுப் பண்பாட்டில் பதின்வயது (Teen Age) எனக் குறிப்பிடுவர். இந்தப் பருவத்தில் ஒரு தனியனைக் குழந்தையாய்க் கருத முடியாது. ஏனெனில், முதிர்ந்தோரின் உடல் தோற்றமும் தன்மைகளும் இப்போது அவனிடத்தில் ஏற்பட்டுவிட்டன. மாறாக, முழு முதிர்ச்சியடைந்த மனிதனாகவும் அவனை நாம் ஏற்றுக்கொள்ள முடியாது. ஏனெனில், அவன் உடல் வளர்ச்சியினைப் பெற்றிருந்தபோதிலும், போதுமான அனுபவங்களையும், உள முதிர்ச்சியினையும் பெற்றிருக்கவில்லை. உடல் வளர்ச்சியில் அவன் முதிர்ச்சியினைப் பெற்றிருப்பினும், மனவெழுச்சியிலும் சமூக நடத்தையிலும் இன்னும் அவன் முதிர்ச்சி பெறாதவனாகவே இருக்கின்றான். திட்டவட்டமாகச் சொல்ல வேண்டுமேயானால், குழந்தைப் பருவத்திற்கும் முதிர்ச்சிப் பருவத்திற்கும் இடைப்பட்ட நிலையில் அவன் காணப்படுகின்றான். இங்கு அவன் குழந்தைப் பருவத்திலிருந்து முதிர்ச்சிப் பருவத்தினை நோக்கி விரைந்து கொண்டிருப்பதால், இவ்விரு பருவங்களுக்கும் இடைப்பட்ட இந்த மாறுகின்ற பருவத்தை நாம் இளையோர் பருவம் என்று குறிப்பிடுகின்றோம்.

இளையோர் பருவத்தில் ஒரு தனியன் தன்னைப் பிறர் ஒரு குழந்தையாகக் கருதுவதை விரும்புவதில்லை. தன் வளர்ச்சிகளைப் பிறர் புரிந்துகொண்டு, தன்னை முதிர்ந்தோர்க்குச் சமமாக மதித்து நடத்த வேண்டுமென அவன் எதிர்பார்க்கின்றான். ஆனால், ஒரு சிலர் அவனை முதிர்ந்த மனிதனாக ஏற்று நடத்தும்போது, ஏனைய பிறர் அவனை இன்னும் ஒரு குழந்தையாகவே கருதி நடத்துவதை அவன் விரும்புவதில்லை. இங்ஙனம் முரண்பட்ட விதத்தில் பிறர் தன்னிடம் நடந்துகொள்வதை அவன் வெறுக்கின்றான். மற்றவர்கள் தன்னைப் பெரியவனாகக் கருதி, தன்னிடம் அவர்கள் எல்லோரும் ஒரே சீராக நடந்துகொள்ள வேண்டும் என்றே அவன் எதிர்பார்க்கின்றான்.

இளையோர் பருவத்தின் முக்கியமான தன்மைகளை நன்கு ஆராய்ந்த உளவியலார்கள், இளையோரிடம் ஒரு சமூகமும் நாடும் எதிர்பார்க்கின்ற வளர்ச்சிப் பணிகளையும், செயல்பாடுகளையும் பற்றிப் பல்வேறு குறிப்புகளைத் தந்துள்ளனர். இவ்வகையில், ஹேவிகர்ஸ்ட் (Havighurst) என்பார் இளையோரின்

வளர்ச்சிப் பணிகளைக் (Developmental Tasks) கீழ்க்கண்டவாறு அட்டவணைப் படுத்தியுள்ளார்.

1. எதிர்ப்பாலினருடன் புதிய, முற்றிலும் முதிர்ந்த தொடர்பினைக் கொள்ளும் பழக்கத்தினைப் பெறல்.

2. சமூக அங்கீகரிப்பு வாய்ந்த, தன் பாலினத்தைச் சார்ந்த பணிகளைக் கற்றுத் தேறுதல்.

3. தன்னில் ஏற்படும் உடல் மாற்றங்களை அங்கீகரித்துக் கொண்டு, மாற்றங்களுக்குள்ளான தன் உடலினைத் தேவைகளுக் கேற்றவாறு சிறப்பாகப் பயன்படுத்தக் கற்றுக்கொள்ளல்.

4. தனது பெற்றோர்களிடமிருந்தும், மற்ற முதிர்ந்தோரிடமிருந்தும் மனவெழுச்சிச் சுதந்திரம் பெறல்.

5. பொருளாதாரச் சுதந்திரம் பெறல்.

6. தனக்குகந்த தொழிலினைத் தேர்ந்தெடுத்து அதன் பொருட்டுத் தன்னில் தகுதியினை உண்டாக்கிக் கொள்ளல்.

7. திருமணத்திற்கும், குடும்ப வாழ்க்கைக்கும் ஏற்ற தகுதியினைத் தன்னிடம் ஏற்படுத்திக்கொள்வதோடு, அதன் பொருட்டுத் தேவையான வாழ்க்கை வசதிகளையும் பெறல்.

8. வாழ்க்கைக்குத் தேவையான அறிவு சார்ந்த திறமைகளையும், கருத்துகளையும் கற்றறிருந்து தேறுதல்.

9. தன்னிடம் சமூகம் எதிர்பார்க்கின்ற, சமூகப் பொறுப்புள்ள நடத்தைகளைக் கற்றறிந்து. அவற்றை ஏற்று நடத்தல்.

10. தன் நடத்தைக்கு வழிகாட்டியாக இருக்கக்கூடிய ஒரு சில பயன் மதிப்புகளையும், அறம், நீதி பற்றிய கருத்துகளையும் அறிந்துகொள்ளல்.

இளையோர் பருவம் சிறுவர் பருவத்தையும் முதிர்ச்சிப் பருவத்தையும் இணைக்கும் பாலமாக விளங்குகின்றது. இப் பருவத்தில் தான் எதிர்கால மனிதனின் வித்து விதைக்கப்படுகின்றது. இப் பருவத்தில் ஒரு தனியனுக்கு ஏற்படும் அனுபவங்களும், அறிவு வளர்ச்சியும், நடத்தை முறைகள், குணச் சிறப்புகள் போன்றவைகளும் எதிர்காலத்தில் அவன் சிறந்த முதிர்ந்த மனிதனாக விளங்க ஏதுவாயிருக்கின்றன.

**இளையோர் பருவத்தின் முக்கியத்துவம்**

இளையோர் பருவம் தனியனின் வாழ்க்கையில் எண்ணற்ற பல மாற்றங்களைத் தோற்றுவிக்கின்ற முக்கியமான வளர்ச்சிப் பருவமாகும். சிறுவர்களாய்த் திரிந்து விளையாடிய பிள்ளைகள் திடீரென உடல் வளர்ச்சியடைந்து புதிய உணர்ச்சிகளையும், ஆர்வங்களையும் பெறுகின்றனர். தங்களைத் தனியராய்க் கருதி வாழ்ந்த பிள்ளைகள், இனித் தாங்கள், தங்களின் சமூகத்தின் உறுப்பினர்களாய் விளங்க வேண்டியதன் அவசியத்தை இப் பருவத்தில் தான் உணர்ந்து செயல்படத் தொடங்குகின்றனர். தாங்கள் தங்கள் பெற்றோர்களின் பிள்ளைகள் என்ற உணர்வை மறந்து, முதிர்ந்தவர்கள் என்ற உணர்வைப் பெறுகின்றனர். இப் பருவத்தில்தான் அவர்களின் அறிவும், சமூக உறவுகளும், வாழ்க்கையின் இலக்குகளும், கோட்பாடுகளும் பல வகைகளில் வளர்ச்சியுற்று நிலைநிறுத்தப்படுகின்றன.

ஒரு தனியனின் பிற்கால வாழ்க்கைத் தன்மையும், ஆளுமை வளர்ச்சியும் இளையோர் பருவத்தில்தான் நிர்ணயிக்கப்படுகின்றன. இதுவரை தன் உற்றார் உறவினரோடு மட்டுமே தொடர்பு கொண்டு, பழகிவந்த தனியன் இப்போது தன் குடும்பம், சுற்றம், பள்ளி, சமூகம் போன்றவைகளுக்கு அப்பாற்பட்டிருப்பவர்களுடனும் பழகித் தொடர்புகொள்ளும் வாய்ப்பினைப் பெறுகின்றான். இதுவரை எதிர்ப்பாலினருடன் தாராளமாகப் பழகியவன், இப் பருவத்தில் அவர்களுடன் தனித்த, வரையறை செய்யப்பட்ட, சமூகம் எதிர்பார்க்கின்ற வகையில் பழகவும், தொடர்புகொள்ளவும் வேண்டியவனாகின்றான். எனவே, தான் ஒரு தனிப்பட்ட பாலினத்தைச் சார்ந்தவன் என்ற உணர்வினை அவன் பெற்று, தன் பாலினத்துக்குரிய கடமைகளையும் பொறுப்புகளையும் ஏற்று நடக்கவேண்டியது இப்பொழுது அவசியமாகின்றது.

இளையோர் பருவத்தில்தான் ஆண்பிள்ளைக்கும் பெண் பிள்ளைக்கும் பாலின உணர்வு ஏற்பட்டு, தன் பாலினத்தைச் சார்ந்த உடல் தோற்றம் நினைவுக்கு வருகின்றது. ஓர் ஆண் பிள்ளை, தான் உடல் பலத்தில் நிகரற்று வலிமை மிக்கதோர் இளைஞனாக உருவாக வேண்டியதன் அவசியத்தை உணர்ந்து, அதற்கேற்ற வகையில் உணவினையும் பயிற்சியினையும் ஏற்க விழைகின்றான். இதனைப் போன்றே ஒரு பெண்பிள்ளை, கவர்ச்சியான ஆரோக்கியமான உடற்கட்டைப் பெறுவதற்கு முயலுகின்றாள். இரு பாலினரும் தங்களின் உடல் தோற்றத்தாலும், கவர்ச்சியாலும் ஒருவரையொருவர் கவரவும், ஈர்க்கவும் முனைகின்றனர்.

பாலின உறுப்புகள் நன்கு முதிர்ச்சியடைந்து, பாலின உணர்ச்சி அவர்களில் மிகுந்து இருக்கையில், இளையோர் தங்களின் பாலின உணர்ச்சிகளைச் சமூக அங்கீகரிப்புள்ள வகையில் நிறை வேற்றிக் கொள்வதற்கு வழியில்லை. இதைத்தான் ஜெர்ஸில்ட் (Jersild) என்பார் பாலின உறுப்புகளின் வேலையில்லாத் திண் டாட்டம் (Sexual unemployment) எனக் குறிப்பிடுகின்றார். அதாவது முதிர்ச்சியடைந்து, ஆயத்த நிலையில் உள்ள பாலின உந்தினைத் தனியன் பெற்றிருப்பினும், அதனை நீண்ட காலத் திற்குப் பயன்படுத்தாது, கட்டுப்படுத்தி வைக்கவேண்டிய நிலைக் குள்ளாகின்றான். இவ்வாறு சிலர் தங்கள் பாலின உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தி வைத்திருக்கையில் பலர் திருமணத்திற்கு முன்னரே பாலின உறவுகளில் தங்களை ஈடுபடுத்திக் கொள்கின்றனர் என்று கின்ஸி (Kinsey) என்பார் தம் ஆராய்ச்சியில் எடுத்துக்காட்டி யுள்ளார். இவ்வாது திருமணத்திற்கு முன் ஏற்படுத்திக்கொள்ளும் பாலின உறவுகள், சமூக ஒழுக்கநெறி சார்ந்த பிரச்சினைகளை உண்டாக்குவதுடன், தனியனுக்குள்ளும் வெகுவான உளப் போராட்டங்களையும் ஏற்படுத்துகின்றன. மேலும், தனக்கு வேண்டிய கல்வியின் தன்மையையும், வாழ்க்கைத் துணைக்குத் தனக்குப் பொருத்தமானவரைப்பற்றிச் சிந்தித்துத் தேர்ந் தெடுக்கவும் தனியன் முயற்சி செய்வது இப் பருவத்தில்தான்.

பெற்றோர்களின் ஆதிக்கத்தின்கீழ் இதுவரை வளர்ந்துவந்த பிள்ளைகள், இளையோர் பருவத்தில்தான், பெற்றோர்களின் கட்டுப் பாட்டிலிருந்து ஓரளவிற்கு நீங்கி, மனவெழுச்சிச் சுதந்திரம் பெறுகின்றனர். இதனால், தங்கள் பெற்றோர்கள் பெற்றிருக்கும் செல்வாக்கினையும், அதிகாரத்தினையும், செயல் சுதந்திரத்தினையும் தாங்களும் பெறவேண்டும் என்று இவர்கள் விரும்புகின்றனர். தங்கள் பெற்றோர்களின் கருத்துகளையும், சொற்களையும், போலவே தங்களின் கருத்துகளும், சொற்களும், எண்ணங்களும், கோட்பாடுகளும் தங்களுடைய குடும்பத்தினர்களாலும், உறவினர் களாலும் பிறராலும் ஏற்கப்பட்டு, அங்கீகரிக்கப்பட்டு, மதிக்கப்பட வேண்டுமென நினைக்கின்றனர். இங்ஙனம், இளையோர் பருவத்தில் ஒரு தனியன் மனவெழுச்சிச் சுதந்திரம் பெறுதல் மிகவும் இன்றி யமையாததாகும். மாறாக, மனவெழுச்சிச் சுதந்திரம் பெறாது, சிறு பிள்ளைகளைப் போன்றே எல்லாச் செயல்களுக்கும் தம் பெற்றோர் களையே நாடியும், நம்பியும் இருந்தால், பிற்காலத்தில் இவர்கள் தாங்களே துணிந்து ஒரு செயலுக்கான முடிவினை எடுப்பதற்கும், பொறுப்பு ஏற்பதற்கும் சக்தியற்றவர்களாகிவிடுவர்.

இளையோர் பருவத்தின் மற்றொரு முக்கியத்துவம், தனியன் இப் பருவத்தில் பெறும் பொருளாதாரச் சுதந்திரத்தைப் பொறுத்

துள்ளது. தன் உணவிற்கும், மற்றப் பொருளாதாரத் தேவைகளுக்கும் பெற்றோரை நாடியிருந்த தனியன், இனி, தன் தேவைகளுக்குத் தன் பெற்றோர்களை நாடியிருத்தல் அவமானம் என்றும், தன்மானமும், கௌரவமும் அதனால் குறைந்துவிடுகின்றன என்றும் கருதுகின்றான். அவன் தன் பெற்றோரைப் போன்றே தானும் சம்பாதிக்கவேண்டும் என்றும், அதைக் கொண்டு தன் விருப்பத்திற்கேற்பச் செலவு செய்யச் அல்லது சேமித்து வைக்கவேண்டும் என்றும் ஆசைப்படுகின்றான். இதனால்தான், எப்போது ஒரு தனியன் தன் தேவைகளுக்குத் தன் பெற்றோரின் பொருளாதார உதவியை நாடுவதில் வெட்கப்படுகின்றானோ, அப்போதே அவன் 'பெற்றோரைச் சார்ந்த ஒரு பிள்ளையாய் இராது, முதிர்ந்த மனிதனாக மாறப் பெறுகின்றான் என்று சிலர் கருதுகின்றனர். எனவேதான், இளையோர் பருவத்தில் தனியன் தன் பொருளாதாரத் தேவைகளை அடைவதன் பொருட்டு, தனக்கேற்ற ஒரு தொழிலைத் தேர்ந்தெடுத்து, அதை ஏற்று, அதில் சிறந்து முன்னேற்றம் அடைவதற்கு வேண்டிய அறிவினையும், பயிற்சிகளையும், அனுபவங்களையும் பெற முயற்சிக்கின்றான். எனினும், பெரும்பான்மையோர் தங்களுடைய பள்ளிப் படிப்பினை முடிக்கும் வரையாவது தங்களின் பொருளாதாரத் தேவைகளுக்குத் தங்கள் பெற்றோர்களை நாடியே வாழவேண்டியவர்களாகின்றனர். எனவே, இளையோர் பருவத்தில் பொருளாதாரச் சுதந்திரம் பெற வேண்டும் என்ற துடிப்பு தனியனிடம் இருந்தபோதிலும், அவற்றைப் பெற முடியாத நிலையில், அவனுக்கு நீண்ட காலப் பொருளாதாரத் திண்டாட்டமும், பெற்றோர்களை நாடியிருக்கும் நிலையும் ஏற்படுகின்றன.

மேலும், இளையோர் பருவத்திலேதான் ஓர் ஆணும் பெண்ணும் மனித வாழ்க்கையின் பயன்மதிப்புகளையும், சிறப்புகளையும் அறிகின்றனர். இப் பருவத்தில்தான் இவர்கள், தாங்கள் எதிர்காலத்தில் இப்படியெல்லாம் வாழவேண்டும் எனக் கற்பனை செய்து, அக் கற்பனைக் கனவுகளை நனவாக்கும் முயற்சியில் ஈடுபடுகின்றனர். குடும்பம், நாடு, சமயம், பண்பாடு போன்ற பல்வேறு தத்துவக் கருத்துக் கோட்பாடுகளின் உண்மைகளை நன்கு அறிந்து அவற்றை மதிக்கத் தொடங்குகின்றனர். ஒழுக்கம், கட்டுப்பாடு, நீதி, நேர்மை போன்ற அறவாழ்வுச் சிந்தனைகளும், இறைவன், பாவம், புண்ணியம் போன்ற சமயம் சார்ந்த சிந்தனைகளும் இப் பருவத்தில்தான் மேலோங்கிக் காணப்படுகின்றன.

எனவே, இளையோர் பருவம் எல்லா வகையிலும் முக்கியத்துவம் வாய்ந்த பருவமாகும். இத்தகைய எண்ணற்ற பிரச்சினை

களை இப்பருவம் தன்னகத்தே கொண்டுள்ளதால், இப் பிரச்சினை கள் ஏதாவதொன்றில் தனியன் தோல்வியுற்றாலும், அது அவ னுடைய எதிர்கால வாழ்க்கையைப் பாதிக்கவல்லதாகும். எனவே, இளையோர் பருவம் பிரச்சினையின்றி நன்முறையில் அமை வதன் பொருட்டு, இதில் ஏற்படும் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கும், தவிர்ப்பதற்கும் ஏற்ற வழிமுறைகளைக் கண்டறியும் வகையில் உளவியலார்கள் ஆராய்ச்சியில் முனைந்துள்ளனர்.

## இளையோர் பருவம்பற்றிய கோட்பாடுகள் (Theories of adolescence)

ஸ்டான்லி ஹால் (Stanley Hall) எனும் அமெரிக்க உளவிய லாரே முதன் முதலில் இப் பருவத்தைப் பற்றி ஆராய்ந்து விளக்கம் தந்தார். அவர் இப் பருவத்தை அழுத்தங்களும், குமு றல்களும் (stresses and strains) கொண்ட பருவம் என்றும், துடிக்கும் பருவம் என்றும் விளக்கியுள்ளார். இவர் தந்த இளையோர் பருவம் பற்றிய விளக்கம், நம் வீட்டு முற்றங்களில் குருவிக் கூடுகளில் உள்ள குஞ்சுகள் பறக்க முயற்சிப்பதையே நமக்கு நினைவூட்டுகின்றது. சிறகு சரிவர முளைக்காத பொழுதும், கூட்டில் இருந்துகொண்டே தம் பெற்றோரைப் போல் பறக்க முயலும் அக் குருவிக் குஞ்சுகள், அம் முயற்சியில் பலநாள் தோல்வியுற்றுக் கூட்டைவிட்டுக் கீழே விழுந்து, பின்னர்ப் பெற் றோர்களால் மீண்டும் கூட்டில் எடுத்துவிடப்பட்டு, இறுதியில் ஒரு நாள் வெற்றிகரமாகத் தம் பெற்றோர்களோடு கூடிப் பறந்து செல்வதை நாம் பல முறை கண்டு ரசித்திருக்கின்றோம். இதைப் போலவே, ஸ்டான்லி ஹால் என்பாரும் குருவிக் குஞ்சுகளின் பறக்க முயற்சிக்கும் துடிப்பினை, மனித வாழ்க்கையின் இளையோர் பருவத் துடிப்பினோடு ஒப்பிட்டு விளக்குகின்றார்.

இளையோர் பருவம் பற்றிய தமது கொள்கையை விளக்கும் பொழுது, இளையோர் பருவத்தில் ஒரு தனியன் அடைகின்ற உயிரியல் மாற்றங்களைப் (biological changes) பற்றிய விவரமான வர்ணனையையும் ஸ்டான்லி ஹால் தருகின்றார். இளையோர் பரு வத்தில் நிகழ்கின்ற உயிரியல் மாற்றங்களும், மனவெழுச்சி மாற் றங்களுமே இப் பருவத்தில் பிரச்சினைகள் ஏற்படுவதற்குக் காரண மாயுள்ளன என்று இவரது கொள்கையில் கூறப்பட்டுள்ளது. உயிரியல் மாற்றங்களும், மனவெழுச்சி மாற்றங்களும் இப் பரு வத்தில் தவிர்க்க முடியாவண்ணம் ஏற்பட்டு விடுவதால், இளையோர் பருவத்துப் பிரச்சினைகளும் தவிர்க்க முடியாதவை களாய் ஏற்பட்டுவிடுகின்றன என்பது இவர் கருத்தாகும். ஆத லால், இளையோர் பருவத்தில், ஒரு தனியன் தன் வாழ்க்கைப்

பொருத்தப் பாட்டில் மிகுந்த இடர்ப்பாட்டினைச் சந்திக்க நேரிடு கின்றது. குமுறல்களும், அழுத்தங்களும், உளப்போராட்டங்களும் கொந்தளிப்புகளும் ஒரு தனியனிடம் ஏற்படும்பொழுது, அவன் அவைகளை எதிர்த்து வெற்றி காண்பது, மறு பிறவி எடுத்தாற் போலாகும் என்று ஹால் கருதுகின்றார்.

இந்த உயிரியல் நோக்குள்ள கோட்பாடு போதுமான பரி சோதனை வழிச் சான்றுகள் இல்லாததன் காரணமாகப் பிற்காலத் தில் கைவிடப்பட்டது. இப்பொழுது எழுந்துள்ள கோட்பாடுகள் பண்பாட்டு நோக்குள்ள கருத்துகளைத் தழுவியுள்ளன. பண் பாட்டுக் கோட்பாட்டின்படி (Cultural Theory) குமுறல்களும், அழுத்தங்களும் இளையோர் பருவத்தில் அவசியமாகவும், தவிர்க்க முடியாவண்ணமும் ஏற்படுவனவல்ல. ஆனால், இளையோர் பருவத்து அழுத்தங்களும், குமுறல்களும் ஒரு சமூகத்தின் பண்பாட்டைப் பொறுத்துள்ளன. ஒரு பண்பாடு சுமத்தும் தடைகளும், வரம்பு களும்தான் பொருத்தப்பாட்டுப் பிரச்சினைகள் எழுவதற்குக் காரணமாயுள்ளன என்பது பண்பாட்டுக் கொள்கை. பண்பாட்டு மனிதவியலார்கள் (cultural anthropologists) செய்த ஆராய்ச்சிகள், இளையோர்களின் வாழ்க்கையிலும் பிரச்சினைகளிலும் பண்பாடு கொண்டிருக்கும் பெரும் செல்வாக்கினை எடுத்துக்காட்டுகின்றன. மார்கரெட் மீட் (Margaret Mead) என்பார் எண்ணற்ற பண் டைக்காலச் சமூகங்களின் பண்பாட்டினை ஆய்ந்து, அவைகளில் ஒரு சிலவற்றில் இளையோர் பருவம் எந்தவிதக் கடினங்களும் இடையூறுகளுமற்றுக் காணப்படுகின்றது என்று எடுத்து விளக்கு கின்றார். இப் பருவத்துப் பிள்ளைகளுக்குப், பிரச்சினைகளும் சிக்கல் களும் தோன்றுவது, இவர்கள் இப் பருவத்தினை எய்திவிட்டதன் காரணத்தினால் மட்டும் நேரிடுவதா, அல்லது இவர்கள் வாழ்ந்து வளர்ந்த சமூகப் பண்பாடுகளின் விளைவினால் நேரிடுவதா என்பதை இவர் ஆராய்ந்தார். இவர் தென்கடல் தீவுகள் ஒன்றில் வாழும் ஸாமோவா (Samoa) இளையோர்களை உற்றுநோக்கியதில், ஸாமோவா இளையோர் எந்தவிதச் சிக்கலையும் கடினத்தையும் அநுபவிப்பதில்லை என்று கண்டறிந்தார்.

இவரது கருத்தின்படி, இளையோர் பருவமே பிரச்சினைகள் ஏற்படுவதற்குக் காரணமாயில்லை என்றும், ஒரு தனியன் பிறந்து வளர்ந்த சமூகச் சூழ்நிலையும், பண்பாட்டுக் கோலங்களும்தாம் இப் பருவத்தில் பிரச்சினைகள் ஏற்படுவதற்குக் காரணமாயுள்ளன என்றும் அறியக்கூடும். ஸாமோவா சமூகத்தில் பிள்ளைகள் உடல் வளர்ச்சி பெறத் தொடங்கியதுமே, முதிர்ந்தவர்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டு மதிக்கப்படுகின்றனர். அதனுடன் முதிர்ந்தோரின்

பொறுப்புகளும், கடமைகளும் அவர்களுக்கு அளிக்கப்படுகின்றன. எனவே, ஸாமோவா இளையோன் இப் பருவத்திற்கே உரியதாகக் கருதப்படும் குமுறல்களையும், அழுத்தங்களையும் பிரச்சினைகளையும் காண்பதில்லை.

அராபெஷ் (Arapesh) பண்பாட்டிலும் இளையோர் பருவம் ஓரளவிற்குக் கடினம் அற்றுக் காணப்படுகின்றது. அந்தமான், மாலெனீஷியன் (Malenesian) பண்பாட்டிலும் இந்நிலையே காணப் படுகின்றது. அங்கெல்லாம், ஒரு தனியன் குழந்தைப் பருவத்தி லிருந்து முதிர்ந்த பருவத்தினைச் சுமூகமாக அடைவது, அச் சமூக, பண்பாட்டு அமைப்புகள் மாற்றங்களைப் பெறுகின்ற இளையோ ருக்குத் தேவையான சலுகைகளையும், வசதிகளையும் அளிப்பத ஞல்தான். எனவே, ஒரு பண்பாடு ஏற்படுத்தும் அனுகூலங் களையும் தடைகளையும் (facilitations and restrictions) பொறுத்தே இளையோர் பருவம் குமுறல்களும், அழுத்தங்களும், பிரச்சினை களும் மிகுந்தோ குறைந்தோ அமைகின்றது என்பது தெளிவா கின்றது. மனு (Manu) என்று கூறப்படும் ஆதிகாலப் பண்பாட்டுச் சமூகம் ஒன்றில், இளையோருக்குப் பிரச்சினைகளும் தொல்லைகளும் மிகுந்து காணப்படுகின்றது. இதற்குக் காரணம் மனு சமூகத்துப் பண்பாடு, இளையோருக்கு வேண்டிய சலுகைகளையும் வசதிகளை யும் அளிக்காமல், தடைகளையும் வரம்புகளையும் ஏராளமாகச் சுமத்துவதால்தான். மனு இனத்துப் பெண்பிள்ளை அவளது பாலின நடத்தையிலும் ஏனைய சமூக நடத்தையிலும் வெகு வாகத் தடை செய்யப்படுகின்ருள். சந்தர்ப்ப வசமாக ஒரு முறையேனும் அவள் தனது பாலின நடத்தையில் தவற நேர்ந்தால், அதற்குப்பின்னர் இறுதி வரையில் அவள் சமூகத்தின் எந்த நடவடிக்கையிலும் பங்கெடுத்துக் கொள்ள அனுமதிக்கப் படுவதில்லை. அவள் எண்ணற்ற தடைகளுக்கு (taboos) தொடர்ந்து உள்ளாக்கப்படுகின்ருள்.

எனவே, உடலியல் மாற்றங்களே ஒரு தனியனுக்கு இளையோர் பருவத்தில் பிரச்சினைகளைத் தோற்றுவிப்பதில்லை என்பதனையும் இதற்கு மாருக, சாதகமான அல்லது பாதகமான சமூக, பண்பாட்டுத் தன்மைகளே இளையோர் பருவத்தில் பிரச்சினை களைத் தோற்றுவிக்கின்றன என்பதனையும் நாம் அறியலாம். ஒரு சமூகத்தில், பண்பாட்டுத் தடைகளும் வரம்புகளும் (Restrictions and Limitations) மிகுந்திருக்குமேயாஞல், அதில் இளையோர் பருவம் பிரச்சினைகளையும், கடினங்களையும் கொண்டதாகக் காணப்படுகின்றது. ஆனல் ஒரு சமூகத்துப் பண்பாடு, எந்தவிதத் தடைகளையும், வரம்புகளையும் கொண்டிராது, மேலும், இளை

யோருக்கு வேண்டிய சலுகை, வசதிகளையும், ஏற்ற சூழ்நிலை களையும் உருவாக்கித் தருமேயானால், அதில் இப் பருவம் சுமூக மாகவும், எந்தவிதப் பிரச்சினைகளுமின்றியும் விளங்கும். எனவே, இப் பருவம் மரபுநிலை வழிவந்த உயிரியல் தன்மைகளும், வாழ்க்கையின் சமூக, பண்பாட்டு அமைப்புகளின் தன்மைகளும் ஒன்றோடொன்று இணைந்து செயல்படுவதன் விளைவேயாகும்.

### ஆய்வு முறைகள் (Methods of study)

இளையோரைப் பற்றி அறிந்துகொள்வதற்கு, அவர்களின் உடல், உடலியல், மனவெழுச்சி, நுண்ணறிவு, ஆக்கத்திறம், சமூக வாழ்க்கை ஆகியவற்றின் வளர்ச்சித் தன்மைகள், இயல்புகள் ஆகியவைகளையும், பயன் மதிப்புகள், பொருத்தப்பாடுகள் சிக்கல்கள் போன்றவைகளையும் ஆராய்ந்து அவற்றின் உண்மைகளை அறிந்துகொள்ள வேண்டியது அவசியம். இதன் பொருட்டுப் பல்வேறு ஆய்வு முறைகள் இளையோர் உளவியலில் கையாளப் படுகின்றன. அவற்றில் முக்கியமான முறைகளான நாட்குறிப்பு-எழுத்துப் படைப்பு முறை, பேட்டி காணல் முறை, கேள்வி நிரல்முறை, மருத்துவமுறை, குறுக்குவெட்டு ஆய்வுமுறை, நீள்வகை ஆய்வுமுறை, பரிசோதனை முறை, சமூக அளவை முறை ஆகியவற்றை இங்கு நாம் காண்போம்.

### நாட்குறிப்பு – எழுத்துப் படைப்பு முறை (Diaries and writings)

இம் முறையை முதன்முதலில் ஸ்டான்லி ஹால் கையாண் டார். இளையோர் பருவத்தின் பிரச்சினைகளையும், அதன் தன்மை களையும் நன்கு அறிந்து, அவைகளைத் தீர்ப்பதற்கு அவர்களே தங்களைப் பற்றித் தங்கள் கைப்பட எழுதி வைத்துள்ள தினசரி நாட்குறிப்புகளை எடுத்து ஆராய்வது பயனுடையது என்று இவர் கருதினார். இவ்வகைப் பிரச்சினைகளைக் கடந்துவிட்ட நாம், அவைகளைச் சரியான விதத்தில் நோக்கி, மதிப்பிட்டு அறிய இயலும். இளையோர் தங்களுக்கு ஏற்பட்டுள்ள சிக்கல்களின் தன்மைகளையும், அவற்றின் காரணங்களையும் ஆராய்ந்து அறிவதில் ஆர்வம் கொண்டவர்களாக இருக்கின்றனர். இவர்கள் தங்கள் கருத்துகளையும், எண்ணங்களையும், எதிர்கால நோக்கங்களையும், நாட்குறிப்பு வாயிலாகவும், கட்டுரை, கவிதை, கதை போன்ற எழுத்துப்படைப்புகளின் மூலமும் வெளிப்படுத்துகின்றனர். ஆகவே, இவற்றைக் கொண்டு இளையோரின் பிரச்சினைகளை அணுகி, அவற்றை ஆய்ந்தறிந்து, அவைகளுக்கான தீர்வினைக் காணமுடியும்.

நாட்குறிப்பு ஓரளவிற்கு நன்மை பயப்பதாக இருப்பினும், சில குறைகளையும் தன்னகத்தே கொண்டுள்ளது. முதலாவதாக,

இளையோர் எல்லோரும் நாட்குறிப்புகள் எழுதுவதில்லை. சிறந்த அறிவு வளர்ச்சி பெற்று, நுண்ணறிவு மிகுந்து காணப்படும் ஒரு சிலரே நாட்குறிப்புகளை எழுதும் பழக்கத்தைக் கொண்டுள்ளனர். மேலும், இத்தகைய பழக்கத்தைப் பெற்றிருக்கும் எல்லோரும், தங்களைச் சூழ்ந்துள்ள பிரச்சினைகளை முற்றிலும் உண்மையாகத் தங்கள் நாட்குறிப்பு ஏடுகளில் பதிய வைத்திருப்பர் என்று நம்ப முடியாது. ஒரு சில மோசமான பிரச்சினைகளையும், தாங்கள் குற்றம் புரிந்துவிட்டதாகக் கருதும் செயல்களையும் நினைப்பதையே கூட வெறுக்கும் அவர்கள் அவைகளைப்பற்றி நாட்குறிப்பு ஏடுகளில் எழுதிவைத்திருப்பர் என நாம் எதிர்பார்க்க முடியாது. நாட்குறிப்பு ஏடுகளில் குறித்து வைக்க விரும்பாத பிரச்சினைகளை வெளியுலகிற்குத் தெரியும் வண்ணம் தங்கள் எழுத்துப் படைப்புகளின் மூலம் தெரிவிப்பர் என நாம் திட்டவட்டமாகக் கூற முடியாது. மேலும், அவர்கள் கவனத்திற்கு வராத, நனவில் இல்லாத ஒரு சில பிரச்சினைகளும் அவர்களுக்குச் சிக்கலை ஏற்படுத்தலாம். இத்தகைய பிரச்சினைகளின் தன்மைகளையும், இளையோரின் நாட்குறிப்புகளை ஆராய்வதன் மூலம் அறிந்துகொள்ள முடியாது.

### பேட்டி காணல் முறை (Interview Method)

ஒரு தனியனின் மனப்பாங்குகள், ஆர்வங்கள், குறிக்கோள்கள் எண்ணங்கள் மற்றும் பிரச்சினைகளைப் பற்றி அதிகமான விவரங்களைச் சேகரிப்பதற்குப் பேட்டி காணல் முறை மிகவும் பயனுடையதாகும். பேட்டி காண்பவரின் திறமையினையும், பொறுமையுடன் செவி மடுக்கும் மனப்பாங்கினையும் பொறுத்து இம்முறை பயனுள்ளதாக விளங்கும். சிறந்த வகையில் கையாளப்படும் பேட்டி காணல் பின்வரும் தன்மைகளை யுடையதாய் விளங்கும். (1) திறம் மிக்க, பயிற்சி பெற்ற பேட்டி காண்பவர் பேட்டிக்கான முன்னேற்பாடுகளைக் கவனத்துடன் செய்து முடிப்பார். (2) மேலும், அவர் பேட்டியின் பாலும், பேட்டி காண்பவரின் பாலும் பரிவான, புரிந்துகொள்ளும் தன்மையுடைய, உள்ளார்ந்த, நேர்மை வாய்ந்த மனப்பாங்கினைக் கொண்டிருப்பார். இதன் விளைவாக, அவர் பேட்டியின் பொழுது முறைப்படி அமையாத (Informal) மனவெழுச்சியில்லாச் சூழ்நிலையை உருவாக்கி நிலைநாட்டுவார். (3) இறுதியில், பேட்டி காண்பவரால் பேட்டி காணப்படுபவரில், தேவையற்ற அழுத்தங்கள் ஒன்றும் தோன்ற இடமில்லாததால் பேட்டி காணப்படுபவர் தங்கு தடையின்றி, தாராளமாக, மனம்விட்டு, தன்னைத்தான் வெளிப்படுத்த நல்ல வாய்ப்பினைப் பெற்றிருப்பார்.

இளையோர் தங்களைப் பற்றிய சில விவரங்களை இரகசியமாக வைத்துக்கொள்ளும் தன்மையினைப் பெற்றிருப்பதால், முதிர்ந்தோர் தங்களை ஒற்றுப் பார்க்கின்றனர் என ஐயுறுகின்றனர். இதன் விளைவாகப் பேட்டியின்போது பேட்டி காண்பவர் குறிப்புகளைக் குறித்துக் கொள்வதை இவர்கள் வெறுக்கின்றனர். எனினும், பேட்டி காண்பவரின் நேர்மையும், புரிந்துகொள்ளும் தன்மையும் இவர்களின் நம்பிக்கைக்குரியதாக இருந்து, இவர்களின் நலத்தில் பேட்டி காண்பவர் உண்மையில் அக்கறை கொண்டிருக்கின்றார் என்று இவர்கள் உறுதிகொண்டிருந்தால் அவரோடு இவர்கள் மிகவும் ஒத்துழைப்பர். இதன் பொருட்டுத், தங்கள் மனப்பாங்குகள், உணர்வுகள், ஆர்வங்களை இவர்கள் உண்மையாக வெளிப்படுத்தி, தங்கள் பிரச்சினைகளைப் பற்றித் தாராளமாக வாய்விட்டு விவாதிப்பர். எனவே, நன்கு பயிற்சி பெற்ற, பரிவான, முறைப்படி அமையாத மனப்பாங்குடைய, புரிந்துகொள்ளும் தன்மையுடைய பேட்டியாளர் இளையோரைப் பற்றி அறிந்துகொள்வதற்கு இம் முறையை பலனுள்ள வகையில் செயலாக்கலாம்.

### கேள்வி நிரல் முறை (Questionnaire Method)

இளையோரைப்பற்றி நடந்தப்பட்ட ஆய்வுகளில் பெரும்பாலும் பயன்படுத்தப்பட்ட மிகவும் பழைமையான முறை கேள்வி நிரல் முறையேயாகும். ஸ்டான்லி ஹால் இளையோர் பருவத்தைப் பற்றிச் சேகரித்த சோதனைக் குறிப்புகள் பெரும்பாலும் இம் முறையைக் கொண்டே பெறப்பட்டன. உண்மையான செய்திகளை எளிய வகையில் பெறும் பொருட்டு உபயோகிக்கப்படும் கேள்வி நிரல், மெய்யான விவரங்களையும் செய்திகளையும் சேகரிப்பதற்குப் பயனுடையதாய் விளங்குகின்றது. இளையோரிடம் இந்த முறையைப் பயன்படுத்திச் சேகரிக்கப்பட்ட குறிப்புகள், பின்னர்ப் பேட்டிக்கான முன்னேற்பாடுகளைச் செய்வதில் பயனுள்ளதாய் விளங்கும். இதன் காரணமாக, பேட்டி நேரத்தைத் தனிப்பட்ட சொந்த விவரங்களின் பிரச்சினைகளின்பாலும் பயன்படுத்தலாம்.

இளையோரின் மனவெழுச்சிகள், மனப்பாங்குகள் இன்னும் ஏனைய தனிப்பட்ட பண்புகளை அறியும்பொருட்டுக் கையாளப்படும் கேள்வி நிரல்கள், சுருக்கமாக அமைய வேண்டியது அவசியமானதாகும். கேள்விகள் எளிதான, தெளிவான வகையில் அமைக்கப்பட்டு, விடைகளை மெய்யாகவும், சுருக்கமாகவும் பெறும் வண்ணம் அமைக்காவிட்டால், பெறப்படும் சோதனைக் குறிப்புகள் திருப்தியுள்ளதாக இரா. மேலும், கேள்வி நிரலின் நோக்கத்தினை விளக்கிவிட்டு, இளையோரின் ஒத்துழைப்பை நாடி

அதைப் பெற்றுலொழிய, அவர்கள் உண்மையாகப் பதிலளிப் பதற்குத் தயங்கி மறுப்பர். எனினும், தனிப்பட்ட, சொந்த விவரங்களைப்பற்றி ஆராயும் பொருட்டுக் கேள்வி நிரல் முறையைக் கொண்டு நடத்தப்பட்ட ஆய்வுகளின் முடிவுகள் பெரும்பாலும் நம்பகமற்றும், ஏற்புடைமையின்றியும் காணப்பட்டன.

## மருத்துவ முறை (Clinical Method)

தனியாள் ஒருவரைச் சோதனைக்குட்படுத்தி, பிரச்சினைகளின் தன்மைகளை ஆராய இம் முறை பயன்படுகின்றது. இம் முறையில் தனியன் ஒருவனின் கல்வி, சமூக நடத்தை, எதிர்ப்பாலினரோடு பழகுதிவதில் ஏற்படும் பிரச்சினைகள் போன்றவற்றை நாம் ஆய்ந்து, அவைகளுக்கு ஏற்பத் தீர்வுகளைக் காணலாம். சமூகத்தில் குற்றவாளிகளாய் மாறுகின்றவர்களின் பிரச்சினைகளையும், அவர்கள் அவ்வாறு மாற நேர்ந்த அல்லது மாற வைத்த அடிப்படைக் காரணங்களையும் ஆராய்வதற்கு இம் முறை பயனுள்ளதாக இருக்கும். சமூக நோய்களான (social pathology) திருடுதல், கொலை செய்தல், குடித்தல், புகைபிடித்தல், பரத்தைமை (prostitution) போன்றவற்றில் ஈடுபடுகின்ற இளையோரின் கொள்கைகளின் தன்மைகளை அவர்கள் வாழ்ந்த விதம், குடும்பச் சூழ்நிலை, பெற்றோர்களின் வளர்ப்பு முறை, சுற்றுப்புறச் சூழ்நிலைகள், பழகிய நண்பர்கள், தொடர்பு கொண்டிருந்த உறவினர்களின் வாழ்க்கைத் தன்மைகள் போன்றவற்றை இதன் மூலம் ஆராய்ந்து, ஏன், எதற்காக, எவ்வாறு அவர்கள் சமூகக் குற்றவாளிகளாய் மாறினர் என்பதை அறிவதுடன் அவர்களைத் திருத்தவும் ஏற்ற வழிமுறைகளை வகுக்கலாம்.

## குறுக்குவெட்டு ஆய்வுமுறை (Cross - Sectional Method)

குறுக்குவெட்டு முறை இளையோர் பருவத்தின் முக்கிய வளர்ச்சித் தன்மைகளை ஒவ்வொரு வயதின் அடிப்படையில் விவரிக்கின்றது. பல்வேறு வயதினைச் சார்ந்த தனியரை ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஆய்ந்து, அவர்களைப்பற்றித் தெரிந்து கொள்வது குறுக்குவெட்டு முறையாகும். உடல் வளர்ச்சித் தன்மைகள், உடலியல் தன்மைகள், உளச்செயல்கள் போன்ற பல்வகைக் காரணிகள் ஒரு குறிப்பிட்ட காலத்தில் எவ்வாறு உள்ளன என்பதை இம் முறையின் மூலம் அறியலாம். அதாவது இம் முறை ஒரு தனியனைப் பற்றிய 'குறுக்குவெட்டுக்' காட்சியை அளிக்கின்றது. சான்றாக, உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்பில் பயிலும் மாணவர்கள் பலரை ஆய்ந்து, அவர்களுடைய சராசரி வயது, எடை, உயரம், பருமன் ஆகியவை எப்படி இருக்கின்றன

என்பதை நிர்ணயிக்கலாம். இதைப்போன்றே, வயதின் அடிப்படையில் கற்கும் திறமையில் ஏற்படும் மாற்றங்களை அறிய முற்படும்போது, தொடக்கப்பள்ளியிலிருந்து உயர்நிலைப்பள்ளி வரையுள்ள ஒவ்வொரு வயதினைச் சார்ந்த பிள்ளைகளை, கற்றல் சோதனைகளைக் கொண்டு ஆய்ந்து, சோதனைக் குறிப்புகளின் அடிப்படையில் கற்றல் செயற்பாங்கின் வளர்ச்சியினையும் தன்மையினையும் அறிய இயலும். பிறகு, இப் பல்வேறு காரணிகளின் சராசரிகளை வரைபடத்தில் ஏற்றி, ஒரு குறிப்பிட்ட காலத்தில் இளையோரின் சராசரி வளர்ச்சி எவ்வாறு உள்ளது என்ற குறுக்கு வெட்டுக் காட்சியைப் பெறலாம். இப்படித் தயாரிக்கப்பட்ட சராசரி வளர்ச்சிப் படத்துடன், எந்த ஒரு தனியனையும் ஒப்பிட்டு அவனுடைய வளர்ச்சித் தன்மையைப் பற்றி அறிய முடியும். இம் முறை சராசரி நிலையை நிர்ணயிக்க அனுகூலமாயுள்ளதால், இதை இயல்பு நிலை நிர்ணய முறை (Normative Survey) என்றும் கூறுவதுண்டு.

இம் முறையின் மூலம் பல்வகை வளரும் காரணிகளின் வளர்ச்சித் தன்மைகளை நன்கு அறியமுடியும். ஒரு செயற்பாங்கின் தன்மைகளில், காலப்போக்கில் ஏற்படும் மாற்றங்களைப்பற்றி அறிய இம் முறை பயன்படுகின்றது. இம் முறை குறுகிய காலத்தில் குறைந்த பொருட்செலவில் ஆராய்ச்சி நடத்த உதவுகின்றது. எண்ணற்ற ஆராய்ச்சித்துறைகளில் இம் முறைதான் கையாளப்படுகின்றது. உண்மையில், இளையோரைப்பற்றிய எண்ணற்ற செய்திக் குறிப்புகள் (data) இம் முறையைக் கொண்டுதான் அதிகமாகச் சேகரிக்கப்பட்டன. ஆனால், ஒருதனியனுடைய வளர்ச்சிக் கோலத்தைத் திட்டவட்டமாக இம் முறையைக் கொண்டு அறிய இயலாது என்பது இம் முறையின் குறைபாடு ஆகும். மேலும், இம் முறையினைக்கொண்டு சோதனை நடத்துவதற்குத் தேவைப்படும், பெரிய, ஒத்த குழுக்கள் கிடைக்கப்பெற்றால், இம் முறையைக் கையாளுவது மிகச் சிறந்ததாகும்.

### நீள்வகை ஆய்வு முறை (Longitudinal Studies)

நீள்வகை ஆய்வானது நடத்தையின் ஒரு குறிப்பிட்ட பண்புக் கூறினை, அதன் தொடக்கத்திலிருந்து இறுதிவரை விவரிக்கின்றது. இதன் மூலம் ஒரு செயற்பாங்கு வாழ்க்கை முழுதும் எவ்வாறு வளர்ச்சியடைகின்றது என்பதை அறியலாம். இம் முறையைக் கொண்டு ஒரே நபரில் ஆண்டிற்கு ஆண்டு ஏற்படும் மாற்றங்களை உணர்ந்தறியலாம். சான்றாக, வயதினடிப்படையில் ஒரு தனியனின் கற்கும் திறமையில் ஏற்படும் மாற்றங்களை அறிய முற்படும்போது, ஒரு குறிப்பிட்ட வயதினைச் சார்ந்தவர்

களைக் கற்றல் சோதனைகளின் மூலம் சோதித்து, பின்னர் ஆண்டு தோறும் அவர்களையே மறுசோதனைக்குள்ளாக்கி, அவர்களின் கற்கும் திறமையில் வயதினடிப்படையில் ஏற்படும் மாறுதல்களைக் கண்டறியலாம். ஆதலால், ஒரு தனியனின் அல்லது ஒரு குழுவினரின் ஒரு குறிப்பிட்ட பண்பில், காலப்போக்கில் ஏற்படும் மாற்றங்களைப்பற்றி அறிய உதவுவது நீள்வகை ஆய்வாகும். குறுக்கு வெட்டு ஆய்வுமுறை, தனியனைக் குறுக்குவெட்டாகப் பகுத்து ஆராய்வதாகும். மாறாக, இம் முறை அவனது தன்மைகளைக் காலப்போக்கில் ஆய்ந்தறியப் பயன்படுகின்றது. இவ் வாய்வு முறையின் மூலம், ஒரு தனியனின் தன்மைகளை, மாற்றங்களை நீண்டகாலம் வரை திரும்பத்திரும்ப உற்றுநோக்கி அளவிட்டு அறிய முடிகின்றது. இந் நோக்கு இளேயோர் பருவத்துக்கு முந்திய காலம், முன் இளேயோர் பருவம், பின் இளேயோர் பருவம் ஆகியவற்றின் குணநலன்களை ஆய்கின்றது. சமீப காலத்திய ஆய்வுகளில் இது பெருமளவிற்குப் பயன்படுத்தப்பட்டது. இம் முறையைப் பயன்படுத்தி உயரம், எடை ஆகியவற்றின் வளர்ச்சி விளைவுகளையும், குருதி அழுத்தம், நாடித்துடிப்பு, ஆர்வங்களின் மாற்றங்களையும் அறியப் பயன்படுத்தலாம். இம் முறையின் மூலம் வளர்ச்சியின் மெய்யான நிலையைக் கண்டறியலாம்.

இந்த முறையில், சோதனைக்குட்படுவோரின் எண்ணிக்கை அதிகம் வேண்டியதில்லை. எனினும் இம் முறை ஒரு சில குறை பாடுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இம்முறை அதிக கால நீடிப்பினையும், அதிகப் பொருள்செலவினையும் கொண்டதாகும். இதனுடன் ஒரு பரிசோதனைக் குழுவினைத் தொடர்ந்து சோதனைக் குட்படுத்தும் போது சில எதிர்ப்பாராத நிகழ்ச்சிகள் ஏற்பட்டால், அது இந்தச் சோதனை முடிவுகளைப் பாதிக்கும். இதனால் இந்தச் சோதனைக் குறிப்புகள் உண்மையானவைகளாக இரா. மேலும், திரும்பத்திரும்ப சோதனைக்குள்ளாக்கப்படும் தனியர், தாங்கள் சோதனைக்குட்படுத்தப்படுவதை உணர்ந்து, குறிப்பிடத் தக்க துலக்கங்களைத் தராமல் இருக்கலாம். ஆதலால், அத்தகைய சூழ்நிலையில் சேகரிக்கப்படும் குறிப்புகளும் உண்மையானவை களாக இரா. இந்த முறையில் இத்தகைய குறைபாடுகள் இருப்பினும், வளர்ச்சியின் பண்புக் கூறுகளைப் பற்றிய பல ஆய்வுகள் இம் முறையைக் கொண்டே நடத்தப்பட்டுள்ளன.

பரிசோதனை முறை (Experimental Method)

பரிசோதனை முறையானது கட்டுப்படுத்தப்பட்ட சூழ்நிலையில், ஓர் இயல்பான நிகழ்ச்சியின்பால் (phenomenon) ஒரு தனித்த

காரணி (Factor) கொண்டுள்ள செல்வாக்கினை நிர்ணயிக்கப் பயன்படும், கட்டுப்படுத்தப்பட்ட உற்றுநோக்கு முறையாகும். இந்த முறையை அனுசரித்தே இயற்பியல், வேதியியல், மற்றும் இயற்கை அறிவியல்கள் பெரும் வளர்ச்சியையும், வெற்றியையும், ஏய்தியிருக்கின்றன. உளவியலும் ஓர் அறிவியலாக விளங்கும் குறிக்கோளைக் கொண்டுள்ளதால், இக்காலத்தில் உளவியலிலும் இம்முறை வெகுவாகப்பயன்படுத்தப்பட்டு வருகிறது. எனவே, இம்முறைதான் உளவியலின் எல்லா வகைப்பட்ட முறைகளையும் விடச் சிறப்பு வாய்ந்ததாகும்.

எந்த ஒரு சோதனையிலும் இரு வகைப்பட்ட மாறிகளுள்ளன. அவை பிறிது சார்புள்ள மாறி (dependent variable), பிறிது சார்பற்ற மாறி (independent variable) எனப்படும். பிறிது சார்புள்ள மாறியானது பரிசோதனைக்காக எடுக்கப்பட்டுள்ள நடத்தைக்கூறு ஆகும். சான்றாக, இளையோனின் கல்விச் சாதனையில் நுண்ணறிவு கொண்டிருக்கும் பங்கினைக் கண்டறிய முற்படும் நாம், கல்விச் சாதனையோடு தொடர்பு கொண்டுள்ள காரணிகள் பலவற்றைக் கட்டுப்படுத்த வேண்டும். வயது, படிக்கும் பழக்கம் (study habit), சமூகப் பொருளாதாரத்தரம், நுண்ணறிவு, பள்ளி சார்ந்த மனப்பாங்குகள்ஆகிய காரணிகள் எல்லாம் கல்விச் சாதனையில் மாற்றத்தை ஏற்படுத்தவல்லன. ஆதலால், இவற்றையெல்லாம் கட்டுப்படுத்த வேண்டியது அவசியம். அதாவது, இவைகளைப் பரிசோதனைச் சூழ்நிலையில், ஒரு நிலையான மாறாத மதிப்புடையவைகளாக வைக்க வேண்டும். கல்விச் சாதனையானது, மேற்கூறிய காரணிகளைப்பொறுத்தும், அவற்றைச் சார்ந்தும் மாறுபடும் இயல்பு நிகழ்ச்சியாதலால், அது பிறிது சார்புள்ள மாறி எனப்படும். கல்விச் சாதனையில் செல்வாக்குக் கொண்டிருக்கும் காரணிகளான வயது, படிக்கும் பழக்கம், சமூகப் பொருளாதாரம், பள்ளிசார்ந்த மனப்பாங்குகள் ஆகியவை கூட மாறுந்தன்மையுடையனவாதலால், இவைகளும் மாறிகள் எனப்படும். இம்மாறிகளில், நம் பரிசோதனையில் ஒரு வேளையில் நுண்ணறிவு ஒன்றைத் தவிர, மற்றவைகள் கட்டுப்படுத்தப்பட்டு இருக்கையில், நுண்ணறிவை மட்டுமே மாற வைக்கின்றோம். அதாவது, வேறுபட்ட நுண்ணறிவு ஈவுகளைக் கொண்ட குழுக்கள் சிலவற்றை ஆய்வதற்கு முற்படுகின்றோம். இப்பரிசோதனையில், நுண்ணறிவுத் தரம் எதையும் சார்ந்து ஏற்படாதாதலால், அது பிறிது சார்பற்ற மாறி எனப்படும். மற்ற கட்டுப்படுத்தப்பட்டுள்ள மாறிகள் " பாரமீடர்கள் " (parameters) எனப்படுகின்றன. இந்த பாரமீடர்களில், வேறு ஒன்றினை மற்றொரு சமயத்தில் பிறிது சார்பற்ற மாறியாக்கி

அதன் மாற்றத்திஞல் கல்விச் சாதனையில் ஏற்படும் வேறுபாட்டினைக் கணிக்கலாம். அப்பொழுது, முன்பு பிறிது சாற்பற்ற மாறியாக இருந்த நுண்ணறிவுத் தரத்தைப் பாரமீட்டர்களில் ஒன்ருக ஆக்கி விட்டு, அதையும் கட்டுப்படுத்த வேண்டும். இவ்வாறு, பரிசோதனையின் நோக்கங்களுக்கும், தேவைகளுக்கும், ஏற்ற விதத்தில் பரிசோதனையை மாற்றியமைத்து, அவைகளுக்கான முடிவுகளையும் உண்மைகளையும் நாம் பெறுவதற்கு இயலும்.

உளவியலில் இம்முறை சில வேளைகளில் தனியர்களைக் கொண்டும், மற்ற வேளைகளில் குழுக்களைக் கொண்டும் கையாளப்படுகின்றது. தனியர்களைக் கொண்டு செய்யப்படும் பரிசோதனையில் குறைந்த அளவு இருவர் இருப்பது இன்றியமை யாதது. இவர்களில் ஒருவர் பரிசோதனையாளர். இவர்தான் பரிசோதனைக்கான ஏற்பாடுகளைச் செய்து, எல்லாக் காரணிகளை யும் கட்டுப்படுத்தி, ஒரு சில காரணிகளையே மாறவைத்து அவற்றின் விளைவுகளை உற்று நோக்குபவர் ஆவார். மற்றவர் பரிசோதனைக் குட்பட்டவர். ஒருவன் நடத்தையில் பலவிதக் காரணிகள் கொண்டுள்ள செல்வாக்கினைத் தீர்மானிக்கும் பொருட்டு இவர்தான் பரிசோதனைக்குள்ளாகின்ருர். இவர் பாலான சோதனைக் குறிப்புகளின் மூலமே நாம் சோதனையின் முடிவுகளை நிர்மாணிக்க முடிகின்றது. இவ்விருவரைத்தவிர, உளவியல் பரிசோதனையில் பல்விதமான உளவியல் கருவிகளும், சாதனங்களும் காகிதம் எழுதுகோலைக் (paper-penciltest) கொண்ட சோதனைத்தாள்களும் பயன்படுத்தப்படுகின்றன.

பெரும்பாலான வேளைகளில், உளவியல் பரிசோதனைகள் குழுக்களைக் கொண்டும் நடத்தப்படுகின்றன: இதிலும் குறைந்த அளவு இரு குழுக்கள் தேவை. ஒரு குழுவானது கட்டுப்படுத்தப் பட்ட குழுவென்றும் (control group), மற்றது பரிசோதனைக் குழுவென்றும் (Experimental group) கூறப்படுகின்றது. இவ்விரு குழுக்களும் ஒரு காரணியைத் தவிர, மற்றெல்லா விதங்களிலும் ஒத்திருக்க வேண்டும். இந்த ஒத்த தன்மைக் குழுக்களை நிர்மாணிப்பது சராசரியின் அடிப்படையில் செய்யப்படுகின்றது. சோதனைக்கான பிறிது சார்பற்ற மாறி ஒரு குழுவின் பால்தான் செயல்பட வைக்கப்படுகின்றது. அக்குழுவே பரிசோதனைக்குழு வெனப்படும். அடுத்த குழுவில், இந்த பிறிது சார்பற்ற மாறி மட்டும் இல்லாது, மற்றெல்லா மாறிகளும் சோதனைக்குழுவில் போன்றே கட்டுப்படுத்தப்பட்ட மதிப்பு ஒன்றில் வைக்கப் பட்டிருப்பதால் அந்த குழு கட்டுப்படுத்தப்பட்ட குழுவெனப்படு கின்றது. இவ்வாறு, இரு குழுக்களின் பாலான சோதனைக்குறிப்பு

களை ஒப்பிட்டு, சோதனைக்கான மாறியினால் ஏற்பட்டிருக்கும் விளைவுகளைத் தீர்மானிக்க முடிகின்றது.

கீழ்காணும் இளையோர் உளவியலின் பிரச்சினை இம்முறையைக் கொண்டு ஆராயப்படுகின்றன.

(அ) பூப்பின் விளைவாக இளையோரின் நுண்ணறிவு ஈவினில் ஏற்படும் மாற்றம்.

(ஆ) இளையோரின் நடத்தைகளில் ஆதிக்க, குடியரசுத் தலைமை முறைகள் கொண்டிருக்கும் செல்வாக்கு.

(இ) ஆலோசனை தந்து, வழிகாட்டும் திட்டம் செயல் படுவதன் விளைவாக இளையோரின் பொருத்தப்பாட்டில் ஏற்படும் பலன்கள்.

சமூக அளவை முறை (sociometric technique) :

ஆசிரியர்கள் தங்கள் வகுப்புகளிலுள்ள சமவயதினரிடையே நிலவும் உறவுகளைப்பற்றி அறிந்து கொள்ளும் பொருட்டு சமூக அளவை முறையைப் பயன்படுத்தலாம். இதில், ஆசிரியர், ஒவ்வொரு மாணவரையும், தனக்கு விருப்பம் உள்ள மிக நெருங்கிய மூன்று நண்பர்களின் பெயர்களைக் கூறும்படியும், இவ்வாறே எந்த வேலையைச் செய்வதில் அவர்கள் யாருடன் கூடிச்செய்யும் விருப்பத்தினைக் கொண்டிருக்கின்றனர் எனக் குறிப்பிடும்படியும், அல்லது வகுப்பில் யாருடன் அடுத்து அமர்ந்திருக்க விருப்பம் கொண்டுள்ளனர் என்பதைத் தெரிவிக்கும் படியும் செய்யலாம். இம்முறையைக் கொண்டு வகுப்பிலுள்ள மாணவர்களால் மிகுந்த மதிப்புள்ளவர்களையும், பெரும்பாலான மாணவர்களால் புறக்கணிக்கப்படுபவர்களையும் கண்டறிய முடிகின்றது.

இத்தகைய சமூக அளவை முறைகள் இளையோருடன் தொடர்பு கொண்டு செயல்படுவோருக்கும், ஆசிரியர்களுக்கும் மிகவும் பயனுடையவையாகக் காணப்படுகின்றன. ஆசிரியர்கள் இம்முறையைக் கொண்டு வகுப்பில் புறக்கணிக்கப்பட்டுத் தனித்து விடப்பட்டிருக்கும் மாணவ, மாணவியர்களை அறிந்து அவர்கள் தங்கள் சமவயதினரிடையே அங்கீகாரத்தையும் நம்பிக்கை யையும் பெறுவதற்கு ஏற்ற ஆலோசனையைத் தர ஏதுவாயிருக்கும். மேலும் இளையோரிடையே சம வயதினர் ஒருவரையொருவர் ஏற்றுக் கொள்வதற்கும், புறக்கணிப்பதற்கும் அடிப்படையா யுள்ள காரணிகளையும் அறிந்து கொள்வதற்கு இம்முறை

ஏதுவாயிருக்கின்றது. தவிர, இளையோரிடையே மிகுந்த மதிப்புள்ளவர்கள், புறக்கணிக்கப்பட்டுத் தனியாக விடப்பட்டவர்கள் ஆகியோரின் ஆளுமைத்தன்மைகளை ஒப்பிட்டு, இளையோரின் உறவுகளின் பாலான பயன் மதிப்புகளை நாம் ஊகித்து அறியலாம். எனினும், கூருணர்வுடைய இளையோர் தாங்கள் தங்கள் வகுப்புத் தோழர்களால் புறக்கணிக்கப்படுகின்றனர் என்ற உண்மையினை உணராவண்ணம் ஆசிரியர் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். ஏனெனில் இத்தகைய எண்ணமும் உணர்வும் அவர்களிடத்து மனவெழுச்சிக் கோளாறுகளை உண்டாக்கி அவர்களின் பொருத்தப்பாட்டில் சிக்கல்களை ஏற்படுத்த இடமுண்டு.

அதிகாரச் சுருக்கம்

ஒரு தனியன் குழந்தைப் பருவத்திலிருந்து முதிர்ச்சிப் பருவத்திற்கு மாறுவதற்குத் தேவையானவற்றைத் தோற்றுவித்துக் கற்பிப்பது இளையோர் பருவமாகும். பொதுவாக இப்பருவம் பலவற்றைச் சாதிக்கும் ஆற்றல் நிறைந்த காலமாக இருப்பினும், பெரும்பாலோருக்கு இடுக்கண் நிறைந்த சோதனைக் காலமாகவும் விளங்குகின்றது. மேலும், இப்பருவத்தில் ஒரு தனியன் தன்னைப்பற்றிய பல பிரச்சினைகளைத் தீர்க்க வேண்டியவனாக இருக்கின்றான்.

ஒரு தனியன் பூப்பெய்தி இனப்பெருக்கச் சக்தியைப் பெறும்போது, இளையோர் பருவத்தை அடைகின்றான். இப்பருவத்திற்குரிய வளர்ச்சிப் பணிகளை ஹேவிகர்ஸ்ட் என்பார் விளக்கியுள்ளார். இளையோர் பருவம் எல்லா வகையிலும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இப்பருவத்தில் தான் தனியனின் அறிவும், சமூக உறவுகளும், வாழ்க்கையைப் பற்றிய இலக்குகளும், கோட்பாடுகளும் வளர்ச்சியுற்று நிலைபெறுகின்றன. மேலும், இப்பருவத்தில், ஆண்பிள்ளைகளுக்கும், பெண்பாலினருக்கும், பாலின உணர்ச்சி ஏற்பட்டு, தங்கள் பாலிற்குரிய கடமைகளையும், பொறுப்புக்களையும் அவர்கள் ஏற்று நடக்க வேண்டியவர்களாயிருக்கின்றனர்.

மேலும் ஒருவன் மனவெழுச்சி சுதந்திரம் பெறுதலும் இப்பருவத்தின் இன்றியமையாத ஒரு நிகழ்ச்சியாகும். இப்பருவத்தில் தான், ஒருவன் மனித வாழ்க்கையின் பயன் மதிப்புகளையும், சிறப்புக்களையும் அறிகின்றான். ஸ்டான்லி ஹால் என்பார் இளையோர் பருவத்தை அழுத்தங்களும், குமுறல்களும் கொண்ட பருவம் என்றும், துடிக்கும் பருவம் என்றும் விளக்கி

யுள்ளார். இப்பருவத்தில் நிகழ்கின்ற உயிரியல் மாற்றங்களும், மனவெழுச்சி மாற்றங்களுமே பிரச்சினைகள் ஏற்படுவதற்குக் காரணமாயுள்ளன என்று அவர் கருதினர். அவரது இந்த உயிரியல் நோக்குள்ள கோட்பாடு பரிசோதனை வழிச்சான்றுகள் இல்லாமையான் கைவிடப்பட்டது.

இளையோர் பருவத்து அழுத்தங்களும், குமுறல்களும் ஒரு சமூகத்தின் பண்பாட்டினைப் பொறுத்துள்ளன என்பதும், ஒரு பண்பாடு சுமத்தும் தடைகளும் வரம்புகளும் தான் பொருத்தப் பாட்டுப் பிரச்சினைகள் உண்டாவதற்குக் காரணமாயுள்ளன என் பதும் இப்பருவத்தினைப் பற்றிய பண்பாட்டுக் கோட்பாடாகும். பண்பாட்டு மனிதவியலாளர்கள் பண்டைக்கால சமூகங்களைக் கொண்டு ஆராய்ச்சிகள் செய்ததின் விளைவே இம்முடிவாகும். எனவே, ஓர் இளையோன் தன் மரபு நிலைவழி வந்த உயிரியல் தன்மைகளும், வாழ்க்கையின் சமூக, பண்பாட்டு அமைப்புகளின் தன்மைகளும் ஒன்றோடொன்று இணைந்து செயல்படுவதன் இடை வினையின் விளைவேயாவான்.

இளையோர் உளவியலில், நாட்குறிப்பு - எழுத்துப் படைப்பு முறை, பேட்டி காணல் முறை, கேள்வி நிரல்முறை, மருத்துவ முறை, குறுக்குவெட்டு ஆய்வு முறை, நீள்வகை ஆய்வு முறை, பரிசோதனை முறை, சமூக அளவை முறை போன்றவை கையாளப்படுகின்றன. இளையோரின் கருத்துக்களையும், எண்ணங்களையும், எதிர்கால நோக்குகளையும், அறியும் பொருட்டு அவர்களின் நாட்குறிப்பு களையும், கட்டுரை, கவிதை, கதை போன்ற எழுத்துப் படைப்பு களையும் ஆய்வது ஒரு முறையாகும். இம் முறை சில குறை பாடுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. பேட்டி காணும் முறையின் பயன் பேட்டி காண்பவரின் திறமையினையும், பொறுமையுடன் செவிமடுக்கும் மனப்பாங்கினையும் பொறுத் துள்ளது. கேள்வி–நிரல் முறை, இளையோர் பருவத்து ஆய்வுகளில் பெரும்பாலும் பயன்படுத்தப் பட்டதாகும். இம் முறையின் மூலம் சேகரிக்கப்பட்ட குறிப்புக்கள், பின்னர் பேட்டிக்கான முன்னேற்பாடுகளைச் செய்வதில் பயனுள்ளதாய் விளங்கும். தனியாள் ஒருவனை சோதனைக்குட்படுத்தி, பிரச்சினைகளின் தன்மைகளை ஆராயப் பயன்படும் முறை மருத்துவ முறையாகும். குறுக்குவெட்டு ஆய்வு முறை இளையோரின் வளர்ச்சித் தன்மைகளை வயதின் அடிப்படையில் விவரிக்கின்றது. பல்வகைக் காரணிகள் ஒரு குறிப்பிட்ட காலத்தில் எவ்வாறு உள்ளன எனும் குறுக்கு வெட்டுக் காட்சியினை இம் முறை அளிக்கின்றது. இதனை இயல்புநிலை நிர்ணய முறை என்றும் அழைப்பதுண்டு. இளையோரைப்பற்றிய

எண்ணற்ற செய்திக் குறிப்புகள் இம் முறையினைக் கொண்டு தான் அதிகமான அளவில் சேகரிக்கப்பட்டன. நீள்வகை ஆய்வானது நடத்தையின் ஒரு குறிப்பிட்ட பண்புக்கூறினை அதன் தொடக்கத்திலிருந்து இறுதிவரை விவரிக்கின்றது. இதன் மூலம் ஒரு செயற்பாங்கு வாழ்க்கை முழுவதும் எவ்வாறு வளர்ச்சியடைகின்றது என்பதை அறியலாம்.

பரிசோதனை முறையானது கட்டுப்படுத்தப்பட்ட சூழ்நிலையில், ஒரு இயல் நிகழ்ச்சியின்பால் ஒரு தனித்த காரணி கொண்டுள்ள செல்வாக்கினை கண்டறியப் பயன்படும் கட்டுப்படுத்தப்பட்ட உற்றுநோக்கு முறையாகும். ஒரு சோதனையில் இரு வகைப்பட்ட மாறிகள் உள்ளன. அவை சார்புள்ள மாறி, சார்பற்ற மாறி எனப்படும். உளவியலில் இம் முறையானது சில சமயங்களில் தனியார்களைக் கொண்டும், சில வேளைகளில் குழுக்களைக் கொண்டும் கையாளப் படுகின்றது. தனியர்களைக் கொண்டு செய்யப்படும் பரிசோதனையில் பரிசோதனையாளர் ஒருவரும், சோதனைக்காட்படுபவர் ஒருவரும் இருப்பர் இவ்வாறே குழுக்களைக் கொண்டு செய்யப்படும் பரிசோதனையில் கட்டுப்படுத்தப்பட்ட குழு ஒன்றும், பரிசோதனைக் குழு ஒன்றும் இருப்பதவசியம்.

ஒரு குழுவினரிடையே நிலவும் உறவுகளைப்பற்றி அறிந்து கொள்வதற்கு சமூக அளவை முறை பயன்படுகின்றது. இம் முறையைக் கொண்டு ஒரு குழுவிலுள்ள மிகுந்த மதிப்புடையவர்களையும், வெகுவாகப் புறக்கணிக்கப் படுபவர்களையும் கண்டறிய முடியும்.

# 2. உடல் இயக்க வளர்ச்சி

## (Physical and Motor Development)

ஒரு தனியனைப்பற்றியோ ஒரு குழுவினரைப் பற்றியோ அறிந்துகொள்ள, அவர்களின் சமூகச் சூழ்நிலை, உடல், உள்ளத் தன்மைகளின் வளர்ச்சி வரலாறுகளைக் காணவேண்டும். ஒரு தனியன் கடந்த காலத்தில் அவனுக்கு நேர்ந்த அனுபவங்கள், மாற்றங்கள் ஆகியவற்றின் கூட்டு விளைவே ஆவான். அவனது தற்போதைய ஆளுமை (personality) அவனது கடந்த கால வாழ்க்கை நிகழ்ச்சிகளினால் செதுக்கப்பட்டு உருவாக்கப்பட்டுள்ளது. அவனது கடந்தகால வாழ்க்கை, அவனுக்கு எந்த அளவிற்கு அனுகூலமான பண்புகளையும் அனுபவங்களையும் தந்துள்ளதோ, அந்த அளவிற்கே அவன் தற்போதைய நிலையுடன் தன்னைப் பொருத்திக்கொண்டு வெற்றி காண இயலும். இதைப் போன்றே எந்த அளவிற்கு, கடந்த கால வாழ்க்கை அவனுக்கு உயிரியல், சமூகவியல், உளவியல் சார்ந்த குறைபாடுகளைத் தோற்றுவித்துள்ளதோ, அந்த அளவிற்கு அவனது நிகழ்காலப் பொருத்தப்பாடுகளும் பாதிக்கப்படும். எனவே இளையோன் பிறருடன் தொடர்பு கொள்வதன் காரணமாக அவனிடத்தில் உண்டாகும் மாற்றங்கள், பொருத்தப்பாட்டுத் தன்மைகள் ஆகியவற்றைப் பற்றி அறியவும், இன்னும் அவனது குணச் சிறப்புகள், பண்புகள் போன்றவைகளைப் பற்றி அறியவும், நாம் அவன் வளர்ந்து வந்த விதத்தைப் பற்றியும், அவனுள் நிகழ்ந்துவிட்ட மாற்றங்களைப் பற்றியும் அறியவேண்டியது அவசியமாகின்றது.

இளையோர் பருவத்தில், உடலிலும், உடற் கூறுபாட்டு அமைப்புகளிலும் பெரும் மாற்றங்கள் ஏற்படுகின்றன. உடல் மாற்றங்களும் உடற் கூறுபாடுகளின் மாற்றங்களும் மட்டுமே இளையோர் பருவம் துவங்கிவிட்டதன் அடையாளக் குறிகளாக அமைந்துவிடுவதில்லை. உடல், உடலியற் கூறுபாடுகளின் வளர்ச்சிகளோடு, மனவெழுச்சி வளர்ச்சி, அறிவு வளர்ச்சி, சமூக

வளர்ச்சி போன்றவைகளும் ஒரு தனியன் முதிர்ச்சியடைந்து விட்டதை எடுத்துக் காட்டுகின்றன. எனினும், மற்றவைகளின் வளர்ச்சி நம் கண்களுக்கு வெகுவாகப் புலப்படுவதில்லை. உடல் மாற்றங்களும், உடற் கூறுபாடுகளின் மாற்றங்களுமே தனியன் இளையோர் பருவத்தை எய்திவிட்டதை நமக்கு முதன் முதலில் எடுத்துக்காட்டுகின்றன. அதனைக் கண்ணுற்ற பிறகே, ஒரு தனியன் அடைந்து கொண்டிருக்கும் ஏனைய வளர்ச்சிகளும் புலப்படத் தொடங்குகின்றன. எனவே, இளையோர் பருவத்தை நிர்ணயிக்கின்ற வளர்ச்சிகளில், உடல், உடற் கூறுபாடுகளின் வளர்ச்சி முக்கியமானவைகளாகக் கருதப்படுகின்றன.

ஒரு தனியனின் நடத்தையும், பொருத்தப்பாடும் அவனுடைய உடல் வளர்ச்சியையும், உடற் கூறுபாடுகளின் வளர்ச்சியையும் சார்ந்திருப்பதால் இளையோனின் உளவியலைப்பற்றி ஆராயுங்கால், அவனுள் ஏற்படும் உடல் மாற்றங்களையும், உடற் கூறு பாடுகளின் மாற்றங்களையும் பற்றி அறிந்துகொள்ளவேண்டியது அவசியமாகின்றது. பொதுவாக, இப்பருவத்தில் ஓர் ஆணோ அன்றி பெண்ணோ பெற்றிருக்கவேண்டிய உடல் வளர்ச்சியையும், உடற் கூறுபாடுகளின் மாற்றங்களையும் தெரிந்து கொண்டால், அந்த கணிப்பைத் தாண்டியுள்ள அல்லது பின் தங்கியுள்ளவர்களின் பிரச்சினைகளையும், அதன் விளைவாக ஏற்படும் உளவியல் வேறுபாடுகளையும் நாம் அறிய முடியும். மேலும், ஒவ்வொரு ஆணும் பெண்ணும் வேறுபட்ட உடல் வளர்ச்சி, உடற் கூறுபாடுகளின் வளர்ச்சியைப் பெறுவது போன்றே, வேறுபட்ட மனவெழுச்சிகளையும், மனப் பாங்குகளையும், இப் பருவத்தில் அடைகின்றனர். இரு பாலினருக்கும் இடையில் ஏற்படும் இத்தகைய உளவியல் வேறுபாடுகளைப் பற்றித் தெரிந்து கொள்ள, உடல், உடற் கூறுபாடுகளின் வளர்ச்சியைப் பற்றியும் நாம் அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும்.

### உடல் உருவின் கருத்துக்கோள் (Concept of physical self)

ஒவ்வொருவரும் தனக்கென ஒரு தனித்த உருவக் கருத்துருவைப் பெற்றிருப்பது மனித இனத்திடம் காணப்படும் சிறப்பானதொரு குணமாகும். இந்த உருவக் கருத்துக்கோளை மையமாகக் கொண்டே, ஒருவனின் வெளி அனுபவங்களும், உள்ளுணர்வுகளும் அமைகின்றன. மனிதன் தன்னையறிந்து செயல்படுவதற்குக் காரணமாயிருக்கும் சின்னம் அவனது உடலே என்று ஜாக்ரி (Zachry) என்பார் கூறுகின்றார். எனவே, ஒருவனின் உடல் மாற்றங்கள், அவனது உருவ அமைப்பின் கருத்துருவையும் அதற்கேற்ற நடத்தைகளையும் பாதிப்பனவாக

உள்ளன. முதிர்ந்த மனிதனிடமும், எடை கூடுதல், வழுக்கை விழுதல், இளமைத் தோற்றம் மறைதல், உடலின் செயல்திறம் குறைதல் போன்ற உடல் மாற்றங்கள் ஏற்படவே செய்கின்றன. எனினும், இளையோர் பருவத்தில் ஒருவனுக்கு ஏற்படும் உடல் மாற்றங்களினால் விளையும் பிரச்சினைகளைப் போன்று, முதிர்ந்த வரிடம் ஏற்படும் உடல் மாற்றங்கள் பிரச்சினைகளைத் தோற்று விப்பதில்லை. முதிர்ந்தவன், தன் உடல் மாற்றத்தையும் அதன் விளைவில் எழும் சிக்கல்களையும் சரி செய்து கொள்ள, போதிய அனுபவத்தையும், உள முதிர்ச்சியையும் பெற்றிருக்கின்றான். வாழ்க்கையின் மாறுபடும் நிலையின் உண்மைத் தத்துவங்களை அவன் அறிந்து கொண்டிருப்பதால், அம்மாற்றங்களை ஏற்க அவனிடம் போதிய மன முதிர்ச்சி இருக்கின்றது. ஆனால், ஓர் இளையோன் இத்தகைய அனுபவத்தை மாற்றங்களை ஏற்றுச் செயல்படுகின்ற மனோநிடத்தினையும் பெற்றிருக்கவில்லை. அவன் அந்த இளவயதில் வாழ்க்கையின் மாறுகின்ற உண்மை நிலையை அறியாதிருப்பதால், அவனுக்குத் தன்னுள் விளையும் மாற்றங்களை ஏற்றுக் கொண்டு, இன்னும் ஏற்படவிருக்கும் மாற்றங்களுக் காகத் தன்னை ஆயத்த நிலையில் வைத்துக்கொள்ள முடிவதில்லை. ஆதலால், அவன் ஆயத்தமான நிலையில் இல்லாதபோது ஏற்படும் உடல் மாற்றங்கள், அவனது உள்ளத்தினையும், நடத்தைகளையும் பெரிதும் பாதிப்பனவாக அமைகின்றன.

ஒரு சில வேளைகளில், ஒரு தனியன் தன்னிடத்து ஏற்படும் உடல் மாற்றங்களை ஏற்றுக்கொள்ளாமலோ, உண்மையில் அவைகளை அறிந்து கொள்ளாமலோ இருக்கலாம். இந்நேரங் களில் அவன் ஏற்கனவே தன் வயதிற்கும் உடல் தோற்றத் திற்கும் ஏற்பச் செய்து வந்த காரியங்களையே தொடர்ந்து செய்து வருகின்றான். இத்தகையோரை "உன் வயதுக்கேற்ப நடந்து கொள்" என்று பெரியோர் கூறுவதை நாம் பலமுறை கேட்டுள்ளோம்.

இங்ஙனம் இளையோர் பருவத்தினை அடைந்தும் ஒருவன் தன்னைச் சிறு பிள்ளையாக நினைத்துக்கொண்டு செயல் படுவதால் பெரியோர்களின் இடிந்துரைக்கும், அதன் விளைவால் பொருத்தப் பாட்டுப் பிரச்சினைகளுக்கும் ஆளாகின்றான். இதற்கு மாறாக, இளையோர் பருவத்தின் மாற்றங்கள் தன்னுள் ஏற்படுவதற்கு முன்னரே சிலர் அம்மாற்றங்களைப் போலியாக ஏற்று நடக்க ஆசைப்படுகின்றனர். சான்றாக, 10 வயதுச் சிறுமி ஒருவள் தன் மூத்த சகோதரியின் உடைகளை, தாவணிகளை அணிந்து கொண்டு மூத்தவளைப் போன்று காட்சி தர ஆசைப்படுகின்றாள்.

இதைப் போன்றே இளையோர் பருவத்தை அடையாத சிறுவனும், முதிர்ந்தவர்கள் சவரம் செய்து கொள்வதனைக் கண்டு, தனக்கும் முகத்தில் மயிர்கள் தோன்ற வேண்டும், தானும் அவ்வாறே சவரம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசையில் வழ வழப்பான தனது கன்னங்களில் மயிர்கள் தோன்றுவதற்கு முன்னரே சவரம் செய்து கொண்டு, அதன் மூலம் மயிர்களின் வளர்ச்சியினை விரைவுபடுத்த முயற்சிக்கின்றான். எனவேதான் எண்ணற்ற மனிதர்கள் வாழ்க்கையின் முற்பகுதியில் தாங்கள் முதிர்ந்தவர்களாக ஆக வேண்டுமென்றும், பிற்பகுதியில் தாங்கள் தொடர்ந்து இளையோர்களாகவே இருக்க வேண்டு மென்றும் விரும்புகின்றனர்.

**உடல் மாற்றத்தின் விளைவுகள் (Effects of Bodily changes) :**

உடல் மாற்றங்கள் ஒரு தனியனிடம் தன்னுணர்வுகளை மிகுதியாக ஏற்படுத்துகின்றன. ஒருவன் போதிய உடல் முதிர்ச்சியினைப் பெறும்போது, "தான்" எனும் நினைவினையும், தன்னைச் சார்ந்த பாலின நினைவினையும், உடல் மாற்றத்தினைச் சார்ந்து எழும் நினைவுகளையும் அடைகின்றான். அதற்கேற்ப அவனிடம், எதிர்ப்பாலினரின்பால் கவர்ச்சி, தன் தோற்றத்தில் அக்கறை, ஆரோக்கியமான உடல் நிலையைப் பெறுவதில் ஆர்வம், தனது உடல் நலத்தினைப் பாதுகாத்துக் கொள்வதில் நாட்டம் போன்ற ஆர்வங்கள் எழுகின்றன. எதிர்ப்பாலினரின்பால் தோன்றுகின்ற உணர்வுகள் சிலருக்குத் தொல்லைகளைத் தருவன வாகவும், மற்றவர்களுக்கு இன்பத்தை விளைவிப்பனவாகவும் காணப்படுகின்றன. தன்னிடம் ஏற்பட்டு விட்ட உடல் மாற்றத்தை ஏற்றுக்கொள்ளாத இளையோனும் இளையவளும் அவைகளுக்காக வெட்கப்படுபவர்களாகவும், வருத்தமடைபவர் களாகவும் காணப்படுகின்றனர். இவர்கள், மறுபாலினர் தங்களைக் கவனிக்க நேரிடுவதை உணரும்போதும், தங்கள் உடல் மாற்றத்தினை நொந்துகொண்டு, அவற்றை மறைத்துக்கொள்ள முயல்கின்றனர். இவர்களுக்கு உடல் வளர்ச்சியும் மாற்றமும் தொல்லைகளை விளைவிப்பனவாகவே இருக்கின்றன.

மாறாக, சிலர் தங்களில் ஏற்பட்டுள்ள மாற்றங்களை ஏற்றுக் கொண்டு, மகிழ்வடைகின்றனர். அவைகளை, எதிர்ப்பாலி னரும் கவனிக்க நேர்ந்தால் இவர்கள் அவர்களின் ஆர்வத்தினை வரவேற்கின்றனர். தங்கள் பாலினத்திற்கு ஏற்ற பொருத்த மான உடல் மாற்றத்தினைப் பெற்றுள்ளோம் என்ற நினைவிலும் அவைகளைப் பிறர் பார்த்து, புரிந்து கொண்டு தங்களைப் பாராட்டுகின்றனர் என்ற நினைவிலும் அவர்கள் மகிழ்ச்சியடை

கின்றனர். இங்ஙனம், திடீரெனப் பருவம் எய்திவிட்ட சிறுமியர் ஒரு சிலர் எதிர்ப்பாலினரை நேரில் சந்திக்க நெடு நாட்கள் தயங்குவதையும் வெட்கப்பட்டுக் கொண்டிருப்பதையும், வேறு சிலர் பூப்பெய்துவதற்கு முன்னரே, இறுக்கமான ஆடைகளையும் உள்கச்சைகளையும் அணிந்து தங்களின் வளரும் மார்பகங்களைப் பெருமைப்படப் புலப்படுத்தி, பிற பாலினருடன் பழகுவதையும் நாம் காண்கின்றோம். இவ்விருவகை மனப்பாங்குகளும் விரும்பத் தக்கதன்று. இவைகள், உடல் மாற்றங்களைப் பற்றிய தவறான கருத்தின் விளைவேயாகும். எனவே பெற்றோர்களும், ஆசிரியர் களும் உடல் மாற்றங்களைப் பற்றிய உண்மை அறிவினை இவர்களுக்குப் போதித்து நல்வழிப்படுத்துதல் நன்று.

**வளர்ச்சி வளைவுகள் (Growth Curves) :**

உடல், உடற் கூறுபாட்டு வளர்ச்சியும் மாற்றங்களும் இளையோர் பருவத்தில் மிக விரைவாக நடைபெறுகின்றன. ஒரு சில உறுப்புகள் அவன் பிறந்ததிலிருந்தே வளரத் துவங்கி, இளையோர் பருவத்தில் வேகங்குன்றி, தொடர்ந்து வளர்ச்சியடைந்து முதிர்ச்சியினைப் பெறுகின்றன. ஒரு சில உறுப்புகள் குழந்தைப் பருவத்தில் போதிய வளர்ச்சி பெறாது, வளர்ச்சியில் தேக்கம் கண்டு, இளையோர் பருவத்தின் துவக்கத்தில் திடீரெனத் துரிதமாக வளரத் தொடங்குகின்றன. உறுப்புகளின் வளர்ச்சியில் ஏற்படும் இத்தகைய வேறுபாடுகளைக் குறிப்பிடுவனவாகப் பல்வகை வளர்ச்சி வளைவுகள் உள்ளன, எனவே, உடலின் பல்வேறு பாகங்கள் வேறுபட்ட வேகத்துடன் வளர்ச்சியுறுகின்றன. மேலும் இளையோர் பருவத்தில் பெண்பிள்ளைகளின் உடல், உடற் கூறுபாடுகளின் வளர்ச்சி ஆண் பிள்ளைகளின் உடல், உடற் கூறுபாடுகளின் வளர்ச்சியைவிட விரைவாய் நடைபெறுகின்றது. ஆதலால், உடல், உடலியல் வளர்ச்சியினைக் காட்டும் வளர்ச்சி வளைவுகள் ஒரு தனி மனிதனின் பல பாகங்களின் பாற்பட்ட வளர்ச்சிகளைக் காட்டுவதைத்தவிர, தனிமனித வேறுபாடுகளையும் குறிப்பிடுவனவாய் உள்ளன.

உடல் வளர்ச்சியைப்பற்றி அறிந்து கொள்ள நாம் மூன்று வகையான அளவு முறைகளைப் பயன்படுத்தலாம். முதலாவதாக, ஒரு தனியன் நீளவாக்கில் வளர்வதை (Linear Growth) அளந்து உடல் வளர்ச்சியை நிர்ணயிக்கலாம். இது ஒருபரிமாண வளர்ச்சி யாகும். சான்றாக, நிற்கும் உயரம், அமர்ந்து இருக்கும் உயரம், கைகால்களின் நீளம் இவற்றை அளந்து அறிதல் முதல்வகை முறையினைச்சாரும். இரண்டாவதாக, பக்கவாட்டில் அல்லது சுற்றளவில் ஏற்படுகின்ற வளர்ச்சியினை (Areal Growth) அளவிட்டு

உடல் வளர்ச்சியினைக் கணிக்கலாம். இது இரு பரிமாண வளர்ச்சியாகும். கை, கால்களின் பக்கவாட்டான சுற்றளவு, மார்பளவு, இடுப்பளவு போன்றவைகளை அளந்து அறிதல் இவ்வகையின் பாற்படும். மூன்றாவதாக ஒருவன் அடைகின்ற அடர்த்தி நிறையின் பெருக்கத்தைக் கொண்டும் உடல் வளர்ச்சியினைக் கணிக்கலாம் (Ponderal Growth). இது முப்பரிமாண வளர்ச்சியாகும். சான்றாக, ஒருவரின் எடையைக் கணிப்பது இவ்வகையைச் சாரும்:

உடலின் உயரம், பரிமாணம், எடையின் அதிகரிப்பு, ஆகியவை அவைகளுக்கே உரித்தான தனிச்சிறப்பியல்புகளுடன் வளர்ச்சி பெறுகின்றன. பிறந்தபோது இருந்த உயரம் (நீளப் பண்பு) முதிர்ச்சிப் பருவத்தில் 3·5 மடங்கு வளர்ச்சியினை யடைகின்றது. அதாவது, ஒரு தனியன் தான் பிறந்தபோது இருந்த உயரத்தைப் போன்று 3·5 மடங்குகள் பெருக்கப்பட்ட உயர நிலையினை முதிர்ச்சிக் காலத்தில் அடைகின்றான். குறுக்களவில், பிறந்தபோது இருந்ததை விட ஏழு மடங்குகள் பெருக்கத்தினைப் பெறுகின்றான். பிறந்தபோது இருந்த எடையை விட 20 மடங்கு பெருகிய நிறையினை ஒருவன் முதிர்ச்சிப் பருவத்தில் பெறுகின்றான். இங்ஙனம், உடலின் வெவ்வேறு பண்புக் கூறுகள் அவைகளுக்கே உரிய தனிப்பட்ட விகிதத்தில் வளர்ச்சியடைகின்றன.




வரைபடம்: 1. வயதுடன் உடல் வளர்ச்சி விகிதங்களின் மாற்றம்.

## உயரத்தின் வளர்ச்சி (Growth in Height):

மாண்ட்பெய்ல்லர்டு என்பார் (Montbeillard), ஒரு தனியன் இளையோர் பருவத்தில் பெறுகின்ற உயர வளர்ச்சியினைப் பற்றி ஆராய்ந்து கண்டறிந்த உண்மைகள் மிகவும் முற்பட்ட காலத்தினது எனலாம். இவர் உயரம் பற்றிய பொதுவான வரைபட வளைவினை (graphical curve) வெளியிட்டார். இந்த உயர வளைவு

நான்கு திட்டவட்டமான நிலைகளைக் கொண்டுள்ளது. முதலாவதாக, குழவிப் பருவத்திலும், சிறு பிள்ளைப் பருவத்திலும் விரைவான வளர்ச்சிக் காலம் காணப்படுகின்றது. பின்னர் மூன்று முதல் பன்னிரண்டு அல்லது பதிமூன்று வயதுவரை, மெதுவான, எனினும் தொடர்ந்து ஒரே சீரான வளர்ச்சி நிலை காணப்படுகின்றது. மூன்றாவது நிலை, பூப்பெய்தும் காலமான பன்னிரண்டு முதல் பதினைந்து வயது வரை ஏற்படும் குறிப்பிடத்தக்க திடீர், துரித வளர்ச்சியினை (growth spurt) எடுத்துக்காட்டுகின்றது. இறுதி நிலை, பதினைந்து வயது முதல் வளாச்சியின் இறுதிக்காலம் வரை, வேகங் குறைந்த வளர்ச்சியினைக் காட்டுகின்றது.




வரைபடம்: 2. 6 வயதிலிருந்து 19 வயது வரைக்குட்பட்ட ஆண் பெண் பிள்ளைகளின் சராசரி உயரம்.

உயரத்தின் வளர்ச்சியினை, ஒவ்வொரு ஆண்டும் அதிகரிக்கின்ற உயர அளவுகளைக் கொண்டும் அளவிட்டறியலாம். ஒரு குழுவினரிடம் குறிப்பிட்ட வயதில் காணப்படும் உயர வளர்ச்சியினைக் கொண்டு உடல் வளர்ச்சியின் விகிதத்தினைக் கணிப்பதை விட, ஆண்டுதோறும் ஒரு குழுவினர் எய்தும் வளர்ச்சிகளைக் கொண்டு அவர்களிடத்து ஏற்படும் வளர்ச்சி விகிதத்தினை அளவிட்டறிவது எளிதானதாகும். தற்காலத்தில், ஒரு தனியன் எல்லோரையும் போல் சராசரி உடல் வளர்ச்சியினைப் பெறுகின்முனு அல்லது ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு

முன் அல்லது பின் உடல் வளர்ச்சியினைப் பெறுகின்றனரா என்று கண்டறிவதற்குச் செய்யப்படும் ஆராய்ச்சிகளில் இந்த இரண்டாம் வகை அளவிடும் முறை மிகவும் பயன்படுத்தப்படுகின்றது: ஷட்டில்வர்த் (Shuttleworth) நடத்திய "ஹார்வார்டு வளர்ச்சி ஆய்வு" (The Harvard growth study), குறிப்பிட்ட வயதிற்குப் பின் தாமதித்துப் பூப்பெய்திய பிள்ளைகள், குறிப்பிட்ட வயதிற்கு முன்னரே பூப்பெய்துவிட்ட பிள்ளைகளைப் போன்று, வேகமான, ஆண்டுதோறும் அதிகரிக்கின்ற வளர்ச்சியினைப் பெற்றிருப்பதில்லை என்று அறிவிக்கின்றது. எனினும், காலத்தில் முற்பட்டுப் பூப்பெய்தி விட்டவர்களின் வளர்ச்சி நின்றுவிடும் காலத்திற்குப் பின்னரும், தாமத முதிர்ச்சியினர் தொடர்ந்து நெடுநாட்கள் வரை உடல் வளர்ச்சியினைப் பெறுகின்றனர்.

உயரவளைவினை உற்றுக் கவனித்தால், உயர வளர்ச்சியில் பாலின வேறுபாடுகள் இருப்பது நன்கு புலப்படும். பிறப்பு முதலே ஆண்பிள்ளைகள், பெண் பிள்ளைகளைக் காட்டிலும் சிறிது உயரமானவர்களாகவே காணப்படுகின்றனர். ஆனால், பத்தாவது




வரைபடம்; 3. ஆண், பெண் வளர்ச்சியில் ஏற்படும் மந்த துரித வளர்ச்சிக் காலங்கள்.

1. பிறப்பின்போது $\frac{1}{3}$" பையனின் வளர்ச்சி அதிகம்.
2. 5 வயதில் $\frac{1}{2}$" பையனின் வளர்ச்சியில் அதிகம்.
3. 11 வயதில் ஆணும் பெண்ணும் வளர்ச்சியில் சமம்.
4. 13 வயதில் $\frac{3}{4}$" பெண் பிள்ளை வளர்ச்சி அதிகம்.
5. 15 வயதில் பையன் பெண்ணுடன் சம வளர்ச்சியடைந்து அதிக வளர்ச்சி யடைதல்.
6. 18 வயதில் பையன் பெண்ணைவிட வளர்ச்சி அதிகம். பெண்ணின் வளர்ச்சி நின்றுவிடுகையில் பையன் வளர்ச்சியடைந்துகொண்டே இருத்தல்.

வயதினை அடையும்போது, பெண் பிள்ளைகள் ஆண் பிள்ளைகளைக் காட்டிலும் விரைவான உடல் வளர்ச்சியைப் பெறுகின்றனர். பெண்பிள்ளைகளின் இந்தத் திடீர் துரித வளர்ச்சி (growth spurt) பதினான்கு வயது வரை நீடிக்கின்றது. எனவே, பத்து முதல் பதினான்கு வயது வரை பெண்கள், தம் வயது ஆண் பிள்ளைகளை விட உயர்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். பதினான்கு வயதிற்குப் பின்னர், ஆண்பிள்ளைகள் விரைவாக வளரத் தொடங்குகின்றனர். பின்னர் இறுதிவரை தம் வயதுப் பெண் பிள்ளைகளை விட ஆண்பிள்ளைகள் உயர்ந்தவர்களாகவே இருக்கின்றனர். எனினும் இது பொதுவாகக் காணப்படும் பாலின வேறுபாடு ஆகும். ஆனால் ஒரு சில ஆண் பிள்ளைகள் தன் வயதினையொத்த பெண்பிள்ளைகளைவிட எல்லாக்காலத்திலும் உயரத்தில் குறைந்தவர்களாகவே காணப்படுகின்றனர் என்ற உண்மை இந்த சராசரி கணிப்பினின்றும் மாறுபடுகின்றது. மேலும், ஒருசில குழந்தைகள் வெவ்வேறு வயதுகளில், இந்தத் திடீர்த் துரித வளர்ச்சியைப் பெற்று இறுதி வளர்ச்சியினை அடைகின்றனர்.

உயரத்தில் திடீர்த் துரித வளர்ச்சி, பூப்பெய்தும் காலத்திற்குச் சற்று முன்னால் ஏற்பட்டு விடுகின்றது. ஆண்பிள்ளைகளை விடப் பெண்பிள்ளைகள் சிறிது முன்னரே பூப்பெய்துவதால் இந்தத் திடீர் துரித வளர்ச்சி ஆண்பிள்ளைகளை விட பெண் பிள்ளைகளிலேயே முதலில் ஏற்படுகின்றது. நிக்கல்ஸனும், ஹென்லியும் (Nicholson and Henley) இந்தத் திடீர்த் துரித வளர்ச்சியினைக் கணித்துச், சராசரியாகப் பெண்பிள்ளைகள் 11·5 ஆண்டுகளில் மிகவும் அதிகமான வளர்ச்சியினைப் பெறுகின்றனர் என்றும், ஆண்பிள்ளைகள் 13·8 ஆண்டுகளில் இந்தத் திடீர்த் துரித வளர்ச்சியினைப் பெறுகின்றனரென்றும் கூறியுள்ளனர்.

### எடையின் வளர்ச்சி (Growth in Weight)

இளையோர் பருவத்தில் ஏற்படும் உடல் வளர்ச்சியினைப் பற்றி அறிவதற்கு, எடையின் பெருக்கத்தினைக் கணிப்பதும் ஒருமுறை என்று கண்டோம். அறிவழகனும் அப்துல்லாவும் ஐந்து அடி உயரம் உள்ளவர்கள் என்று தெரிவதனால், அவர்களின் உருவத்தினைப் பற்றிய ஒரு தோற்றத்தினை நாம் நினைத்துப் பார்க்க இயலாது. ஆனால் நூறு பவுண்டு எடையுள்ள அறிவழகன் என்றும், இருநூறு பவுண்டு எடையுள்ள அப்துல்லா என்றும் மேலும் அறியப்பெற்றால் மிகவும் ஒல்லியாய் நீண்டு வளர்ந்திருக்கும் அறிவழகனையும், குட்டையாய்ப் பருத்துக் காணப்படும் அப்துல்லாவையும் நினைத்துப் பார்க்க முடிகின்றது.

எடையின் வளர்ச்சித் தன்மையும் உயரத்தின் வளர்ச்சித் தன்மையைப் போன்றே வளர்ச்சியுறுகின்றது. பெண்பிள்ளைகள் பூப்பெய்தும் வரை ஆண்பிள்ளைகளைவிட எடையில் குறைந்தவர் களாகவே காணப்படுகின்றனர். எனினும், பூப்படையும் காலத்தில் பெண்பிள்ளைகள் ஆண்பிள்ளைகளைவிட எடையில் கூடியவர் களாயிருக்கின்றனர். ஆனால் இளையோர் பருவத்தின் பிற்பகுதியில், மீண்டும் ஆண் பிள்ளைகளே எடையில் அதிகரிக்கத் தொடங்கி இறுதிவரை அந்த வேறுபாட்டினைப் பெற்றுக் காணப்படுகின்றனர்.

உயரத்தின் வளர்ச்சியினைப் போன்றே, எடையிலும், ஆண் பிள்ளைகளை விட பெண்பிள்ளைகளுக்கு ஓரிரு ஆண்டுகள் முன்பாகவே திடீர்த் துரித வளர்ச்சி ஏற்படுகின்றது. இக்காலத்தில் ஆண் பிள்ளைகளும், பெண்பிள்ளைகளும் ஆண்டிற்கு 20 முதல் 30 பவுண்டு வரையிலும் எடையில் பெருகுகின்றனர். இந்த எடை அதிகரிப்பு இரு பாலினரிலும் பொதுவாகக் காணப்படு கின்றது.




வரைபடம் : 4. ஆண், பெண்பிள்ளைகளின் எடை வளர்ச்சியின் சராசரிப் போக்கு.

எடை வளர்ச்சியிலும் தனி மனித வேறுபாடுகள் காணப்படி னும், நாம் சராசரியாக ஒரு குறிப்பிட்ட வயதில் ஒரு ஆண் பிள்ளையையோ பெண்பிள்ளையையோ ஒரு குறிப்பிட்ட எடை யினைப் பெற்றிருப்பர் என்று கணித்துக் கூறமுடியும். இந்த எதிர்ப் பார்த்தலிலிருந்து மாறுபட்டிருக்கும் தனியர், தங்களின் நடத்தைப் பொருத்தப்பாடுகளில் சிரமம் காண்பர்.

அவயவங்களின் வளர்ச்சி:

உடலின் உயரமும் எடையும் பெருகும்போது, கூடவே முக்கியமான உடற்பாகங்களும் உறுப்புகளும் மிகுந்த வளர்ச்சியினைப் பெறுகின்றன. உயரத்திற்கும், எடை அதிகரிப்பிற்கும் ஏற்றவாறு கைகால்கள் நீளத்திலும், உறுதியிலும், தசைப்பிடிப்பிலும் வளர்ச்சி பெறுகின்றன. ஆண்பிள்ளைகளுக்குத் தோள்கள் அகலமாகவும் (Broad Shoulders) பலமிக்கதாகவும் உருவாகின்றன. இதைப்போன்று, பெண்பிள்ளைகளுக்கு இடை அகலமான (Wide Hips) வளர்ச்சியைப் பெறுகின்றது. மிகவும் விரைவில் பூப்பெய்துகின்றவர்கள் அகலமான இடையையும், குறுகிய தோள்களையும் பெறுகின்றனர் என்றும், தாமத முதிர்ச்சியினர் அகலமான பரந்த தோள்களுடன் குறுகிய இடையினைப் பெற்றிருப்பர் என்றும் கண்டறிந்துள்ளனர். இவைகளைத் தவிர, முக அமைப்பில், மூக்கு கூராகவும், எடுப்பாகவும் இளையோர் பருவத்தில் வளரத் தொடங்குகின்றது.

உடற்கூறு வளர்ச்சி (Anatomical Development):

எலும்புகளின் வளர்ச்சியென்பது அவற்றின் கலவைப் பொருள்களில் மாறுதல்கள் ஏற்படுவதைக் குறிக்கின்றது. பிறந்த குழந்தையின் எலும்புகள் மென்மையானதாகவும் கடின மற்றும் காணப்படுகின்றன. அவை வளைத்தால் வளைவதாக உள்ளன. பின்னர் அவை கடினமானவையாகவும் உறுதியானவையாகவும், வளைத்தவுடன் ஒடிந்துவிடுவனவாகவும் வளர்ச்சி பெறுகின்றன. இத்தகைய மாற்றம் "எலும்புகள் கடினத்தன்மை அடைதல்" (Ossification) என்று கூறப்படுகின்றது.

குழந்தை வளர வளர, அவைகளின் எலும்புகள் கடினத் தன்மை அடைவது, ஒரே சீராகத் தொடர்ந்து நடைபெறுகின்றது. குழந்தைகளிடம் நிலைத்த பற்கள் தோன்றுகின்ற காலத்தை இத்தகைய எலும்பு மாற்றத்தின் துவக்க காலமென ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடுகின்றனர். சராசரியாக எந்த வயதில் நிலைத்த பற்கள் தோன்றுகின்றன என்பதை ஆராய்ந்தபோது இவற்றில் பாலின வேறுபாடுகளும், தனி மனித வேறுபாடுகளும் நிலவுவது தெரியவந்தது. எனவே எலும்புகளின் வளர்ச்சிப் பருவமும் இங்ஙனமே மாறுபாடுகளுடன் இருப்பதாகக் கருதப் படுகின்றது.

எலும்பின் வளர்ச்சியினை ஆராய முனைந்த ஆராய்ச்சியாளர்கள், கை, கால், மணிக்கட்டு எலும்புகள், முழங்கை, முழங்கால் எலும்புகள், தோள், இடுப்பு எலும்புகள் ஆகியவற்றின் ஒளிக்

கதிர்ப் படங்களைப் (X-Ray) பிடித்து அவற்றை உற்றுநோக்கி வெவ்வேறு வயதில் பெரும்பாலும் எலும்பின் வளர்ச்சித் தோற்றம் எவ்வாறு காணப்படுகின்றது என்பதை நிர்ணயித்துள்ளனர். ஆறு வயதுக் குழந்தை ஒன்று அவ்வயதிற்குட்பட்ட பிற குழந்தைகள் சராசரியாகப் பெற்றிருக்கின்ற எலும்பின் வளர்ச்சியைப் பெற்றிருந்தால் அக்குழந்தையின் எலும்பு முதிர்ச்சி வயது (Skeletal Age) ஆறு வருடங்கள் என்று கருதலாம். எனினும் சராசரி எலும்பு முதிர்ச்சி வயதிலும் தனி மனித வேறுபாடுகள் காணப்படுகின்றன.

இளையோர் பருவத்தின் துவக்கத்தில் எலும்புகளின் கடினமாகும் தன்மை மிகவும் வேகமாக நடைபெறுகின்றது. பால்டுவின் (Baldwin) என்பார் இதனைப்பற்றி ஆராய்ந்தபோது ஐந்தாறு வயதிற்குப்பின் சிறுமியர்கள், சிறுவர்களைவிட அதிகமான எலும்புக் கடினத் தன்மைகளை அடைகின்றனர் எனக் கண்டறிந்துள்ளார்.

பூப்பின் தோற்றத்திற்கும் எலும்பு முதிர்ச்சி வயதிற்கும் இடையே குறிப்பிடும்படியான தொடர்பு இருக்கின்றது என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. டாட் (Todd) என்பார் தன்னுடைய ஆராய்ச்சியில், பெரும்பாலான பெண் பிள்ளைகள் ஒளிக்கதிர் மூலம் நிர்ணயிக்கப்பட்ட எலும்பு வயது $13\frac{1}{2}$ முதல் 14 ஆண்டுகளை பெற்றிருந்தபோதே பூப்பெய்தினர் என்று கண்டார். இங்ஙனம் ஒரு பெண் பிள்ளை எந்த வயதில் பூப்பெய்துவாள் என்பதை அவளது உடல், வயது, உயர, எடை வளர்ச்சிகள் போன்றவற்றின் அடிப்படையில் கணித்துச் சொல்வதைவிட, அவளது எலும்பு முதிர்ச்சி வயதின் அடிப்படையில் முன்கூட்டிச் சொல்வது மிகவும் நம்பகமாக இருக்கின்றது.

ஸிம்மன்ஸூம் கிராய்லிச்சும் (Simmons; Greulich) தங்களின் ஆராய்ச்சிகளின் மூலம் எலும்பு வயதிற்கும் பூப்பெய்துவதற்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதை வலியுறுத்தியுள்ளனர். இவர்கள் ஒரே உடல் வயதினைக் கொண்ட, ஆனல், பூப்பெய்திய வயதில் மாறுபட்ட, மூன்று வகைப் பெண் பிள்ளைகளைக் கொண்ட குழுக்களின் எலும்பு வளர்ச்சியைப் பற்றி ஆராய்ந்தனர். இக் குழுவினர் 7 வயது முதல் 17 வயது வரை ஆராய்ச்சிக்குட்படுத்தப்பட்டனர். இவ்வாய்வின் வளர்ச்சி வளைவுகள் எலும்பின் வளர்ச்சிக்கும் பாலின உறுப்புக்களின் வளர்ச்சிக்கும் இடையே நெருங்கிய தொடர்பு இருப்பதை எடுத்துக்காட்டுகின்றன. எனவே, ஒரு தனியனின் பாலின உறுப்புக்களின் வளர்ச்சியினைக் கணிக்க, அவன் எலும்பு முதிர்ச்சி வயதினை ஒரு முன்னணிக் குறியாக நாம் பயன்படுத்தலாம்.

**இயக்கத் திறத்தின் வளர்ச்சி (Motor Development) :**

உடல், உடற் கூறுபாடு ஆகியவற்றின் வளர்ச்சியினைப்பற்றி அறிந்துகொள்ளுங்கால் அவை இயங்கும்போது கிட்டுகின்ற இயக்கத்திறத்தின் வளர்ச்சியினைப் பற்றியும் அறிந்துகொள்ள வேண்டியது அவசியமாகின்றது. உடல் வளர்ச்சியினைப் பெறும் போதே, அதன் மூலம் கிட்டும் சக்தியும், திறனும் அளவில் மிகுந்து காணப்படுகின்றன. சிறுவர்களைவிடப் பெரியவர்கள் அதிகமான இயக்கச் சக்தியைப் பெற்றிருப்பது, அவர்களின் உடலும், உடற் கூறு அவயவங்களும் சிறியவர்களைவிட அதிகமான வளர்ச்சியினைப் பெற்றிருப்பதால்தான் 'வளர்ந்துவிட்ட இளையோனைப் பற்றி நினைக்கும்போது, அவனிடம் காணப்படுகின்ற ஆண்மைத் தன்மையையும், சக்தியையும் பற்றியே நாம் நினைக்கின்றோம். இதனைப்போன்றே பெண்பிள்ளைகளைவிட ஆண்பிள்ளைகள் அதிக மான இயக்கசக்தி பெற்றிருக்கவேண்டுமென எதிர்பார்க்கின்றோம்' சான்றாக, இளையோன் உடல் வலிமைமிக்கவனாகவும், விளையாட்டுப் போட்டிகளில் வெற்றி காண்பவனாகவும் இருக்கும்போது சமூகம் அவனை மதிக்கத் தலைப்படுகின்றது.

எனவே, ஒரு இளையோன் விளையாட்டுப் போட்டிகளில் ஆற்ற லுள்ளவனாகவும், ஆர்வமுள்ளவனாகவும், வேலைகளில் விருப்பம் கொண்டவனாகவும் இருக்கவேண்டுமென எதிர்பார்க்கின்றோம். மாறாக, போதிய உடல் சார்ந்த தகுதிகளைப் பெறாதவன், ஏனைய வழிகளின் மூலம் சமூக அங்கீகரிப்பைப் பெற முயற்சிப்பான். அதாவது அவன் தன்னுடைய இக்குறையை நிவர்த்திக்கும் பொருட்டு ஏனையத் துறைகளில் புகழை அடைய முயற்சிப்பான். ஆண்பிள்ளைகள் எல்லோருமே உடல் வலிமை மிகுந்து, இயக்கத் திறனில் சிறந்தவர்களாகவும் விளையாட்டுப் போட்டிகளில் நிகரற்று விளங்குபவர்களாகவும் இருக்கவேண்டும் என்பது இன்றியமையாத தல்ல. எனினும் போதிய ஆற்றலும் சக்தியும் இயக்கத் திறனும் ஒரு இளையோனிடம் குறைந்து காணப்படுவது அவனது தகுதி யின்மையை எடுத்துக் காட்டுவதாகவே அமையும்.

ஆண்பிள்ளைகளின்பால் நாம் எதிர்பார்க்கும் இந்த இயக்கத் திறன் வளர்ச்சியினைப் பெண்பிள்ளைகளின்பால் எதிர்பார்ப்பதில்லை. பெண்களைப் பொதுவாக, உடல்வலிமை குறைந்து இருப்பவர்க ளாகவே எண்ணுகிறோம். எனினும், ஒரு சில பெண்பிள்ளைகள் தம் வயதிற்கேற்ப சராசரி இயக்கச் சக்தியினைப் பெற்றிருப்பதில் தவறு இல்லை. பெண்பிள்ளைகள் இளையோர் பருவத்தில், பெண் களுக்குரிய விளையாட்டுகள், பந்தயங்களில் வெற்றி அடைபவர் களாகக் காணப்படுவது, அவர்களுக்குப் பெருமையைத் தருகின்

றது. எனினும், ஒரு பெண்பிள்ளை ஒரு ஆண்பிள்ளையை ஒத்த அல்லது ஆண்பிள்ளையை மீறிய இயக்கச் சக்தியினைப் பெற்றிருப்பதைச் சமூகம் அங்கீகரிப்பது இல்லை,

திராஷர் என்பார் (Thrasher) சிகாகோ கூட்டாளிக் குழுவினரைப் (Chicago gang) பற்றி ஆய்ந்ததன்மூலம் விளையாட்டுத் திறமை எந்த அளவிற்கு அவசியமானது என்பதை எடுத்துக்காட்டியுள்ளார். பவர் (Bower) என்பார் மற்றவர்களால் பாராட்டப்பட்ட ஏழாம், ஒன்பதாம் வகுப்பு மாணவர்களைப் பற்றி ஆய்ந்ததில் அவர்கள் உடல் வலிமையிலும் விளையாட்டிலும் சிறந்தவர்களாகக் காணப்பட்டதைத் தெரிவித்துள்ளார். இளையோன் தன் வாழ்க்கையில் சமூக அங்கீகரிப்பினைப் பெற்று சிறந்த பொருத்தப்பாடுடையவனாக விளங்குவதற்கு எண்ணற்ற காரணிகள் சாதகமாய் இருப்பினும், அவைகளுக்கெல்லாம் மையமாய் உடல் தகுதியும் திறனும் அமைகின்றன. இவ்வாறு உடல் இயக்கத்திறன் ஆண்பிள்ளைகளுக்குச் சமூக அங்கீகரிப்பையும், நடத்தைப் பொருத்தப்பாட்டையும் மேம்படுத்தும் ஒரு முக்கியக் காரணியாக விளங்குகின்றது. எனவே, ஒவ்வொரு பள்ளியிலும் உடற்பயிற்சிப் பாடங்களும், திட்டங்களும் சிறப்பாகச் செயல்படுத்தப்பட வேண்டியதன் அவசியம் விளங்கும்.

பள்ளியில் செயல்படும் உடற்பயிற்சித் துறைகள் பள்ளிகளுக்கிடையேயான போட்டிகளையோ, மாவட்டப் போட்டிகளையோ உருவாக்கி, அதன்மூலம் ஒருசிலரே உடல்நலப் போட்டிகளில் பயனடையச் செய்வதைவிட, ஒவ்வொரு பள்ளியில் பயிலும் எல்லா மாணவர்களுக்கும் தேவையான உடல் வளர்ச்சி வளத்தினைப் பெறுவதன் பொருட்டுச் செயல்படுதல் நன்று. பெரும்பான்மையான பெரிய போட்டிகள், ஒருசிலரையே தேர்ந்தெடுத்து, விளையாடுவதற்கு வாய்ப்பினையளித்து, ஏனையோரைப் பார்வைக் களத்தில் அமர்த்திவிடுகின்றன. இத்தகைய பெரும் போட்டிகள் ஓரளவிற்கு நன்மை பயப்பனவாக இருந்தாலும், ஒரு பள்ளியின் எல்லா மாணவர்களும் கலந்துகொள்ளும் பொருட்டு வாய்ப்பினையளிக்கும் விளையாட்டு அமைப்புக்களே சிறந்ததாகும். இதனையுணர்ந்தே தற்போதைய உடற்கல்வித் திட்டம் இவ்வகையில் மாற்றங்களைக் கொண்டுள்ள உடல்நலப் பாடத்திட்டத்தினை செயற்படுத்துவது பாராட்டத்தக்கதாகும்.

**உடல் வலிமை, இயக்கத்திறன் பற்றிய கணிப்பு :**

இயக்கத்திறத்தினைப் பற்றிய ஆராய்ச்சிகளில், இரண்டுவகையான சக்திகளைக் கவனிப்பதுண்டு. அவை இயங்கு சக்தி (Dynamic

Strength), நிலைச்சக்தி (Static Strength) என்பனவாகும். இயங்கு சக்தியின் திறத்தினைக் கனமான பொருட்களைத் தூக்கி வைப்பதின் மூலமும், ஓட்டப்பந்தயம், உயரத் தாண்டுதல், அகலத் தாண்டுதல், எறிபந்து, போன்ற விளையாட்டுக்களின் மூலமும் கண்டு கணிக்கலாம். நிலைச்சக்தித் திறத்தினை இழுவை விசைப் பெட்டியின் மூலமும், வில் தராசின் மூலமும் (Spring Dynamometer) அளவிடலாம்.

ஆண் பிள்ளைகள், வயது வளர வளர, தங்கள் இழுவைத் திறனில் முன்னேறுகின்றனர்; எனினும், இரு பாலினரும் பொது வாக 14 வயதுவரை ஒத்த சக்தி வளைவினையே (Strength Curve) பெற்றிருக்கின்றனர். இதற்குப் பின்னரே ஆண் பிள்ளைகளின் இழுவை இயக்கத்திறன் அதிகரிக்கத் தொடங்குகின்றது. எனவே, இவர்களில் இழுவைத் திறனின் உயர்ந்த விகித வளர்ச்சி 14 முதல் 17 வயது வரை காணப்படுகின்றது. அதற்குப் பின்னர், இழுவை இயக்க விகித வளர்ச்சி குறைந்துவிடுகின்றது. பெண் பிள்ளைகளிடம் பன்னிரண்டு முதல் பதிமூன்று வயது வரை இழுவை இயக்கத்திறன் விகித வளர்ச்சி மிகுந்து காணப்படுகின்றது. பிறகு அது குறைந்த விகித வளர்ச்சியினைப் பெற்றுக் காணப்படு கின்றது.

ஸ்மெட்லி என்பார் (Smedley) 6,000க்கும் மேற்பட்ட சிகாகோ (Chicago) மாணவர்களை ஆராய்ந்து, வலதுகை இழுவைத்திறனில் இரு பாலினரும் 14 வயது வரை ஒரே தன்மை யான வளர்ச்சி வளைவுகளைக் கொண்டிருந்தனர் எனக் கண்டறிந் தார். இவரது ஆராய்ச்சியிலிருந்து பெண் பிள்ளைகளுக்கு 12 முதல் 13 வயது வரை மிகவும் வேகமான இழுவைத்திறன் வளர்ச்சி ஏற்படுகிறதென்றும், ஆண் பிள்ளைகளுக்கு 15 முதல் 16 வயதுவரை வேகமான இழுவைத்திறன் வளர்ச்சி ஏற்படுகிற தென்றும் தெரியவருகின்றது. எஸ்பென்ஸ்ஷேட் (Espenschade) என்பாரின் ஆராய்ச்சியில், ஆறுவகை இயக்க வேலைப்பாடுகளில் ஆண் பெண் பிள்ளைகளின் அளவீடுகள் தொடர்ந்து 6 மாதத்திற் கொரு முறை கணக்கிடப்பட்டு அவைகளின் சராசரி கண்டுபிடிக் கப்பட்டன. இதிலிருந்து இயக்கத்திறன் வேலைப்பாடுகளில் பெண் பிள்ளைகளைவிட ஆண் பிள்ளைகளே, அவைகளைக் கட்டுப்படுத்து வதிலும் செவ்வனே செய்வதிலும் சிறந்து விளங்குகின்றனர் என்பது தெரிய வருகின்றது.

உடற் கூறுபாடுகளின் முதிர்ச்சிக்கும் உடல் வலிமைக்கும் இடையே உள்ள தொடர்பினை ஆராய முற்பட்ட ஆய்வுகளில் டிமாக் (Dimock) என்பார் செய்த ஆராய்ச்சி முக்கியத்துவம்

வாய்ந்ததாகும். 13 வயதிற்கு முன்னதாகப் பூப்பெய்தியவர்கள், 15 வயதிற்குப் பின்னர் பூப்பெய்தியவர்களைவிட, அதிகமான உடல் வலிமையையும் திறத்தினையும் பெற்றுள்ளனர் என்று அவர் அறிவித்துள்ளார். உடல் வலிமைக்கும் அறிவுத்திறத்திற்கும் இடையே தொடர்பு ஏதுமில்லை என்று பல உளவியலார்கள் கருதுகின்றனர். ஜோன்ஸ் (Jones) என்பார் இவ்வகையில் ஆராய்ச்சி நடத்தி, இறுதியில் அறிவுத் திறத்திற்கும் இயக்கத் திறன் வேலைப்பாடுகட்கும் இடையே பல்வேறு பள்ளிச் சூழ்நிலையில் ஆராய்ந்து தொடர்பு சிறிதும் காணப்படவில்லை என்று தெரிவித்துள்ளார்.

பிலிப் என்பார் (Philip) 165 பெண் பிள்ளைகளையும், 146 ஆண் பிள்ளைகளையும் ஆய்ந்ததில் அவர்களின் எதிர்வினைக்காலம் (Reaction Time) 9 வயதிலிருந்து 16 வயது வரை குறையத் தொடங்குகின்றது எனக் கண்டார். ஒளி, சப்தத் தூண்டல்களுக்குத் துலங்கல்களை ஏற்படுத்துவதில், வயதிற்கேற்ப குறிப்பிடத்தக்க வளர்ச்சி காணப்படுகின்றது என்று அவர் கண்டார். எச்சரிக்கை அடையாளங்கள் செய்கைகள் போன்றவைகள் எதிர்வினைக் காலத்தைக் குறைத்தன. மூன்று முதல் 5 சதவீதம் வரையுள்ள ஆண் பிள்ளைகள், பெண் பிள்ளைகளை விட மிகவும் விரைவான எதிர்வினையை வெளியிட்டனர். இதைப்பற்றி விளக்குவதில், ஆண் பிள்ளைகள் இச் செயல்களில் ஓரளவு முன் அனுபவங்களைப் பெற்றிருப்பதால்தான் இந்த வேறுபாட்டினைக் கொண்டிருந்தனர் என்றும், முன் அனுபவமற்ற ஆண் பிள்ளைகளும் பெண் பிள்ளைகளும் தங்கள் எதிர்வினைக் காலத்தில் ஒருமித்து சமமாகக் காணப்பட்டனர் என்றும் பிலிப் கருதுகின்றார்.

**உடல் வளர்ச்சியின் விளைவால் எழும் பிரச்சினைகள் :**

உடல் வளர்ச்சி, இளையோர் பருவத்தில் ஒரு சில நடத்தைப் பிரச்சினைகளை விளைவிக்கின்றது. ஒத்த வயதினையுடைய எல்லோருக்கும் உடல் வளர்ச்சி ஒரே சீராக, ஒரு நிலைத்த தன்மையுடையதாக ஏற்பட்டு விடுவதில்லை. இதில் தனியாள் வேறுபாடுகள் காணப்படவே செய்கின்றன. இவ்வேறுபாடுகள் இளையோரின் பொருத்தப்பாட்டில் சிக்கல்களை ஏற்படுத்துகின்றன. பூப்பெய்துதல், இரண்டாந்தரப் பாலினத் தன்மைகள் வளர்ச்சி பெறுதல், இன்னும் மற்ற உடல் வளர்ச்சிகள் முன்பின் மாறி ஏற்படும்போதும், இவைகளில் ஒருசில தாமதித்தும் அல்லது ஒரு சில முற்பட்டுத் தோன்றும்போதும் இளையோரின் ஒருமித்துச் சமமாக இருப்பதற்கான ஆவல் குலைக்கப்படுகின்றது, குறிப்பிட்ட வயதின் வளர்ச்சி அளவிற்குமேல் குண்டாகவோ உயரமாகவோ வளர்ந்து

விடும் ஒரு தனியனை அவன் வயதுத் தோழர்களும் தோழியர்களும் கேலியும் ஏளனமும் செய்யத் தொடங்குகின்றனர். அவர்கள் மட்டுமின்றி, உறவினர்களும், பெற்றோர்களும் கூட, விளையாட்டுக் காக அல்லது வேண்டுமென்றே அவனைக் கேலி செய்வதற்காக, "டேய் நெட்டை மரம்," "அடே கொக்கே", "அட குள்ளக் கத்தரிக்காய்" என்று அழைப்பதையும், "கள்ளரை நம்பினாலும் குள்ளரை நம்பக்கூடாது," "நெட்டைப் பனைமரம் விரைவில் காய்க் காது" என்றெல்லாம் சிலேடை பேசுவதையும் கண்டு அவர்கள் மனம் வருந்துவர். மிகவும் குண்டான பையனை அவன் வயதுப் பிள்ளைகள் தங்கள் விளையாட்டில் சேர்த்துக்கொள்வதில்லை. மிகவும் ஒல்லியானவனோ தான் தகுதியற்றவன் எனக் கருதித் தானாகவே ஒதுங்கிக்கொள்கிறான். இங்ஙனம், இளையோர் மனம், தங்களை யொத்த பிறரால் மதிக்கப்படாது புறக்கணிக்கப்படுவதைக் கண்டு துன்புறுகின்றது. தங்களை இந்த இழிநிலைக்கு ஆட்படுத்திய தங்க ளது உடல் மாற்றத்தைத் தாங்களே நொந்துகொள்கின்றனர்.

பொதுவாக ஆண்பிள்ளைகள் தாங்கள் வளரவில்லையே என்ப தற்காக வருந்தும்போது, பெண்பிள்ளைகளோ, தாங்கள் உயரமாக வளர்வது தொந்தரவு தருவதாக இருக்கின்றது என வருந்துகின்ற னர். ஏற்கெனவே மெலிந்திருக்கும், ஒல்லியாக இருக்கும் பெண் பிள்ளைகள் இன்னும் வளர்ந்துகொண்டே செல்வதைக் கண்டு, "என்ன இவள் ஒட்டகச்சிவிங்கியாக வளருகின்றாளே" என அவளது உறவினர்களும் துணுக்குறுகின்றனர். இந்த உண்மை, பிரேஸிய ரும், லிஸான்பீயும் (Frazier and Lisonbee) ஆராய்ந்து வெளியிட்ட ஒரு அறிக்கையின் மூலம் தெரியவருகின்றது. இவர்கள் ஆராய்ச் சிக்கு எடுத்துக்கொண்ட பெண்பிள்ளைகளில், பாதிக்கு மேற்பட்ட வர்கள் தாங்கள் மிகவும் உயரமாக இருப்பதற்காக வருத்தப் பட்டுக்கொண்டிருந்தபோது, பாதிக்கு மேற்பட்ட ஆண்பிள்ளைகள் தாங்கள் மிகவும் குள்ளமாக இருப்பதற்காக வருந்தினர். எனினும், இவ்வாய்வில் பெரும்பாலான ஆண்பிள்ளைகளும் பெண்பிள்ளை களும் தாங்கள் சராசரி வளர்ச்சியினைப் பெற்றிருப்பதாகவே கருதினர்.

மேற்குறிப்பிட்ட ஆராய்ச்சியின் இன்னொரு பகுதியானது உயர்நிலைப்பள்ளி இறுதி ஆண்டில் பயிலும் மாணவ, மாணவியர் களை அவர்களின் உடல்தோற்றம் பற்றிய கருத்தினைப் பற்றி ஆய்ந்தது. இதில் 57%க்கு மேற்பட்ட இருபாலினருமே முகப் பருக்கள் (Pimples) தோன்றியிருப்பதற்காக வருத்தம் தெரிவித்த னர். இருபாலினருமே எண்ணெய் வழியும் முகத்திற்காகவும், (Oily skin) பல்வரிசை ஒழுங்கற்று இருப்பதற்காகவும், மூக்குக்கண்ணாடி அணிந்திருப்பதற்காகவும் கவலைப்பட்டுக்கொண்டிருப்பவர்களாகத்

தெரியவந்தது. 1/3 பகுதிக்கு மேற்பட்ட ஆண்பிள்ளைகள் தங்களுக்கு மீசையும் தாடியும் முளைக்கவில்லையே என்று (அந்த விஷயத்திற்கு அத்தகைய முக்கியத்துவம் அவர்கள் தராதபோதும்) வருத்தப்பட்டுக்கொண்டிருந்தனர். பெண்பிள்ளைகள், தாங்கள் அளவிற்கு அதிகமான அகன்ற மூக்கினைப் பெற்றிருப்பதாகக் கூறி மனம் நொந்தனர். ஒருசிலர் எண்ணெய்ப் பசையற்றுக் காய்ந்த வறட்சியான தோலமைப்பிற்காகவும், அழகற்ற தோற்றமுடைய முகத்திற்காகவும் கவலைப்பட்டனர்.

தங்கள் பாலினத்திற்கான கவர்ச்சிதரும் உடல் அமைப்பைப் பெறும் பொருட்டு, இரு பாலினருமே கவனம் செலுத்தினர். ஆண் பிள்ளைகளைவிட பெண் பிள்ளைகளுக்குத்தான் பாலினத்திற்குரிய உடலமைப்பைப் (Sex-Appropriate Physique) பெறுவதில் அதிக நாட்டமும், ஆவலும் காணப்பட்டது. பெண்கள் நளின மாகவும், மென்மையான மிளிருகின்ற உடலமைப்புடனும் இருப்பதை எதிர்பார்க்கின்றனர். அவர்களின்பால் உருண்டு திரண்ட சதைப்பிடிப்பும், உடலமைப்பும் ஏற்கப்படுவதில்லை. மாறாக, இவ்வித சதைப் பிடிப்பைக் கொண்ட ஒருவள், பெண்மைத் தன்மையற்றவள் என்று ஆடவர்களால் புறக்கணிக்கப்படுகின்றாள். ஆனால் ஆண் பிள்ளைகளுக்கு உருண்டு திரண்ட சதைப்பிடிப்பும் உடலமைப்பும் அழகான தோற்றத்தைத் தருவனவாகக் கருதப் படுகின்றன. எனவே இரு பாலினருமே, தங்கள் பாலினத்திற்குரிய உடலமைப்பிற்காக ஏங்குவதைக் காணலாம். பெண் பிள்ளைகள் தங்களிடம் உள்ள இந்தக் குறைகளைப் போக்குவதன் பொருட்டு உணவுக் கட்டுப்பாட்டில் ஈடுபட்டபோது, ஆண் பிள்ளைகள் அதன்பால் வெகுவாக அக்கறை செலுத்தவில்லை. எனினும் இரு பாலினருக்குமே "பாலினக் கவர்ச்சியற்ற உடலமைப்பு" குறிப் பிடும்படியான மனக்கவலையைத் தருவதாகவும், அவர்களது நடத்தைப் பொருத்தப்பாட்டில் பிரச்சினைகளைத் தோற்றுவிப்ப தாகவும் காணப்பட்டது,

எனவே இளையோரின் தகுதி வாய்ந்த, வலிமை மிக்க உடல் நிலை அவர்களின் சமூக, மனவெழுச்சிப் பொருத்தப்பாடுகளில் பெரும் பங்கு வகிக்கின்றது. சாதாரணமான எதிர் பார்ப்பி னின்று அவர்கள் மாறுபடும்போது, சமூகப் புறக்கணிப்பையும், சமூக நடவடிக்கைகளிலிருந்து தவிர்க்கப்படுவதையும் ஏற்க நேரிடு கின்றது. இங்ஙனம் கேலிக்கும், ஏளனத்திற்கும், புறக்கணிப்பிற்கும் ஆளாக நேரிடுபவர்கள் சிறந்த மனவெழுச்சிப் பொருத்தப்பாடு களைப் பெற்று முன்னேறுவது கடினமாகும்.

**அதிகாரச் சுருக்கம் :**

ஒருவனின் நடத்தையும், பொருத்தப்பாடும் அவனுடைய உடல் வளர்ச்சியையும், உடற் கூறுபாடுகளின் வளர்ச்சியையும் சார்ந்திருப்பதால் இளேயோனின் உளவியலைப்பற்றி ஆராய இவ் வளர்ச்சிப் பற்றிய அறிவு அவசியமாகிறது. ஒவ்வொருவரும் தனக்கென ஒரு தனித்த உருவக் கருத்துக்களைப் பெற்றிருப்பது மனித இனத்திடம் காணப்படும் சிறப்பாகும். இளேயோர் தங்களது உடலியக்க மாற்றங்களால் விளையும் நடத்தை மாற்றங் களைப்பற்றி அறியாதிருப்பது பல பிரச்சினைகளைத் தருகிறது. உடலியக்க மாற்றங்கள் ஒருவனின் தன்னுணர்வுகளை மிகுதியாக ஏற்படுத்துகின்றன.

உடல், உடற்கூறுபாட்டு வளர்ச்சியும், மாற்றங்களும் இளேயோர் பருவத்தில் மிக விரைவாக நடைபெறுகின்றன. ஒரு சில உறுப்புகள் அவன் பிறந்ததிலிருந்தே வளரத் தொடங்கி இளேயோர் பருவத்தில் வேகங்குன்றி சீரான வளர்ச்சியடைந்து முதிர்ச்சியினைப் பெறுகின்றன. வேறு சில உறுப்புகள் குழந்தைப் பருவத்தில் போதிய வளர்ச்சி பெறுது, வளர்ச்சியில் தேக்கம் கண்டு, இளேயோர் பருவத்தின் துவக்கத்தில் திடீரென வளரத் தொடங்குகின்றன. இவ்வகை வேறுபாடுகளைக் குறிக்க பல்வகை வளர்ச்சி வளைவுகள் உள.

உயரத்தின் வளர்ச்சியில் பாலின வேறுபாடுகள் உள்ளது. ஆண்கள் பெண்களைக் காட்டிலும் சிறிது உயரமானவர்களாகவே இருக்கின்றனர். பெண்கள் பத்து வயதினை அடையும்போது, ஆண்களைக் காட்டிலும் விரைவான வளர்ச்சியைப் பெறுகின்றனர். பதினன்கு வயதிற்குப் பின்னர், ஆண்கள் விரைவாக வளரத் தொடங்குகின்றனர். எடையின் அதிகரிப்புத் தன்மையும், உயர வளர்ச்சியைப் போன்றே, பெண்கள் பூப்பெய்தும் வரை ஆண்களை விட எடை குறைவானவர்களாகவே இருக்கின்றனர். உடலின் உயரமும், எடையும் கூடுதல் போலவே உட்பாகங்களும், அவய வங்களும் வளர்ச்சியுறுகின்றன.

எலும்பு வளர்ச்சிகளை ஒளிக்கதிர்ப் படங்கள் மூலம் உற்று நோக்கி வெவ்வேறு வயதில் ஏற்படும் வளர்ச்சித் தோற்றத்தினைக் கண்டு, எலும்பு முதிர்ச்சி வயதினைக் கணக்கிடுகின்றனர். பூப்பின் தோற்றத்திற்கும், எலும்பு முதிர்ச்சி வயதிற்குமிடையே குறிப் பிடும்படியான தொடர்புள்ளதைக் கண்டனர்.

உடல் வளர்ச்சியினைப் பெறும்போதே அதன் மூலம் கிட்டும் சக்தியும், திறனும் அளவில் மிகுந்து காணப்படுகின்றன. சிறிய

வர்களைவிட அதிகமான உடல் வளர்ச்சியினைப் பெரியோர்கள் பெற்றிருப்பதால், அதிகமான இயக்கச் சக்தியைப் பெற்றிருக் கிறார்கள். எனவே இயக்கச் சக்தியை அதிகரிக்கும் வகையிலும், ஊக்குவிக்கும் வகையிலும் உடற் பயிற்சிப் பாடங்கள் அமைய வேண்டும். இயக்கத் திறனில் இருவகை சக்திகளுண்டு. அவை இயங்கு சக்தி எனவும், நிலைச்சக்தி எனவும் அழைக்கப்படுகின்றன.

உடல், இயக்க வளர்ச்சி, இளையோர் பருவத்தில் சில உளப் பிரச்சினைகளைத் தோற்றுவிக்கின்றது. இதற்குக் காரணம், வளர்ச்சி யிலுள்ள தனியாள் வேற்றுமைகளேயாகும். பூப்பெய்துதல், இடை நிலை பாலினத் தன்மைகள் வளர்ச்சியுறுதல், இவைகளின் வேறு பட்டுத் தோன்றும் தன்மையால், இளையோர் பொருத்தப்பாட்டுப் பிரச்சினைகளுக்கு ஆளாகின்றனர். தங்கள் பாலினத்திற்கான கவர்ச்சி தரும் உடலமைப்பைப் பெறுவதில் இரு பாலினரும் கவனம் செலுத்துகின்றனர். பல் வரிசை, முகப்பருக்கள், முகத் தோற்றம், உயரம், பருமன் போன்ற அனைத்திலும் அக்கறை செலுத்துகின்றனர். பாலினக் கவர்ச்சியற்ற உடலமைப்பைப் பெற்றிருப்பவர்கள் மனவெழுச்சியுற்று அவதிப்படுகின்றனர். இளையோரிடத்து உடலியக்க வளர்ச்சி சீராக அமைவதன் அவசியம் இதிலிருந்து புலப்படுகிறது.

# 3. உடலியங்கியல்சார் வளர்ச்சி

## (Physiological Development)

பத்தாவது வயதின் துவக்கத்திலேயே இருபாலினருக்கும் திடீர்த் துரித வளர்ச்சி உடலிலும், உடலியல் தன்மைகளிலும் ஏற்படுகின்றது. இந்தத் திடீர்த் துரித வளர்ச்சி, பெண்பிள்ளை களுக்கு ஆண்பிள்ளைகளைவிட ஒன்று அல்லது ஒன்றரை ஆண்டு களுக்கு முன்பாகவே ஏற்பட்டுவிடுகின்றது என்று கண்டோம். உட லில் ஏற்படும் இந்த திடீர் வளர்ச்சியின்போதே உடலமைப்பில் மாற்றமும் உள்ளுறுப்புகள், இனப்பெருக்க உறுப்புகள் (Re-productive organs) ஆகியவற்றில் மாற்றங்களும் முதிர்ச்சியும் ஏற்படு கின்றன. இந்த மாற்றங்கள், வளர்ச்சிகளின் விளைவாகத் தனிய னின் மனப்பாங்குகளிலும், ஆர்வங்களிலும், முக்கியமான மாறுதல் கள் ஏற்பட்டு, அவனுடைய நடத்தையும் பொருத்தப்பாடும் பாதிக்கப்படுகின்றன. ஆகவே, உடலமைப்பிலும் தன்மைகளிலும் நிகழும் மாற்றங்களைத் தெரிந்துகொள்வது இளையோரின் நடத்தைப் பொருத்தப்பாடுகளையும், பிரச்சினைகளையும் புரிந்துகொள்வதற்குத் துணையாக அமையும்.

### நாளமில்லாச் சுரப்பிகள் (Endocrine Glands)

ஒரு தனியனின் வளர்ச்சியையும், இயக்கங்களையும் முக்கிய விதத்தில் பாதிக்கவல்ல இரசாயனப் பொருட்களை உண்டுபண்ணும் தனிப்பட்ட உறுப்புகள் "சுரப்பிகள்" எனப்படுவன. மனித உடலில் உள்ள சுரப்பிகளை இருவகைகளாகப் பிரிக்கலாம். அவை நாளச்சுரப்பிகள் (Duct glands) நாளமில்லாச் சுரப்பிகள் (Ductless glands) என்பனவாகும். நாளமில்லாச் சுரப்பிகள் எண்டோக்ரின் சுரப்பிகள் எனவும் கூறப்படுகின்றன. நாளச் சுரப்பிகள், தங்களின் சுரப்புகளை நாளங்களின் மூலம் கடத்து கின்றன. உமிழ்நீர்ச் சுரப்பி, வியர்வைச் சுரப்பி, பாலினச் சுரப்பி ஆகியவை நாளச் சுரப்பிகளாகும். எண்டோக்ரின் சுரப்பிகள் தங்களுடைய சுரப்புகளை நாளங்கிகளின் வழியல்லாது,

நேராகவே குருதியில் கொட்டுகின்றன. இவைகளின் சுரப்புகள் ஹார்மோன்கள் (Harmones) எனப்படும். இவை குருதியில் கலந்தவுடன், இவற்றின் விளைபயன்கள், மிகச் சீக்கிரத்தில் உணரப்படுகின்றன. பிடியூடரி, தைராய்டு, அட்ரினல், பாலினச் சுரப்பி ஆகியவை எண்டோக்ரின் சுரப்பிகள். இளையோர்




வரைபடம்: 5. நாளமில்லாச் சுரப்பிகளின் அமைவிடங்கள்.

பருவத்தில் நிகழும் பல மாற்றங்கள், சில முக்கிய எண்டோக்ரின் சுரப்பிகளின் செயலால் தூண்டப்படுவதால், அந்த எண்டோக்ரின் சுரப்பிகளைப் பற்றி நாம் அறிவது இன்றியமையாததாகும்.

நேதன்ஸன் என்பார் (Nathanson) இச்சுரப்பிகள் மூன்று முக்கியச் செயல்களில் ஈடுபடுகின்றன என்று குறிப்பிடுகின்றார். அவை உணர்ச்சிகளைத் தூண்டுதல், ஊன்ம ஆக்கச் சிதைவுச் செயல்களை (Metabolic activities) நடைபெறச் செய்தல், சிறுவர்களின் உடற்கூறு, உடலியல் மாற்றங்களைச் சீராக்குதல் ஆகியவையாகும். ஒரு தனியன், பாலின முதிர்ச்சி பெறுவதற்கும் ஏனைய வளர்ச்சிகளையடைவதற்கும் காரணமாயுள்ளவைகளில், இச்சுரப்பிகள் மிக முக்கியத்துவம் வாய்ந்தவையாகும்.

ஒரு சாதாரண இளையோனின் வளர்ச்சி, பிடியூட்ரி சுரப்பியின் செயலையும், மற்றச் சுரப்பிகள் எந்த அளவிற்கு பிடியூடரியின் தூண்டுதலுக்கு இணங்கிச் செயல்படுகின்றன என்பதையும் பொறுத்துள்ளது. ஆய்வுக்கூட, மருத்துவ ஆராய்ச்சிச் சான்றுகள் பிடியூடரி சரிவர வேலைசெய்யாத நேரத்தில் சினைப்பைகள்

(Ovaries), அண்டங்கள் (Testicles) போன்ற மற்ற சுரப்பிகள், தேக்கமடைந்தும் தூண்டப்படாமலும் இருக்கின்றன என்பதை தெளிவுபடுத்துகின்றன.

பிடியூடரி சுரப்பியின் இரண்டு ஹார்மோன்கள் முக்கியத்துவம் வாய்ந்தவையாகும். முதலில், பிடியூட்ரின் (Pituitrin) எனும் ஹார்மோன், வளர்ச்சி ஹார்மோன் ஆகும். இது, நன்கு ஊட்டமளிக்கப்படும் பிள்ளைகள் ஆரோக்கியமான வளர்ச்சிபெற்று நல்ல உடலமைப்பினைப் பெறுவதற்கு உதவுகின்றது. இந்த ஹார்மோன் குறைந்த அளவில் சுரக்கும்போது, உடலின் சாதாரண வளர்ச்சி தேக்கமடைந்து, குறளன் (Midget) என்னும் குள்ளத்தன்மை (Dwarfism) ஏற்படுகின்றது. இதற்கு மாறாக, வளர்ச்சிக் காலத்தில் இந்த ஹார்மோன்கள் அதிகமாகச் சுரந்தால், அளவிற்கு மீறிய அதிகமான உடல் வளர்ச்சி பெற்ற பிடியூடரி அரக்கத்தன்மை (Pituitary gigantism) ஏற்பட்டு விடும்.

பூப்பு (Puberty) நிகழ்வதற்குச் சிறிது காலம் முன்புவரை, பிடியூடரி சுரப்பியின் முன்பாகம், பால் முதிர்ச்சிக்குத் தேவையான முக்கியத்துவம் வாய்ந்த ஒரு ஹார்மோனை உற்பத்தி செய்கின்றது. இந்த ஹார்மோன், பால்சுரப்பியைத் தூண்டும் ஹார்மோன், (Gonadotrophic or Follicle stimulating harmone) என்றும் 'புரோலான் ஏ' (Prolan A) என்றும் கூறப்படுகின்றது. இந்த ஹார்மோன் முதிர்ச்சிபெறாத, பாலினச்சுரப்பிகளின் வளர்ச்சியைத் தூண்டிவிடுகின்றது. இளையோர் பருவத்திற்கு முந்திய காலத்தில் இந்த ஹார்மோன்கள் குறைந்த அளவில் சுரக்கப்பட்டால், சினைப் பைகள் அல்லது அண்டங்களின் சாதாரண வளர்ச்சி தடைப்பட்டு விடும். இதன் விளைவாக மற்ற இனப்பெருக்க உறுப்புக்களின் சாதாரண வளர்ச்சியும் தேக்கமடைந்துவிடும். இதனால் இனப் பெருக்க உறுப்புக்கள் முதிர்ச்சியடையாத, இரண்டாந்தர பாலினத் தன்மைகள் சரிவரத் தோன்றாத ''குன்றிய பாலின நிலை'' (Hypogondal or Hypogenital state) ஏற்பட்டுவிடும். இதற்கு மாறாக, பாலினச் சுரப்பியைத் தூண்டும் ஹார்மோன், வளர்ச்சிப் பருவத்தில் அதிகமாகச் சுரந்தால், பிஞ்சில் முதிரும் (Precocious) பாலின வளர்ச்சி ஏற்படும். ஆதலால் உரிய காலத்தில், உரிய அளவில், பிடியூடரியும் பாலினச் சுரப்பிகளும் தங்களின் ஹார் மோன்களைச் சுரப்பது, வளர்ச்சிக்கும் பாலின முதிர்ச்சி பெறுவ தற்கும் மிகவும் இன்றியமையாததாகும்.

பிடியூடரி சுரப்பியின், பாலினச் சுரப்பிகளைத் தூண்டும் ஹார்மோனின் சுரத்தலைப் பற்றிய பல ஆய்வுகள் குழந்தை களிடம் நடத்தப்பட்டுள்ளன. பொதுவாக இந்த ஆய்வுகள்,

குழந்தைப் பருவத்தின் முற்பகுதியில் இந்த ஹார்மோனின் சுரப்பு, இரு பாலினரிலும் கண்டறியா வண்ணம் மிகக் குறைந்த அளவில் இருக்கிறது என்றும், அளவிட்டறியும் அளவு, முதன்முதலில் இளையோர் பருவத்தில்தான் தோன்றுகின்றது என்றும் காட்டுகின்றன. பால் சுரப்பிகளைத் தூண்டும் ஹார்மோன் சிறுநீரில் கலந்துள்ள அளவைக் கண்டறிய, 64 சிறுவர்களின்பேரில் நடத்தப்பட்ட 120 சோதனைகளின் முடிவுகளின் அடிப்படையில், கிராய்லிச்சும் (Greulich), மற்றவர்களும், வயது அதிகரிப்பின் கூடவே, பாலினச் சுரப்பிகளைத் தூண்டும் ஹார்மோன், குழந்தைப் பருவத்தின் முற்பகுதியில் காணப்படும் கண்டறியாவண்ணம் உள்ள அளவிலிருந்து, முதிர்ச்சிபெற்றவர்களின் அளவிற்கு, சிறுநீரில் அதிகரித்துக் கொண்டே வருகின்றது என்ற முடிவிற்கு வந்துள்ளனர்.

பாலினச் சுரப்பிகள், நாளச் சுரப்பிகளாகவும், நாளமில்லாச் சுரப்பிகளாகவும் இருவகைகளில் செயல்படுகின்றன. அவை நாளச் சுரப்பிகளாகச் செயல்படுகையில், இனப்பெருக்கத்திற்கு இன்றியமையாத விந்தணுக்களை ஆண்களிலும், சினைகளைப் பெண்களிலும் உற்பத்தி செய்கின்றன. இதைத் தவிர, அவை நாளமில்லாச் சுரப்பிகளாகச் செயல்படும்போது, ஆண்ட்ரொஜன் (Androgen) என்ற ஆண் ஹார்மோனையும், எஸ்ட்ரோஜன் (Estrogen) என்ற பெண் ஹார்மோனையும் சுரக்கின்றன. இவ்விரு ஹார்மோன்களும், இருபாலினரிலும் சுரக்கின்றன. ஆனால் ஆண்களில் ஆண்ட்ரோஜன் எஸ்ட்ரோஜனைவிட மிக அதிக அளவில் சுரக்கின்றது. ஒருவனிடம் எதிர்பாலினரின் ஹார்மோன் அளவிற்கு மீறி சுரந்தால், அவனிடம் எதிர்பாலாரின் இரண்டாந்தர பாலினத் தன்மைகள் ஓரளவிற்கு தோன்றிவிடும். நேதன்ஸனும் மற்றவர்களும், ஆன்ட்ரோஜன் சிறுநீரின் வழி வெளியிடப்படுவது, சிறுவர்களைவிடச் சிறுமியர்களிடத்து சிறிது குறைந்த அளவில் உள்ளது என்றும் அறிவித்துள்ளனர். பதினேரு வயதிற்குப் பின், இவ்விரு ஹார்மோன்களுக்கிடையில் அதிக அளவில் வேறுபாடு தோன்றத் தொடங்குகின்றது. அதாவது ஆண்களிடம் ஆண்ட்ரோஜன் அதிக அளவிலும் பெண்களிடம் எஸ்ட்ரோஜன் அதிக அளவிலும் வெளியிடப்படுகின்றன. பூப்பிற்கு ஒன்றரை ஆண்டுகளுக்கு முன்னர், எஸ்ட்ரோஜன் அதிக அளவில் வெளிப்படுகின்றது. பூப்பிற்கு ஒன்னரை ஆண்டுகளுக்கு முன்னர் எஸ்ட்ரோஜன் வெளிப்படுவது, பெண்களிடம் குறைவதும் அதிகரிப்பதுமான "சுழற்சி" (Cyclic) நிகழ்ச்சியாக மாறுகின்றது; நாளடைவில் இச்சுழற்சி தீவிரமடையத் தொடங்குகின்றது. இந்த நிகழ்ச்சிக்குப் பின்னரே, பூப்பிற்கு முன்னர் பெண்களிடம் காணப்படும் பாலின வளர்ச்சி தோன்றத் துவங்குகின்றது.

சிறுவர்களிடம் எஸ்ட்ரோஜன் சிறுநீரில் கலந்து வெளிப்படுவதில், இத்தகைய சுழற்சி நிகழ்ச்சி ஏதும் காணப்படுவது இல்லை. ஆன்ட்ரொஜன் வெளிப்படுவதில், இத்தகைய சுழற்சி நிகழ்ச்சி இருபாலினரிடமும் காணப்படுவது இல்லை. எனினும், ஆண்பிள்ளைகளில் 11 வயதிற்குப் பின்னர், ஆண்ட்ரோஜன் வெளிப்படுவது அதிகரித்து, இரண்டாந்தரப் பாலினத் தன்மைகள் தோன்றத் துவங்குகின்றன.




வரைபடம் 6. பாலினச் சுரப்புகள் வெளிப்படுவதில் வயதில் ஏற்படும் மாற்றங்கள். (நேதன்ஸன்)

முதல் மாதவிடாயின் (Menarche) போது, சினைப்பைகள் தங்களின் முதிர்ச்சிப் பருமனில் 30 சதவீத வளர்ச்சியையே அடைந்து காணப்படுகின்றன, அவைகளின் செயல்தன்மையும் வளரும் நிலையில் காணப்படுகின்றது. இதைப்போன்றே சிறுவர்களிடத்தும் பாலின வளர்ச்சி நீடித்தகால அளவில் ஏற்படுகின்றது எனவே, சுரப்பிகளின் இத்தகைய மாற்றங்களுக்கு ஏற்ப இளையோர்

தொடர்ந்து பொருந்தி ஏற்ப நடந்துகொள்ளவேண்டியது அவசிய மாகின்றது.

**பூப்பின் தோற்றம் (The advent of puberty) :**

மனித வளர்ச்சியில் ஏற்படும் மாறுதல்களில், இளையோர் பருவத்தில் ஏற்படும் பூப்பெய்துதலும், இனப்பெருக்க உறுப்புக் களின் முதிர்ச்சியும், மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவைகள் ஆகும். பூப்பெய்துதல் என்பது, ஒரு தனியன் தன் வாழ்க்கை நிலையில், இனப்பெருக்க உறுப்புகள் முதிர்ச்சிபெற்று, செயல்படும் ஆயத்த நிலையை அடைவதை அல்லது அவன் தன் இனத்தை விருத்தி செய்கின்ற ஆற்றலைப் பெறுகின்ற தன்மையைக் குறிக் கின்றது. பெண்பிள்ளைகளிடம் காணப்படும் இரண்டாந்தர பாலினத் தன்மைகள் (Secondary sex characteristics) அவர்கள் பூப்பெய்திவிட்டதை எடுத்துக்காட்டுகின்றன. தொடர்ந்து படிப் படியான உடல் மாற்றங்களும், மார்பக வளர்ச்சியும், அடிவயிற் றெலும்பு அகலப்படுவதும், பூப்புப் பகுதியிலும் (Pubic Regions) அக்குள்களிலும் உரோமங்கள் வளர்வதும் இவர்களிடத்து நிகழ் கின்றன. பூப்பின் தோற்றம், பெண்பிள்ளைகளில் முதன்முதலாக ஏற்படும் பூப்புப் போக்கினை அல்லது முதல் மாதவிடாயைக் கொண்டு தீர்மானிக்கப்படுகின்றது.

மாதப்போக்கு எனப் பொருள்படும் "மென்ஸ்ட்ருவேஷன்" (Menstruation) என்ற ஆங்கிலச் சொல் லத்தீன் மொழியின் மாதம் என்ற பொருளுடைய "மென்ஸஸ்" (Menses) என்ற சொல்லி லிருந்து பெறப்பட்டது ஆகும். இது, நிலா மாதத்தின் 28 நாட்களைக் குறிக்கின்றது; சாதாரண மாத காலத்தைக் குறிப்ப தன்று. மாதப்போக்கின்போது ஏற்படும் ஒழுக்கு, முற்றிலும் இரத்தமே என்று பெரும்பாலானவர்களால் தவறாகக் கருதப்படு கின்றது. இதனால், பெண்பிள்ளைக்கு இது வலிமையைக் குன்றச் செய்கின்ற அனுபவம் என்றும், அவள் கடினமான வேலைகளில் ஈடு படாது தனிக்கவனம் எடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் நம்பப் படுகின்றது. இந்த நம்பிக்கை உடலியல் அடிப்படையில் தவறான தாகும். மாதப்போக்கு, எஸ்ட்ரோஜன் எனும் பெண்பாலின் ஹார்மோன் குறிப்பிட்ட அளவிற்குமேல் சுரக்கும்போது ஏற்படு கின்றது.

மாதப்போக்கு நான்கு வகைப் பகுதிப் பொருள்களைக் கொண்டது. அவையாவன :—1. குருதி, 2. கோழைப் பொருள் (Mucus), 3. சுண்ணமும் (Lime) ஏனைய தாதுப் பொருள்களும், 4. சிதைக்கப்பட்ட திசுச் செல்கள் ஆகியவை. மாதப்போக்கு

தொடரும் 3-5 நாட்களில், இந்த வெளிப்பாட்டின் மொத்த அளவு 100 மிலி லிட்டர் ஆகும்.

மாதப்போக்கில் வெளிப்படும் குருதி, கருப்பையின் அகஉறைத் தந்துகிகளிலிருந்து வெளிவருவதாகும். மாதப்போக்கின் நாட்கள் அனைத்திலும் இது மொத்தமாக 2 அவுன்ஸ் அளவே வெளிப்படுகின்றது. மாதப்போக்கின் இறுதி நாட்களில் வெளிப்படும் வெளிறிய ஒழுக்கின் பெரும்பகுதி, கோழைப் பொருளே ஆகும். சுண்ணம் போன்ற தாதுப் பொருள்கள், சினைமுட்டை கருவுற்றால் அதற்கு ஊட்டமளிப்பதற்காக இருந்தவை. சினைமுட்டை கருவுறாததினால் சிதைவுற்று, அதனுடைய பகுதிகள் தான் மாதப்போக்காக வெளிவருகின்றன என்று பொதுவாகக் கருதப்படுகின்றது. ஆனால், இந்தக் கருத்து உடலியல் அடிப்படையில் தவறானது. உண்மையில் நேருவது யாதெனின், முதிர்த்த சினை முட்டை, கருவுறும் குழாய்க்கு (Fallopian Tube) வந்தவுடன், அது கருவுற்றால் அதனை ஊட்டி வளர்ப்பதற்கு வேண்டிய வசதிகள் கருப்பையில் உண்டாகின்றன. சினைமுட்டை கருவுறாது சிதைவடைந்ததும், இந்த ஏற்பாடுகளும் சிதைக்கப்பட்டு அவற்றின் பகுதிகள்தான் இந்த ஒழுக்கில் வெளியேறுகின்றன. இதனால்தான் இந்த ஒழுக்கில் சிதைக்கப்பட்ட திசுச் செல்களும் வெளிவருகின்றன.

முதல் மாதப்போக்கு (Menarche) எவ்வயதில் தோன்றுகின்றது என்பதை நிர்ணயிக்கப் பலஆய்வுகள் நடத்தப்பட்டுள்ளன. ஷேப்பர் என்பார் (Schaeffer) 10,500 பெர்லின் (Berlin) பெண் பிள்ளைகளைப் பற்றி ஆராய்ந்ததில், அவர்களுக்குச் சராசரியாக 15 ஆண்டுகள் 7 மாதங்களில் முதல் மாதப் போக்கு ஏற்பட்டது எனக் கண்டார். இதற்கு 23 ஆண்டுகளுக்குப் பின்னர், நியூராத் என்பார் (Neurath) மத்திய ஐரோப்பியப் பெண்பிள்ளைகள் 12 முதல் 14 ஆண்டிற்குள் முதன்முதலாக மாதப்போக்கு அடைந்தனர் என்று கண்டார். இதன் அடிப்படையில், ஷேப்பரின் முடிவுகள் பிற்காலத்திய ஆராய்ச்சியாளர்களின் முடிவுகளுடன் மாறுபடுவதாகக் காணப்படுகின்றது. ஆனால், கூல்டும், கூல்டும் (Gould and Gould) தங்களின் ஆராய்ச்சியில் கண்டறிந்தவை, ஷேப்பரின் கண்டுபிடிப்பு சரியே எனக் காட்டுகின்றன: கூல்டும், கூல்டும் 357 தாய்மார்களின் 680 பெண்பிள்ளைகள் சராசரியாக 0·38 ஆண்டுகள் தங்களின் தாயார்களைவிட விரைவில் பூப்பெய்தியதை அறியப் பெற்றனர். மேலும் முற்காலத்திய நீக்ரோப் பெண்களைவிட தற்காலத்து நீக்ரோப் பெண்கள் முன்கூட்டியே பூப்பெய்துகின்றனர் என்றும் தற்காலத்து அமெரிக்க நீக்ரோப் பெண்கள் வெள்ளைப் பெண்கள் பூப்பெய்தும் சராசரி வயதான 12·5 ஆண்டிலேயே பூப்பெய்துகின்றனர் என்றும் கண்டறியப்பட்டிருக்கின்றன.

**பூப்புப்போக்கின் தோற்றத்தைப் பாதிக்கும் காரணிகள்:**

ஒரு நாட்டின் தட்ப, வெப்பநிலை பாலின முதிர்ச்சி ஏற்படுவதைப் பெரிதும் பாதிக்கின்றது என்பது முற்காலத்திய கருத்து. மிகவும் வெப்பமான நாட்டில் வளரும் பிள்ளைகள், குளிரான அல்லது மிதமான தட்ப வெப்ப நிலையுடைய நாடுகளின் பிள்ளைகளைவிட விரைவாகவே பூப்பெய்துகின்றனர் என்று கருதப்பட்டு வந்தது. ஆனால் இவ்வகையில் நடத்தப்பட்ட ஆய்வுகள் இந்த நம்பிக்கை தவறானது என்பதை நிரூபித்துக் காட்டியுள்ளன. மூயெல்லர் (Mueller) என்பார் ஜாவாத் தீவுப் பெண்பிள்ளைகளைப் பற்றி ஆராய்ந்ததில், அவர்கள் வடக்கு ஐரோப்பிய நாட்டுப் பெண் பிள்ளைகளைவிட முன்கூட்டிப் பூப்பெய்துவதில்லை என்று கண்டார். ஏனையோர் இதனைப்பற்றி ஆராய்ந்ததிலிருந்து, நம் நாட்டிலும் எகிப்து, ஜப்பான் நாடுகளிலும் பெண்பிள்ளைகள், ஏனைய குளிர் நாடுகளின் பெண்பிள்ளைகளைவிட விரைவில் பூப்பெய்துவதில்லை என்பது தெரியவருகின்றது. எனவே, பெண்களின் பூப்புப்போக்கு தோன்றுவது, அவர்கள் வாழும் இடத்தின் தட்ப, வெப்ப நிலையினைப் பொறுத்து நிகழ்வதில்லை என்பது தெளிவாகின்றது.

பூப்பெய்துவதில் காணப்படும் வயது வேறுபாடுகள் வாழ்க்கைத்தரங்களையும், நிலைகளையும் பொறுத்துள்ளது என்பதைச் சோதனைக்குறிப்புகளைப் பகுத்தாய்ந்ததிலிருந்து அறியலாம். எங்கிலும், ஷெலஸ்யின்யாக்கும் (Engle and Shlesnyak) தாழ்ந்த சமூகப் பொருளாதார நிலையில் வாழ்ந்த 250 யூதப் பெண்பிள்ளைகளைப்பற்றி ஆராய்ச்சி செய்ததில், அப்பெண்கள் சராசரியாக 13·5 ஆண்டுகளில் பூப்படைந்தனர் என்று கண்டனர். இதற்கு மாறாக ஷட்டில்வொர்த் என்பார் (Shuttleworth) உயர்ந்த சமூகப் பொருளாதாரக் குடும்பத்தினைச் சார்ந்த 200 பெண்பிள்ளைகளைப் பற்றி ஆராய்ந்ததில், அவர்கள் சராசரியாக 12·5 ஆண்டுகளில் பூப்பெய்தினர் என அறிந்தார். இப்பரிசோதனை சமூகப் பொருளாதார நிலையும், வாழ்க்கை வசதியும் சுற்றுப்புறச் சூழ் நிலைகளும், பெண்பிள்ளைகள் பூப்பெய்துவதை நிர்ணயிக்கவல்ல காரணிகளாக இருக்கின்றன என்பதை எடுத்துக்காட்டுகின்றது. மைக்கேல்ஸனின் (Michelson) சோதனைக் குறிப்புகள், அமெரிக்காவின் வடபகுதியிலுள்ள நீக்ரோப் பெண் பிள்ளைகள் தென் பகுதியிலுள்ள நீக்ரோப் பெண்களைக்காட்டிலும் விரைவில் பூப்பெய்துவதாக அறிவிக்கின்றன. மேற்கிந்தியத் தீவுகளில் வாழும் நீக்ரோக்களில் முதல் மாதப்போக்கு, தென் அமெரிக்க நீக்ரோக்களுக்குத் தோன்றுவதைவிடப் பின்கூட்டியே ஏற்படுகின்றது எனவும் தெரிகின்றது. எனவே மரபு நிலைக் காரணிகளும், வாழ்க்கை நிலைகளும் தரங்களும், பூப்பு எய்துவதில்

உள்ள வேறுபாடுகளுக்குப் பெருமளவில் காரணமாயுள்ளன. தற்காலத்துச் சோதனைச் சான்றுகளின் அடிப்படையில் கிராய்லிச் என்பார், ஊட்டச் சத்துக்கள் நிரம்பிய உணவும், மொத்தத்தில் சாதகமாகவுள்ள சூழ்நிலைகளும், பூப்பின் தோற்றத்தைத் துரிதப் படுத்துகின்றன என்றும், இதற்குமாறாக போதுமான சத்துப் பொருள்கள் அற்ற உணவும், கடும்நோய்களும் ஏனைய பாதகமான சூழ்நிலைத்தன்மைகளும் பூப்பின் தோற்றத்தைத் தாமதப்படுத்து கின்றன என்றும் தன் முடிவைத் தெரிவிக்கின்றார். எனவே, பெண்பிள்ளைகளில் பூப்பின் தோற்றம், சத்துணவு, சாதகமான சூழ்நிலை போன்றவற்றால் நிர்ணயிக்கப்படுகின்றது என்பது தெளிவாகின்றது.

விந்து வெளிப்பாடு (Ejaculation) :

பெண்பிள்ளைகளைப் போன்று, ஆண்பிள்ளைகளுக்குப் பூப் பெய்தும் வயதினை நிர்ணயிப்பது எளிதல்ல. பெண்பிள்ளைகளிடம் காணப்படும் முதல் மாதப் போக்குப் (Menarche) போன்று தெளிவாக வரையறை செய்யப்பட்ட ஒரு நிகழ்ச்சி ஆண் பிள்ளைகளுக்கு ஏற்படுவதில்லை. ஆண்பிள்ளைகளுக்கு இளையோர் பருவத்துவக்கத்தை நிர்ணயிக்கக் கையாளப்படும் பல்வேறு உடல், உடலியல் அறிகுறிகள், வேறுபட்ட காலத்தில் தோன்றுவனவாக உள்ளன. எனினும் கிராம்ப்டன் என்பார் (Crampton) இவ்வகையில் ஒரு சில அடிப்படை விதிகளை உருவாக் கினார். அவை கிராம்ப்டன் சூத்திரங்கள் (Crampton Criteria) எனக் கூறப்படுகின்றன. இவரது சூத்திரங்களின்படி, ஆண்பிள்ளைகளிடம் பூப்புப் பாகங்களில் (Pubic Regions) கருநிற உரோமங்கள் தோன்றுவது அவர்கள் பூப்பெய்துகிறதை எடுத்துக்காட்டுகின்றது. ஆனால் இந்தச் சூத்திரங்கள், தூக்கத்தில் ஏற்படும் முதன்முதலான விந்து வெளிப்பாட்டை (First Nocturnal Emission) பூதக் கண்ணாடிச் சோதனையின் வழி ஆய்ந்து கிடைக்கப்பெற்ற விந்தணுக்களின் (Spermatozoa) முதன்முதலான தோற்றம் ஆகிய சான்றுகள் போன்று அவ்வளவு நம்பகமானதாக இல்லை எனினும், கிராம்ப்டன் தனது சூத்திரப்படி, பூப்பெய்திவிட்டவர்களாகக் கருதவேண்டிய ஆண்பிள்ளைகளின் விந்தினைப் பூதக்கண்ணாடிச் சோதனையால் ஆராய்ந்து, அவற்றில் நன்கு முதிர்ந்த விந்தணுக்கள் இருப்பதைக் கண்டதாகத் தெரிவித்துள்ளார்.

டிமாக் என்பார் (Dimock) 1406 சிறுவர்களைக் கிராம்ப்டன் சூத்திரங்களின் அடிப்படையில் ஆராய்ந்ததில், அவர்களில் 260 பிள்ளைகள் பூப்பெய்தியிருந்தனர் என்றும், அவர்களுடைய சராசரி வயது 13 வருடங்கள் 1 மாதம் ஆக இருந்தது என்றும் தெரிவித்

துள்ளார். கேரி என்பார் (Carey) கிரொம்ப்டன் சூத்திரங்களையே பயன்படுத்தி 11 வயதிலிருந்து 18 வயதிற்குட்பட்ட மேரிலாண்ட் (Mary Land) பள்ளிக்கூடப்பிள்ளைகளை ஆராய்ந்தபோது, அவர்களில் 49 பிள்ளைகள் பூப்பெய்திவிட்டிருந்ததையும், அவர்களுடைய சராசரி வயது 14 வருடங்கள் 3 மாதங்களாக இருந்ததையும் அறிந்தார்.

இந்தத்துறையில் நடத்தப்பட்ட முக்கியத்துவம் மிக்க ஆராய்ச்சியானது கின்ஸி பாமெராய். மார்டின் (Kinsey, Pomeroy and Martin) ஆகியோரின் ஆராய்ச்சியேயாகும். ஆண் பிள்ளைகளிடம் முதன்முதலாக விந்து வெளிப்படுகின்ற நாளே, அவர்கள் பூப்பெய்திய காலத்தைக் குறிப்பிடுவது என்ருலும் போதிய தூண்டல்கள் இருக்கையில், விந்து வெளிப்படுதல் இதற்கு முன்னரே நிகழ்ந்துவிடும் என கின்ஸி கூறுகின்ருர். மேலும் ஆண்பிள்ளைகளில் முதன்முதலாக பூப்புப் பகுதிகளில் உரோமம் வளருதல், உயரத்திலும், ஏனைய சில வளர்ச்சித் தன்மைகளிலும் துரித வளர்ச்சி தோன்றுதல் ஆகியவை முதன் முதலாக விந்து வெளிப்படும் காலத்துடன் எந்த ஆண்டில் ஒத்து நடக்கின்றனவோ, அந்த ஆண்டே அவர்கள் பூப்பெய்திய முதல் ஆண்டாக எடுத்துக் கொள்ளப்படலாம் என்று கின்ஸி கருத்துத் தெரிவித்துள்ளார். எனினும் சில உடல் வளர்ச்சி, முதல் விந்து வெளிப்பாட்டிற்கு ஒரு சில ஆண்டுகளுக்கு முன்னரே துரிதமான தாகக் காணப்பட்டால் அந்தத் திடீர்த் துரித வளர்ச்சிக் காலமே அவர்கள் பூப்பெய்தியதினைக் குறிக்கின்ற காலமாக எடுத்துக் கொள்ளலாம் என்றும் அவர் கூறுகின்ருர். ஆனல், தன்னுடைய ஆராய்ச்சியில், 85 சதவீதத்தினருக்கு துரித உடல் வளர்ச்சியும், முதல்விந்து வெளிப்பாடும், ஒத்தகாலத்தில் நிகழ்ந்தன என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

முதல் விந்து வெளிப்பாட்டில் செல்வாக்குள்ள காரணிகள் ;

ஆண்களில் முதல் விந்து வெளிப்பாடு நிகழ்வது, சமூக அல்லது கல்வித்தரத்தோடு உடன்பாட்டுத் தொடர்பு கொண்டிருப்பதாகத் தெரிவது குறிப்பிடத்தக்கதாகும். எட்டாம் வகுப்பிற்குள்ள படிப்பை நிறுத்திவிடுகின்ற சிறுவர்களில் முதல்விந்து வெளிப்பாடு சராசரியாக 14·58 வயதில் ஏற்படுகின்றது. உயர்நிலைப்பள்ளியோடு படிப்பை முடித்துக்கொள்ளும் சிறுவர்களில் இது சராசரியாக 13·97 வயதில் நிகழ்கின்றது. கல்லூரி சென்று பயிலும் ஆண் பிள்ளைகளுக்கு இதன் வயது சராசரி 13·71 ஆக இருக்கின்றது. ஆதலால், சமூக, கல்வித்தரத்தைப் பொறுத்து முதல் விந்து வெளிப்பாட்டு நிகழ்ச்சி ஏறத்தாழ ஓராண்டுகால வேறு பாட்டினைக் கொண்டிருக்கின்றது. இந்த வேறுபாடுகள் பல்வேறு

சமூகத் தரத்தைச் சார்ந்தவர்களிடம் காணப்படும் ஊட்டச்சத்து மாறுபாடுகளைப் பொறுத்து இருக்கலாம். இக்கருத்து பெண் பிள்ளைகளில் பூப்புப் போக்கு நிகழ்வதில் காணப்படும் வேறுபாடு ஊட்டச்சத்து மாறுபாடுகளினால் ஏற்படுகின்றது என்று ஏற்கெனவே கண்டவற்றுடன் ஒத்திருக்கின்றது.

ஆண்பிள்ளைகளுக்கு விந்து வெளிப்பாடு புற இயக்க முறைகளினால் துரிதப்படுத்தப்படலாம். முதல் விந்து வெளிப்பாடு கீழ்க்கண்ட காரணிகளால் ஏற்படுகின்றது என்று கின்ஸி தன் ஆராய்ச்சியின் மூலம் தெரிவித்துள்ளார். அவை கைவினை (Masturbation), தூக்கத்தில் விந்து வெளிப்பாடு (Nocturnal Emission), கலவியில் ஈடுபடாது கட்டித்தழுவும் புறச்செயல்கள் (Petting), ஒரே பாலினர் உடலுறவு கொள்ளல் (Homosexuality), மிருகத்தோடு புணர்தல் (Zoophila), இயல்பாகவே ஏற்படுவது (Spontaneous) முதலியன ஆகும். எல்லா வயது ஆண்பிள்ளைகளுக்கும் முதல் விந்து வெளிப்பாட்டிற்கு கைவினையே பெரும்

| முதல் விந்து வெளிப்பாட்டிற்கான காரணிகள் | ஒவ்வொரு காரணிக்கான சதவீதம் | | | | |
|---|---|---|---|---|---|
| | இளையோர் பருவத்தின் துவக்ககாலம் | | | | |
| | 8–11 | 12 | 13 | 14 | 15 விருந்து |
| கை வினை | 71·6 | 64·8 | 58·9 | 55·0 | 52·1 |
| தூக்கத்தில் விந்து வெளிப்பாடு | 21·6 | 28·2 | 35·6 | 38·9 | 37·1 |
| கட்டித் தழுவல் | 0·0 | 0·3 | 0·6 | 0·3 | 2·2 |
| புணர்தல் | 0·6 | 1·4 | 0·9 | 0·9 | 3·2 |
| ஒரேபாலினர் புணர்தல் | 2·6 | 3·2 | 1·2 | 2·0 | 2·2 |
| விலங்கோடு புணர்தல் | 0·3 | 0·3 | 0·2 | 0·3 | 0·0 |
| இயல்பாக வெளிப்படல் | 3·3 | 1·8 | 2·6 | 2·6 | 3·2 |
| மொத்தம் | 100·0 | 100·0 | 100·0 | 100·0 | 100·0 |
| ஈடுபட்டோர் எண்ணிக்கை | 306 | 722 | 984 | 650 | 186 |

அட்டவணை:—வயதின் அடிப்படையில் முதல் விந்து வெளிப்பாட்டிற்கான காரணிகள் (கின்ஸி)

பாலும் காரணமாக உள்ளது என்றும், தூக்கத்தில் விந்து வெளிப்படுதல் அதற்கான, இரண்டாவது முக்கியக் காரணம் என்றும் அறியப்பட்டுள்ளது.

இரண்டாந்தரப் பாலினத் தன்மைகள் (Secondary Sex Characteristics):

பத்தாவது வயதின் துவக்கத்திலேயே பெண் பிள்ளைகள் மென்மைத் தன்மையுடன் காணப்படுகின்றனர். ஓரிரு ஆண்டுகளுக்குப்பின்னர் ஆண்பிள்ளைகளும் ஆண்மைத்தன்மை பெற்றுக் காட்சியளிக்கின்றனர். இங்ஙனம் ஒரு ஆணுக்கும் பெண்ணுக்கும் அவர்கள் பாலினத்திற்குத் தக்கவாறு பாலின வேறுபாட்டுத் தோற்றத்தைத் தருவது, இரண்டாந்தரப் பாலினத் தன்மைகள் ஆகும். இவை இன உற்பத்திக்கு நேரடியாக உதவாவிடினும், அவைகளே கலவியின்பால் ஆர்வத்தையும், வேட்கையையும் தூண்டிவிடுகின்றன.

இரண்டாந்தரப் பாலினத்தன்மைகள் எல்லாமே ஒரே சீராக வளர்ச்சி பெறுவதில்லை. இவை சிறிது முன்பின்னாகவே வளர்ச்சி பெறுகின்றன. இதிலும் எண்ணற்ற தனி மனித வேறுபாடுகள் காணப்படுகின்றன. பூப்பெய்துவதற்கு ஏற்ப தாமதித்தோ, முற்பட்டோ, அல்லது பூப்பெய்துவதைத் தொடர்ந்தோ, இத்தகைய இரண்டாந்தரப் பாலினத்தன்மைகள் வளர்ச்சியடைகின்றன.

பெண்பிள்ளைகளிடம் இரண்டாந்தரப் பாலினத்தன்மைகளின் வளர்ச்சி:

பெண்பிள்ளைகளிடம் இரண்டாந்தரப் பாலினத் தன்மைகளைப் பொதுவாகக் கீழ்க்கண்ட முறையில் பிரிக்கலாம்.

1. இடையின் அகலமும் சுற்றளவும் அதிகரித்தல். (Wide Hips).

2. மார்பகங்கள் (Breasts) எடுப்பாக வளரத்தொடங்குதல்.

3. பூப்பு முடிகள் (Pubic Hairs) வளரத் தொடங்குதல்.

4. பூப்புப்போக்கு (Menarche) ஏற்படுதல்.

5. அக்குள்களில் முடிகள் (Axillary Hairs) தோன்றுதல்.

6. கீச்சுக்குரல் மாறி மென்மையாக ஒலிக்கும் இனிமையான குரல் மாற்றம் ஏற்படுதல்.

7. கைகால்கள் சதைப்பிடிப்புடன் வனப்பாக வளரத் தொடங்குதல்.

**மார்பக வளர்ச்சி :**

பெண்களின் மார்பகங்கள் நான்கு நிலைகளில் வளர்ச்சி பெறத் தொடங்குகின்றன. அவை முலைக்காம்பு நிலை (Papilla or Nippple Stage), மொட்டு நிலை (Bud Stage), முதநிலை மார்பக நிலை (Primary Breast Stage), முதிர்ந்த மார்பக நிலை (Mature Breast Stage) என்று குறிப்பிடப்படுகின்றன.

**அ. முலைக்காம்பு நிலை (Papilla or Nipple Stage) :**

ஒரு பெண்பிள்ளை எட்டு வயதினை அடையத் தொடங்கும் போது, அவளின் மார்பகங்களில் காம்புகள் மட்டுமே சற்று எடுப்பாக முன்தள்ளி வளரத் தொடங்குகின்றன. இந்த முதல் நிலையே முலைக்காம்பு நிலை என அழைக்கப்படுகின்றது.

**ஆ. மொட்டு நிலை (Bud Stage) :**

எட்டுவயதிலிருந்து பதினோரு வயதினை அடைவதற்குள் பெண் பிள்ளைகளின் மார்பகங்கள் மொட்டு நிலைக்கு வளர்ந்துவிடு கின்றன. இப்போது முலைக்காம்பைச் சுற்றியுள்ள வட்டப் பரப்பு சதைப்பிடிப்புடன் முன் எழுந்து வளர்ந்து காணப்படும்.




வரை படம் 7. மார்பக வளர்ச்சி

1. முலைக்காம்பு நிலை
2. மொட்டு நிலை
3. முதநிலை மார்பு நிலை
4. முதிர்ந்த மார்பு நிலை

இ. முதநிலை மார்பக நிலை (Primary Breast Stage) :

இந்த மூன்றுவது வளர்ச்சி நிலை பதினேறு வயது முதல் பதினுன்கு வயதிற்குள் தோன்றுகின்றது. இப்போது மார்பகங்கள் உருண்டு, திரண்டு பெரிதாகக் கூம்பு வடிவில் சதைப்பிடிப்புடன் வளர்ச்சி பெற்றுக் காணப்படுகின்றன. மார்பகங்களின் காம்பும் அதைச் சுற்றிய கறுப்புப்பகுதிகளும் (Areola) இப்போது முன் தள்ளி வளர்ந்து காணப்படுகின்றன. இப்பருவத்தில் மார்பகங்கள் சிதைவடையாது செதுக்கிவைத்தாற்போல் காணப்படும்.

ஈ) முதிர்ந்த மார்பு நிலை (Mature Breast Stage) :

இந்த கடைசி நிலையில்தான் முதிர்ந்த வளர்ச்சியைப் பெற்ற மார்பகங்கள் பால் சுரப்பிகளாகச் (Mammary Glands) செயல் படத் தொடங்குகின்றன. மூன்றும் நிலையில் முன்தள்ளி வளர்ந் திருந்த காம்பைச் சுற்றிய கறுப்புப் பகுதிகள், இப்போது மார்பகங் களுடன் ஒட்டியதாயும் காம்புகள் மட்டுமே முன்னல் தள்ளியும் காணப்படும்.

ஆண் பிள்ளைகளிடம் இரண்டாந்தரப் பாலினத் தன்மைகளின் வளர்ச்சி:

ஆண்பிள்ளைகளிடம் இரண்டாந்தரப் பாலினத் தன்மைகள் வளர்ச்சியடைவதில் எண்ணற்ற தனி மனித வேறுபாடுகள் காணப் படினும் அவை கீழ்க்கண்ட முறையில் தோன்றுவனவாகக் காணப் படுகின்றன.

1. ஆண் இன உறுப்பு (Penis) துரிதமாக வளர்தல்.

2. பூப்புப் பகுதிகளில் மென்மையான முடிகள் (Pubic Hairs) வளர்தல்.

3. அக்குள்களில் சுருண்ட முடிகள் (Axillary Hairs) தோன்றுதல்; அக்குள்களில் வியர்க்கும் வியர்வை ஒருவிதமான மணத்தைத் தரல்.

4. கீச்சுக் குரலிலிருந்து கடினமான குரல்மாற்றம் (Voice Change) ஏற்படுதல்.

5. முகத்தில் கன்னப் பகுதிகளிலும், மேலுதட்டிலும், தாடை களிலும் முடிகளின் வளர்ச்சி அதிகரித்தல்.

6. நெற்றியின் மேற்பகுதியில் கவிழ்த்திய வில்லைப்போன்ற தோற்றம் பெற்ற தலைமுடிகளின் அமைப்பு மாறி இரு கண் புருவங் களுக்கும் மேல் முடிகளின் அமைப்பு உள் வளைந்து இருத்தல்.

7. டெர்மினல் எனும் முதிர்ச்சியடைந்த முடிகள் முன்கை, முன்கால்களிலும் மார்பிலும், தொடைகளிலும் வளரத் தொடங் குதல்.

இளையோர் பருவத்தில் ஆண்பிள்ளைகளின் குரல்வளைகள் முன் தள்ளி (Ada'ms Apple) வளரத் தொடங்குகின்றன. இதனை அடுத்து ஆண்பிள்ளைகளிடம் குரல் மாற்றம் ஏற்படத் தொடங்குகின்றது. அவர்களின் கீச்சுக் குரல் மாறி, கரகரப்பான குரல் ஒலிக்கத் தொடங்குகின்றது.

ஸ்டீன் என்பார் (Stein) நெற்றியின் மேல் முடிகளின் அமைப்பு மாற்றமடைவதை இரண்டாந்தரப் பாலினத் தன்மையாகக்



வரை படம்—8. நெற்றியின் மேல் முடிகளின் அமைப்பில் மாற்றம் (Calvities Frontalis Adolescentium)

கொள்ளலாம் எனக் குறிப்பிடுகின்ருர். இளம் வயதில் இரு பாலினருக்குமே நெற்றியின் மேல் வில்லினைக் கவிழ்த்து வைத்தாற் போல் அமைந்த முடிகளின் வரிசை காணப்படுகின்றது. ஆனால் இளையோர் பருவத்தினை எய்திவிட்ட ஆண்பிள்ளைகளின் தலைமுடி அமைப்பில் குறிப்பிடத்தக்க மாற்றம் ஏற்படுகின்றது. இவர் களுக்கு நெற்றியின் மேல்பாகத்தில், இரு கண் புருவத்திற்கும் மேலாக வழுக்கை விழுந்ததுபோல் முடிகளின் வரிசையில் வெட்டுத் தோற்றம் காணப்படுகின்றது. இது "கால்விடீஸ் பிரண்டாலிஸ் அடொலெஸன்ஷியம்" (Calvities Frontalis Adolescentium) எனக் குறிப்பிடப்படுகின்றது. குன்றிய பாலினநிலையுடைய இளையோரில் இந்த விளிம்பு வெட்டு காணப்படாததால், ஸ்டீனின் இக்கருத்து ஏற்புடைத்தாயிருக்கின்றது என கிராய்லிச் கருதுகின்ருர். எனி னும், இது தாமதித்து நிகழும் வளர்ச்சித் தன்மையாதலால் இதனைக் கொண்டு பூப்பின் தோற்றத்தைக் கணிக்க இயலாது.

குழந்தைப் பருவத்தில் ஆண், பெண் இருபாலினரின் முகமயிர் களில் குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் காணப்படுவதில்லை. எனி னும் இளையோர் பருவத்தில் ஆண்பிள்ளைகளுக்கு மீசை, தாடி ஆகியவை வளர்ந்து ஆண்களுக்குரிய தோற்றத்தையளிக்கின்றன. பூப்பு முடிகள் நன்கு வளர்ந்த பின்னரே இருபாலினருக்கும் அக்குள்களில் உரோமங்கள் வளரத் தொடங்குகின்றன. உடலின் மற்ற பாகங்களில் வளருகின்ற உரோமங்களின் அளவைப் பொறுத்தே அக்குள் உரோமங்களின் அளவும் காணப்படுகிறது.

பூப்படையும்போது இரு பாலினரின் பூப்புப் பகுதிகளிலும் முடிகள் வளரத் தொடங்குகின்றன. பாலின உறுப்புக்களின் வளர்ச்சி நன்கு ஏற்பட்டுவிட்ட பின்னரே பூப்பு மயிர்கள் அடர்த்தி யாக வளருகின்றன. பூப்பு மயிரின் அடர்த்தியும், பரப்பும் ஆண் மைத் தன்மையுடன் தொடர்பு கொண்டிருப்பதாக இல்லை என்று தெரிகின்றது.

### ஏனைய உடலியல் மாற்றங்கள் (Other Physiological Changes);

இளையோர் பருவத்தில் உயிர்ப்பு வினை அமைப்பு, குருதி யோட்ட அமைப்பு, செரிமான உறுப்புகளின் அமைப்பு, கழிவு உறுப்புகளின் அமைப்பு ஆகியவற்றிலும் அவற்றின் செயற் பாங்கு களிலும் பல மாற்றங்கள் ஏற்படுகின்றன.

### உயிர்ப்பு வினை அமைப்பில் மாற்றம் (Changes in Respiratory System):

மூச்சுவிடும் காற்றின் சராசரி மொத்த பரும அளவு, 6 வய திற்கும் 16 வயதிற்கும் இடையில் மூன்று மடங்கு அதிகரிக்கின்றது

என்று கிராய்லிச்சும், டேயும் (Greulich and Day) கருத்துத் தெரிவித்துள்ளனர். மூச்சு விட்டதும், நுரையீரல்களிலும் உயிர்ப்பு வினைப் பாதைகளிலும் (Respiratory Passages) எஞ்சியுள்ள காற்றின் மொத்த பரும அளவு (Functional Residual) இளையோர் பருவத்தில் அதிகரிக்கின்றது; ஆனால் உயிர்ப்புவினை விகிதம் (Rate of Respiration) குறைகின்றது. ஷாக்கும் ஸோலியும் (Shock and Soley) 12 முதல் 16 வயதிற்குள் உள்ள இரு பாலினரிலும் உயிரக நுகர்வு (Oxygen Cosumption) அதிகரிக்கின்றது என்று கண்டுள்ளனர்.

பூப்புப் போக்கின்போது ஏற்படும் மிகக் குறிப்பிடத்தக்க பாலினச் சார்பற்ற உடலியல் மாற்றம், அடிப்படை ஊன்ம ஆக்கச்சிதைவு வேறுபாடு (Basal Metabolism) திடீரெனக்குறைதலாகும். அடிப்படை ஊன்ம ஆக்கச்சிதைவு வேறுபாடானது; உயிரோடிருப்பதற்கான அடிப்படைச் செயல்கள் மட்டுமே நடைபெறுவதற்குப் பயன்படுத்தப்படும் உயிரகத்தின் மொத்த அளவைக் குறிக்கின்றது. இது உயிரோடிருப்பதற்கு அடிப்படையாக செயல்கள் மட்டுமே நடைபெறுவதற்காகப் பயன்படுத்தித் தீர்த்துவிடப்படும் உயிரகத்தின் (Oxygen) மொத்த அளவைக் குறிக்கின்றது. இந்த அடிப்படையான சக்தியின் தேவையளவு தைராய்ட் சுரப்பியின் இயக்கத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. தைராய்டு சுரப்பி குறைந்து செயல்படும்போது அடிப்படை ஊன்ம ஆக்கச் சிதைவு மாறுபாடு குறைகின்றது. அடிப்படை ஊன்ம ஆக்கச் சிதைவு மாறுபாட்டை அளவிடுவதற்கு சோதனைக்குட்படுபவர், ஒரு வாய்க்குழலின் மூலம் 8 விநாடிவரை உயிர்த்தலைச் செய்யும்படி கேட்டுக்கொள்ளப்படுகின்றார். அவர் மூச்சுவிட்ட காற்று ஒரு சேமிப்புக்கலத்தில் சேகரிக்கப்படுகின்றது. இந்தக் காற்றின் ஒரு பகுதியைப் பகுத்தாய்ந்து, அதில் அடங்கியுள்ள உயிரகத்தின், கரிய ஈருயிரகையின் (Carbon di Oxide) அளவு நிர்ணயிக்கப்படுகின்றது. வெளிப்புறக் காற்றில் உள்ள உயிரகத்தின் அளவு நமக்குத் தெரிந்திருப்பதால், வெளிவிடப்பட்ட காற்றில் உயிரகம் குறைந்திருக்கும் அளவு அந்த 8 விநாடிகளில் பயன்படுத்தப்பட்ட உயிரகத்தின் அளவினைக் குறிக்கும்.

இளையோர் பருவத்தில், அடிப்படை ஊன்ம ஆக்கச் சிதைவு மாறுபாடு சராசரியில் குறைகின்றது. ஷாக் என்பார், வயது அதிகரிக்க, அதிகரிக்க ஆண்பிள்ளைகளைவிட பெண்பிள்ளைகளிடமே ஊன்ம ஆக்கச் சிதைவு மாறுபாட்டில் மாற்றங்கள் அதிகமாக ஏற்படுகின்றது என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் பெண்களில் ஊன்ம ஆக்கச் சிதைவு மாறுபாடு பூப்புப் போக்கின்போது திடீரெனக்

குறைகின்றது என்றும், இந்தக் குறைவு வயதினைவிட பூப்புப் போக்குடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கின்றது என்றும் அவர் விளக்கிக் கூறுகின்றார். பொதுவாக, இருபாலினரிலும் இளையோர் பருவத்தில், ஊன்ம ஆக்கச் சிதைவு மாறுபாட்டில் தொடர்ச்சியான குறைவு ஏற்படுகின்றது. இந்தக் குறைவு எல்லோரிடமும் ஒரே சீராகக் காணப்படுவதில்லை; தனி மனித வேறுபாடுகள் இதில் காணப்படுகின்றன. எனினும் இளையோரில் காணப்படும் இந்தக் குறைவு பின்னர் முதிர்ச்சி நிலையில் மீண்டும் நிலை நிறுத்தப்படுகின்றது.

### குருதியோட்ட அமைப்பில் மாறுதல்கள் (Changes in Circulatory System):

இளையோர் பருவத்தில், ஒரு தனியனின் இதயம் சிறுவயதில் கொண்டிருந்த எடையைப்போன்று இருமடங்கு எடையுள்ளதா கின்றது. இதற்கு முன்னர், ஆண்பிள்ளைகளின் இதயம், அவர் களின் வயதினையொத்த பெண்பிள்ளைகளின் இதயத்தைவிட, அளவில் பெரியதாகக் காணப்படுகின்றது. அதற்குப் பின்னர் 9 முதல் 14 வயது வரை பெண்பிள்ளைகளின் இதயம் ஆண் பிள்ளைகளினுடையதைக் காட்டிலும் பெரிதாகின்றது. எனினும் 14 வயதிற்குப்பின்னர், ஆண்பிள்ளைகளின் இதயம் துரிதமாகத் தொடர்ந்து வளர்கின்றது; பெண்பிள்ளைகளில் அது வேகங் குறைந்து வளர்கின்றது. இளையோர் பருவத்திற்கு முன்னர், தனியன் சிறிய இதயத்தையும் அகன்ற தமனியையும் பெற்றிருக் கின்றான். ஆனால் இப்பருவத்தில் இதயம் துரிதமாக வளரத் தொடங்கி, தமனியின் வளர்ச்சி மிகவும் குன்றிவிடுகின்றது. இதனால் இதயத்தின் பருமனிற்கும் தமனியின் பருமனிற்கும் இடையிலுள்ள விகிதத்தில் ஏற்படும் மாற்றம், குருதியழுத்தத்தில் பிரதிபலித்து, அதில் மாற்றங்களை ஏற்படுத்துகின்றது.

பொதுவாக, குருதியழுத்தம் வயதுடன் அதிகரிக்கும் தன்மை யினைக் கொண்டிருக்கின்றது. எனினும் பெண்களில் குருதியழுத் தம், 16 வயதிற்குப் பின்னர் குறைகின்றது. ராம்ஸே என்பார் (Ramsey) இதனைப்பற்றி ஆராய்ந்து, இருபாலினரும் குழந்தைப் பருவத்தில் மிகச்சிறிய மாறுதல்களுடன் கூடிய குருதியழுத்தத் தினைப் பெற்றிருந்தனர் என்றும், 13 வயதிற்குப் பின்னர் ஆண் களில் அழுத்தம் அதிகரித்து, வயதுடன் இப்பாலின வேறுபாடு அதிகமாகிக்கொண்டே சென்றது என்றும் கண்டறிந்தார்.

பூப்பின் தோற்றத்தின்போது, உயர்ந்த குருதியழுத்தம் ஏற் படுகின்றது என்பதற்குச் சில சான்றுகள் உள்ளன. ஆனால் ரிச்சி என்பார் (Richey) குழந்தைகளின் குருதியழுத்தத்தில் அதிகமான

வேறுபாடுகள் காணப்படுகின்றன என்று தெரிவித்துள்ளார். ஆதலால், பூப்பிற்கும் குருதியமுத்தத்திற்கும் உள்ள தொடர்ப்பாட்டினை வலியுறுத்திக் கூறமுடியாது. மேலும், குருதியமுத்தம் தனியனின் உயரத்துடன் தொடர்பு கொண்டில்லை என்றும், எடையோடு மிதமான அளவிற்குத்தான் தொடர்ப்பாடு கொண்டுள்ளது எனவும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ஷாக் (Shock) உடற்பயிற்சிக்குப் பின்னர் ஏற்படுகின்ற குருதியமுத்தத்தைப் பற்றி ஆராய்ந்து, ஆண் பிள்ளைகளிடம் உடற்பயிற்சிக்குப் பின்னர் குருதியமுத்தம் பெண் பிள்ளைகளைவிட அதிகமாகின்றது என்றும், வயது அதிகரிப்புடன் குருதியமுத்தம் பெண்களில் அதிகரிப்பதில்லை என்றும், ஆண்களில் சுருங்கியக்க அமுத்தம் (Systolic Pressure) அதிகரிக்கின்றது என்றும் அறியப்பெற்றூர்.

செரிமான அமைப்பில் மாற்றங்கள் (Changes in Digestive System):

இளையோர் பருவத்தில் செரிமான அமைப்பிலும் மாறுதல்கள் பெருமளவில் ஏற்படுகின்றன. இவ்வாறு இரைப்பை பெரிதாகி, அதன் இயல்பிலும் மாறுதல்கள் ஏற்படுகின்றன. இதன் விளைவாக, உணவின் நாட்டம் மிகுதியாகி, பெரிதளவில் உணவு தன்மயமாக்கப்படுகின்றது (Assimilated) என்று அறிகிறோம். கலிபோர்னியா பல்கலைக்கழகத்தில் நடத்தப்பட்ட நீள்வகை ஆய்வுகள் இதனை உறுதிப்படுத்தியுள்ளன. பாலின வேறுபாடுகள் ஏதும் இவற்றில் காணப்படவில்லை.

இப்பருவத்தில் செரிமான இடையூறுகள், கோளாறுகள் ஆகிய பிரச்சினைகள், தவறான உணவு முறைகள், ஊட்டச்சத்து குன்றிய உணவை உட்கொள்ளல் போன்றவைகளால் ஏற்படுகின்றன. ஆதலால், இப்பருவத்தில் போதிய ஊட்டமுள்ள உணவை உட்கொள்ளுதல் மிகவும் இன்றியமையாததாகும். ஒரு தனியனின் உயரத்தில் ஏற்படும் வளர்ச்சியின் விளைவாக சுண்ணத்தின் (Calcium) தேவையளவு இப்பருவத்தில் பிற்காலத்தினதை விட இருமடங்காகின்றது. இவ்வாறே, முதிர்ந்த பருவத்தின் புரதத்தின் (Protein) தேவை அளவைப் போன்று மூன்று மடங்கு தேவையளவு இப்பருவத்தில் ஏற்படுகின்றது. இப்பருவத்தில் பொதுவாகத் தேவைப்படும் ஊட்டச்சத்துக்களின் அளவினைத் திட்டவட்டமாகக் கூறமுடியாது. ஏனெனில், இது ஒரு தனியனின் உயரம், எடை, தசை ஊன்மத்தின் (Muscle Tissue) பருமனளவு, ஊன்ம ஆக்கச் சிதைவு மாறுபாட்டின் விகிதம் ஆகியவற்றைப் பொறுத்திருக்கின்றது. இளையோனின் ஊட்டச்சத்துக்களின் தேவைகளைப் பொதுவாக, அவனிடமிருக்கும் உணவு வேட்கையிலிருந்தே அறியலாம்.

கழிவு உறுப்புகளின் அமைப்பில் மாற்றங்கள் (Change in Excretory System) :

இளேயோர் பருவத்தில், தோல் சுரப்பிகளின் அமைப்பிலும் இயக்கங்களிலும் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் நிகழ்கின்றன. தனியன் பாலின வளர்ச்சியடையும்போது தடித்த, கடினமான தோலினைப் பெறுகின்ருன். மனிதனிடம் மூன்றுவிதமான தோல் சுரப்பிகள் உள்ளன. அவை மெராக்ரைன் சுரப்பிகள் (Merocrine Glands), அபாக்ரைன் வியர்வைச் சுரப்பிகள் (Apocrine Sweat Glands), ஸெபேஷியஸ் சுரப்பிகள் (Sebaceous Glands) என்பன வாகும்.

மெராக்ரைன் சுரப்பிகள் உடலின் மேற்பரப்பு முழுவதும் காணப்படுகின்றன. ஆனுல் அபாக்ரைன் வியர்வைச் சுரப்பிகள் மார்பகப்பரப்பு, அக்குள்பாகம், பூப்புப்பகுதி, குதப்பகுதி (Anal Region), ஆகிய இடங்களில் உள்ளன. இவை இளேயோர் பருவத்தில் மிக விரைவாகச் செயல்படத் தொடங்குகின்றன. இவற்றின் சுரப்பு கொழுப்புத்தன்மையுடையதால் ஒருவித நாற்றத்தை வெளியிடுகின்றது. பெண்பிள்ளேகளில் மாதப்போக்கின்போது அக்குள்களில் மிகையாக வியர்ப்பது, இதன் செயலிஞல்தான் ஏற்படுகின்றது. ஸெபேஷியஸ் சுரப்பிகள், தோலுக்கு எண்ணெய்ப் பசையையளிக்கும் சுரப்பிகளாகும். பூப்பின்போது, இச்சுரப்பிகள் அமைப்பிலும் இயக்கத்திலும் வளர்ச்சியடைகின்றன. ஆனுல் இவற்றின் நாளங்கள் வளர்ச்சியுருத பழைய நிலையிலேயே இருக்கின்றன. இச்சுரப்பிகள் விரைவாகச் செயல்பட்டு அதிக அளவில் சுரக்கும்போது, அவை சரிவரக் கடத்தப்பட முடியாமையால் இந் நாளங்களில் தடைகள் ஏற்படுகின்றன. இச்சுரப்பிகள் மேலும் தொடர்ந்து சுரந்துகொண்டே செல்வதால், தடைப்பட்ட பொருள்கள் மேலே எழும்பிப் பருக்கள் (Pimples) தோன்றுகின்றன.

உடலியல் மாற்றங்கள் சார்ந்த பிரச்சினேகள் (Problems connected with physiological changes) ;

மாற்றங்களேயுடைய எந்தப் பருவமும், இடையூறுகளேயும் பிரச்சினேகளேயும் கொண்டிருப்பது இயற்கையே. இளேயோர் பருவம், இதுவரை கண்டிராத புதிய அனுபவங்களே அவனுக்குத் தோற்றுவிக்கின்றது. இப்பருவம் உயிரியல் விரைப்புக்களேயும் (Biological Tensions), உந்துக்களேயும் (Urges), ஆர்வங்களேயும் ஏற்படுத்துவதிஞல், இளேயோரின் சமூக, தனிப்பட்ட நடத்தைகள் இவைகளால் பாதிக்கப்படுகின்றன.

இளையோர் தம் வாழ்க்கையில் ஏதாவதொரு பாலின நடத்தையில் ஈடுபடவே செய்கின்றனர். பாலின முதிர்ச்சி இளையோரிடம் தோற்றுவிக்கின்ற புதிய அனுபவங்களின் முக்கியத்துவத்தை நாம் மனதிற்கொண்டு, அவர்களின் நடத்தைகளைப் புரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும். பாலின முதிர்ச்சியடைந்த தனியனிடம், பாலின உந்துக்கள் சக்தி மிகுந்து இருக்கின்றன. இவைகள் ஏற்படுத்தும் விரைப்புக்களைத் தளர்த்தக்கூடிய நடத்தையில் ஈடுபடுவதற்குச் சமூக அங்கீகரிப்புடன் கூடிய வழிகள் ஒன்றும் இல்லை. மேலும் பாலினத்தைப்பற்றிய விபரங்கள் அனைத்துமே தவருன கருத்துக்களாலும், நேரிடையான தடைகளாலும் சூழப்பட்டுள்ளன: எனினும், பாலின உந்துக்களும் ஆர்வங்களும் இளையோரிடம் இருக்கவே செய்கின்றன. இத்தகைய இடர்ப்பாடுகளிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள, இளையோன் எந்த வழியை அனுசரிப்பான் என்பது, அவன் வளர்க்கப்பட்ட விதத்தையும் அவனுடைய சூழ்நிலையில் இருக்கும் வாய்ப்புக்களையும் பொறுத்துள்ளது. ஒருசிலர் சமூக அங்கீகரிப்புடைய, மாற்று வழியில் தங்களின் உணர்ச்சிகளைத் திசை திருப்ப ஆக்கப்பூர்வமான சாதனைகளை விளைவிக்கின்றனர். சிலர், கைமுஷ்டி போன்ற செயல்களைக் கையாளுகின்றனர்; இன்னும் சிலரோ, எதிர்ப்பாலினருடன் மணத்திற்கு முந்திய பாலினத் தொடர்பினை ஏற்படுத்திக் கொள்கின்றனர்.

மேலும், உடலியல் வளர்ச்சி எல்லோருக்கும் ஒரே சம வயதில் ஏற்பட்டுவிடுவதில்லை. இவை வேறுபட்ட வயதினில் ஏற்படுவதால், சிலர் பெரும்பான்மையினரிடம் காணப்படும் வளர்ச்சியிலிருந்து முற்பட்டோ அல்லது பின்தங்கியோ இருப்பர். இந்த மாறுபாடு, அவர்களுக்குப் பிரச்சினைகளை உண்டாக்குகின்றது. இளையோர் தங்களை ஒத்த வயதினரைக் காட்டிலும் துரித உடல், உடலியல் வளர்ச்சி பெறும்போது குழுவில் அவர்களுக்கு இடர்ப்பாடான நிலை ஏற்படுகின்றது. மாருக தாமதித்த வளர்ச்சியைப் பெறும் இளையோர், தாங்கள் பிறரைவிட வளர்ச்சியில் பின்தங்கியிருப்பதை உணர்வதால், அவர்களிடம் தாழ்வு மனப்பான்மை ஏற்பட்டு மனமுறிவு உண்டாகலாம்.

இருபாலினருக்கும் தங்களின் உடலிலிருந்து வெளிப்படும் நாற்றமும், முகத்தில் தோன்றும் பருக்களும் தொந்தரவு தருவனவாக இருக்கின்றன. உடல் நாற்றத்தைப் போக்க, நறுமணப் பொருட்களை இளையோர் ஏராளமாகப் பயன்படுத்துகின்றனர். பருக்கள் தோன்றுவது உள-உலைவுகளைத் தருவதுடன், பிறரும் இவற்றைக்கண்டு இவர்களிடம் விருப்பமில்லாமல் நடந்துகொள்வது இவர்களுக்குச் சங்கடத்தை உண்டாக்குகின்றது.

லாரன்ஸ், வெர்தஸ்ஸன் (Lawrence and Werthessen) ஆகியோரும் ஹாமில்டனும் (Hamilton) இன்னும் பலரும், இளையோர் பருவத்தில் தோன்றும் பருக்கள் ஆண், பெண் பாலின ஹார்மோன் களின் சமநிலையின்மையினால் உண்டாகின்றன என்று கூறியுள்ளனர். ஜாலிப்பும், ரோஸென்பிளமும் (Joliffe and Rosenblum) முகப் பருக்களைக் குணப்படுத்துவதற்கு உணவுக் கட்டுப்பாட்டு முறை யினையும், 'பி' காம்ப்ளெக்ஸ் வைடமின்களின் உபயோகிப்பினையும் கையாண்டு பலன் கண்டுள்ளனர். பூப்பின் காலத்தில், மூக்கின் மேல் நிறைந்து காணப்படும் ஸெபேஷியஸ் எண்ணெய்ப்பசைச் சுரப்பிகள் அதிகமாகச் செயல்படுவதன் காரணத்தால் முகப் பருக்கள் ஏற்படுகின்றன என்று கிராய்லிச் குறிப்பிடுகின்றார். உடலியல் நோக்கின்வழி காணும்போது பருக்கள் தோன்றுவதும் அவற்றைக் கட்டுப்படுத்துவதும் அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த தல்ல என்று தோன்றினும் உளவியல் நோக்கில் வளரும் இளையோனுக்கு இவை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவையாகும் என்று ஷாக் தனது முடிவினைத் தெரிவித்துள்ளார்.

பெண்பிள்ளைகளுக்கு அக்குளில் மயிர் வளர்ந்து அதனால் வியர்வை அதிகமாவது அவர்களுக்குத் தொந்தரவு உண்டாக்கு வதாக இருக்கின்றது. ஆண்பிள்ளைகளுக்கு மீசையும் தாடியும் வளருவது அவற்றைச் சவரம் செய்து கொள்ள வேண்டிய தேவையையும் பிரச்சினையையும் ஏற்படுத்துகின்றது. பண்பாட்டுக் காரணிகள் உடலியல் மாற்றங்கள் சார்ந்த பிரச்சினைகளை மிகவும் தீவிரமாக்கிவிடுகின்றன. இப்பிரச்சினைகள் முதிர்ந்தவர்களின் நோக்கில் சிறியவையாகவும் முக்கியமற்றவையாகவும் காணப் படினும், போதிய உள வளர்ச்சியைப் பெற்றிராத இளையோருக்கு, இம்மாற்றங்கள் நிச்சயமாகக் கவலையைத் தருவனவாக உள்ளன. அவைகளை இளையோர் வெற்றிகரமாக எதிர்த்துத் தீர்த்துக் கொள்ளாவிடில் அவர்களின் ஆளுமை வளர்ச்சி மிகவும் பாதிக்கப் படும்.

**அதிகாரச் சுருக்கம் :**

பத்தாவது வயதின் தொடக்கத்திலேயே இருபாலினருக்கும் ஏற்படும் உடலியங்கு வளர்ச்சிகளால் இளையோர் பலவிதமான பிரச்சினைகளுக்கு ஆளாகின்றனர். இவ்வகையில் நாளமில்லாச் சுரப்பிகள் பெரும்பங்கு வகிக்கின்றன. நேதன்ஸன் இச்சுரப்பிகள் மூன்று முக்கியச் செயல்களில் ஈடுபடுவதைக் குறிப்பிடுகின்றார். மனித வளர்ச்சியில் ஏற்படும் மாறுதல்களில், இளையோர் பருவத் தில் ஏற்படும் பூப்பெய்துதலும், இனப்பெருக்க உறுப்புக்களின் முதிர்ச்சியும் மிக முக்கியத்துவம் வாய்ந்தவைகளாகும். மாதப்

போக்கு எவ்வயதில், எக்காரணிகளைப் பொருத்து ஏற்படுகின்றது என்பதைப்பற்றி பல ஆய்வுகள் நடந்தேறியுள்ளன.

பெண்களைப் போன்று, ஆண்களுக்குப் பூப்பெய்தும் வயதினை நிர்ணயிப்பது எளிதல்ல. எனினும் கிராம்ப்டனின் சில அடிப் படைத் தகுதிகளை ஈண்டு நோக்கலாம். ஆண்பிள்ளைகளுக்கு முதல் விந்து வெளிப்பாட்டில் பல்வகைக் காரணிகள் செல்வாக்குக் கொண்டுள்ளன. விந்து வெளிப்பாடு புற இயக்க முறைகளினால் துரிதப்படலாம். இதில் கைமுஷ்டிப் பழக்கம் முதற்காரணமாக இருப்பதை அறியலாம். ஆண், பெண் இருபாலினரிடத்தும் இடைநிலைபாலினத் தன்மைகள் வேறுபட்ட பலவகை நிலைகளில் ஏற்படுகின்றன.

இளையோர் பருவத்தில் சுவாதித்தல், இரத்தஓட்டம், ஜீரணத் தன்மைகள், கழிவு உறுப்புகளின் செயல்கள் ஆகியவற்றிலும் பல மாற்றங்கள் ஏற்படுகின்றன. இவ்வகையான உடலியங்கியல் மாற்றங்களின் விளைவாக, இவை சார்ந்த பல்வேறு பிரச்சினை களுக்கு இளையோர் ஆளாகின்றனர்.

இளையோர் பருவம் இதுவரை கண்டிராத புதிய அனுபவங்களை அவனுக்குத் தோற்றுவிக்கின்றது. இப்பருவம் உயிரியல் விரைப்புக் களையும், உந்துக்களையும், ஆர்வங்களையும் ஏற்படுத்துவதினால் இவர் களின் தனித்த, சமூக நடத்தைகள் பாதிக்கப்படுகின்றன. பாலின முதிர்ச்சி இளையோரிடம் தோற்றுவிக்கின்ற புதிய அனுபவங்களின் காரணமாக, இவர்கள் ஏதாவதொரு பாலின நடத்தையில் ஈடுபட விழைகின்றனர். சமூகக் கட்டுப்பாடுகள், பாலின உணர்வு பற்றிய தவறான போதனைகள் போன்றவகைகளால் இடர்ப்பாடடை கின்றனர். இவைகளினின்று தன்னை விடுவித்துக் கொள்ள, ஏத் தகைய வழியை மேற்கொள்வான் என்பது, அவன் வளர்க்கப் பட்ட முறையையும், சூழ்நிலையையும், வாய்ப்புக்களையும் பொறுத் துள்ளது.

உடலியல் வளர்ச்சியில் தனியாள் வேற்றுமைகள் காரண மாகவும் இளையோரிடத்து இடர்பாடுகள் எழுகின்றன. இரு பாலினருக்கும் தங்களின் மேனியிலிருந்து வெளிப்படும் நாற்றமும், முகத்தில் ஏற்படும் பருக்களும் கவலை தருவனவாக உள்ளன. இதனால் இவர்கள் அழகுச் சாதனங்களைப் பயன்படுத்த விரும்பு கின்றனர். முகப்பருக்கள் தோன்றக் காரணம் பற்றி பல்வேறு கருத்துக்கள் நிலவிவருகின்றன. இவ்வாறே உரோம வளர்ச்சியும் இருபாலினருக்கும் பிரச்சினைகளைத் தருகிறது. இவ்வாறான உட லியங்கு சார்ந்த வளர்ச்சிகளின்பால் எழும் பிரச்சினைகளைச் சமா ளிக்கவும், பொருத்தப்பாட்டுக் கோளாறுகளினின்று நல்லதொரு ஆளுமையைப் பெறவும் இளையோர் அறிந்து கொள்வது அவசிய மாகும்.

# 4. மனவெழுச்சியின் வளர்ச்சி

## (Emotional Development)

இளையோரைப் பற்றித் தெரிந்துகொள்வதில் அவர்கள் நினைப்பனவற்றையும் செய்வனவற்றையும் பற்றித் தெரிந்துகொள் வதைவிட அவர்கள் பெறும் உணர்ச்சிகளையும், மனவெழுச்சிகளை யும் பற்றித் தெரிந்து கொள்வது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த தாகும். எனவே அவர்கள் தங்களையும், பிறரையும் பற்றிக் கொண்டுள்ள உணர்வுகளையும் அவர்பால் எழும் சினம், அச்சம், கவலை, மகிழ்ச்சி, அன்பு போன்றவைகளையும் நாம் அறிந்துகொள் வது அவசியமாகின்றது.

**மனவெழுச்சியின் முக்கியத்துவம்:**

உணர்வற்ற மனிதன் மனிதக்கட்டை எனக் கருதப்படு கின்றான். மனிதனைக் கல்லினின்றும் மண்ணினின்றும் பிரித்துக் காட்டுவது, அவனிடம் உள்ள மனவெழுச்சித் தன்மையே ஆகும். வாழ்க்கை என்பது உணர்ச்சிகளிடையே ஏற்படும் கொந்தளிப்பும் போராட்டமும் ஆகும். உணர்ச்சிகள் இல்லாவிடில் வாழ்க்கையே இல்லை. மனிதனிடம் மனவெழுச்சி இல்லாதிருந்தால் தாய் தான் ஈன்றெடுத்த குழந்தைகளைப் பற்றிக் கவலைப்படமாட்டாள். அவளை அவளது கணவனும் மறந்து சென்றுவிடுவான், உடன் பிறந்தவர்களிடையேயும் அன்புணர்ச்சி காணப்படாது. இதன் விளைவாக, மனிதனிடம் மட்டுமன்றி, ஏனைய விலங்குகளிடமும், பறவைகளிடமும்கூட குடும்பம் எனும் வாழ்க்கை அமைப்பே காணப்படாது. குடும்பம் இல்லாதபோது பெரிய சமூக அமைப்புகள் தோன்றாது. சமயமும், பண்பாடும், கலாச்சாரமும், அரசியல் வாழ்க்கை அமைப்புகளும் தோன்றவேண்டிய அவசியம் இருக்காது. நாட்டுப்பற்று, மொழிப்பற்று, இனப்பற்று, சமயப் பற்று, நல்லொழுக்கங்களில் பற்று, அறவாழ்வில்பற்று இவை போன்ற எத்தகைய மனவெழுச்சிகளும் தோன்ற வழி இல்லை. இந்

நிலையில் வாழ்க்கை எவ்வித நோக்கமும் குறிக்கோளும் அற்றதாகி விடும். எனவே, மனவெழுச்சிகளின் வளர்ச்சி மனிதவாழ்க்கையின் மூல வேராக, மனிதர்களை ஒருங்கே இணைக்கின்ற பாலமாக அமைகின்றது. இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த உளச்செயல்களைப் பற்றி அறிவது மிகவும் இன்றியமையாததாகும்.

நம் வாழ்க்கையின் பெரும்பான்மையான செயல்கள், மனவெழுச்சிகளால் தீர்மானிக்கப்படுவனவாக உள்ளன. மனிதனின் அடிப்படை மனவெழுச்சிகளான மகிழ்ச்சி, சினம், அச்சம், அன்பு, போன்றவைகள் மனிதவாழ்க்கையின் உயிர்ச்சுவைகளாகும். மனிதனின் இயக்கங்களுக்கான உள்ளிடை ஊற்றுக்கள் மனவெழுச்சிகளே. மனிதனின் மிகச்சிறந்த சாதனைகளுக்கும், வரலாற்றில் நிகழ்ந்திருக்கும் கோரமான செயல்களுக்கும் மனவெழுச்சிகளே காரணங்களாகும். மனிதனின் மிக உன்னதப் பண்புகளும், அவனது நடத்தையிலுள்ள மிகவும் இகழத்தக்க செயல்களும் மனவெழுச்சிகளினாலேயே ஏற்படுகின்றன. அன்பு, பரிவு, இரக்கம் போன்ற மனவெழுச்சிகள் மனிதனின் முன்னேற்றத்திலும் சாதனைகளிலும் மிகச்சிறந்தவற்றைத் தோற்றுவித்துள்ளன. இதைப்போன்றே சினம், வெறுப்பு, பொறாமை போன்ற மனவெழுச்சிகள் மனித வரலாற்றில் மிக இழிவானதும், பயங்கரமானதுமான விளைவுகளைத் தோற்றுவித்துள்ளன.

நம் சிந்தனை பெரும்பாலும் மனவெழுச்சிகளால் இயக்கப்படுகின்றது: நம் புலன் காட்சியும்(Perception) எப்போதும் வெளிப்புறத் தூண்டல்களால் மட்டுமே தீர்மானிக்கப்படுவதில்லை. அவைகளும் சில வேளைகளில் நம் உள்ளுணர்ச்சிகளாலும், ஆர்வங்களாலும், வெறுப்புகளாலும் நிர்ணயிக்கப்படுகின்றன. ஆதலால், நம் நடத்தைகளை இயக்க வல்லவைகளான மனவெழுச்சிகள் முக்கியத்துவம் வாய்ந்தவையாகும்.

"இமோஷன்" (Emotion) என்ற மனவெழுச்சி எனும் பொருள்படும் ஆங்கிலச்சொல் லத்தீனின் "இமோவரே" (Emovere) என்ற சொல்லிலிருந்து மருவியதாகும். லத்தீனில் இச்சொல் "செயல்தொடங்கு" "செயலாற்று" எனப் பொருள்படும். மனவெழுச்சிகள் ஒரு தனியனிடம் செயலைத் தூண்டிவிட்டு அதன் போக்கினையும் இயக்குகின்றன. இந்தவிதத்தில் ஒரு தனியனின் நடத்தைகளுக்குச் சக்தியளிப்பதும் ஊக்கமளிப்பதும் மனவெழுச்சிகளேயாகும். ஆதலால் மனித நடத்தைகளின் ஊக்கிகளில் மனவெழுச்சிகள் முக்கியத்துவம் வாய்ந்தவையாம்.

மனவெழுச்சி என நாம் சொல்லும்போது ஒருவனின் உடல், உள்ள உணர்வுகள் முழுவதும் எழுச்சி பெற்றுச் செயல்படுகின்ற நிலையையே குறிப்பிடுகின்றோம். இத்தகைய மனவெழுச்சி நிலை தானாகத் தோன்றிவிடுவதில்லை, மாறாக, எண்ணற்ற காரணிகளால் தூண்டப்படுகின்றன. புறக்காரணிகள் மட்டுமன்றி அகக்காரணிகளும் கூட மனவெழுச்சியைத் தோற்றுவிக்க வல்ல தூண்டல்களாக இருக்கலாம். இத்தூண்டல்களின் விளைவில் எழும் மனவெழுச்சிகள் அவைகளுக்கேற்ற துலக்கங்களை ஏற்படுத்திவிட்ட பின்னரே அடங்குகின்றன.

ஒரு தனியன் மனவெழுச்சி பெறும்போது, அவனது உடல் உள்ளுறுப்புகளிலும், வெளியுறுப்புகளிலும் மாறுதல்கள் ஏற்படுகின்றன. மனவெழுச்சிக்குக் காரணமான தூண்டல்களைப் புலன் வழி அறியும்போது, தானியங்கு நரம்பு மண்டலம் (Autonomic nervous system) தூண்டப்பட்டு, அது தன்னோடு இணைந்துள்ள பல்வேறு உறுப்புகளை இயக்கி செயல்படத் தொடங்குகின்றது. இதன் விளைவாகச் செரிமானம் குறைதல், விரைவாக உயிர்த்தல், மயிர்க்கூச்செறிதல், குருதியழுத்தமும் நாடித் துடிப்பும் அதிகரித்தல் போன்ற எண்ணற்ற உடலியல் மாறுதல்கள் ஏற்படுகின்றன. ஒரு தனியன் உணர்ச்சியடையும்போது கல்லீரலில் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் சர்க்கரைச் சத்து திடீரென வெளியிடப்படுவதால், அவன் தான் செய்யவேண்டிய அசாதாரணமான உடற் செயல்களுக்கான சக்தியை அடையப் பெறுகின்றான்,

**தானியங்கு நரம்பு மண்டலம் (Autonomic nervous system);**

தானியங்கு நரம்பு மண்டலம் மத்திய நரம்பு மண்டலத்தின் ஒரு பிரிவேயாகும். இது மனவெழுச்சிக் கொந்தளிப்பு ஏற்படும் போது செயல்படத் தொடங்குகின்றது. இது தானே செயல்படும் தன்மையுடையது. இது பெருமூளைப் புறணியின் கட்டுப்பாட்டில்லாமல் முகுளம், ஹைபோ தலாமஸ்(Hypo-thalamus) போன்ற மூளைப் பிரிவுகளின் கட்டுப்பாட்டிலுள்ளது. இந்த நரம்பு மண்டலம் செரிமானம், இதயத்துடிப்பு, உயிர்த்தல், வியர்த்தல் போன்ற செயல்களைக் கட்டுப்படுத்துகின்றது. இத்தகைய செயல்கள் நாம் தூங்கும்பொழுதும் நடைபெறுகின்றன. மத்திய நரம்பு மண்டலம் எலும்புக்கூட்டுடன் இணைந்த தசைகளைக்கட்டுப் படுத்துகின்றது. இத்தசைகள்தான் இச்சைச் செயல்களில் ஈடுபடுகின்றன.

தானியங்கு நரம்பு மண்டலத்தை அதன் இயக்கத்தின் அடிப்படையில் இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை எதிர்ப் பரிவு

நரம்பு மண்டலம் (Para-sympathetic system), பரிவு நரம்பு மண்டலம் (Sympathetic system) என்பனவாகும், இவ்விரண்டும்உடலின் உள் உறுப்புக்களுடனும், சுரப்பிகளுடனும் இணைந்துள்ளன. எதிர்ப் பரிவு நரம்பு மண்டலம் உடலின் ஆரோக்கியத்திற்குத் தேவையான செயல்களைக் கட்டுப்படுத்தவும், சரிசெய்யவும் உதவுகின்றது. ஊட்டச் சத்துக்களைப் பெறல், அவற்றை எரிபொருள்களாக்குதல், பாலினச் செயல்களின் வளர்ச்சியை ஊக்குவித்தல் போன்ற வேலைகளை இப்பிரிவு கட்டுப்படுத்துகின்றது. இப்பிரிவின் இயக்கங்கள், தனியன் சாதாரண நிலையில் இருக்கும்போது செயல்படுகின்றன. ஆனால் பரிவு நரம்பு மண்டலம், தனியன் நெருக்கடியான நிலையில் இருக்கும்போது செயல்படத் தொடங்குகின்றது. நெருக்கடி காலத்திற்குத் தேவைப்படும் அதிகப்படியான சக்தி, இப்பிரிவின் செயலால்தான் கிடைக்கின்றது. இந்த நரம்பு மண்டலம் செயல்படத் தொடங்கும்போது எதிர்ப் பரிவு நரம்பு மண்டலத்தால் கட்டுப்படுத்தப்படும் சில உயிரியல் செயற்பாங்குகள் தடைப்பட்டு விடுகின்றன. அதாவது இரண்டாவது வகை மண்டலம் செயல்படும்போது முதல்வகை மண்டலத்தின் வேலைகள் தடைப்படுகின்றன. இதற்குக் காரணம், இவை இரண்டும் எதிரிடையான செயல்களை ஊக்குவிப்பதுதான். தனியன் நெருக்கடியான சூழ்நிலையிலிருக்கும்போது அவன் அச்சூழ்நிலையைக் கடக்கவேண்டிய செயல்களை மேற்கொள்வதே, செரித்தல் போன்ற உடலியல் செயல்களைவிட முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

மத்திய நரம்பு மண்டலமும், தானியங்கு நரம்பு மண்டலமும் மனவெழுச்சியின்போது செயல்படுவனவாகக் காணப்படுகின்றன. மத்திய நரம்பு மண்டலம் எலும்புக் கூட்டுடன் இணைந்த தசைகளைக் கட்டுப்படுத்துகின்ற செயல்களைச் செய்கின்றது. எனவே, தசைகள் விரைத்தல், உடல் நடுங்குதல் போன்ற செயல்கள் ஏற்படுவதற்கு, மத்திய நரம்பு மண்டலமே காரணமாகும்.

**மனவெழுச்சியின்போது உடல் மாற்றங்கள் :**

மனவெழுச்சிகள் ஏற்படும் சூழ்நிலையில் அளவைக் கருவிகள் வாயிலாகப் பதிவு செய்யப்படுவனவற்றின் மூலம், மனவெழுச்சிகளோடு பலவகையான உடலியல் மாற்றங்கள் ஏற்படுகின்றன என்பதை அறியலாம். இம்மாற்றங்கள் தானியங்கு நரம்பு மண்டலத்தின் செயலாலும், நாளமில்லாச் சுரப்பி (Endocrin glands) களாலும் விளைகின்றன.

1. முகபாவனையில் மாற்றங்கள் (Changes in facial expression) :

மனவெழுச்சி ஏற்படும்போது கண், மூக்கு, உதடு, நெற்றி ஆகிய முக உறுப்புகளின் தசைகளில் பலவிதச் சுருக்கங்கள்

ஏற்பட்டு முகபாவனை மாறுகின்றது. மனவெழுச்சியின்போது கண்ணிலுள்ள கண்மணி அகல விரிந்து, கண்ணுக்குள் செல்லும் ஒளியின் அளவை அதிகப்படுத்துகின்றது. பெரும்பாலான மன வெழுச்சிகளை அவைகளின் தனிப்பட்ட முகபாவனைகளின் மூலம் ஊகிப்பது எளிதல்ல.

2. குரல் வெளிப்பாட்டில் மாற்றம் (Changes in vocal expression) :

மனவெழுச்சியின்போது குரலும் பாதிக்கப்படுகின்றது. உணர்ச்சி வசப்பட்டுக் கத்தும்போது குரல் உரத்தும், அதிக அளவு செறிவிலும் ஒலிக்கின்றது. ஆனால் அச்சமேற்படும்போது குரல் அடித் தொண்டைக்குள் மூழ்கிக் குறைந்து ஒலிக்கின்றது.

3. குருதி அழுத்தத்திலும் பருமன் அளவிலும் மாற்றங்கள் (Changes in blood pressure and volume) :

மனவெழுச்சி மிகுந்துவிடுகையில், குருதி அழுத்தம் மிகவும் அதிகரித்துவிடுகின்றது. எனவே குருதி அழுத்த நோயாளிகளுக்கு மனவெழுச்சி மிகுந்த அனுபவங்கள் ஏற்படக்கூடாதென்று அறிவுரை கூறப்படுகின்றது. குருதி அழுத்தமானது, குருதி அழுத்தமானியைக் (Sphygmomanometer) கொண்டு அளவிடப்படு கின்றது. மனவெழுச்சியின்போது உட்கிடப்புறுப்புகளின் தமனி களிலிருந்து (Visceral Arteries) உடலின் மேற்பரப்பிலுள்ள தமனி களுக்குக் (Surface Arteries) குருதி அனுப்பப்படுவதால் மேற் பரப்புத் தமனிகளில் குருதியின் பருமனளவு அதிகரித்தும் உட் கிடப்புறுப்புகளின் தமனிகளில் அது குறைந்தும் காணப்படு கின்றது.

இதயத்துடிப்பின், நாடித்துடிப்பின் வீதத்தில் மாற்றங்கள் (Changes in heart and pulse rate) :

மனவெழுச்சியின் போது இதயம் வேகமாகத் துடிக்கத் தொடங்குகின்றது. உணர்ச்சியூக்கத்தின் போது நாடித்துடிப்பு குறைந்துவிடுகிறது என்பது சோதனைகள் வழி தெரிய வருகிறது. நாடித்துடிப்பில் ஏற்படும் மாற்றத்தை நாடித்துடிப்பு மானி (Sphygmograph) மூலம் அளவிடலாம்.

உயிர்த்தலில் மாற்றங்கள் (Changes in Respiration) :

மனவெழுச்சியின்போது உயிர்த்தலின் வீதத்திலும் வீச்சிலும் மாற்றங்கள் ஏற்படுகின்றன. மனவெழுச்சிகள் ஒழுங்கற்ற, துரிதமான உயிர்த்தலை உண்டாக்குகின்றன. உயிர்த்தலின் மாற் றங்களை உயிர்ப்புவரைவியைக் (Pneumograph) கொண்டு அள விடலாம்.

செரிமான உறுப்புகளில் மாற்றங்கள் (Changes in Digestive Tract) :

மனவெழுச்சி அடையும்போது தனியனின் உமிழ்நீர் சுரப்புக் குறைவதால், வாய் விரைவில் உலர்ந்துவிடுகின்றது என்று சோதனைகள் உறுதிப்படுத்தியுள்ளன. அழுத்தமிக்க மனவெழுச்சி களால் குடலின் செயல்கள் பாதிக்கப்படுகின்றன. செரிமானத் திற்குத் துணையாயிருக்கும் சுரப்புகள் (Gastric Secretions) குறைந்துவிடுவதால், செரிமானம் பாதிக்கப்பட்டோ முற்றிலும் தடை செய்யப்பட்டோ விடுகின்றது. இதனால் உணர்ச்சியூக்கத்தின் விளைவாக வாந்தியும், வயிற்றுப்போக்கும் சில வேளைகளில் ஏற் படலாம். மனவெழுச்சிகளைத் தொடர்ந்து மிகையாக அனுபவிக்க நேர்ந்தால், அதன் விளைவாக வயிற்றுப் புண்கள் (Stomach Ulcers) ஏற்படலாம்.

தசைகளின் விரைப்பும் நடுக்கமும் (Muscle Tension and Tremor) :

தசைகளின் விரைப்பு மனவெழுச்சியின் ஓர் அறிகுறியாகும். மனவெழுச்சி அடையும்போது எதிரிடையான தசைகள் ஒரே சமயத்தில் சுருங்க நேர்ந்தால் நடுக்கம் உண்டாகின்றது.

மயிர்க்கூச்செரிதல் (Pilomotor Response) :

மனவெழுச்சியின்போது ஏற்படும் புல்லரிப்பு உணர்ச்சியின் காரணமாகத், தோலின் மேலுள்ள மயிர்கள் குத்திட்டு நிற் கின்றன (Goose Pimples).

குருதியின் பகுதிப் பொருள்களில் மாற்றங்கள் (Changes in Blood Composition) :

மனவெழுச்சியின்போது எண்டோக்ரின் சுரப்பிகள் அதிக மாகச் செயல்பட்டு அவற்றின் சுரப்புகள் குருதி ஓட்டத்துடன் கலப்பதால், குருதியின் பகுதிப் பொருள்களின் தன்மையில் மாற்றம் நிகழ்கின்றது. குருதியின் சர்க்கரை அளவும், ஆட்ரினலின் (Adrenalin) அளவும் மாறுபடுகின்றன.

தோலின் மின்தடைச் செயல் (Galvanic Skin Response) :

மனவெழுச்சியின்போது வியர்வைச் சுரப்பிகள் அதிகமாகச் சுரந்து தோலின் மேற்பாகத்தில் வியர்வையினை உண்டாக்கு கின்றன. இந்த வியர்வை தோலின் மின்தடையைக் குறைத்து விடுகின்றது. இந்த மாற்றத்தை உள மின்னோட்டமானி (Psychogal Vanometer) மூலம் அளவிடலாம்.

**மூளையின் மின் அலைகள் (Brain Waves):**

மனவெழுச்சியின்போது மூளையிலிருந்து வெளிப்படும் அலைகளில் மாற்றங்கள் ஏற்படுகின்றன. சாதாரணமாக இந்த அலைகள் ஒரு விநாடிக்கு 8 முதல் 12 வரையுள்ள அலைவெண்களைக் கொண்ட ஆல்பா அலைகளாக (Alpha waves) உள்ளன. ஆனால் மனவெழுச்சி தோன்றும்போது, இந்த மின் அலைகள் 8க்கும் குறைந்த அலைவெண்களைக் கொண்ட டெல்டா அலைகளாக (Delta waves) மாறுகின்றன.

மேற் குறிப்பிட்ட உடலியல் மாற்றங்கள், ஒன்றோடொன்று தொடர்பு கொண்டு, பொருந்தியமைந்து, ஓர் உயிரியைச் செயலுக்காக ஆயத்தமாக்குவதால், கானன் (Cannon) என்பார் அவைகளை நெருக்கடி எதிர்வினைகள் (Emergency Reactions) எனக் குறிப்பிட்டுள்ளார். எனவே அழுத்தமிக்க மனவெழுச்சிக் கிளர்ச்சிகளை, ஒரு நெருக்கடி நிலையினை ஓர் உயிரி எதிர்த்து வெல்ல உதவும் எதிர் வினைகள் என்று இவர் பொருள்படுத்துகின்றார். முதலில் தனித்தும், தொடர்பற்றும் காணப்படும் இந்த எதிர் வினைகள், மனவெழுச்சியின்போது ஒரு பொதுவான நோக்கத்தின் பால் செயல்படும், ஒருங்கேயமைந்த எதிர்வினைகளாக இருக்க அவர் கண்டார்.

இந்தப் பலவிதப்பட்ட மனவெழுச்சித் தோற்றங்களின் மூலம் தான் பொய்யையும் குற்றத்தையும் கண்டுபிடிக்கும் முயற்சி மேற் கொள்ளப்படுகின்றது. பொய்காட்டியானது (Deceptograph orlie - Detector) உண்மையில், உள்ளத்தைப் பகுத்தறியும் புதிர்க் கருவியல்ல. மாறாக, அது கேள்வி கேட்கப்படும்போது சோதிக்கப் படுபவரின் உட்கிடப்புறுப்புகளில் ஏற்படும் பல்வேறு மனவெழுச்சித் துலங்கல்களின் அளவைப் பதிவு செய்யும் சில கருவிகளின் ஒரு கூட்டு அமைப்பேயாகும். பொய்காட்டியானது நேர்முகமாகப் பொய்யைச் சுட்டிக்காட்டிவிடுவதில்லை. ஆனால் அது பொய்யைக் குறிப்பாகத்தான் காட்டுகின்றது. குற்றத்தோடு தொடர்புள்ள கேள்விகள் கேட்கப்படும்போது ஏற்படும் மனவெழுச்சி எதிர் வினைகளை அளவிட அது பயன்படுகின்றது. அச்சமயத்தில் சோதிக்கப்படுபவரின் உயிர்த்தலில், குருதியழுத்தத்தில், தோலின் மின்தடைச் செயலில் ஏற்படும் மாற்றங்களை வரைபடங்கள் மூலம் இக்கருவி பதிவு செய்கின்றது. இதனால், இது "பல் வரைவி" (Polygraph) என்றும் குறிப்பிடப்படுகின்றது.

பொய்காட்டியானது உயிர்ப்புவரைவி (Pneumograph), குருதியழுத்தமானி (Sphygmomano Meter), உளமின்னோட்டமானி

(Psycho galvanometer) ஆகிய மூன்று கருவிகளைத் தன்னுள் ஒருங்கே கொண்ட ஒரு அமைப்பாகும். குற்றத்தோடு தொடர்பு கொண்ட கேள்விகள் (Check Questions) கேட்கப்படும்போது குற்றம் சாட்டப்படுபவன் அவைகளுக்கான பதில்களைத் தரும், பொழுது, அவனது குருதியழுத்தம், உயிர்த்தல், தோலின் மின் தடைச்செயல் ஆகியவற்றில் முன்பு காணப்படாத திடீர் மாற்றங்கள் நிகழ்ந்தும், குற்றத்தோடு தொடர்பில்லாத கேள்விகள் (Control Questions) கேட்கப்படும்போது அத்தகைய மாற்றங்கள் நிகழாதும் காணப்பட்டால், அவனைக் குற்றவாளி என்று ஊகிக்கலாம். குற்றமறியாதவன் குற்றத்தைப்பற்றி ஏதும் அறியாதிருப்பதால் குற்றத்தோடு தொடர்புள்ள கேள்விகளுக்கும் தொடர்பில்லாத கேள்விகளுக்கும் வேறுபாடில்லாத துலங்கல்கள் அவனிடம் காணப்படவேண்டும் என்று எதிர் பார்க்கப்படுகின்றது. மனவெழுச்சி எதிர்வினைகள் தோன்றுமா தோன்றாதா என்பது, கேட்கப்படும் கேள்விகளையும் அவற்றிலிருந்து சோதிக்கப் படுபவன் கொள்ளும் பொருளையும் பொறுத்துள்ளது. அக்கேள்விகளுக்கு அவன் தரும் பதிலின் உண்மையையோ பொய்யையோ அது பொறுத்தில்லை. அவன் தானே செய்தான் என்று ஒப்புக் கொண்டால் பொய்காட்டி தேவையற்றுவிடுகின்றது. சொல் சார்ந்த, உடல் சார்ந்த எதிர்வினைகள்; மனவெழுச்சிச் சிக்கல்களைக் கண்டறிவதற்குச் சிறப்பாக மருத்துவ உளவியலிலும் (Clinical Psychology), உளமருத்துவத்திலும் (Psychiatry) வெகுவாகப் பயன் படுத்தப்படுகின்றன.

**வயதுடன் மனவெழுச்சியில் ஏற்படும் மாறுதல்கள் :**

அக உறுப்புகளில் ஏற்படும் உடலியல் மாறுதல்கள் எவ் வகையான மனவெழுச்சியிலும் ஒரே மாதிரியான தன்மைகளைக் கொண்டுள்ளன. ஆனால் வயது அதிகரிக்க அதிகரிக்க மனவெழுச்சிகளைத் தோற்றுவிக்கின்ற தூண்டல்களும், சூழ்நிலைகளும், அவற்றிற்கான துலங்கல்களும், வெளிப்பாடுகளும் மாற்றமடைகின்றன. தனியன் வெவ்வேறு வயதில் வெவ்வேறு பொருட்களின் பால் அச்சத்தையும், சினத்தையும், மகிழ்ச்சியையும் பெறுகின்றான். இதற்கேற்ப, மனவெழுச்சியின் துலங்கல்களிலும், வெளிப்பாடுகளிலும் வயதுடன் நிகழும் குறிப்பிடத்தக்க மாறுதலானது வயது ஆக ஆக, தனியன் தன் புறவெளிப்பாடுகளைக் கட்டுப் படுத்தி, அவற்றை வெகுவாக மறைத்துக்கொள்ளும் திறமையைப் பெறுவதாகும்.

இளையோர் பருவத்தில், மனவெழுச்சிகளைத் தருகின்ற சூழ்நிலைகள் பல்வேறு வகைப்பட்டதாய்க் காணப்படுகின்றன.

இளையோர் ஈடுபடும் எந்தச் செயலிலும் மனவெழுச்சி தலை தூக்குகின்றது. இளையோரின் நோக்கங்கள் நிறைவேறியபோதும் அல்லது தடை செய்யப்படும்போதும், அவர்கள் துன்புறுத்தப் படும்போதும், தங்களின் எதிர்பார்ப்புகள் பாதிக்கப்படும் போதும் தங்களின் திறமைச் சக்திகளையும், அவற்றின் குறைபாடுகளையும் பற்றித் தெரியவரும் போதும் மனவெழுச்சிகள் எழலாம். சுருங்கக் கூறின், அவர்கள் தங்களைப் பற்றிக் கொண்டுள்ள கருத்துக் களுடன் மாறுபட்டு, முரண்பட்டு நிகழும் எந்த நிகழ்ச்சியும் அவர்களிடம் மனவெழுச்சிகளைத் தோற்றுவிக்கலாம்.

ஒரு தனியன் இளையோர் பருவத்தை எய்தும்போது எண்ணற்ற அனுபவங்களையும், பிரச்சினைகளைத் தாங்கிக் கொள்கின்ற திறமை களையும் பெற்றுவிடுகின்றான். இளையோர் தங்கள் உணர்ச்சிகளை அடிக்கடி வெளிக்காட்டக்கூடாது எனச் சிறுவயதில் நினைவுறுத்தப் படுகின்றனர். எனவே, சிறுவயதில் வெளிப்படையாகத் தன் உணர்ச்சிகளைக் கொட்டியவன் இப்போது தன் மனவெழுச்சிகளை மறைத்துக்கொள்ளக் கற்றுக்கொள்கின்றான். இதனால், அவனது மனவெழுச்சிகளைப் பற்றி அறிந்துகொள்ள முற்படும் நாம், அவன் வெளிப்படையாக வெளியிடுபவைகளை மட்டுமன்றி, அவனுக்குள் மறைத்துக் கொள்ளும் மனவெழுச்சிகளையும் தெரிந்து கொள்ளவேண்டியவர்களாக இருக்கின்றோம். அப்போதுதான் நாம் அவனது மனவெழுச்சிகளை முற்றிலும் அறிந்துகொள்ள இயலும்.

இளையோர் பருவத்தைப்பற்றி ஆய்ந்தவர்கள் அனைவரும் அது ஒரு மிகுந்த மனவெழுச்சிப் பருவம் (Heightened Emotions) என்பதை ஒப்புக்கொள்கின்றனர். இத்தகைய மிகையான மன வெழுச்சிகள் எழுவதற்கு உடல் மாற்றங்களும் சுரப்பிகளின் இயக்க மாற்றங்களுமின்றி, சமூக நிகழ்ச்சிகளே முக்கியக் காரணங் களாயுள்ளன. இளையோரிடம் காணப்படும் இந்தத் தீவிரமான மனவெழுச்சிகள் அவர்களிடத்து ஏற்படும் பாதுகாப்பற்ற, நிலை யற்ற, உணர்வுகளால் உண்டாகின்றன. இவ்வுணர்வுகள் தனித்த காரணிகள் பலவற்றால் விளைகின்றன. அக்காரணிகள் சிலவற்றை இங்கு காண்போம்.

இளையோர் தம் பழைய பழக்க வழக்கங்களையும், செயல்களை யம் ]அகற்றிவிட்டுப் புதியவற்றை மேற்கொள்ளவேண்டிய அவசிய மேற்படுவதால், இப்பருவத்தில் அவர்களுக்கு மிகையான மன வெழுச்சிகள் ஏற்படுகின்றன. சிறு வயதில் கற்றுப் பழக்கப்பட்டு விட்ட நடத்தைகளை மாற்றிக்கொள்வது எளிதல்ல. அடிக்கடி

தன் நடத்தைகளை மாற்றிக்கொள்ள வேண்டிய நிலையும், கைவந்த பழக்கத்தை விட்டுவிட முடியாத நிலையும், இளையோர் பருவத்தில் மனவெழுச்சி சார்ந்த பிரச்சினைகளை ஏற்படுத்துகின்றன; சான்ருக, சோதனைக்குட்படுவோர் சோதனையின் சூழ்நிலையுடன் தங்களைப் பொருத்திக் கொள்ளும்வரை மனக்கிளர்ச்சியடைகின்றனர் என்றும், அந்தச் சூழ்நிலையுடன் தங்களைப் பொருத்திக்கொண்டவுடன், அவர்களின் மனவெழுச்சிகள் அனைத்தும் மறைந்துவிடுகின்றன என்றும் தெரிய வருகின்றது. இவ்வாறே, பழைய பழக்கத்திலிருந்து புதியதும் முதிர்ந்ததுமான பழக்கத்திற்கு மாறுகின்ற காலத்தில் இளையோர் மனவெழுச்சிகளால் கலக்கமடைகின்றனர். இந்த மாற்றத்திற்குப் பிறகு தங்களைப் புதிய பழக்கத்தில் நிலைநிறுத்திக்கொண்ட பின்னர் அவர்களின் மனவெழுச்சிகள் மறைந்துவிடுகின்றன,

### மனவெழுச்சிக்கான முற்சாதகமான காரணங்கள் (Predisposing Causes of Emotionality) :

**1. சாதகமற்ற குடும்ப உறவுகள் :-**

குடும்பத்தில் பெற்றோர்களின் அன்புடன் வளர்கின்ற பிள்ளைகள் பாதுகாப்பு உணர்ச்சி மிக்கவர்களாய், இளையோர் பருவத்தில் தோன்றுகின்ற எந்தவிதக் கொந்தளிப்புகளையும் அழுத்தங்களையும் எதிர்த்துச் சமாளிக்கின்ற திறனையும் சக்தியையும் பெற்றிருப்பர். ஆனால் பெரும்பான்மையான இளையோர் தம் பெற்றோர்களுடன் சாதகமற்ற உறவுகளைக் கொண்டிருப்பதனால் உளப் போராட்டங்களுக்குள்ளாகின்றனர். இவர்களில் பலர் தங்கள் பெற்றோர்களும், குடும்பத்தினரும், நண்பர்களும் தங்களைச் சரிவரப் புரிந்துகொள்வதில்லை அல்லது நன்ருக நடத்துவதில்லை என்ற மனப்பான்மை கொண்டிருப்பர். இவற்றைப் பற்றி அவர்கள் அதிகமாக நினைக்கும்பொழுது, உணர்ச்சிவயப்படுகின்றனர். இப்போது, இவர்கள் பெற்றோர்களின் கண்டிப்பான மேற்பார்வையை விரும்பாது அவர்களை எதிர்க்கத் தொடங்குகின்றனர். மேலும், இவர்கள் மனவெழுச்சி வெளிப்பாடுகளைக் கட்டுப்படுத்துகின்ற பயிற்சிகளையும் பழக்கங்களையும் பெருதிருப்பதனால் அதிக அளவில் மனவெழுச்சிகளுக்குள்ளாகின்றனர்.

**2. விரும்பியதைச் செய்வதற்கு எதிரான தடைகள் :**

இளையோர் பருவத்தில் தனியன் தான் விரும்பியவாறு செலவு செய்ய இடம் தராத பொருளாதார நிலையைப் பற்றி மிகவும் கவலைப்படுகின்ருன். இளையோர் தங்களின் உடைகளுக்கும், பொழுது போக்குத் தேவைகளுக்கும் வேண்டிய கைச்செலவுக்கான

பணத்தைப் பெற விரும்புகின்றனர். ஆனால் அவர்கள் வாழ்க்கையின் பொருளாதாரப் பற்றுக்குறையால், அதனைப் பெற முடியாத நிலையில், தங்கள் சம வயதினருடன் பொருந்தி நடப்பதில் சிரமம் காண்கின்றனர். எனவே தங்களைவிட அதிகமாகப் பணம் வைத்திருக்கும் பிறரைக் காணும்போதும் அல்லது அதைப்பற்றி நினைக்கும்போதும் இவர்களுக்குத் தாழ்வு மனப்பான்மையும், ஏக்கமும் ஏற்பட்டு, அமைதி குலைந்து, கலக்கமடைகின்றனர். இவர்கள் தம் பொருளாதாரத் தேவைகளுக்குப் பெற்றோர்களை நாடியிருப்பதும் பெற்றோர்களின் பல தடைகளும், பாலின ஆர்வங்களைத் திருப்தி செய்வதற்கு இடையூறாக உள்ளன. வலிமை மிகுந்த பாலின உந்தானது (Sex Drive) குலைக்கப்படும்போது, மனவெழுச்சி விரைப்புகள் தோன்றுகின்றன. சமூக அங்கீகரிப்புள்ள முறைகளில் இவைகளைச் செலுத்தப் போதுமான மாற்று வழிகள் இல்லாத நிலையில், இவை ஆளுமையை மிகவும் பாதிக்கும்.

3. முதிர்ச்சி அடைந்த நடத்தைகளைச் சமூகம் எதிர்பார்த்தல் .

ஒரு தனியன், உடல் வளர்ச்சியை அடைந்ததும் அவனைச் சார்ந்த சமூகமும் குழுவும் அவனுக்குப் புதிதாக வரப்பெற்றுள்ள முதிர்ச்சிக்கேற்பப் பெரியவனாய் அவன் நடந்துகொள்ளவேண்டும் என எதிர்பார்க்கின்றது. இந்நிலையில்தான் எண்ணற்ற தொந்தரவுகளும் பிரச்சினைகளும் இளையோர்களிடம் தலைதூக்குகின்றன என உளவியலாரும், கல்வி நிபுணர்களும் கருதுகின்றனர். ஒரு சமூகத்தின் பண்பாடும், பொருளாதார, கல்வி சார்ந்த நிலைகளுமே இங்ஙனம் இளையோர் பருவத்தினரிடையே சிக்கல்களைத் தோற்றுவிக்கின்றன எனத் தெரிகின்றது. ஒரு தனியன் இதைச் செய்யவேண்டும், அதைச் செய்யக்கூடாது என்பதான கட்டுப்பாடுகளைச் சமூகம் ஏற்படுத்துவதற்குப் பதிலாக, இளையோனிடம் அவனைப் பற்றிய தகுதியுணர்வை உண்டாக்கி, தன் தொழிலிலும் சமூக விஷயங்களிலும் தன்னுடைய திறமைகளுக்கும் தேவைகளுக்கும் ஏற்றவாறு அவனது ஆர்வவிருப்பத்தின்படி நிலையைத் (Level of Aspiration) தன்னிடம் ஏற்படுத்திக்கொள்ள துணையாயிருக்கவேண்டும்.

4. எதிர்பாலினருடன் கொண்டிருக்கும் சமூகப் பொருத்தப்பாடுகள் :

ஒருவனுக்குத் தன் குடும்பத்தில் உடன்பிறந்தோர் இருக்கையில், அவர்களின் உறவின் பழக்கம், ஒரு தனியன் எதிர்பாலினருடன் பழகுவதற்கு ஓரளவிற்குச் சாதகமாக அமையும். ஆனால், அத்தகைய சூழ்நிலை இல்லாதிருக்கையில், இளையோர் பருவத்தில் எழுகின்ற எதிர்பாலினருடன் நெருங்கிப் பழகவேண்டும் எனும் ஆர்வத்தின் விளைவால். இளையோர், எதிர்பாலினருடன் பொருந்

திச் செல்லும் நடத்தையில் சிரமத்தைக் காண்கின்றனர். மேலும் எதிர்பாலினருடன் பழகவேண்டும் என்ற ஆர்வத்தின் காரணமாக என்ன பேசுவது, எப்படிப் பேசுவது, ஒருசில • சூழ்நிலையில் எப்படி நடந்து கொள்வது போன்றவைகளைத் தெரியாது தவிக்கும் போதும், இளையோர் மனவெழுச்சி சார்ந்த பிரச்சினைகளைக் காண்கின்றனர்.

5. பள்ளி சார்ந்த பிரச்சினைகள் :

துவக்கப் பள்ளியின் படிப்பில் கடினத்தைக் காணாத தனியர், பின்னர் உயர்நிலைப்பள்ளி வாழ்க்கையிலும் கல்லூரி வாழ்க்கையிலும் சிலவேளைகளில் மிகுந்த சிரமத்தைக் காண்கின்றனர். இதற்கான ஒரு காரணம், அவர்கள் பிற்காலப் பள்ளி, கல்லூரி வாழ்க்கைகளுக்குத் தேவையானவற்றை வளர்த்துக்கொள்ள முயற்சிக்காதது ஆகும். இரண்டாவதாக, உயர்நிலைப்பள்ளிக் கல்வியானது நினைவைவிட (Memory) சிந்தனையைப் பெரும்பாலும் அடிப்படையாகக் கொண்டிருப்பதால் நினைவைச் சார்ந்திருக்கும் கல்வியில் நன்கு தேர்ச்சியடைந்தவர்கள் சிந்தனையை அடிப்படையாகக் கொண்ட பிற்கால கல்விப் பணிகளில் நன்கு தேர்ச்சி பெற முடிவதில்லை. பள்ளியில் ஏற்படும் இந்த அனுபவங்களினால், இளையோன் மிகவும் தளர்ச்சியடைகின்றான். இந்த உணர்ச்சிக் குழப்பத்தின் காரணமாக இளையோன், சில வேளைகளில் பள்ளியிலிருந்து நின்றுவிட, அல்லது வீட்டைவிட்டு வெளியேறிவிட நேரிடுகின்றது. இந்த உணர்ச்சி தீவிரமாக இருக்கும் தருணத்தில் தற்கொலை செய்துகொள்ளவும் ஆயத்தமாகி விடுகின்றான்.

6. தொழில் சார்ந்த பிரச்சினைகள் :

பள்ளிப்படிப்பு முடிந்த பின்னர், என்ன செய்வது, தங்களுக்கு வேலை கிடைக்குமா, தங்களுக்கு விருப்பமான வேலையினை எப்படிப் பெறுவது, குடும்பத்தினர் வற்புறுத்தும் தொழில் தங்களுக்குப் பிடித்தமில்லையெனில் எப்படித் தட்டிக் கழிப்பது, கவலையற்று வாழ்ந்த கல்லூரிப் படிப்பு வாழ்க்கையினை விட்டு விட்டுப் போட்டியும், பொறாமையும், பிரச்சினையும் நிறைந்த உலகில் எவ்வாறு புகுவது போன்றவைகள் அவனுக்குப் பிரச்சினைகளைத் தோற்றுவிக்கின்றன. இத்தகைய எதிர்காலத்தைப் பற்றிய சிந்தனை அதிகரிக்க, அதிகரிக்க அப்பிரச்சினைகளும் தீவிரமாகின்றன. மேலும், தனியன் தான் முன்னேறி, ஒரு தொழிலை மேற்கொண்டே தன்னையும் தன்னைச் சார்ந்த குடும்பத்தினரையும் காப்பாற்றவேண்டுமென்ற நிலையிலிருந்தால், மனவெழுச்சிகளின் விரைப்புகள் தீவிரமாகி, அவன் கலக்கம் அடைகின்றான்.

7. சமயம் சார்ந்த ஐயங்கள் :

குழந்தைப் பருவத்திலும் இளம் வயதிலும் பெரும்பாலும் எல்லோருமே தம் தாய் தந்தையரின் பயிற்சிக் கேற்றவாறு, அவர்கள் காட்டுகின்ற நம்பிக்கைகளை ஏற்றுச் செயல்படுகின்ற னர். ஆனால் அவர்கள் பள்ளி வாழ்விலும் கல்லூரி வாழ்விலும் கற்றவைகள், தங்களின் சிறுவயது நம்பிக்கைகளோடு முரண் பட்டிருப்பதைக் காண நேரிடின், இளையோர் தங்களின் நம்பிக்கை களைப் பற்றி ஐயுறுகின்றனர். இதற்குப் பின்னர், அவர்கள் அந்த நம்பிக்கைகளைத் தொடர்ந்து வைத்திருக்கவும் முடியாது, ஆனால் அதே நேரத்தில் தாய், தந்தையர் மனம் வருந்துவர் என்பதால் அவற்றை விட்டுவிடவும் முடியாது இருதலைக்கொல்லி யெனத் தவிப்பர். ஒருவன் இளம் வயதில் எந்த அளவிற்குச் சமயப்பற்றுள்ளவனாக வளர்ந்தானோ, அந்த அளவிற்கு இளையோர் பருவத்தில் பிரச்சினைகளை அடைவான்.

இளையோரின் நீடித்த மனநிலை (Adolescent Moodiness) :

நீடித்துக் காணப்படும் மனவெழுச்சிகளை நீடித்த மனநிலை (Mood) எனக் குறிப்பிடுகின்றோம். தன்னிடம் தோன்றுகின்ற மனவெழுச்சிகளை உடனே, வெளியில் காட்டக் கூடாது என எண்ணும் தனியன், சூழ்நிலையையும் சமூகத் தன்மையையும் கருதி மனதிற்குள் பொங்குகின்ற மனவெழுச்சிகளைச் சட்டென்று வெளிப்படுத்தாது, அவற்றைத் தனக்குள் புதைத்துக் கட்டுப் படுத்தி வைப்பதினால், அந்த மனவெழுச்சிகள் வெளிப்படும் வரை அவன் நீடித்த மனநிலையிலேயே காணப்படுவான்.

இங்ஙனம் இளையோர் எந்த அளவிற்கு மனவெழுச்சிகளைக் கட்டுப்படுத்தக் கற்றுக்கொள்கின்றனரோ, அந்த அளவிற்கு அவர்கள் நீடித்த மனநிலையினராய்க் காணப்படுவர். இளையோர் கட்டுப்படுத்துகின்ற மனவெழுச்சிகள் பெரும்பாலும் வெளிப்படையாக, சமூகம் அனுமதிக்காத அல்லது அங்கீகரிக் காதவைகளாக இருப்பதால், இத்தகைய மனவெழுச்சிகளான சினம், அச்சம், பொறாமை போன்றவைகளே அழுத்தம் பெறும் போது நீடித்த மனநிலைகளைத் தோற்றுவிக்கின்றன. இந் நேரங் களில் இளையோர் எதிலும் ஆர்வம் அற்றவர்களாய்ச் சோர்ந்து போய், மனத்தளர்ச்சியுற்று அடிக்கடி சீறிவிழுபவர்களாய்க் காணப் படுவர். இதனை அறியும் பொருட்டு உயர்நிலைப்பள்ளி மாணவர் களை ஆய்ந்தபோது, அவர்களில் ¾ பங்கினர் தங்களை மகிழ்வூட்ட முடியாதபோது நீடித்த மனநிலைகளைப் பெற்றனர் என்றும், அந்த மனநிலைகள் வெளி உலக உண்மைகளோடும், தங்களின் உள்ளிடைச் சந்தேகங்கள், கவலைகள் போன்றவைகளோடும்

ஏற்படும் உளப் போராட்டங்களைச் சார்ந்தனவாய் இருந்தன என்றும் அறியப்பட்டது. அவர்கள் வெளியுலக வாழ்க்கையுடன் ஒத்துப் போக முடியாதபோதும், அதற்கேற்பத் தங்களைச் சரி செய்து கொள்வதில் தோல்வியுறும் போதும், தங்களின் இயலாமையினையும், திறமையின்மையினையும் பற்றிச் சிந்தித்துப் பார்க்கின்றனர். இதனால், அவர்கள் மனத்தளர்ச்சியடைந்து நீடித்த மனநிலைக்கு உள்ளாகின்றனர். ஆண்பிள்ளைகள் இவ்வாறு பள்ளியையும் வீட்டையும் சார்ந்துள்ள சிரமங்களால் நீடித்த மனநிலைகளைப் பெற்றபோது, பெண்பிள்ளைகள் தோல்வி, ஏமாற்றம், மனமுறிவு போன்றவற்றால் அடிக்கடி நீடித்த மனநிலையை அடைந்தனர். அவர்கள் ஒருநாள் அளவுக்கு மீறி மகிழ்ந்திருப்பதையும் மறுநாள் முழுவதும் வருத்தப்பட்டிருப்பதையும் இவ்வாய்வு அறிவிக்கின்றது.

## தனிப்பட்ட மன வெழுச்சிகளின் வளர்ச்சி வரலாறு :

மனவெழுச்சிகள் அனைத்தையும் இனிமையானவை, இனிமையற்றவை என்று இரு வகைகளாகப் பிரிக்கலாம். இனிமையற்ற மனவெழுச்சிகள் தனியனுக்கு மகிழ்ச்சியற்ற எதிர்வினைகளைத் தோற்றுவிக்கின்றன. அவைகளின் பின் விளைவுகள் தனியனுக்கு மட்டுமன்றி அவனோடு தொடர்பு கொண்டவர்களுக்கும் தீமை பயப்பனவாக இருக்கும். இனிமையற்ற மனவெழுச்சிகளில் முக்கியமானவை அச்சம், கவலை, சினம், பொறாமை, வயிற்றெரிச்சல், சலிப்பு போன்றவைகளாகும்.

### அச்சம் (Fear) :

எல்லா வயதிலும், அச்சத்தின் காரணமாக ஏற்படும் நடத்தைத் துலங்கல் ஓடியொளிதலாகும். அச்சம் ஏற்பட்டவுடன் உடல் வியர்த்தல், முகம் வெளிறிப்போதல், கைகால்கள் நடுங்குதல், திகைத்துப் போதல் போன்ற உடல் சார்ந்த துலங்கல்கள் எழுகின்றன. இந்த உடலியல் நடத்தைத் துலங்கல்களெல்லாம் அச்சம் நீங்குவதற்கும் மனவெழுச்சி அமைதி நிலையை அடைவதற்கும் அனுகூலமாயுள்ளன.

ஹர்லாக் என்பார் (Hurlock), இளையோரிடம் காணப்படும் அச்சத்தை மூன்று வகையினங்களில் பகுக்கின்றார். அவை புறப் பொருள், சமூக உறவு, தன்னைப் பற்றிய பிரச்சினைகள் ஆகியவற்றைச் சார்ந்தவையாகும். பாம்பு, நாய், காற்று, புயல், விசித்திரமான சத்தம், நீர், நெருப்பு, ஆகியவற்றின் அச்சம் முதல் வகையினத்தைச் சார்ந்தது. பிறரைச் சந்தித்தல், தனிமையாக இருத்

தல், கூட்டத்திலிருத்தல், மேடையேறிப் பேசுதல், எதிர்பாலினர் மிகுந்த இடத்தில் இருத்தல் போன்ற சமூகச் சூழ்நிலைகளில் ஏற்படும் அச்சங்கள் இரண்டாவது வகையாகும். வறுமை, இறப்பு, நோய், பொது மக்களிடை மதிப்பு, தேர்வுகளும் அதன் மதிப்பீடுகளும், வேலை கிடைத்தல், வீரியம் போதாநிலை போன்ற தன்னைச் சார்ந்த பிரச்சினைகளின் அச்சம் மூன்றும் வகையினைச் சாரும்.

உயர்நிலைப் பள்ளி மாணவர்களின் அச்சங்கள் பெரும்பாலும் அவர்களின் பள்ளி நடவடிக்கைகளைப் பற்றியனவாக உள்ளன. பள்ளித் தேர்வுகள், பள்ளி மதிப்பீடுகள், பள்ளி நிகழ்ச்சிகளில் பேசுவது, ஆசிரியர்கள், விளையாட்டுப் போட்டிகள், வீட்டுப்பாடங்களைச் செய்தல், புகழ்பெறுது இருத்தல் போன்றவைகளைப் பற்றி அவர்கள் அச்சம் அடைவதாகத் தெரிகின்றது. ஆண் பிள்ளைகளிடம் ஏற்படும் குரல் மாற்றத்தினால் அவர்கள் வகுப்பில் பாடுவதையோ, பேசுவதையோ பற்றி அதிக அச்சம் கொள்கின்றனர். பெற்றோர்களாலும் மற்றவர்களாலும் வகுப்பு ஆசிரியர்களாலும் அதிக மதிப்பெண்கள் பெறுவதற்குத் தூண்டப்படுவதால் இவர்களிடம் தேர்வு பற்றிய அச்சம் காணப்படுகின்றது. மேலும் பள்ளிக்கு வெளியிலும் சமூகச் சூழ்நிலையிலும் இளையோருக்குப் பல அச்சங்கள் ஏற்படுகின்றன. தங்களிடம் உள்ள குறைபாடுகள், பெற்றோர்களின் மறுப்புகள், சம வயதினரின் ஏளனங்கள், தங்களது சக்திக்கு மீறியவற்றைச் செய்ய வேண்டிய நிலை போன்றவை தோன்றும்போதும், இன்னும் இறப்பு பற்றியும் இளையோர் அச்சம் அடைகின்றனர்.

கல்லூரி இளையோரிடம் அச்சங்கள் குறைந்தும், ஆனால் கவலைகள் அதிகரித்தும் காணப்படுகின்றன. இப்பருவத்து அச்சங்கள் அனைத்தும் சமூக வாழ்க்கையுடன் தொடர்பு கொண்டவைகளாக இருக்கின்றன. இவற்றில் சில சிறுவயதிலிருந்து தொடர்ந்து வந்துள்ளனவாகவும், சில தங்களின் சொந்த அனுபவங்களின் மூலம் பெறப்பட்டனவாகவும், இன்னும் சில நண்பர்களின் மூலமாகப் பெறப்பட்டனவாகவும் காணப்படுகின்றன. கல்லூரி மாணவிகள் தாங்கள் அச்சப்படும் பொருள்களைப் பற்றி ஒரு வாரம் வரை குறித்து வைக்கும்படிக் கேட்டுக் கொண்டபோது, அவர்கள் குறித்து வைத்திருந்த பெரும்பாலான அச்சங்கள் பின்னால் வரப் போவதை எதிர்பார்க்கின்ற சூழ்நிலையில் தோன்றுவனவாக இருந்தன என்று அறியப்பட்டது. பொதுவாக, வீட்டுப் பாடங்களைச் செய்தல், தாழ்வு மனப்பான்மை, தன் மதிப்பை இழத்தல் போன்ற சூழ்நிலைகளில் எழும் அச்சங்களே அதிகமாகக் காணப்பட்டன.

வேக் என்பார் (Wake) 11 முதல் 16 வயது வரையுள்ள முன் னிளையோர் பருவத்துக் குழுவினரை 18 முதல் 24 வயது வரை யுள்ள பல்கலைக்கழக மாணவக் குழுவினருடன் ஒப்பிட்டு ஆய்ந் தார். இந்த ஆய்வில் இளையோர் பருவத்து ஆண்பிள்ளைகளின் முக் கியமான அம்சங்கள் சமூக வாழ்க்கையோடு தொடர்புடையன வாகக் காணப்பட்டன. அவர்கள் சமூகக் கூட்டங்களிலிருந்து வெளியேற்றப்படுவது, ஒரு குழுவினருக்கு எதிரில் செயல்படுவது, ஏளனம் செய்யப்படுவது, ஒருசிலரோடு பேசுவது போன்றவற்றில் அச்சத்தை அடைந்தனர். இவை அவர்கள் அறிவித்த அச்சங் களில் 22 சதவீதங்களாக இருந்தன. அடுத்து, அதிக அளவில் அவர்கள் அச்சப்பட்டவை விலங்குகளாகவும் விபத்துக்களாகவும் இருந்தன. முன்னிளையோர் பருவத்து ஆண்பிள்ளைகளின் அச்சங் களைக் கல்லூரி மாணவர்களின் அச்சங்களோடு ஒப்பிட்டுப் பார்த் ததில், சமூகம் சார்ந்த அச்சங்கள் அதிகரித்து 26·4 சதவீதமாகக் காணப்பட்டன. மாறாக விலங்குகள், விபத்துக்கள் பற்றிய அச்சங் கள் மறைந்து 9·9 சதவீதம் வரை பாலினம் சார்ந்த அச்சங்களும் 8·8 சதவீதம் வரை அதிகாரம் சார்ந்த அச்சங்களும் உண்டாகி யிருந்தன. பாலினம் சார்ந்த அச்சங்கள்; கருத்தரித்தல், மேக நோய், தவறான நடவடிக்கைகள் பிறருக்குத் தெரிய வருதல் போன்ற பாலின உறவின் பின் விளைவுகளைப் பற்றியதாக இருந் தன. அதிகாரம் சார்ந்த அச்சங்கள்; பெற்றோரின் கண்டிப்பு, பள்ளியிலோ, தொழிலிலோ தோல்வி அடைதலினால் பெற்றோர் களுக்கு ஏற்படும் ஏமாற்றம் ஆகியவை பற்றியும் இருந்தன.

இளையோர் பருவத்துப் பெண் பிள்ளைகளில் மிருகங்களைப் பற் றிய அச்சங்கள் அதிகமாக இருந்தன. (21·19) சமூகம் சார்ந்த அச்சங்கள் 13·6 சதவீதத்தில் இரண்டாவதாகவும், விபத்துக் களைப் பற்றிய அச்சங்கள் 11·6 சதவீதத்தில் மூன்றாவதாகவும் காணப்பட்டன. ஆதலால் முன்னிளையோர் பருவத்தில் அச்சத் தில் காணப்படும் பாலின வேறுபாடு, பெண் பிள்ளைகளில் மிருகங் களைப் பற்றிய அச்சங்கள் மிகுதியாக இருத்தல் ஆகும். கல்லூரி மாணவிகளில் சமூகம் சார்ந்த அச்சங்கள் 29·7 சதவீதத்தில் மிக வும் பெரும்பாலான அச்சமாகக் காணப்பட்டது. மிருகங்களின் அச்சங்கள் இக்காலத்தில் ஆண் பிள்ளைகளிடம் மறைந்துவிடு வதைப் போன்று இவர்களிடம் மறைந்துவிடுவதில்லை. ஆனால் அவை அலைவெண் குறைந்து, 15·5 சதவீதத்தில் காணப்பட்டன. ஆண் பிள்ளைகளில் காணப்பட்டதைப் போன்றே இவர்களிடத்தும் இக்காலத்தில் பாலினம் சார்ந்த அச்சங்கள் 10 சதவீத அளவில் உண்டாகியிருந்தன.

இவ்வாய்வின் முடிவுகளை ஒன்றிணைத்து முழுமையாகக் காணு கையில், குழந்தைப் பருவத்திலிருந்து இளையோர்ப் பருவத்திற்கு மாறும் காலத்தில், பருப் பொருளைப் பற்றிய அச்சங்கள் மறைந்து சமூகம் சார்ந்த அச்சங்கள் தோன்றுகின்றன என்றும், இளையோர் பருவத்திலிருந்து முதிர்ச்சிப் பருவத்திற்கு மாறுகையில், இந்தச் சமூகம் சார்ந்த அச்சங்கள் அதிகமாகியும், பாலினம் சார்ந்த அச் சங்கள் ஓரளவிற்கும் தோன்றுகின்றன என்றும் அறியலாம்.

கவலை (Worry) :

மனவெழுச்சிகளில் கவலை பொதுவாக எல்லோரிடமும் காணப்படுவதாகும். அரசன் முதல் ஆண்டிவரை எல்லோருமே ஏதாவது ஒன்றிற்காகக் கவலைப்படவே செய்கின்றனர். மன வெழுச்சிகளை நன்கு அடக்கியாளத் தெரிந்த துறவிகள் கூடக் கவலைப்படாது இருக்க முடிவதில்லை. எனவே கவலை எல்லா நிலைப் பட்டவர்களிடமும் வேறுபாடின்றி ஏதாவது ஒரு முறையில் காணப்படவே செய்கின்றது. இது வாழ்க்கையினோடு இணைந்த ஒரு பகுதியாக விளங்குகின்றது. மேலும் மனிதனின் ஆளுமை வளர்ச்சியை மிகவும் பாதிப்பது கவலையே. அதிகமான கவலைகளைக் கொண்டவர்கள் உளப் போராட்டங்களுக்கு ஆளாகி ஆளுமையை உருக்குலைக்கும் நோய்களால் பீடிக்கப்படுகின்றனர். ஆதலால், கவலையானது மனவெழுச்சிகளில் மிக முக்கியத்துவம் வாய்ந்த தொன்றாகும்.

கவலை என்பது பெரும்பாலும் உண்மையான காரணங்களால் அன்றிக் கற்பனை செய்துகொண்ட காரணங்களினால் ஏற்படும் ஒரு வகை பயம் என்று ஹர்லாக் கருதுகின்றார். அப்படிக் கற்பனை செய்த சூழ்நிலையைத் திரும்பத் திரும்ப மனதில் நினைத்துப் பார்த்து, குழப்பமடைவது கவலையின் முக்கிய பண்பாகும். சில வேளைகளில் கடந்தகால நிகழ்ச்சிகள் திருப்திகரமாக இல்லாத போதும், ஒரு காரியத்தைச் செய்வதில் தோன்றுகின்ற ஆவலும், எதிர்காலம் பற்றிய எதிர் பார்ப்பும் கவலையைத் தோற்றுவிக்க லாம். இதனைத் தவிப்பு (Anxiety) எனக் குறிப்பிடலாம். கவலை, அச்சத்தைப் போன்று அவ்வளவு அழுத்தமுள்ளதாய் இல்லாவிடி னும், அச்சத்தின் தன்மைகளைப் பெரும்பாலும் பெற்றுள்ளது. கவலைகள் வாழ்க்கையின் எல்லாப் பருவங்களிலும் ஏற்படலாம். எனினும், இளையோர் பருவத்தில்தான் பெரும்பாலும் இவை தீவிரமாகக் காணப்படுகின்றன.

பாலின முதிர்ச்சிக்குப் பிறகு கவலையின் தன்மைகளும் மாற்றம் அடைகின்றன. பூப்பெய்துதலுக்கு முன்னரும் பின்னரும் பெண்களி

டம் காணப்படும் கவலைகளை ஒப்பிட்டுப் பார்த்தபோது, பூப்பெய்து வதற்குச் சற்று முன்னர் பெண்களிடம் காணப்பட்ட கவலைகள் பெரும்பாலும் சிறுவயதில் அவர்கள் பெற்றிருந்த கவலைகளைப் பிரதிபலிப்பனவாகவே காணப்பட்டன. பூப்பெய்தியதற்குப் பின்னர் அவர்கள் பெற்ற கவலைகள் முற்றிலும் மாறுபட்டனவாய்த் தங்களின் உடல் நலம், கவலை, உடற்தோற்றம் போன்றவற்றைச் சார்ந்தனவாய் இருந்தன. இதைப் பற்றிய ஆய்வுகளில், நடு நிலைப்பள்ளியிலும் உயர்நிலைப்பள்ளியிலும் பயிலும் இளையோருக்கு தங்களின் பள்ளிப்பாடங்கள் தேர்வுகள் போன்றவற்றைப் பற்றிய கவலைகளே அதிகமாக இருந்தன.

பள்ளியைச் சார்ந்த பிரச்சினைகளைப் பற்றி மட்டுமல்லாது, சமூக வாழ்க்கையிலும் குடும்பச் சூழ்நிலையிலும் எழும் பிரச்சினை கள் இளையோருக்குக் கவலைகளைத் தோற்றுவிக்கின்றன. சான்றாக, எதிர்பாலினருடன் பழகுவதில் சிரமம், கவர்ச்சியற்ற உடல், நட்பை வளர்த்துக் கொள்வதில் காணும் கடினங்கள், சமூக நட வடிக்கைகளில் தனக்கென ஓரிடத்தைப் பெற முடியாத நிலைமை, பெற்றோரிடம் கொண்டுள்ள சாதகமற்ற உறவுகள், பெற்றோர் களுக்குள் ஏற்படும் சச்சரவுகள், குடும்பம் சார்ந்த பிரச்சினைகள் போன்றவைகளும் இளையோருக்குக் கவலைகளைத் தோற்றுவிக் கின்றன.

தனியர் பின்னிளையோர் பருவத்தை அடைகின்றபோது வாழ்க்கையைப் பற்றிய கணிப்பும் நோக்கங்களும் முதிர்ச்சி அடை வதால், அவர்களுக்குக் கவலையைத் தருகின்ற பொருள்களும் மாற்றமடைகின்றன. உயர்நிலைப்பள்ளியிலிருந்து கல்லூரி வரை பயிலும் மாணவ மாணவியர்களின் கவலைகளைப்பற்றி ஆராய்ந்த போது, உயர்நிலைப்பள்ளி ஆண்பிள்ளைகள் உடல்நிலையைப் பற்றியும், புறப் பொருள்களால் ஏற்படக் கூடிய ஆபத்துகளைப் பற்றியும் கவலை கொண்டிருந்தபோது, கல்லூரியில் பயிலும் இளையோர் சமூக, பொருளாதாரப் பிரச்சினைகளைப் பற்றி அதிக மாகக் கவலைப்படுவது தெரியவந்தது. உயர்நிலைப்பள்ளியின் பெண் பிள்ளைகள், நெருப்பு, மிருகங்கள் போன்ற புறப்பொருள் களைப் பற்றிய கவலைகளை உடையவர்களாகவும், கவர்ச்சிகரமான உடற் தோற்றத்திற்காகவும், தேர்வில் நன்கு தேறுவதற்காகவும் கவலைகளை உடையவர்களாகவும் இருந்தனர். மாறாக, ஆண் பிள்ளைகள் பெண்பிள்ளைகளை விட அதிகமாகப் பொருளாதார விஷயங்களைப் பற்றியும் தங்களின் திறமைகளைப் பற்றியும் கவலை கொண்டவர்களாக இருந்தனர்.

இளையோர் கவலைப்படும் பொருள்களின் தன்மை அவர் களின் மனப்போக்கிற்கு ஏற்ப மட்டுமின்றி காலப்போக்கிற்கும் ஏற்ப மாறுபடுகின்றது. 50 ஆண்டுகளுக்கு முன் இளையோர் இடி, மழை, புயல் போன்ற இயற்கையின் நிகழ்ச்சிகளைப்பற்றிக் கவலைப்பட்டனர். ஆனால் இப்போது இத்தகைய நிகழ்ச்சிகள் பெரும்பாலும் கவலையைத் தோற்றுவிப்பதில்லை. மனிதன் இயற்கை நிகழ்ச்சிகளின் மேல் மிகுந்த கட்டுப்பாட்டை இப்போது பெற்றிருப்பதுதான் இதற்குக் காரணம். தற்போது, இளையோர் களின் பெற்றோரும் மற்றவர்களும் பொருளாதார விஷயத்தில் எழும் நெருக்கடியைச் சமாளிப்பதில் சிரமத்தைக் காண்பதால், இத்தலைமுறை இளையோர், தொடக்க முதலே பணம் பற்றிய விஷயத்தில் கவலைப்படுகின்றனர். இதனைப்போன்றே, வியாதி, ஆபத்து, விபத்து, இறப்பு போன்றவைகளைப் பற்றிய கவலைகள் இப்போது மாற்றம் கண்டு, சமூக உறவினோடு தொடர்புள்ள, புகழ் பெறுதல், நல்ல மணவாழ்க்கையைப் பெறுதல் போன்ற வற்றைப் பற்றிய கவலைகள் தோன்றுகின்றன. பொதுவாகப் பெண்களைவிட ஆண்பிள்ளைகளே எதிர்காலப் பொருளாதாரப் பாதுகாப்புப் பற்றிக் கவலைப்படுபவர்களாகக் காணப் படுகின்றனர்.

**சினம் (Anger) :**

மனிதனின் உள வளர்ச்சியையும் ஆளுமை வளர்ச்சியையும் பாதிக்கின்ற மற்றொரு மனவெழுச்சி சினமாகும். ஒரு தனியன் மிக அதிகமாகச் சினங்கொள்ளும்போது அவன் தன்னையே இழந்துவிடுகிறான். ஒருசிலர் முன் கோபத்தில் ஆவேசப்பட்டு ஒரு சில பெரிய தவறுகளைச் செய்துவிட்டுப் பிறகு அதன் பின் விளைவுகளினால் தங்கள் வாழ்நாள் முழுவதும் துன்புற்று வருத்த மடைய நேரிடுகின்றது. பொதுவாகச் சினம், தாக்குகின்ற நடத் தையை ஏற்படுத்தித் தனியனிடம் மனக்கிளர்ச்சியை விளைவிக் கும் தூண்டல்களை நீக்கிவிடத் துணையாயிருக்கின்றது.

சினத்தின் தன்மை, தனி மனிதனின் பருவ மாறுதல்களுக் கேற்ப மாறுகின்றது. குழந்தைப் பருவத்தில் ஒரு தனியனிடம் எழுகின்ற சினவெழுச்சிகள் நான்கைந்து நிமிடங்களுக்கு மேல் நீடிப்பதில்லை. ஆனால், இளையோர் பருவத்தில் தனியனிடம் எந்த அளவிற்குச் சினத்தின் தன்மை தீவிரமாக இருக்கின்றதோ, அந்த அளவிற்குச் சினம் நீடிப்பதாகக் காணப்படுகின்றது. இதனைப் போன்றே பொங்கிவரும் சினத்தை வெளியிடும் முறை யிலும், சிறுபிள்ளைகளுக்கும் இளையோருக்கும் இடையே சில

வேறுபாடுகள் காணப்படுகின்றன. குழந்தைப் பருவத்தில் கத்து தல், உதைத்தல், காலால் தரையை இடித்தல், தரையில் புரளு தல் போன்ற நடத்தைகளின் வாயிலாகச் சினம் வெளிப்படு கின்றது. ஆனால் இளையோர் கெட்ட வார்த்தைகளைக்கொண்டு திட்டுதல், சுடு சொற்களைக் கொண்டு ஏசுதல், குறை கூறுதல் போன்ற பேச்சின் மூலமே சினவெழுச்சியையும், எதிர்ப்பினையும் தெரிவிக்கின்றனர்.

சினத்தை உண்டாக்குகின்ற தூண்டல்கள் சிறுவயதிலும் இளையோர் பருவத்திலும் ஒரே தன்மையுள்ளவையாய்க் காணப் படினும், அதை உண்டாக்கும் சூழ்நிலைகள் மாறுபட்டனவாய் அமைகின்றன. குழந்தை தன் நிலையை இழந்து, சினங்கொள்ளக் காரணமாயிருக்கும் தடைகள், இளையோரிடம் சிறிதுகூடச் சினத் தைத் தோற்றுவிப்பதில்லை. ஆனால் குழந்தையைப் போலவே இளையோரும் தங்கள் திட்டங்கள், செயல்கள், ஆர்வங்கள் தடை செய்யப்படும்போது சினமடைகின்றனர்.

ஒரு தனியன் சினங்கொள்வதன் மூலம் தன்னுடைய தேவை களையும் உரிமைகளையும் வெளிக்காட்டுகின்றான். சினமானது ஒருவ னின் முயற்சிகளையும் உந்துக்களையும் அவன் எதிர்பார்ப்பவைகளு டன் இணைப்பவையாய்க் காணப்படுகின்றன. இளையோர் பருவத் தில் சினம் பெரும்பாலும் சமூகம் சார்ந்த காரணிகளால் ஏற்படு கின்றது. சீண்டப்படுதல், பிறரால் நியாயமற்ற முறையில் நடத் தப்படுதல், உடன் பிறந்தவர்கள் தங்கள் பொருள்களை அபகரித்துக் கொள்ளல், கடுஞ்சொற்களால் திட்டப்படுதல், பிறரால் அடக்கி யாளப்படுதல் போன்றவை உயர்நிலைத் துவக்கப்பள்ளி மாணவர் களின் சினத்தை உண்டாக்குகின்றன. உயர்நிலைப்பள்ளி மாணவர் களிலும் இத்தகைய சூழ்நிலைகளே சினத்தை உண்டாக்குகின்றன.

கல்லூரி மாணவர்களிடம், பருப் பொருள்களை விடச் சமூகம் சார்ந்த காரணிகள்தான் பெரும்பாலும் சினத்தை உண்டாக்கு கின்றன. மேலும் சமூகம் சார்ந்த காரணிகளே தீவிர, கடுமை யான சினத்தை ஏற்படுத்துகின்றன. சமூகக் காரணிகளில், தன் கருத்தினை வலியுறுத்தும் தன்மையைக் (Self Assertion) குலைக்கின்ற காரணிகளான நியாயமற்ற குற்றச்சாட்டுகள், அவமதிப்பான பேச்சுகள், வேண்டாத புத்திமதிகள், கருத்து முரண்பாடுகள், ஏள னம் செய்யப்படுதல், அடக்கியாளப்படுதல் போன்றவையே கல் லூரி மாணவர்களிடம் பெரும்பாலும் சினத்தை உண்டாக்கவல்ல தூண்டல்களாக இருக்கின்றன.

சமூகக் காரணிகளைத் தவிர படிப்பு, தூக்கம், ஆகிய பழக்க மான செயல்களில் குறுக்கீடுகள், தாங்கள் ஏற்றுச் செய்த செயல் களில் தோல்வியுறுதல், தங்களின் திட்டங்கள் குலைக்கப்படுதல் போன்றவைகளும் சினத்தை ஏற்படுத்துகின்றன. கல்லூரிப் பெண்கள், பொருள்களைவிட மக்களின் பாலும், குறிப்பாக ஆண் களின் பாலும் அடிக்கடி சினங்கொள்கின்றனர். இதற்கடுத்து, தாழ்வு மனப்பான்மையினையும், இகழ்ச்சியினையும் ஏற்படுத்தும் காரணிகள் இவர்களில் சினத்தை உண்டாக்குகின்றன. கல்வி சார்ந்த விஷயங்களும் குடும்ப உறவுகளும் வெகுவாகச் சினத்தைத் தூண்டுவதில்லை.

சினத்தின் காரணமாக இளையோரில் பெரும்பாலும் ஏற்படுவது எதிர்வினை பேசுதலேயாகும். அவர்கள் சினமூட்டியவர்களைத் திட்டவும், வசைப்பாங்குடன் பேசவும் செய்கின்றனர். இளை யோர் குழந்தையைப் போன்று அடித்தும் உதைத்தும் தங்கள் வஞ் சத்தைத் தீர்த்துக் கொள்வதில்லை. ஆனால், அவர்கள் இகழ்ந்தும் ஏளனப்படுத்தியும் தங்களது வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்கின்ற னர். வாய்ப்பும் நேரமும் கிட்டும்போது, அவர்கள் தங்கள் பகை வர்களின் மானத்தை வாங்குவர். வயது முதிர்ந்த குழந்தை யைப் போன்று இவர்களும் சிணுக்கங்கொண்டு பேச மறுப்பர்.

இளையோர் சினங்கொள்ளும் பொழுது, அவர்களின் சினத்தை உண்டாக்குகின்றவர்களை நேரடியாகத் தாக்காமல், அவர்களை ஒதுக்கிவிடுவர் அல்லது தங்களின் கைக்குக் கிடைத்தவற்றை எடுத்து அவர்கள் மீது வீசி எறிவர். சமயத்தில் குமுறலான செயல்களின்வழி மறைமுகமாகத் தங்களின் சினத்தை வெளியிடு வர். தங்களால் அச்சூழ்நிலையில் வேறொன்றும் செய்ய முடியா விடில், பின்னர் வாய்ப்புக் கிட்டும்போது எங்ஙனம் இதற்குப் பழி வாங்க வேண்டுமென்பதை மனதிற்குள் திட்டமிடுவர். தங்களின் எதிரிகளுக்குத் தங்களால் கிட்டும் சலுகைகளையும், வாய்ப்புகளை யும், இப்பொழுது இவர்கள் தர மறுப்பதன் மூலமும், அவர்களின் சுமுகமான வாழ்க்கையில் எண்ணற்ற இடர்ப்பாடுகளையும் தொந் தரவுகளையும் தோற்றுவிப்பதன் மூலமும் இளையோர் தங்கள் எதிரி களைப் பழிவாங்க முயற்சிப்பர்.

கேட்ஸ் என்பார் (Gates) கல்லூரி மாணவிகளை ஆய்ந்ததில், சினத்தின் காரணமாக அவர்களிடம் ஏற்படும் துலங்கல்கள் பெரும் பாலும் மொழி சார்ந்தனவாய் இருக்கின்றன என்று கண்டறிந் தார். சினமுற்ற மாணவிகள் சுடுசொற்களால் பகைவர்களைத் தாக்குவதையும், உணர்ச்சிவேகத்துடன் பேசுவதையும் அவர் கண்

டார். மேலும், அவர்கள் பரபரப்பான செயல்கள் பலவற்றிலும் ஈடுபட்டனர். எனவே அவர்கள், தரையை மிதித்தல், படுக்கையில் புரளுதல், நாற்காலியில் அடிக்கடி எழுந்து அமருதல், தலையை இப்புறமும், அப்புறமும் திருப்புதல் போன்றவைகளைச் செய்தனர்.

இளையோர் அடிக்கடி சினமடைவது அவர்களில் சினத்தை உண்டாக்குகின்ற பொருளின் தன்மையையும், சூழ்நிலையையும், ஈடுபட்டுள்ள செயல்களின் நோக்கங்களையும் பொறுத்து அமையும். பெற்றோர்களும் சுற்றுப்புறத்தோரும் ஏற்படுத்தும் தடைகளால் தொடர்ந்து துன்புறும் இளையோர் அடிக்கடி சினமடைவர். சினம் நீடிக்கின்ற கால அளவு, தனியனின் வயதினையும் சினத்தின் வெளிப்பாடுகளை எந்த அளவிற்கு அவன் அடக்கியுள்ளான் என்பதனையும் பொறுத்துள்ளது. பள்ளிப் பருவத்திற்கு முந்திய சிறுபிள்ளைகளிடம் சினம் நீடிக்கின்ற சராசரி கால அளவு 5 நிமிடத்திற்கும் குறைந்துள்ளது என்று காணப்பட்டது. மாறாக, கல்லூரி மாணவர்களிடம் சினம் நீடிக்கும் கால அளவு ஒரு நிமிடத்திலிருந்து இரண்டுநாள் வரை இருப்பதாகவும், சராசரி கால அளவு 15 நிமிடமாக இருப்பதாகவும் அறியப்பட்டது. பொதுவாக, சினம் நீடிக்கும் காலம் அதன் கடுமையைப் பொறுத்திருக்கின்றது. எனினும் பெரும்பாலும் சினம் குறைந்த கால அளவே நீடிப்பதாகத் தெரிகின்றது.

சினத்தின் பின் விளைவுகளில் எரிச்சல்படும் தன்மையே பெரும்பாலும் அடிக்கடி தோன்றுவதாக ஆராய்ச்சிகள் காட்டியுள்ளன. இதையடுத்து, அவமானம், திருப்தி அல்லது வெற்றியுணர்ச்சி, களைப்புணர்ச்சி போன்றவை அலைவெண் வரிசையில் காணப்படுகின்றன. மிகக் குறைந்து காணப்படும் பின் விளைவுகள், சினத்தைக் கேலியாக மாற்றுவதும் பெண்கள் தங்களிடமே வருத்தம் கொள்வதும் ஆகும்.

பொறாமையும் வயிற்றெரிச்சலும் (Jealousy and envy) :

பொறாமை என்பது சினம், அச்சம், அன்பு இழப்பு ஆகியவைகள் இணைந்த ஒரு மனவெழுச்சியாகும். பொறாமை என்பது மனிதர்களிடம் அவர்களுக்கு எதிராகத் தோன்றும் மனவெழுச்சியாகும். ஆனால் வயிற்றெரிச்சல் பிறர் பெற்றிருக்கின்ற பொருள்களின்மீது தோன்றுவதாகும். இவை இரண்டுமே சமூகச் சூழ்நிலையுடன் தொடர்பு கொண்டிருப்பதால் குழந்தை தனது பாதுகாப்பிற்குத் தீங்கு விளைவிக்கின்ற எச்சரிக்கைகளையும் தனது ஆசைகளுக்கு

எதிரான தடைகளையும் அறிந்துகொள்ளும்வரை இவை தோன்றுவதில்லை.

தனியன் தன் வாழ்க்கையில் ஒருவரின் மீது அன்பு செலுத்தும் காலத்தில், பொறாமை அடிக்கடி ஏற்படுகின்றது. எல்லா வயதிலும் பொறாமை பாதுகாப்பின்மையையே அடிப்படையாகக் கொண்டுள்ளது. இளம் வயதில் ஒரு தனியன் தன்மீது அன்பு செலுத்துகின்ற தாய் தந்தையரின் கவனம் அல்லது அக்கறை தன்னையல்லாது பிறரின்பால் செலுத்தப்படுவதைக் காணும்போது அவர்களின்மேல் பொறாமையடைகின்றான். பின்னர் பள்ளிப் பருவத்தில் தன்னைவிட மற்ற மாணவர்கள் அதிக மதிப்பெண்களைப் பெறுவதையும், புகழடைவதையும், ஆசிரியரின் அன்புக்குப் பாத்திரமாவதையும் கண்டு அவர்கள் மீது பொறாமைப்படுகின்றான்.

இளையோர் பருவத்தில் பூப்பின் மாற்றங்கள் ஏற்பட்டுவிட்ட பின்னர் எதிர்பாலினரைப் பற்றிய அக்கறை வளரும்போது, பொறாமைக் குணங்களும் தோன்றுகின்றன. எதிர்பாலினரில் ஒரு குறிப்பிட்ட தனி நபர் மீது அக்கறை கொள்ளும்போது, பொறாமை அதன் உச்சக் கட்டத்தை அடைகிறது. தான் பழகுவதற்காகத் தேர்ந்தெடுத்த தனிநபர் தன்னையல்லாது வேறொருத்தியிடம் பழகுவதை இளம்பெண் காண நேரிட்டால், அவளுக்கு மற்றவள் மீது பொறாமை ஏற்படுகின்றது. தான் தேர்ந்தெடுத்த நபருடன் மற்றொருத்தி பழகுவதைக் காணச் சகிக்காதவளாய் இவள் ஆத்திரமும் எரிச்சலும் அடைகின்றாள். இந்த மன நிலை பின்னால் வளர்ந்து, பொறாமைப்படுகின்ற அந்த நபர் மீது வெறுப்புணர்வையும், விரோதத் தன்மையையும் ஏற்படுத்துவதாக அமைகின்றது.

பொருள்களின் பயன்மதிப்பைப் பற்றிய உணர்வு தோன்றாதவரை எந்தக் குழந்தையும் பொறாமையும் வயிற்றெரிச்சலும் அடைவதில்லை. ஓரளவிற்குப் பொருள்களின் பயன் மதிப்புகளை அறிந்த பிறகும் தன்னிடம் அந்தப் பொருள் இல்லாதபோதுதான் சிறிது வளர்ந்த பிள்ளைகள் பொறாமையும் வயிற்றெரிச்சலும் அடைவர். உயர்ந்ததோ, தாழ்ந்ததோ, மதிப்பு மிகுந்ததோ, குறைந்ததோ, தன்னிடமும் அத்தகைய பொருள் இருக்கும்வரை வளர்ச்சியடைந்த சிறுவர்கள் அப்பொருள்களை வைத்திருக்கும் பிறரின் மீது பொறாமை அடைவதில்லை.

இளையோர் பருவத்தில் ஒரு தனியன் பொருள்களின் மதிப்பையறிந்து அவற்றை அடைவதில் ஆர்வம் காட்டத் தொடங்குகின்றான். இங்கே அவன் தானும் பிறரைப்போல் ஒரு

பொருளை வைத்திருந்தாலும் அப்பொருள் மற்றவர்களுடைய தற்குச் சமமாக அல்லது மற்றவர்களுடையதைவிட உயர்ந்ததாக இல்லாவிட்டால், அத்தகைய உயர்வான பொருள்களை வைத்தி ருப்பவர்களின் மீது பொறுமைப்படுகின்றான். தன்னிடம் ஓட்டு வதற்கு ஒரு மிதிவண்டியோ ஊர்தியோ வைத்திருப்பினும் அது தன்னுடன் போட்டியிடும் நபரின் சைக்கிள் ஊர்தியைப்போல் அதே தயாரிப்பாளர்களால், அதே அமைப்புருவத்தில், அதே விலையில், அல்லது அதைவிட அதிகமான தரத்தில் இருக்க வேண்டும் என இளையோன் விரும்புகின்றான். அவ்வாறு அது இல்லாவிடில் அவனது வயிற்றெரிச்சல் அடங்குவதில்லை.

இளையோர் பருவத்துப் பெண்கள் தன் வகுப்புத் தோழியர் தன்னைவிடச் சிறந்த ஆடை ஆபரணங்களை அணிந்திருப்பதைக் கண்டு வயிற்றெரிச்சல் அடைவர். இதன் விளைவாக அவள், வயிற் றெரிச்சல்படும் அந்த வகுப்புத் தோழியரோடு கோபமும் பொறுமையும் கொண்ட எதிர் நடத்தைகளைக் கையாளுவாள். வயிற்றெரிச்சல் என்பது உண்மையில் பிறரின் உயர்வையும் தனது தாழ்வையும், பிறரிடம் இருந்து, தன்னிடம் இல்லா நிலையினையும் தாங்கிக்கொள்ள முடியாத ஒரு கோழைத்தன்மையாகும்.

சினத்தைப் போன்றே, வயிற்றெரிச்சலும் பொறுமையும் அடையும் இளையோன், வார்த்தைகளால் சண்டையிடுவதன் மூலம் எதிர்வினை புரிகின்றான். பிறர் வைத்திருக்கும் பொருளின் பயன் மதிப்பைத் தரக் குறைவாகப் பேசி, இகழ்வதன்மூலம், தான் அதைப் பெறவில்லையே என்ற உணர்வைச் சரிசெய்து கொள்கின் றான். இத்தகைய செயலால் ஆத்திரமடையும் தனியன் பிறர்மேல் கொள்ளுகின்ற சினத்தை ஓரளவு தணித்துக்கொள்கின்றான். பொருள்களைப் பெற்றிருப்பதற்கான ஆசை ஆண்பிள்ளைகளைவிடப் பெண்பிள்ளைகளிடம் அதிகமாக இருப்பதால், பெண்பிள்ளைகளே அடிக்கடி வயிற்றெரிச்சல்படும் தன்மைக்கு ஆளாகின்றனர்.

**சலிப்பு (Boredom) :**

சலிப்பானது மகிழ்ச்சியும் ஆர்வமும் அற்ற நேரங்களில் ஏற் படுகின்றது. ஒரே செயலைத் திரும்பத் திரும்பச் செய்யும்போதோ, ஆர்வமே இல்லாத ஒன்றினைச் செய்ய முற்படும்போதோ, வகுப் பில் ஆசிரியர் கற்றுத்தருவது பிள்ளைகளைக் கவராதபோதோ இளையோருக்குச் சலிப்பு உண்டாகின்றது. இந்தச் சலிப்பு, அள விலும் தன்மையிலும் வேறுபாடுடையதாகக் காணப்படுகின்றது. இளையோர் சலிப்பு அடையும்போது அமைதியற்ற தன்மையில் காணப்படுவர். அவர்களால் அப்போது எந்தச் செயலையும்

திருப்திகரமாக, முழு ஆர்வத்துடன் செய்யமுடிவதில்லை. ஒன்றை விட்டு மற்றதைச் செய்யமுயன்று, அதிலும் அவர்கள் சலிப் படையும்போது, தங்களை மகிழ்வூட்டிக் கொள்ள அல்லது சலிப்பி லிருந்து தங்களை மீட்டுக்கொள்ள, கேளிக்கைகளையும் மகிழ்ச்சி கரமான பொழுதுபோக்கினையும் நாடுகின்றனர். இளையோர் அடிக்கடி கேளிக்கைகளையும், மகிழ்ச்சிதரும் பொழுது போக்குகளை யும் நாடுவதற்குக் காரணம், இங்ஙனம் அவர்கள் அடிக்கடி தங்கள் முயற்சியில், செயலில் தோல்வியடைந்து சலிப்பு மீதூறப் பெறு வதனால் தான். அதிக உற்சாகமும் ஆர்வமும் உடையவர்கள் தாங்கள் இருக்கும் சூழ்நிலை அதற்கு அனுகூலமாக இல்லாத நேரத்தில் சலிப்படைவர். எனவே சலிப்பு, மற்றொரு வகையில் இளையோர் கொண்டிருக்கும் துடிப்பினையும், ஆர்வத்தினையும், அவைகளை நடைமுறையில் பயன்படுத்தமுடியாத நிலையில் அவர் கள் இருப்பதையும் நமக்கு எடுத்துக்காட்டுகின்றது.

**இனிமையான மனவெழுச்சிகள் :**

இனிய அனுபவங்கள், மகிழ்ச்சி, களிப்பு, அன்பு போன்ற மனவெழுச்சி எதிர்வினைகளைத் தோற்றுவிக்கின்றன. இத்தகைய இனிய, கனிந்த மனவெழுச்சிகள் இசைவான எதிர்வினைகள் ஆகும். ஏனெனில் மனிதன் இவைகளைத் தவிர்க்க முயற்சிப்ப தில்லை. மாறாக இவை தொடர்ந்து நீடிக்கவேண்டும் என்று விரும்புகின்றான். கனிந்த மனவெழுச்சிகள் குழந்தையின் நடத்தை யில் இரண்டாம் ஆண்டின் முடிவில் தோன்றுகின்றன. இவை களைப்பற்றி அதிகமாக அறியப்படவில்லை. இவை தினசரி நடத்தை களை ஊக்குவிக்கின்ற உந்துக்களில் முக்கியத்துவம் வாய்ந்தவை யாய் இருப்பினும் இவைகளைப்பற்றி ஆராய்வது கடினமானது. ஏனெனில் இவை ஏற்படும்போது, உடலியல் கிளர்ச்சிகளோ, உடற் புற நடத்தைகளோ தீவிரமாக ஏற்படுவதில்லை.

**மகிழ்ச்சியும் களிப்பும் (Joy and Delight) :**

மகிழ்ச்சி மனிதனின் உடல் வளர்ச்சியினையும் ஏனைய அறிவு, சமூக வளர்ச்சியினையும், ஆளுமை வளர்ச்சியினையும் பாதிக்கவல்லது. ஒரு தனியன் மகிழ்ச்சியாக வாழும்போது, கூடுதலான எடை வளர்ச்சியையும், உடல் வளர்ச்சியையும் பெறுகின்றான். அவன் மகிழ்ச்சியாக இருக்கின்ற காலத்திலேயே அவனுக்குச் சமூகத்தில் அறிமுகங்களும் நட்புகளும் கிடைக்கின்றன. இதனால் அவனுடைய சமூகத் தகுதியும் புகழும் உயர்வடைகின்றன. மேலும் அவனது தொழிலும், தொழில் வாழ்க்கையும் செழிப்படைகின்றன. ஆனால் மகிழ்ச்சி குன்றிய காலத்தில் இவ்வளர்ச்சிகள் அனைத்துமே

தடைபட்டுவிடுகின்றன. எனவே மகிழ்ச்சியானது ஒரு தனிமனித வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாததாகும்.

ஒருவன் அடைகின்ற மகிழ்ச்சியும் களிப்பும் உடல் நலத்தினைப் பொறுத்துள்ளது. தனியன் தன் திறமையின் அடிப்படையில் ஒரு சூழ்நிலையுடன் மிக நன்ருகப் பொருத்தியிருக்கும் நிலையில் மகிழ்ச்சி அடைகின்ருன். அடுத்து நகைச்சுவைப் பேச்சுகளையும், நிகழ்ச்சிகளையும், கருத்துகளையும், கேட்க நேரிடும்போது மகிழ்ச்சியடைகின்ருன். இவையன்றி அழுத்தப்பட்டிருந்த மனவெழுச்சிச் சக்திகள் திடீரென வெளிப்படும்போதும் இளையோர் வாய்விட்டுச் சிரித்து மகிழ்ச்சியடைகின்றனர். மிகவும் ஆபத்தான நிலை உருவாகும் என்ற பயத்தில் நடுக்கத்துடன் ஒரு செயலைச் செய்யும்போது அது எவ்வித ஆபத்தினையும் பெற்றிராது திடீரென சாதாரணமானதாக மாறிவிடும்போது, மனதிற்குள் அழுத்தி வைக்கப்பட்ட உணர்வுகள் மறுகணம் மகிழ்ச்சியாய்ச் சிரிப்பில் வெடிக்கின்றன. இதனுல்தான் கூடார வித்தைக்காட்சியில் (Circus), கோமாளி, பயங்கர மிருகத்தோடு சண்டையிடப் போவதாகக்கூறி அவைகளை நெருங்கும்போது, நாம் என்ன நேருமோ எனக் கலக்கத்துடன் அமர்ந்திருக்கையில், அம்மிருகம் பேரொலி எழுப்பியவுடன் அவன் தாண்டி விழுந்து நம்மை நோக்கி ஓடிவரும்போது நாம் நம்மையறியாது சிரித்துவிடுகின்ருேம். மேலும் நாம் உயர்ந்த நிலையில் இருக்கின்ருேம் என்ற உணர்வு ஒருவருக்கு மகிழ்ச்சியைத் தோற்றுவிப்பதாய் அமைகின்றது.

ஒரு தனியன் அடையும் மகிழ்ச்சியும், அதன் தன்மையும், அதனை வெளியிடுகின்ற முறையும், வயதுக்கேற்ப மாறுபடுவனவாகக் காணப்படுகின்றன. குழந்தைப் பருவத்தில் தனியர் தமக்குப் பிடித்தமான பொருள்களைப் பெறுவதில் மகிழ்ச்சி அடைகின்றனர். அவர்கள் இன்னும் பேய், பிசாசு, தேவதை போன்றவற்றைப் பற்றிய கதைகளைக் கேட்பதன் மூலமும், வீரதீரச் செயல்களில் ஈடுபடும் வீரர்களைப் பற்றி அறிவதன் மூலமும் மகிழ்ச்சியடைகின்றனர். இளையோர், துப்பறியும் கதைகளையும், சிரிப்புத் துணுக்குகளையும், பாலின உணர்ச்சிகளைத் தூண்டும் செய்திகளையும் படிப்பதில் மகிழ்ச்சியடைகின்றனர்.

மகிழ்ச்சியை வெளிப்படுத்துகின்ற தன்மையில், தனியாள் வேறுபாடுகள் வெகுவாக இல்லை. உளநிலை, ஓய்வாக இருக்கும் போது முகமும் களையுடன் இருக்கின்றது. ஓரளவிற்கு மகிழ்ச்சியாக இருக்கும்போது சிலர் புன்னகை புரிகின்றனர். புன்னகை செய்யும்போது உதடுகளின் ஓரங்கள் மேல்நோக்கி வளைந்திருக்

கும். மேல் வரிசைப் பற்கள் சிறிதே வெளித்தெரியும். மகிழ்வுணர்ச்சி மிகுந்திருக்கையில் புன்னகைக்குப் பதிலாகச் சிரிப்புத் தோன்றுகின்றது. சிரிப்பின்போது வாயின் தோற்றம் புன்னகையில் இருந்தது போலவே இருக்கும். ஆனால் உதடுகள் இன்னும் அகன்று காணப்படும். ஆண் பிள்ளைகள் சப்தம் போட்டுச் சிரிக்கையில் பெண்கள் மெதுவாக, மெல்லிய ஒலியில் சிரிப்பர். சில வேளைகளில் சிலர் உடல் முழுவதையும் குலுக்கிக்கொண்டு அந்த இடமே அதிரும் வண்ணம் அருவருப்பாகச் சிரிப்பர்.

அன்பு (Love) :

மனித வாழ்க்கையைச் சிறப்புறச் செய்வது அன்பே. ஒரு தனியனிடம் அன்பு இல்லாவிடில் அவன் வாழ்க்கை வறண்ட பாலைவனமாக மாறிவிடுகின்றது. அச்சம், கோபம், ஆகிய மனவெழுச்சிகளைப் போன்று அன்பானது அழிவைத் தருகின்ற மனவெழுச்சி அன்று. மாறாக இது ஆக்கத்தையும், வாழ்க்கைச் செழிப்பினையும் தரவல்லதாகவும், நன்மை பயப்பதாகவும் இருக்கின்றது. எனினும் அன்பு, வெறியாக வளர்ந்துவிட்டால் அதனால் நன்மைகள் இல்லாது தீமைகளே விளைகின்றன. ஒரு தனியன் தான் அன்புடன் விரும்புகின்ற பொருள்களையோ நபர்களையோ பெறவும், தொடர்ந்து பெற்றிருக்கவும் ஆவலடைகின்றான். இந்த ஆவலுக்குத் தடை செய்பவர்களாய் குறுக்கே நிற்பவர்களை அவன் வெறுக்கவும், முடிந்தால் அழிக்கவும் எத்தனிக்கின்றான். மனித வரலாற்றில் இதற்கான சான்றுகள் குவிந்து கிடக்கின்றன.

அச்சம், கோபம் போன்ற மனவெழுச்சிகளைப் போன்றே அன்பும் குழந்தைப் பருவத்திலும், இளையோர் பருவத்திலும், பின்னர் முதிர்ச்சிப் பருவத்திலும் தன் தன்மையிலும், வெளியிடும் முறையிலும் மாறுதலை அடைகின்றது. குழந்தைப் பருவத்தில் ஒரு தனியன் ஒன்றினிடத்து அன்பு மீதூறப் பெறும்போது, பிடிவாதமாக நடந்துகொள்கின்றான். தான் அன்பு செலுத்துகின்ற பெற்றோர்களோ, மற்றவர்களோ தன்னை விட்டுப் பிரிந்துசெல்வதை எந்தக் குழந்தையும் பொறுத்துக் கொள்வதில்லை. அதனைப் போன்றே, தாங்கள் விரும்புகின்ற விளையாட்டுப் பொருளையும், நாய், பூனை போன்ற விலங்குகளையும் தூங்கும்போதுகூட தாங்களே வைத்துக் கொண்டு இருக்கவேண்டும் எனக் குழந்தைகள் எதிர்பார்க்கின்றனர். ஆனால், இளையோனிடம் இந்த நிலை மாறத் தொடங்குகின்றது. இளையோர் தாங்கள் குழந்தைப் பருவத்தில் நேசித்தவைகளிலிருந்து பிரிந்திருக்க இப்போது கற்றுக் கொள்கின்றனர். ஆனால், இவர்களிடையே எழும் அன்பு நீடித்த தன்மையுடன் காணப்படுகின்றது. இளையோர் தாங்கள் காதலிக்கின்ற

ஆணையோ, பெண்ணையோ சிறிது நேரம்கூட விட்டுப் பிரியா திருக்க முயற்சிக்கின்றனர். ஆனால் அவர்களை விட்டுப் பிரிய நேரி டும்போது, நெடுநாள்வரை அந்தப் பிரிவு உணர்ச்சியில் மனம் குன்றி மனமுறிவிற்கு ஆளாகின்றனர்.

இளையோர் எதிர்பாலினரிடம் உயர்ந்த மதிப்புடன் நடந்து கொள்ளவும் அவர்கள் அன்பைப் பெறவும் விரும்புகின்றனர்; ஆனால் அவர்கள் எத்தகைய செயல்களின் மூலம் தங்கள் மதிப்பு குறையா வண்ணம் எதிர்பாலினரின் அன்பைப் பெறமுடியும் என் பதை அறிந்து கொண்டிருப்பதில்லை. இதன் விளைவாக அன்பா னது இளையோரின் நடத்தையில் சமயத்தில் பிரச்சினைகளைத் தோற்றுவிக்கின்றது.

மனவெழுச்சிக் கட்டுப்பாடு (Emotional Control):

சமூகத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகவும், மனப்பாங்கு களிலும், நடத்தையிலும் ஏற்படும் தீங்கினை நீக்குவதற்காகவும், மனவெழுச்சிகளையும் அவற்றின் வெளிப்பாடுகளையும் கட்டுப் படுத்துவது மிகவும் அவசியமானது. மனவெழுச்சிக் கட்டுப்பாடு என்பது மனவெழுச்சிகளை முற்றிலும் அமுக்கிவிடுவதோ, நீக்கிவிடு வதோ அன்று. ஏனெனில், போதிய மனவெழுச்சி இல்லாத மனி தனை முழு மனிதனாக நாம் கருதமுடியாது. உள நோயால் பீடிக் கப்பட்டவர்களிடமே இவ்வாறு மனவெழுச்சி குன்றிய அல்லது முற்றிலும் அற்ற நிலை காணப்படுகின்றது. எனவே மனவெழுச்சி களைக் கட்டுப்படுத்துவது என்பது இடம், பொருள், காலம் அறிந்து எந்தத் தன்மையில், எந்த அளவில், எந்த நோக்கத்தில் அவைகளை வெளிப்படுத்தவேண்டும் என்பதை அறிவதேயாகும். மேலும், பகுத்தாயும் மனப்பாங்குடன் ஒரு சூழ்நிலையை அணுகி, மனக்கிளர்ச்சியடையாது, அறிவுத் தெளிவுடன் அதில் செயல்படு வதையும், மனவெழுச்சிக் கட்டுப்பாடு குறிக்கின்றது. மேலும், மனவெழுச்சிக் கட்டுப்பாடு என்பது சமூகத்தால் ஏற்றுக்கொள்ளப் படாத மனவெழுச்சி வெளிப்பாடுகளையும், முதிர்ச்சியடையாத மனவெழுச்சிச் செயல்களையும் வெளியிடாது கட்டுப்படுத்துவ தாகும். மனவெழுச்சிக் கட்டுப்பாட்டினைப் பெறுவது, மனவெழுச்சி முதிர்ச்சியின் ஓர் அறிகுறியாகும்.

மனவெழுச்சிகளைக் கட்டுப்படுத்த விரும்பும் ஒருவன் முதலில் தன்னைத்தானே கட்டுப்படுத்துபவனாகவும், தன் புலன்களை அடக்கி ஆள்பவனாகவும் இருக்கவேண்டும். இக்கருத்தினை வள்ளுவர் மிக அழகாகக் கூறுகின்றார்.

"ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து"

குடும்பத்தில் சாதகமான சூழ்நிலையில் வளர்தல், ஆரோக்கிய மான உடல்நிலையைப் பெற்றிருத்தல், பள்ளி வாழ்க்கையிலும் கல் லூரி வாழ்க்கையிலும் பிறருடன் முடிந்த அளவிற்கு மகிழ்ச்சிகர மான தொடர்பினை ஏற்படுத்திக்கொள்ள முனைதல் போன்ற செயல்களினால் தான் ஒருவன் மனவெழுச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்கிறான்; இன்னும் சமூகப் பொருளாதாரப் பண்பாட்டுக் காரணிகளும் அவனுக்கு இவ்வகையில் உதவலாம்.

சமூகச் சூழ்நிலைகளில் எழும் தாழ்வு மனப்பான்மையின் அச் சங்களை, ஒரு சில ஏற்ற முறைகளின் மூலம் கட்டுப்படுத்தலாம். ஆனால், பெரும்பாலான இளையோர் இத்தகைய அச்சங்களைச் சரி வரப் புரிந்துகொள்ள முயற்சிப்பதில்லை. இதனால், அவை மிகவும் வலிமை மிக்கவைகளாக மாறி, இளையோரின் நடத்தைகளைப் பெரி தும் பாதிக்கின்றன. முன்னிளையோர்ப் பருவத்தில் தாழ்வு மனப் பான்மையின் மீதான அச்சங்கள் ஏற்படுவது, பொதுவாக மனிதர் தர்கள் எல்லோரிடத்தும் காணப்படும் உண்மையாகும். இவற்றை நீக்குவதற்குச் சிறந்த முறை, இளையோர் ஒரு துறையில் தகுதி யினையும் திறமையினையும் பெறுவதற்கு அவர்களுக்கு ஏற்ற பயிற்சி களையளித்து, அவர்களிடம் தன்னம்பிக்கையை உண்டாக்குத லாகும். ஒரு செயலில் ஒருவனுக்குத் தன்னம்பிக்கை வளர்ந்து விட்டால், இதனைப்போன்ற மற்ற அச்சங்களையும் போக்க இந்தத் தன்னம்பிக்கையே உதவும். இளையோர் தாங்கள் ஈடுபடும் பல்வேறு நடவடிக்கைகளில் எந்த அளவிற்குத் திறமையினையும், தகுதியினையும் பெற்றிருக்கின்றனரோ, அந்த அளவிற்கு அவர்கள் விரைவில் தங்களின் தாழ்வு மனப்பான்மையினைப் போக்கிக் கொள்வதில் வெற்றி காண்பர்.

இவ்வாறே இளையோரது தேவைகளைக் குலைக்கின்ற காரணங் களை அவர்கள் நன்கு புரிந்துகொள்ள பெரியோர் உதவினால் அவர்கள் சினம், பொறாமை, மனமுறிவு ஆகிய மனவெழுச்சிகளைக் கட்டுப்படுத்திக்கொள்ள அது துணையாயிருக்கும். இளையோர் தம் உண்மையான திறமைகளையும் குறைகளையும் அறிந்துகொள்வ தற்கு ஏற்ற வாய்ப்புகளை அவர்களுக்கு நல்கவேண்டும். இப் பருவத்திற்குரிய மாற்றங்களைக்கொண்ட நடத்தை இயல்பினை யும் ஊக்கிகளையும் அவர்களைச் சரிவரப் புரிந்துகொள்ள வைப்பதன் மூலமும் வன்மையான இயல்புடைய இம்மனவெழுச்சிகளைக் கட்டுப் படுத்த வழி வகுக்கலாம். இவ்வாறே பெரியோரும், இளையோரை

யும் அவர்களின் தேவைகளையும் நன்கு அறிந்து செயல்பட்டால் அவர்களின் நடத்தைகளைப் பாதிக்கும் மனமுறிவுகளைப் பெருமளவில் நீக்கிவிடலாம். மேலும் முன்னிளையோர் பருவத்துக் காதல் பிணைப்புகளின் இயல்பினைப் பற்றி இளையோருக்கு தெளிவுபடுத்தினால், பெரும்பாலான இளையோர் அனுபவிக்கும் பொறாமை மனவெழுச்சியினைக் கட்டுப்படுத்த இடமுண்டு.

ஆலோசனை கூறி வழிகாட்டும் முறை (Counseling and guidance) மனவெழுச்சி வளர்ச்சியில் ஏற்படுத்தும் பலனை நிர்ணயிக்க, உயர்நிலைப்பள்ளி மாணவர்களின் குழு ஒன்றினுக்கு மூன்றாண்டு காலம்வரை, தீவிரமான தனிப்பட்ட ஆலோசனை கூறியும் வழிகாட்டியும் வந்தனர். இல்லம், கல்வி, தொழில் போன்ற வாழ்க்கைத் துறைகளில் மாணவர்களின் பொருத்தப்பாட்டில் ஏற்பட்ட பிரச்னைகளின்பால் இந்த ஆலோசனை கூறி வழிகாட்டு முறை கையாளப்பட்டது. இத்தகைய ஆலோசனை கூறி வழிகாட்டுமுறை, அம் மாணவர்கள் தங்களின் பிரச்சினைகளுக்குத் தாங்களே தீர்வு காண மிகவும் பயன்பட்டது எனக் கண்டறிந்தனர். ஆலோசனை கூறி வழி காட்டுதலானது நேராகவே ஒரு பிரச்சினைக்குத் தீர்வினை வழங்காவிடினும், இளையோன் தன் பிரச்சினைகளைப் பகுத்தாய்ந்து அவற்றைப் போக்கிக் கொள்ளத் துணையாயிருக்கின்றது. இந்த ஆலோசனை கூறி வழிகாட்டுதலுக்கு உள்ளாக்கப்பட்ட குழுவினை, ஆலோசனையும் வழிகாட்டுதலும் இல்லாத குழு ஒன்றினோடு ஒப்பிட்டுப் பார்த்தபோது வழிகாட்டுதலைப் பெற்ற குழு, கட்டுப்படுத்தப்பட்ட குழுவினைவிட குறிப்பிடத்தக்க அளவில் குறைந்த மனவெழுச்சிப் போராட்டங்களைக் கொண்டிருந்தது எனக் கண்டறியப்பட்டது. ஆதலால், பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் இளையோருக்கு ஆலோசனை கூறி வழிகாட்டுவோரை நியமித்து, இவர்களின் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணும் அறிவுரைகளை இவர்களுக்கு வழங்கச் செய்யவேண்டும். இளையோரின் பண்பட்ட மனவெழுச்சி வளர்ச்சிக்கு இது ஊன்றுகோலாக அமையும் என்பது திண்ணம்.

**அதிகாரச் சுருக்கம் :**

இளையோரின் மனவெழுச்சி வளர்ச்சி பற்றி அறிந்துகொள்வது மிக இன்றியமையாததாகும். ஏனெனில் மனிதனை பிற விலங்கினின்றும் வேறுபடுத்திக்காட்டுவது இவ்வளர்ச்சியேயாகும். ஒருவனுக்குச் சக்தியளிப்பதும், ஊக்கமளிப்பதும் இம்மனவெழுச்சிகளேயாகும். ஒருவன் மனவெழுச்சி பெறும்போது எண்ணற்ற

உடலியல் மாறுதல்கள் ஏற்படுகின்றன. இவ்வகையில் தானியங்கு நரம்பு மண்டலம் பெரும் பங்கினை வகிக்கிறது.

மனவெழுச்சியின்போது, முகபாவனை, குரல்ஒலி, குருதி அழுத்தம், இதய, நாடித்துடிப்புகள், சுவாசித்தல், செரிமானம் ஆகியவைகளில் மாற்றங்கள் ஏற்படுகின்றன. தசைகளின் விரைப்பும், நடுக்கமும், மயிர்க் கூச்செரிதலும் போன்ற எண்ணற்ற மாறுதல்கள் நிகழ்கின்றன.

உள் உறுப்புகளில் ஏற்படும் உடலியல் மாறுதல்கள் எவ்வகையான மனவெழுச்சியிலும் ஒரே மாதிரியான தன்மைகளைக் கொண்டுள்ளன. ஆனால் வயது அதிகரிக்க, அதிகரிக்க மனவெழுச்சிகளைத் தோற்றுவிக்கின்ற தூண்டல்களும், சூழ்நிலைகளும் அவற்றிற்கான துலங்கல்களும் வெளிப்பாடுகளும் மாற்றமடைகின்றன.

சாதகமற்ற குடும்ப உறவுகள், விரும்பியதைச் செய்வதில் ஏற்படும் தடைகள், நடத்தைகளில் முதிர்ந்த நிலையினை சமூகம் எதிர்பார்ப்பது, எதிர்பாலினருடன் பழகுவதில் ஏற்படும் சிரமங்கள், பள்ளி அல்லது கல்லூரி சார்ந்த பிரச்சினைகள், தொழிற் சம்மந்தமான பிரச்சினைகள், மதச்சம்மந்தமான ஐயங்கள் போன்றவை இளையோரிடத்து மனவெழுச்சிகளைத் தோற்றுவிக்கின்றன. இளையோன் தன்னிடம் தோன்றுகின்ற மனவெழுச்சிகளை உடனே வெளியில் காட்டக்கூடாது என எண்ணி, சூழ்நிலையையும், சமூகத் தன்மையையும் கருதி, மனதில் பொங்குகின்ற மனவெழுச்சிகளைச் சட்டென்று வெளிப்படுத்தாது, அவற்றைத் தனக்குள் புதைத்துக் கட்டுப்படுத்தி வைப்பதினால், அந்த மனவெழுச்சிகள் வெளிப்படும்வரை அவன் நீடித்த மன நிலையிலேயே காணப்படுகிறான்.

மனவெழுச்சிகள் அனைத்தையும், இனிமையானவை, இனிமையற்றவை என இருவகைப்படுத்தலாம். இனிமையற்ற மனவெழுச்சிகள் தனியனுக்கு மகிழ்ச்சியற்ற எதிர்வினைகளைத் தோற்றுவிக்கின்றன. அச்சம், கவலை, சினம், பொறாமை, வயிற்றெரிச்சல், சலிப்பு போன்றவை இத்தகையதாகும், இனிய அனுபவங்கள், மகிழ்ச்சி, களிப்பு, அன்பு போன்ற மனவெழுச்சி எதிர்வினைகளைத் தோற்றுவிக்கின்றன. இவை அன்றாட நடத்தைகளை ஊக்குவிக்கின்ற உந்துக்களில் முக்கியத்துவம் வாய்ந்தவைகளாய் இருப்பினும் இவைகளைப் பற்றி ஆராய்வது கடினமானதாகும்.

சமூகத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகவும், மனப் பான்மைகளிலும், நடத்தையிலும் ஏற்படும் தீமைகளைக் களைவதற்

கும், மனவெழுச்சிகளையும் அவற்றின் வெளிப்பாடுகளையும் கட்டுப்படுத்துவது அவசியமாகும். ஐம்புலன்களையும் அடக்கி ஆளத் தெரிந்தவன் வாழ்வில் மேம்பாடடைவான் என்பது வள்ளுவர் வாக்காகும்.

மனவெழுச்சிகளுக்குப் பல்வகையிலும் ஆளாகின்ற இளையோருக்கு ஆசிரியர்களும், பெற்றோர்களும் உதவவேண்டும். இப்பருவத்திற்குரிய மாற்றங்களைக் கொண்ட நடத்தை இயல்பினையும், ஊக்கிகளையும் அவர்களைச் சரிவரப் புரிந்துகொள்ள உதவுவதன் மூலம் வன்மையான மனவெழுச்சிகளைக் கட்டுப்படுத்த வழி வகுக்கலாம். ஆலோசனை கூறி வழிகாட்டுவோரின் அவசியத்தினை சோதனைகள் பல நிருபித்துள்ளன. எனவே பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் இளையோருக்கு ஆலோசனை கூறி வழிகாட்டுவோரை நியமித்து, இவர்களின் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணும் அறிவுரைகளை வழங்கச் செய்தல் நலம் பயக்கும்.

# 5. சமூக வளர்ச்சி

## (Social Development)

கடந்த காலத்தில் தனக்கு நேர்ந்த அனுபவங்கள், மாற்றங்கள் ஆகியவற்றின் கூட்டுவிளைவே தனியன் ஆவான். எனவே பிறருடன் ஒருவன் நடந்துகொள்ளும் விதம் பற்றியும், அவன் தன் நடத்தையில் ஏற்படுத்திக்கொள்ளும் மாற்றங்கள் பற்றியும், அவனது சமூகப் பொருத்தப்பாடு போன்றவற்றைப் பற்றியும், அவனது குண நலன்கள் பற்றியும் நாம் அறிந்துகொள்வதற்கு, அவன் வளர்ந்து வந்த சமூகச் சூழ்நிலைகளைப் பற்றியும், அவைகளோடு இவன் கொண்டுள்ள இடை வினைகளைப்பற்றியும் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும்.

இவ்வாறு தனி மனிதன் உருவாவதும், அவனது நடத்தை முறைகள் நிலைபெறுவதும் அவன் சார்ந்திருக்கும் சமூகத்தினைத் தழுவியே நடைபெறுகின்றன. தன் சமூகத்தின் தன்மைகளால் பாதிக்கப்பட்டோ ஊக்குவிக்கப்புட்டோ அவனது ஆளுமைத் தன்மைகள் நிலைநிறுத்தப்படுகின்றன. எனவே, இளையோரைப் பற்றி அறிய, அவர்களின் சமூக வளர்ச்சியைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும்,

குழந்தையாய் இருந்த தனியனை சமூகத்தில் ஒரு முதிர்ந்த மனிதனாகச் செயலாற்றுவதற்கு இளையோர் பருவம் பயிற்சியினைத் தருகின்றது. தனியன் குழந்தைப் பருவத்திலேயே ஓரளவிற்குச் சமூகப்படுத்தப்பட்டு, தன் சம வயதினருடனும், எதிர்பாலினருடனும் எல்லாவிதமான சூழ்நிலையிலும் கலந்து, பழகக் கற்றுக்கொள்கின்றான். எனினும், தன் சம வயது எதிர்பாலினரிடமும், தன் வீட்டிலில்லாத மற்ற முதிர்ந்தோரிடமும் எப்படி நடந்து கொள்வது என்பதனை அவன் இன்னும் சரிவரக் கற்றுக் கொள்ளவில்லை.

ஆதலால் இவற்றைக் கற்றுக்கொள்வதே பெரும்பாலும் இளை யோர் பருவத்துச் சமூக வளர்ச்சியின் குறிக்கோளாகும்.

**சமூகப்படுத்துதல் (Socialization) :**

சமூகப்படுத்துதல் என்பது சமூகத்தின் நியதிகள், சட்ட திட்டங்கள், வழக்கங்களுடன் ஒருவன் இயைந்து நடக்கக் கற்றுக் கொள்வதாகும். நன்கு சமூகப்படுத்தப்பட்டவன் சமூகத்தின் பால் ஒருவகை ஒன்றிய உணர்வினையும், சமூகத்தினரிடம் தாராள மான பேச்சு, போக்குவரத்துத் தொடர்பினையும், மற்றவர்களு டன் ஒத்துழைக்கும் தன்மையினையும் கொண்டிருப்பான். இவ் வாறு, சிறந்த சமூகப் பொருத்தப்பாட்டினைக் கொண்டிருப்பது எந்த வயதிலும், மிக முக்கியமானதாகும். இதன் முக்கியத்துவம் இளையோர் பருவத்தில் மேலும் இன்றியமையாததாகும். ஏனெ னில் இளையோன், தன்னிடத்து ஏற்படும் பாதுகாப்பில்லா உணர் வினை வென்று, தன்னம்பிக்கையினை வளர்த்துக் கொள்வதற்குச் சமூக நடவடிக்கைகளில் சிறந்து விளங்குவது அவசியமாகும். மேலும் இப் பருவத்தில் அவன் கொண்டுள்ள சமூகப் பொருத்தப்பாடு, முதிர்ந்த பருவத்தில் அவனுடைய சமூக வாழ்க்கை எவ்விதம் அமையும் என்பதனைத் தீர்மானிக்கின்றது. ஆதலால், இளை யோன் தன் சமூக வாழ்க்கையில் எவ்வாறு சிறந்து விளங்குகின் றானோ, அவ்வாறே பிற்காலத்தில் அவனுடைய சமூக வாழ்க்கை யும் சுமூகமாக அமையும்.

ஒருவன் தன் சமூகத்தினரிடம் நன்கு பொருந்திச் செல்ல வேண்டுமானால் அவன் மற்றவர்களின் எண்ணங்களையும், உணர்ச்சிகளையும், நடத்தைகளையும் புரிந்துகொண்டு அவற்றை முன்னறிந்து நடந்துகொள்ளும் திறமையினைப் பெற்றிருக்க வேண்டும். ஆதலால், இதற்குரிய சமூகத் திறமைகளையும், வழி முறைகளையும், தன் சமூகத்தின் நியதிகளையும், தடைகளையும், மனப்பாங்குகளையும் பயன் மதிப்புகளையும் இப்பொழுது இளை யோன் கற்று, அவைகளைத் தனதாக்கிக்கொண்டு, அவற்றைப் பின்பற்றவேண்டியது அவசியமாகும். இவற்றை மேற்கொண் டால்தான் அவனுக்குச் சமூகத்தில் தனக்குரிய அடையாள உணர்வு (Sence of Personal Identity) ஏற்படுகின்றது. பொது வாக, ஒருவனின் சமூகப் பொருத்தப்பாட்டின் இயல்பினை, அவன் ஈடுபடும் சமூக நடவடிக்கைகளின் தொகையின் அடிப்படையில் கணிக்கலாம். ஏனெனில், சமூகப் பொருத்தப்பாட்டில் சிறந்து விளங்குபவன், சமூக நடவடிக்கைகளில் மிகுந்த ஆர்வங்கொண் டிருப்பான். எனினும், சிறந்த பொருத்தப்பாடுடையவன் சமூக நடவடிக்கைகளில் பெருமளவில் பங்குகொள்ளவேண்டும் என்பது

அவசியமல்ல. ஆயினும் சமூக முதிர்ச்சியே சிறந்த சமூகப் பொருத்தப்பாட்டின் அறிகுறியாகும்.

இளையோனின் சமூகவளர்ச்சி குழந்தைப் பருவத்திலேயே தொடங்கியதாகும். ஒரு குழந்தை தன் சமூகத்தினைச் சார்ந்தவர்களால் நேசிக்கப்பட்டும், விரும்பப்பட்டும் இருக்கும் நிலையில் தான் அவன் அச்சமூகத்தைச் சார்ந்தவன் என்ற உணர்வைப் பெற்று, பாதுகாப்புணர்வினையும், மகிழ்ச்சியினையும் பெறுகின்றான். இதற்கு நேர்மாறாக, மற்றவர்கள் அவனைப் புறக்கணித்தும், பொருட்படுத்தாதும் நடந்துகொள்ளும் நிலையில், அவனிடம் மிக விரைவில் பாதுகாப்பற்ற உணர்ச்சி தோன்றுகின்றது. எனவே, இப்பொழுது இளையோர் பருவத்தின் புதிய தூண்டுதல்களுக்கும் தேவைகளுக்கும் எவ்வாறு தனியன் பொருந்தி நடப்பான் என்பது, இதற்கு முற்பட்ட அவனது சமூக அனுபவங்களையும், அவற்றின் விளைவால் அவனிடம் வளர்ந்திருக்கும் மனப்பாங்குகளையும் பொறுத்துள்ளது.

**இல்லத் தொடர்புகள் :**

தனியன் சமூகப்படுத்தப்படுவதற்கு இல்லமே மிகச் சிறந்த அமைப்பாகும். குழந்தையானது இல்லத்தில் பிறருடன் உறவு கொண்டு, தன் குடும்பத்தில் நிலவும் நடத்தைக் கோலங்களைப் பயில்கின்றான். தனியனின் சமூகப் பொருத்தப்பாட்டில் சிக்கல்களும் பிரச்சினைகளும் ஏற்படுவதற்குப் பெற்றோர்களின் புறக்கணிப்பு (Rejection), அளவிற்கு மீறிய செல்லம் (Pampering), உடன்பிறந்தோர்களின் போட்டி மனப்பாங்கு, சமநிலையற்ற தன்மை, குடும்பத்தின் பொருளாதாரச் சிரமங்கள், பெற்றோர்களின் மணவிலக்கு, சீர்கேடான உடல்நிலை போன்றவை காரணங்களாக உள்ளன. இந்தக் காரணங்களில் மிக முக்கியமானது பெற்றோர்களின் புறக்கணிப்பேயாகும். ஒரு குழந்தை பெரும் தொல்லைகளுக்கும், வியாதிகளுக்கும், துன்பங்களுக்கும் உள்ளாக நேரிட்டாலும், பெற்றோர்களின் அன்பு அதற்கு நன்கு கிடைக்குமேயானால், சமூகத்தோடு நன்கு பொருந்தி நடக்கும் தன்மையினைப் பெற்றிருக்கும். ஆதலால் பெற்றோரின் அன்பும், அதற்கெதிராக அவர்களின் புறக்கணிப்பும் குழந்தையின் சமூகப் பொருத்தப்பாட்டில் பெரும்பங்கினைக் கொண்டுள்ளன. எனவே இளம் வயதிலேயே ஒரு தனியன் சமூக வளர்ச்சி பெறுவதற்கு உதவ வேண்டியது குடும்பத்தினரின் தலையாய கடமையாகும். சாதகமான பண்பாட்டுத் தன்மையினையும், பொருளாதார நிலையினையும் கொண்ட குடும்பத்துப் பிள்ளைகள் மிக விரைவில் பிறருடன் கலந்து பழகக் கற்றுக்கொள்கின்றனர். ஆனால், அவ்வாறு

இல்லாது, தடைகளையும் கட்டுப்பாடுகளையும் மிகையாகக் கொண்ட குடும்பத்தின் பிள்ளைகள் சமூக வளர்ச்சியில் பின்தங்கிப் பிறரோடு பொருந்தி நடப்பதில் இன்னலுறுகின்றனர்.

முதிர்ந்தோர் வலியுறுத்தும் நடத்தை நியதிகளுக்கு எதிரான நடத்தை, குழந்தைப் பருவத்தின் பிற்பகுதியில் தொடங்கி, இளையோர் பருவத்திலும் நீடித்து நிலவுகின்றது. இதன் விளைவாக இளையோருக்கும், பெற்றோர்களுக்கும் இடையே உண்டாகும் கருத்து வேறுபாடுகள், இல்லத்தில் சிக்கல்களை உண்டாக்குகின்றன. இத்தகைய கருத்து வேறுபாடுகள், சச்சரவுகள், முக்கியத்துவமற்ற சிறு விஷயங்களில்தான் பெரும்பாலும் ஏற்படுகின்றன. இங்ஙனம் பெற்றோர்—பிள்ளைகளின் உறவில் ஏற்படும் சச்சரவுகள் இளையோரின் பொருத்தப்பாடுகளைப் பெரிதும் பாதிக்கின்றன என்று சமீப கால ஆய்வுகளின் முடிவுகள் வலியுறுத்தியுள்ளன. தனியன் தான் குழந்தையாய் இருக்கும்போது நல்ல பொருத்தப்பாடுகளைக் கொண்டிருந்தால், இளையோர் பருவத்திலும் அவன் நல்ல பொருத்தப்பாடுகளைக் கொண்டு விளங்குவான். மாறாக, அவன் தன் குழந்தைப் பருவத்தில் பிரச்சினைகளுக்கிடையில் அகப்பட்டுத் தத்தளித்துக் கொண்டிருந்தவனாக இருப்பின், இளையோர் பருவத்தில் அத்தகைய பிரச்சினைகள் அடிக்கடி வெடித்து அவனுடைய பொருத்தப்பாட்டில் சிக்கலை உண்டாக்கும்.

பொருத்தப்பாட்டுச் சிக்கலுக்கான காரணங்கள் :

இல்லத்தில் பெற்றோர்-இளையோர் உறவில் ஏற்படும் சிக்கல்களுக்கான காரணங்களைக் கண்டறியும் பொருட்டு எண்ணற்ற ஆய்வுகள் நடத்தப்பட்டன. இத்துறையில் பிளாக் என்பார் (Block) 528 உயர்நிலைப்பள்ளி மாணவர்களைக் கேள்வி நிரல் முறையில் ஆராய்ந்தார். அவர் கண்டறிந்தவைகளைப் பொறுத்த வரை, இல்லப் போராட்டங்கள் (Home conflicts) கருத்து வேறுபாடுகளின் அடிப்படையில் பெரும்பாலும் உண்டாகின்றன. இக்கருத்து வேறுபாடுகள் நான்கு விஷயங்களில், பெற்றோர்களிடமிருந்து முரண்பட்ட கருத்தினை இளையோர் கொண்டிருப்பதால் ஏற்படுவனவாகவுள்ளன. அவை : (1) இளையோர் தம் தோற்றத்தைப் பற்றியும், பழக்க வழக்கங்களைப் பற்றியும் பெற்றோர்களிடமிருந்து முரண்பட்ட கருத்தினைக் கொண்டிருத்தல், (2) இளையோர் தம் கல்வி, தொழில், சமூக, ஓய்வு நேர நடவடிக்கைகளில் ஈடுபடத் தம்முடைய விருப்பம்போல் செய்வதில் பெற்றோர்களிடமிருந்து மாறுபட்ட கருத்தினைப் பெற்றிருத்தல், (3) ஓர் இலக்கினை அடைவதற்கு வழியாக விளங்கும் மனப்பாங்குகள், பயன் மதிப்புக்கள்

நடவடிக்கைகள் ஆகியவற்றின்பால் பெற்றோர்களிடமிருந்து மாறுபாடான கருத்தினைக் கொண்டிருத்தல், (4) ஒருசில ஓய்வுநேர உடற்பயிற்சி சார்ந்த நடவடிக்கைகளில் கழிப்பது பற்றி பெற்றோர்களிடமிருந்து முரண்பட்ட கருத்துக் கோட்பாட்டினைப் பெற்றிருத்தல் ஆகியவையாகும். பெண்பிள்ளைகள் 13, 14 வயதுகளில் பெரும்பாலான இல்லப் போராட்டங்களைக் காணுகையில், ஆண் பிள்ளைகள் இதற்கு ஓராண்டிற்குப் பின்னரே இத்தகைய போராட்டங்களை இல்லத்தில் காண்கின்றனர். இந்த வயதிற்குப் பின்னர், இருபாலினருக்கும் இல்லப் போராட்டங்கள் குறைந்து விடுகின்றன. இதற்கு மாறாக, ஸ்டாட் என்பார் (Stott) பெரும்பாலான இளையோர் இந்தப் போராட்டங்களைத் தவிர்க்கும் நோக்கில், தங்கள் குடும்பச் சூழ்நிலையை மனமார ஏற்றுக்கொள்கின்றனர் அல்லது தங்கள் குடும்பச் சூழ்நிலையைப் பற்றிப் பிறரிடம் குறைகூறாது இருக்கின்றனர் என்று கூறுகின்றார். இதைப்பற்றி அவர் கேள்வி நிரல் முறையில் ஆய்ந்ததில், 35·9 சதவீதத்தினர் மட்டுமே தங்கள் தாயாரின் நடத்தைகளைப் பற்றிக் குறை கூறினர் என்றும், 34·2 சதவீதத்தினர் மட்டுமே தங்கள் தந்தையின் நடத்தையைப் பற்றிக் குறை கூறினர் என்றும் அவர் கண்டறிந்தார். ஆதலால் மூன்றில் இரண்டு பங்கு இளையோர் தங்கள் இல்லத்தில் தீவிரமான கடினங்கள், பிரச்சினைகள் எதையும் கொண்டிருக்கவில்லை என்பது தெளிவாகின்றது.

ஆர்லிட் என்பார் (Arlitt) இல்லப் பிரச்சினைகளைப் பற்றி மற்றொரு முறையில் ஆராய்ந்தார். இளையோர் காணும் இல்லப் போராட்டங்களைப் பற்றி அவர்களையே கேட்டறிவதற்குப் பதிலாக, பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளின் நடத்தைகளைப் பற்றி என்ன நினைக்கின்றனர் என்பதை இவர் ஆராய்ந்தார். இதில் கீழ்ப்படியாமை, சுத்தமின்மை (Untidiness), மட்டுமதிப்பற்ற தன்மை (Impertinence) எதிர்த்துப் பேசுதல் (Talking back) ஆகியவை பெற்றோர்களின் மனக்குறைகளில் முக்கியமானவையாக இருந்தன. இந்த உண்மை, பெற்றோரின் ஆதரவில் இருக்கும் வரை இளையோர் அவர்களை ஏன், எதற்கு என்று கேளாது அவர்களுக்கு அடங்கிக் கீழ்படிந்து (Implicit obedience) நடக்கவேண்டும் என எதிர்பார்க்கும் முந்திய தலைமுறையினரின் கருத்தினை ஆதரிப்பதாக உள்ளது. ஆர்லிட் கண்டறிந்த இந்த உண்மையை மற்ற ஆராய்ச்சியாளர்களும் உறுதிப்படுத்தியுள்ளனர்.

**இளையோர்களின் சமூகக் குழுக்கள் (Adolescents' Social groups) :**

இளையோர் பருவத்தில் பல்வகை சமூக அமைப்புகள் உருவாகின்றன. இவ்வமைப்புகள் இளையோரின் சமூக வளர்ச்சியில் மிக

முக்கியமான பங்கினை வகிக்கின்றன. தனியன் தன் குடும்பத்தினரிடமிருந்தும், சுற்றத்தினரிடமிருந்தும் உணவு, உடை, பழக்க வழக்கங்களைப் பற்றிய ஒருசில நடத்தை முறைகளைத்தான் கற்றுத் தேறுகின்றான். பின்னர், அவன் தனக்கு உகந்த ஒரு குழுவினருடன் தன்னை இணைத்துக்கொண்டு, அதன் வாயிலாகவே சமூகப் பழக்க வழக்கங்கள், நடந்துகொள்ளும் முறைகள், பிறருடன் உரையாடும் முறைகள் போன்ற பல சமூகத் திறமைகளை அடையப் பெறுகின்றான். இவற்றின் மூலம் இளையோர் எதிர்பாலினரோடு பழகவும், சமூக மனப்பாங்குகளையும், பயன் மதிப்புகளையும் பற்றி அறிந்துகொள்ளவும் கற்றுக்கொள்கின்றனர். எனவே, இளையோர் ஏற்படுத்திக்கொள்ளும் சமூக அமைப்புகள் சிலவற்றைப் பற்றிக் கீழே விவரித்துள்ளோம்.

**கூட்டம் (The crowd) :**

இளையோரின் மிகப்பெரிய சமூகத் தொகுதி கூட்டம் எனப்படும். இது பின்குழந்தைப் பருவத்துக் கூட்டாளிக் குழுவிலிருந்து பெரும்பாலும் வேறுபட்டது. எனவே, பின்குழந்தைப் பருவத்துக் கூட்டாளிக் குழுவிற்கும், இளையோர் பருவத்துக் கூட்டத்திற்கும் இடையேயுள்ள வேறுபாடுகளை நாம் இங்கு காண்போம்: 1. குழந்தைப் பருவத்துக் கூட்டாளிக் குழுக்கள் அருகாமை நிலைத் தன்மையின் (Propinquity) அடிப்படையில் இயல்பாக உண்டாகின்றன. ஆனால் இளையோரின் கூட்டம், பொதுப்படையான ஆர்வங்கள், சமூகப் பொருளாதார நிலை, ஒத்துணர்வு, கவர்ச்சிகரமான தோற்றங்கள் ஆகியவற்றின் அடிப்படையில், கவனத்துடன் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டதாகும். மேலும் இதன் உறுப்பினர்கள் பெரும்பாலும் ஒருவருக்கொருவர் தொலைவில் வாழ்பவர்களாக இருப்பர். 2. குழந்தைப் பருவத்துக் கூட்டாளிக் குழு ஒரே பாலினத்தைச் சார்ந்த உறுப்பினர்களைக் கொண்டதாகும். ஆனால் இளையோரின் கூட்டம் இருபாலினர்களையும் கொண்டிருக்கும். 3. குழந்தைப் பருவத்துக் கூட்டாளிக் குழு சில உறுப்பினர்களைக் கொண்ட ஒரு சிறிய அமைப்பாகும். ஆனால் இளையோரின் கூட்டம் பெரிதானது. அதன் உறுப்பினர்களின் எண்ணிக்கை மாறுபட்டதாகவும், பொதுவாக அதிகமாகவும் இருக்கும். 4. குழந்தைப் பருவத்துக் கூட்டாளிக் குழு உணர்ச்சியூக்கத்தினையுண்டாக்குகின்ற துணிச்சல் மிகுந்த உடல் சார்ந்த நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றது. ஆனால் இளையோரின் கூட்டமானது சமூக நடவடிக்கைகளில் ஈடுபடுவதாகும். 5. கூட்டாளிக் குழு அதன் உள்ளமைப்பில் நன்கு இணைக்கப்பட்டிருக்காது. ஆனால் இளையோரின் கூட்டமானது பொதுப்படையான ஆர்வங்களின் அடிப்படையில் நன்கு இணைக்

சுப்பட்டிருக்கும். 6. குழந்தைப் பருவத்துக் கூட்டாளிக் குழு, சுயநல உந்துக்களால் ஊக்குவிக்கப்படுவதால், அது காவல்துறை யினரிடம் கட்டுப்பாடுகளில் அடிக்கடி சிக்கிக்கொள்ளும். ஆனால் இளையோரின் கூட்டம், பெற்றோர்களால் அங்கீகரிக்கப்படா விடினும், தீமையற்றதாகவே பெரும்பாலும் காணப்படுகின்றது.

இளையோரின் குழுக்கள் பொழுது போக்கு நோக்கத்தின் பொருட்டு மட்டுமின்றி வேறு நோக்கங்களின் பொருட்டும் பயன் படுகின்றன. முதலில், முதிர்ந்தோரின் துணையினையும், தனக்கு இளையவர்களின் நட்பினையும் வெகுவாகப் பொருட்படுத்தாத இப் பருவத்தில், அவனுக்குத் தேவையான பாதுகாப்பு உணர்வினை இக்குழுக்கள் அளிக்கின்றன. இரண்டாவதாக, இளையோன் பிறருடன் கலந்து பழகுவதற்கும், அவர்களைச் சரியாகக் கணிப்ப தற்கும் ஏற்ற வாய்ப்புகளையும் அனுபவங்களையும் இவை அளிக் கின்றன. மூன்றாவதாக, பல்வகை சமூகத் திறமைகளில் இளை யோன் நன்கு பயிற்சி பெறுவதற்குத் தேவையான வாய்ப்புகளை யும் இவை அளிக்கின்றன. இறுதியில், காதல், பற்றுறுதி, புரிந்து கொள்ளும் தன்மை, சகிப்புத்தன்மை ஆகியவை இளையோனிடத்து ஏற்படுவதற்கு இவை அடிப்படையாக அமைகின்றன. இந்த வகைகளில் இளையோரின் கூட்டங்கள் பயனுள்ளதாய் இருப் பினும், சில விரும்பத்தகாத தன்மைகளையும் அவை கொண்டுள் ளன. அவை குறுகிய மனப்பான்மையினையும், போலி நாகரீகப் பகட்டினையும் (Snobbery) இளையோரிடம் ஊக்குவிப்பதால், இக் கூட்டங்களைச் சார்ந்தில்லாதவர்கள் இவர்களுடன் பொருந்தி நடப்பது மிகவும் கடினமாகிவிடுகின்றது. மேலும், கூட்டங்கள், படிப்பிலும், ஏனையப் பணிகளிலும் தீங்கினை விளைவிக்கின்றன. எனினும், இளையோரின் கூட்டங்கள், அவற்றிற்கே உரிய நடை, உடை, பாவனை, நாகரீக மோகங்களுடனும், ஆர்வங்களுடனும், அமையப் பெற்றிருப்பதோடு அதனைச் சார்ந்தோர், சாராதோர் நடத்தைகளையும் பெரிதும் பாதிக்கின்றன. கூட்டங்கள், இளை யோரிடம் காணப்படும் ஒத்தொழுகும் எண்ணத்தினையும், தம் வய தினரிலிருந்து வேறுபட்டு இருப்பதன் பயத்தினையும் பிரதிபலிக் கின்றன.

உட்குழு (Clique) :

இளையோரின் கூட்டங்கள், பொதுவாக, சிறு குழுக்களைக் கொண்ட தொகுப்புகளாகும். இச்சிறு குழுக்கள் உட்குழுக்கள் எனப்படும். இளையோரின் உட்குழுக்கள் பின்குழந்தைப் பரு வத்துச் சிறுமியரின் கூட்டாளிக் குழுவிலிருந்து (Female Gang) வேறுபட்டதாகும். பொதுப்படையான ஆர்வங்கள், விருப்பு,

வெறுப்புகள், சமூகத்தரம், ஆகியவைகளின் அடிப்படையில், இரு பாலினத்தையும் சார்ந்த நெருங்கிய நண்பர்களைத் தன்னுள் ஒருங்கே கொண்ட ஒரு சமூக அமைப்பு உட்குழுவாகும். உட் குழுக்கள், பொதுவாக, தீவிரமான மனவெழுச்சிகளின் அடிப் படையில் ஒன்றிணைக்கப்பட்டவை. ஹாலிங்ஸ் ஹெட் என்பார் (Hollings Head) உட்குழுக்களை மூன்று வகைகளாகப் பிரித்துள் ளார். அவை (1) பள்ளி உட்குழுக்கள் (School Cliques) (2) பொழுதுபோக்கு உட்குழுக்கள் (Recreational Cliques) (3) நிறு வன உட்குழுக்கள் (Institutional Cliques) என்பனவாகும். பள்ளி உட்குழுக்கள், பள்ளி எல்லைக்குள், வகுப்புக்களுக்கிடையிலோ அல்லது வகுப்பு நேரங்களுக்குப் பிறகோ ஆர்வமுள்ள நடவடிக்கை களில் ஈடுபட்டிருக்கும். பொழுதுபோக்கு உட்குழுக்கள் விளை யாட்டிற்காகவோ பொழுதுபோக்கு நடவடிக்கைகளுக்காகவோ ஒன்று சேர்ந்துள்ள இளையோர்களைக் கொண்டது. நிறுவன உட் குழுக்கள் முறைப்படியான அமைப்பினையும் தலைவர்களையும் கொண்டதாகும். சான்றாக, சமூக சேவையில் ஆர்வங்கொண் டிருக்கின்ற இளையோர் அதற்கான வாய்ப்பினையளிக்கின்ற சமூகப் பணி மன்றங்களில் (Social Service Leagues) அங்கத்தினர்களாகி, அவைகளின் மூலம் சமூகப் பணியினை ஆற்றலாம்.

கூட்டாளிக் குழு (Gang) :

இளையோரின் கூட்டாளிக் குழுக்கள் பின்குழந்தைப் பருவத் துக் கூட்டாளிக் குழுக்களிலிருந்து வேறுபட்டதாகும். இளை யோரின் கூட்டாளிக் குழுக்கள், அவர்களின் கூட்டங்களையும், உட் குழுக்களையும் விட ஒருமுகப் படுத்தப்பட்டவையாகும். இவை சச்சரவுகள், மன விரைப்புகளின் அடிப்படையில் உண்டாவன வாகும். ஆதலால், இவைகளைச் சார்ந்தோர், காவல் துறையின ருடனும் ஏனைய அதிகாரிகளுடனும் இடர்ப்பாடுகளில் சிக்கிக்கொள் கின்றனர். இவற்றில் பற்றுறுதி மிகுந்து காணப்படும். ஏனெ னில் பொதுப்பகையான ஆபத்துக்களை வெல்வதற்கு பற்றுறுதி யானது மிகவும் பயனுள்ளதாய் இருக்கின்றது. இக்குழுக்கள் சாதி சமயங்களின் சிக்கல்களுக்கு ஆளானவர்களாலும், இல் லத்தில் உடன்பாடின்றி ஒருவரையொருவர் புரிந்துகொள்ளாதவர் களாலும் தோற்றுவிக்கப்படுகின்றன. எனவே இத்தகைய கூட் டாளிக் குழுக்கள் வெகுவாகக் காணப்படுவது பொழுதுபோக்கு வசதிகள் குறைந்த நகரப் பகுதிகளில்தான். அவைகள், இருப்பிடத் தின் காரணத்தினாலும், குடும்பத்தோடும், சமூகத்தோடும் இயைந்து நடக்காத காரணத்தினாலும், வன்முறைத் தாக்குதல் களிலும், இளம் குற்ற நடத்தைகளிலும் (Delinquency) ஈடுபடு கின்றன.

ஒத்தொழுகும் ஆவல் (Desire for Conformity) :

இளையோரின் குழுக்களின் தோற்றமும், அமைப்பும் அவர்களின் நடத்தைகளை வெகுவாகப் பாதிப்பனவாகவுள்ளன. உட்குழுக்கள், கூட்டங்கள், கூட்டாளிக் குழுக்கள் ஆகியவற்றைச் சார்ந்த இளையோர் தங்கள் குடும்பத்தின் பயன் மதிப்புகளைவிட சம வயதுக்குழுவினரின் பயன் மதிப்புகளையே அதிகமாக மதிக்கின்றனர். இப்பருவத்தில் ஒரு தனியன் தன் குழுவின் வழிமுறைகளுடனும் கருத்துகளுடனும் எந்த அளவிற்கு ஒத்தொழுகுகின்றானோ அந்த அளவிற்கே அவனது சம வயதுக் குழு, அவனை ஏற்கவோ, விலக்கவோ செய்யும். எனவே, குழுவினருடன் ஒத்தொழுகுவதிலும், குழுவிலிருந்து வேறுபட்டு இருப்பதனைத் தவிர்ப்பதிலும் இளையோர் மிகுந்த அக்கறையினைக் கொள்கின்றனர். ஆகவே, இளையோன், பொதுவில், குழுவினுடன் ஒத்தொழுகுவதற்கான உந்துக்களுக்கு அடிமையாகி விடுகின்றான். சான்றாக, அவன் குழு உயர்ந்த நோக்கங்களை வெறுத்தால், அவனும் அவைகளை வெறுக்க விழைகின்றான். தன் குழு இரவில் நேரங்கழித்து, தாமதித்து வீட்டிற்குத் திரும்புவதை வழக்கமாகக் கொண்டால், அவனும் அதைப் பின்பற்றவேண்டியவனாகின்றான். இதைப்போன்றே தன் குழு எதற்கும் வாக்குறுதி செய்வதிலும், கொச்சைச் சொற்களை (Slang) உபயோகிப்பதிலும் ஈடுபட்டால், அவனும் இவ்வகைப் பழக்கங்களை மேற்கொள்கின்றான். ஆதலால் குழுவின் நடத்தை அமைப்பு இளையோரின் வாழ்க்கையில் முக்கியத்துவம் மிக்கதாக மாறிவிடுகின்றது. இதனால், அந்தக் கோலத்துடன் ஒத்தொழுகத் தவறுபவர்கள் குழுவிலிருந்தே நீக்கப்படுகின்றனர். இவ்வாறு குழுவிலிருந்து விலக்கப்படுவதை இளையோர் விரும்புவதில்லை. எனவே குழுவினருடன் ஒத்தொழுகும் மனப்பாங்கு, இளையோர் பருவத்தில் காணப்படும் எல்லா வகை நடத்தைகளையும் விடத் தலையாயதாகக் காணப்படுகின்றது.

இளையோரிடை நட்பு :

தனியன் தான் சிறுவயதில் தேர்ந்தெடுத்துப் பழகும் நண்பர்கள், குழுக்களின் தொடர்புகள் ஆகியவை அவனது சமூக அறிவினை வளர்க்கக் காரணமாயிருக்கின்றன. ஒருவன், தன் இளம் வயதில் எத்தகைய நண்பர்களாலும் குழுக்களாலும் தூண்டப்பட்டு, அறிவு வளர்ச்சியினைப் பெறுகின்றானோ, அதைப் பொறுத்தே அவனுடைய பிற்காலச் சமூக உணர்வும் அமையும். இதனை மனதிற்கொண்டே, கூலி என்பார் (Cooley) மனிதனது சிந்தனைகளும், எழுச்சிகளும், நடத்தைத் தன்மைகளும் அவன் சார்ந்துள்ள சமூகத்தின் கூட்டாளிகளைப் பொறுத்தே வளர்ச்சியடைகின்றன என்று

கருதுகின்றூர். நாம் ஒருவரைப் பற்றி நன்கு அறிந்துகொள்வ தற்கு, அவர் சார்ந்துள்ள சமூகச் சூழ்நிலையினையும், அவரது நண்பர்களையும் தெரிந்துகொள்வது ஓரளவிற்குப் பயனளிப்பதாய் அமையும். "உன் நண்பர்களைப் பற்றிச் சொல், நான் உன்னைப் பற்றிச் சொல்லுகின்றேன்" என்பது முதுமொழியன்றோ!

நட்பு ஏற்படுவதில் செல்வாக்குள்ள காரணிகள் (Factors influencing friendship) :

முன்னிளையோர் பருவத்தில், பாதுகாப்பற்ற உணர்வு ஒருவ னிடம் ஏற்படுவது இயற்கையென்பதால், எந்த நடவடிக்கைகளின் மூலம் தனியனுக்குப் பாதுகாப்புணர்வு கிட்டுமோ, அவற்றில் அவன் தன்னை வெகுவாக ஈடுபடுத்திக்கொள்ள முயற்சிப்பான். எனவே, எவரொருவரின் தொடர்பு தன்னிடம் பாதுகாப்புணர் வினைத் தோற்றுவிக்கின்றதோ அவரது நட்பினை நாடுகின்றான். பாதுகாப்புணர்வினைப் பெற்ற பின்னர், இளையோர் எதிர்பாலின ரோடு பழக முயற்சிக்கின்றனர். ஆனால், எதிர் பாலினரோடு பழகுவதில் இவர்கள் அனுபவமற்றிருப்பதால் இந்த நோக்கத்தின் பால் தங்களுக்குத் துணையாயிருப்பவர்களுடனும் இவர்கள் நட்புக் கொள்வர். எனவே, சமூகத் தொடர்பிலும், வாழ்க்கையிலும் ஒருவனுக்கு ஏற்படும் தேவைகளின் அடிப்படையில் நட்பு ஏற்படு கின்றது.

இல்வகையில், இளையோர் சிலருக்கு முக்கியமாகத் தேவை யுள்ளவை; பாதுகாப்புணர்வும், சார்புணர்வுமாகவும் (Belonging-ness) இருக்கலாம். சிலருக்கு ஆதிக்க உணர்வு (Dominance) தேவையாக இருக்கலாம். இத்தகையோர், தங்களைப் புகழ்ந்து, தங்கள் தலைமையினை அங்கீகரித்துக்கொண்டு தங்களின் தகுதியினை மக்களிடையே நிலைநாட்டுகின்றவர்களுடன் மிகுந்த நட்பினைக் கொள்வர். மேலும் குறைபாடுகள் சிலவற்றைப் பெற்றுள்ளவர் கள், அக்குறைபாடுகளற்று விரும்பத்தக்க பண்புகளை மிகையாகப் பெற்றிருக்கின்றவர்களுடன் நட்பினைக் கொள்வர். சான்றாக, விளையாட்டு நடவடிக்கைகளில் திறமை குன்றியவர்கள், அவை களில் மிகுந்த திறமையினையும் தேர்ச்சியினையும் பெற்றவர்களுடன் நட்பினைக் கொள்வதில், தங்களின் குறைபாடுகளை ஈடுசெய்யும் உணர்வினைப் பெறுவர். வகுப்பில், பாடத்தில் பின்தங்கியுள்ள வர்கள் நன்கு படிப்பவர்களுடன் நட்பினைக் கொள்வதில், தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளலாம். இவ்வாறே, அழகிய தோற்றமுடைய பெண்கள், கவர்ச்சியற்ற பெண்களுடன் கலந் திருக்க விரும்புவது, அவர்களுக்கிடையில் தங்கள் தோற்றமே கவர்ச்சிகரமாக இருக்கும் என்ற எண்ணத்தின் விளைவேயாகும்.

இதைப்போன்றே கவர்ச்சியற்ற பெண்கள், கவர்ச்சிமிகுந்த தோற்றமுடைய பெண்களுடன் பழக நாடுவது, அவர்களுடன் கலந்திருக்கையிலாவது, தாங்கள் ஆடவர்களின் கவனத்தைக் கவரலாம் என்ற அவாவினால்தான். ஆகவே, இளையோரின் தேவைகளின் அடிப்படையில் அவர்களது நட்பு ஏற்படுகின்றது என்பது தெளிவாகின்றது.

டிமாக் என்பார் (Dimock) 100 இணைந்த ஆண் நண்பர்களை ஆய்ந்ததில், அவர்களது நட்பிற்கான அடிப்படைக் காரணி அவர்களின் அருகாமை நிலையே (Propinquity) என்று கண்டறிந்தார். இந்த அருகாமை நிலையானது, ஒரே வகுப்பில் பயில்வதனாலோ, ஒரே பள்ளியில் படிப்பதாலோ, ஒரே வட்டாரத்தில் குடியிருப்பதாலோ ஏற்பட்டு இருந்தது. இத்துறையில் நடந்தேறிய ஏனைய ஆய்வுகளின் முடிவுகளும் அருகாமை நிலைக் காரணியினைப் பொறுத்தவரை ஒத்திருந்தன. ஜென்கின்ஸ் (Jenkins) எனும் அம்மையார் தன் ஆய்வில் நண்பர்களின் வயதிற்கிடையே உள்ள தொடர்பாடு எண் ·47 ஆக உள்ளதைக் கண்டதால், இளையோரிடையே நட்பு, பெரும்பாலும் ஒரு வருட வயது வேறுபாடு உடையவர்களுக்கிடையே ஏற்படுகின்றது என்ற முடிவினைத் தெரிவித்துள்ளார். வயது வேறுபாடுகள் அதிகமுடைய மூத்தவர்களுடனோ இளையவர்களுடனோ இளையோர் பெரும்பாலும் நட்பினைக் கொள்வதில்லை என்றும் இவர் கூறியிருக்கின்றார். மார்கன் (Morgan) கூக் (Cook), டிமாக், இன்னும் பல ஆராய்ச்சியாளர்களின் ஆய்வுகளில், நட்பிற்கும், சமூகப் பொருளாதாரத்திற்கும் இடையே மிகுந்த தொடர்பாடு உள்ளது தெரியவந்தது. மேலும், கூக் தன் சமூக அளவை ஆய்வில் ஒரே சமூகப் பொருளாதாரத் தரத்தைச் சார்ந்தவர்கள் தங்களுக்குள் ஒருவருக்கொருவரைத் தேர்ந்தெடுத்ததைக் கண்டறிந்தார்.

இளையோர் பருவத்து நண்பர்கள், ஒரே வகைப்பட்ட வாழ்க்கைப் பயன் மதிப்புகளைக் கொண்டவர்களாகவும், நாடுபவர்களாகவும் இருக்கின்றனர். நேர்மை, அநீதி பற்றிய கருத்துகளும் மனப்பாங்குகளும், இலட்சியங்களும் இளையோர் பருவத்து நண்பர்களில் பொதுவாக ஒத்திருக்கின்றன என்று கண்டறிந்தனர். குழந்தைகளை விட இளையோரிடம் ஒத்த பயன் மதிப்புகள் நிலவுவதால் அவர்களிடையே நட்பு ஏற்படுவதற்கும், அது நிலைத்திருப்பதற்கும் முக்கியமான காரணமாகும். எனினும், ஒரு பயன் மதிப்பில் ஒப்புடைமை மிகுந்து இருந்தால், மற்ற பயன் மதிப்புகளிலுள்ள வேறுபாட்டினை அது மறைத்துவிடலாம். ஆதலால், நட்பானது வெளிப்படையாயுள்ள பண்புகளிடையே இருக்கும்

ஒப்புடைமையினைப் பொறுத்து ஏற்படுவதல்ல. ஆனால், இளையோர் தங்கள் எதிர்காலத்தினைப் பற்றிய கருத்துகளையும், கனவுகளையும், எதிர் பார்ப்பவைகளையும் அடைவதற்கு நண்பர்கள் எந்த அள விற்குத் துணையாயிருக்கின்றனர் என்பதனைப் பொறுத்தே நட்பு ஏற்படுகின்றது.

மேலும், நட்பானது முரண்பட்ட ஆளுமைத் தன்மையுடை யவர்களைவிட ஒத்த ஆளுமைத் தன்மையுடையவர்களிடமே பெரும்பாலும் ஏற்படுகின்றது. சான்றாக, சிறந்த ஆளுமைத் தன்மையுடையவர்களிடையே நெருங்கிய நட்பு ஏற்படுகின்றது. இதைப் பற்றிய ஆய்வொன்றில், பின் இளையோரில் நட்பு உண் டாவதற்கான முக்கிய ஆளுமைத் தன்மைகளில் பற்றுறுதியும் (Loyalty) ஒன்றாகக் காணப்படுகிறது. ஆனால், மட்டு மீறிய உணர்ச்சிவயமாகும் தன்மை (Over Sensitiveness), வாயாடித் தன்மை, பாலின விஷயங்களில் தற்புகழ்ச்சி ஆகியவை இளையோர் தம் நண்பர்களிடம் மிகவும் வெறுக்கும் குணங்களாகக் காணப் பட்டன.

**நட்பில் பாலின வேறுபாடுகள் :**

ஒரே பாலினருக்கிடையில் ஏற்படும் நட்புகளைப் பற்றிய ஆய்வுகள், நட்பினை உண்டாக்கும் காரணிகளில் பாலின வேறு பாடுகளும் ஒன்று என்பதை வலியுறுத்துகின்றன. 'சிறுமியர் நண்பர் குழாம்' சிறுவர்—நண்பர் குழாமை விடத் தங்கள் அறிவில் ஒத்திருக்கின்ற சிறுமியரைக் கொண்டுள்ளதாக இருக்கிறது. நட் பினை ஏற்படுத்திக் கொள்வதில், சிறுவர்கள் சிறுமியர்களைப்போல், சமூகப் பொருளாதாரத் தரத்திற்கு முக்கியத்துவம் அளிப்பதில்லை. இதனால், வேறுபட்ட சமூகப் பொருளாதாரத் தரத்தைச் சார்ந்த நண்பர்களைச் சிறுவர்களிடையே மிகுதியாகக் காணலாம். இந்தப் பாலின வேறுபாடுகள், சிறுவர்கள், சிறுமியர்களைப் பற்றி வழக்க மாக நிலவும் ஆண்மை, பெண்மைக் கருத்துக்கோள்களை ஒத்திருக் கின்றன.

சிறுவர்களின் நட்பு சிறுமியர்களின் நட்பைவிட நீண்டகாலம் நிலைத்திருக்கின்றன, முதிய இளையோர், தம் பாலின நண்பர்களி டம் விரும்பும் குணத்தன்மைகளிலும், பாலின வேறுபாடுகளைக் காணலாம். ஆண் பிள்ளைகளால் முக்கியத்துவம் அளிக்கப்பட்ட குணநலன்கள் முறையே, நுண்ணறிவு, முகமலர்ச்சி, நட்புரிமை ஆகியவைகளாகும். பெண் பிள்ளைகளால் முக்கியத்துவம் கொடுக் கப்பட்டவை முறையே, நுண்ணறிவு, உதவும் தன்மை, பற்றுறுதி ஆகியவைகளாகும்.

சிறுவர்களும், சிறுமியர்களும், எதிர்பாலினரிடம் ஆர்வங் கொண்டு அவர்களுடன் மிகுதியாகப் பழகும்போது தங்களின் எதிர்பாலின நண்பர்கள் சில குணப்பண்புகளைப் பெற்றிருக்க வேண்டும் என விரும்புகின்றனர். எதிர்பாலின நண்பர்களை அவர்கள் நம்பிக்கைக்கு உரிய நண்பர்களாக எடுத்துக்கொள்வதில்லை. ஆனால் அவர்களை விளையாட்டு நண்பர்களாகவே கருதுகின்றனர். இளையோர் தங்கள் காதலர்களிடம் விரும்பும் பண்புகளைத் தங்களின் எதிர்பாலின நண்பர்களிடம் வலியுறுத்துவதில்லை. ஆனால் நட்பிற்கு உரிய குணப்பண்புகளை உடையவர்களையே இவர்கள் நண்பர்களாகக் கொள்வர். எனினும், பெரும்பாலானவர்கள் தங்கள் நண்பர்களிடம் விரும்பும் தன்மைகள் தங்கள் காதலர்களிடத்து விரும்பும் பண்புகளாகவே உள்ளன.

இளையோர், எதிர்பாலினருடன் நட்புக்கொள்ளும்போது, அத்தகைய நண்பர்களின் சமூகத் தரத்தைப் பற்றி அவர்களின் பெற்றோர்கள் வெகுவாக எண்ணிப் பார்க்கின்றனர். பெற்றோர்கள், இவ்வகை நட்புகள் திருமணத்தில் முடிந்துவிடுமோ என்ற கவலையினால் இந்த விஷயத்தில் மிகவும் அக்கறை கொள்கின்றனர். இதனால் இளையோரின் எதிர்பாலின நண்பர்கள், பெரும்பாலும் ஒரே சமூகத் தரத்தைச் சார்ந்தவர்களாகவே உள்ளனர். வேறுபட்ட சமூகத்தரத்தைச் சார்ந்த எதிர்பாலின நண்பர்கள், சிறுமியர்களைக் காட்டிலும் சிறுவர்களிடையே அதிகமாகக் காணப்படுகின்றனர். வேறுபட்ட சமூகத் தரத்தைச் சார்ந்தவர்களிடம் நட்பு ஏற்படும்போது, சிறுமியர், பெரும்பாலும், உயர்ந்த சமூகத் தரத்தைச் சார்ந்தவர்களோடு தான் நட்புக் கொள்கின்றனர். இதற்கு மாறாக, சிறுவர்கள் பெரும்பாலும் தங்களைவிட குறைந்த சமூகத் தரத்தைச் சார்ந்தவர்களிடையே நட்பினை ஏற்படுத்திக் கொள்கின்றனர்.

இளையோருக்கு நண்பர்கள் வெகுவாகத் தேவைப்படினும், அவர்கள் தங்கள் நண்பர்களிடம் பெரும்பாலும் நன்கு நடந்து கொள்வதில்லை. இவர்கள் தங்கள் நண்பர்களை நடத்தும் முறை நட்பு நீடிப்பதற்குத் துணையாக இருப்பதில்லை. இப்பருவத்தில் அவர்கள் நண்பர்களை நடத்தும் விதம், வேறு எந்தப் பருவத்தில் காணப்படினும் அதுவே நட்பு முறிவதற்குக் காரணமாக அமைந்துவிடும். குறிப்பாக, முன்னிளையோர் பருவத்தினரோ தங்களின் நண்பர்களிடம் நன்றாக நடந்து கொள்வதில்லை. எனினும், சமூக அறிவினையும், உள முதிர்ச்சியினையும் இவர்கள் பெறும்போது இவர்களின் நட்பு தொடர்ந்து நீடிக்கும் தன்மையினைப் பெறுகின்றது. இளையோர் தங்கள் இருபாலின நண்

பர்களைப்பற்றியும் கண்டிப்பான எண்ணங்களைக் கொண்டுள்ளனர். இவர்கள் அடிக்கடி ஒருவரையொருவர் மதித்துணர்ந்து நடப்பர்.

தங்கள் நண்பர்களின் நல்ல, கெட்ட குணங்களைப் பற்றி அதிகமாக இவர்கள் எடுத்துரைப்பர். தங்களின் நெருங்கிய நண்பர்களிடமும் தாங்கள் விரும்பாத குணங்களை அவர்கள் பெற்றிருப்பின் இவர்கள் தயக்கமில்லாமல் அவர்களுக்கு எடுத்துரைப்பர். இவ்வாறு, தங்களைப் பற்றிய கருத்துரைகளைப் பிறர் கட்டின்றி எடுத்துரைப்பதை இளையோர் சிலர் பொருட்படுத்தார். ஆனால், பெரும்பாலான இளையோர் இத்தகைய பழக்கங்களை வெறுக்கின்றனர். மேலும் இவ்வகைப் பழக்கங்களால்தான் நண்பர்களிடையே சண்டையும், சச்சரவும் ஏற்படுகின்றன.

சிறுவர்கள் தங்கள் நண்பர்களிடம் பற்றுறுதியாய் நடந்து கொள்வதைப்போன்று சிறுமியர்கள் நடந்துகொள்வதில்லை. ஒரு சிறுமி தன்னிடம் சொல்லப்பட்ட இரகசியத்தை, மிகச் சுலபமாகப் பிறரிடம் சொல்லிவிடுவாள். முடிந்தால், அதைத் தன்னுடைய காரியத்திற்காகவும் பயன்படுத்திக்கொள்ள முயற்சிப்பாள். இதற்கு மாறாக, சிறுவர்கள் தங்கள் நண்பர்களிடம் மிகுந்த பற்றுறுதியினையும், நம்பிக்கையினையும் கொண்டுள்ளனர். தங்களின் நெருக்கடியான நிலையில் அவர்களின் உதவியைத் தாங்கள் பெற முடியும் என்று இவர்கள் நம்புகின்றனர். எனினும், சிறுமியர்கள் தங்களின் சொந்த இரகசியங்களைத் தங்கள் நண்பர்களுடன் பரிமாறிக் கொள்கின்ற அளவிற்குச் சிறுவர்கள் செய்வதில்லை.

பூப்பெய்தும் காலத்தில் இவர்கள் தங்களது சிறுபிள்ளைப் பருவத்து நட்புகளைப் பெரும்பாலும் முறித்துக்கொள்கின்றனர். இதற்குக் காரணம், இப்பருவத்தில் நிகழும் உடல் மாற்றங்களின் விளைவால் ஏற்படும் மாறுபட்ட ஆர்வங்களாலும், நோக்குகளாலும், அவர்களிடையே தலைதூக்குகின்ற ஒரு எதிர்மறையான போக்கேயாகும். இக்காலத்தில், சிறுவர், சிறுமியர் பலர் தங்கள் குடும்பத்தினைப் பற்றியும் நண்பர்களைப் பற்றியும் கண்டிப்பான நோக்கமுடையவர்களாக மாறுகின்றனர். முன்பு விரும்பிய பொருள்களில் இப்போது இவர்கள் ஆர்வம் இழந்து, சமூக நடவடிக்கைகளிலிருந்து தனித்து இருக்க விரும்புகின்றனர். பூப்பெய்திவிட்ட பின்னர், முறிந்துவிட்ட குழந்தைப் பருவ நட்புகள் பல மீண்டும் நிலைநிறுத்தப்படுகின்றன. இத்தகைய குழந்தைப் பருவ நட்புகள், சிறுவர்களுக்கும் சிறுமியர்களுக்கும் திருப்தி அளிப்பனவாக உள்ளன. இந்த நட்புகளைத்தவிர இளையோரின் ஆர்வங்களிலும், பயன் மதிப்புகளிலும் ஏற்பட்டிருக்கும் மாறுதல்

களின் அடிப்படையில் புதிய நட்புகளும் இப்பொழுது உண்டா கின்றன.

இளையோரின் நட்புகள் முறிவது சூழ்நிலைக் காரணிகளினாலும், குடியிருப்பின் மாற்றங்களினாலும், பெற்றோர்களின் வற்புறுத்தல் களினாலும் ஏற்படுவதாய் உள்ளன. நண்பர்கள் இருவரில் ஒருவரை மட்டும் ஒரு குழு ஏற்றுக்கொண்டு, மற்றவரை ஏற்கா திருப்பதினாலும், பள்ளியில் ஒரே வகுப்பில் பயின்ற நண்பர்கள் பின்னர் வெவ்வேறு பிரிவிற்கு மாற்றப்படுவதினாலும் நண்பர் களின் சமூகப் பொருளாதாரத் தரத்தில் திடீரென உயர்வு தாழ்வு ஏற்படுவதினாலும், இளையோரின் நட்புகள் முறிவடைகின்றன. மேலும் புண்படுத்தப்பட்ட சுய உணர்வுகளின் காரணத்தினாலும் இவர்களின் நட்பு முறிவடையலாம்.

இளையோரிடத்துத் தலைமை (Leadership among adolescents) :

இளையோர் பங்கேற்றுச் செயல்படும் பல்வேறு குழு நடவ டிக்கைகளில், அவர்கள் தலைமையேற்றுப் பங்கேற்கும் செயல்களின் பாலே உளவியலார் அதிக கவனத்தைச் செலுத்தியுள்ளனர். தலைவர்கள் சமூகத்தின் பொறுப்பினை ஏற்றுச் செயல்படவேண்டி யிருப்பதால், ஒரு சமூகமானது அதன் தலைவர்களுக்கு மிகவும் கடன்பட்டுள்ளது. எனவே, தலைவர்களை உருவாக்கும் குணப் பண்புகளையும், தலைமையின் செயற்பாங்கினையும் நாம் அறிவது அவசியமானது. தலைமைக்கான உள்ளிடைச் சக்திகளைப் பெற்ற வர்களையும், மெய்யான தலைவர்களையும் இந்த அனுபவ அறிவின் மூலம் அடையாளங் கண்டு, சமூகத்திற்குப் பயனுள்ள வகையில் அவர்கள் செயல்படுவதற்கான அறிவுரைகளை அவர்களுக்குத் தந்து, அவர்களை வழிகாட்ட இந்த அறிவு பயனுள்ளதாய் அமையும்.

தலைமையினைப் பற்றிய தொடக்ககால ஆராய்ச்சிகளில் பெரும்பாலானவை ஒரு சூழ்நிலையில் தலைவராக இருப்பவர் எல்லாச் சூழ்நிலைகளிலும் தலைவராக இருப்பார் என்ற கருத்தின் அடிப்படையில் நடத்தப்பட்டன. எனவே, தலைமையில் சிறந்து விளங்குபவர்களின் ஆளுமைத் தன்மைகளைக் கண்டறியும் நோக் கில் ஆராய்ச்சிகள் பெரும்பாலும் நடத்தப்பட்டன. மில்லர் (Miller) தம் ஆய்வின் அடிப்படையில், பெருந்தலைவர்கள் எல்லோ ரிடமும் காணப்படும் பொதுப்படையான பண்புகளாக தைரியம் (Courage) விடாமுயற்சி (Perseverance), தன்னடக்கம் (Self

control), பற்றுறுதி (Loyalty), அறிவுக் கூர்மை (Acumen) போன்றவற்றைக் குறிப்பிட்டுள்ளார். ஹார்ன் என்பார் (Horne) தலைமை ஏற்றுச் செயல்படுவதற்கு இன்றியமையாத 33 தனித்த குணத் தன்மைகளை அறிவித்துள்ளார்.

ஹாலிங்ஸ்வர்த் (Hollingsworth), பின்ச், காரல் (Finch and Carrol), கால்ட்வெல், வெல்மன் (Caldwell and Wellman) ஆகியோர் ஒரு குழுவில் தலைவராக விளங்குபவர் மற்றொரு குழுவில் தலைவராக இருக்கவேண்டியது அவசியமில்லை என்ற உண்மையினைத் தங்கள் ஆய்வுகளின் வழி கண்டறிந்தனர். ஹாலிங்ஸ்வர்த் தன் ஆய்வில் அருந்திறம்மிக்க குழந்தை, தன்னையொத்த திறமையினையுடையவர்களின் குழுவில் தலைவனாக இருக்கையில், திறங்குன்றியவர்களின் இடையில் அவன் இருக்க நேர்ந்தால், அந்தச் சூழ்நிலையில் அவன் தலைவனாக விளங்காமலும் இருக்க இடமுண்டு என்று கண்டறிந்தார். எனினும், குழுவின் இயக்கத்தினையும் நடவடிக்கைகளையும் பொறுத்தே தலைமை உள்ளது. ஒரு சூழ்நிலையில் தலைவராக இருப்பவர் மற்றொரு சூழ்நிலையில் தலைமையில் இல்லாதிருக்கலாம் என்றும், இதற்குக் காரணம் அவர்களிடம் இருவேறுபட்ட சூழ்நிலைகளில் தலைமைதாங்குவதற்கு ஏற்ற பண்புகள் இல்லாதிருக்கலாமென்றும் கால்டுவெல்லும், வெல்மனும் கூறியுள்ளனர். எனவே, தலைமையானது பல்வேறு குழுக்களில், பல்வேறு சூழ்நிலைகளில், பல்வேறு அடிப்படைத் தேவைகளைப் பொறுத்துள்ளதால் ஒரு குழுவின் தலைவனாக இருப்பவன் மற்ற குழுக்களிலும் தலைவனாக விளங்கவேண்டும் என்பது அவசியமல்ல.

தலைமையோடு தொடர்புள்ள தனித்த காரணிகளைப் பற்றிப் பேசுகையில் ஸ்டாக்டில் என்பார் (Stogdill) தலைவனாக விளங்கும் ஒரு சாமானியன் நுண்ணறிவு, கல்வியறிவு, பொறுப்புகளை ஏற்றுச் செயல்படுத்துவதில் நம்பிக்கை, தன் செயற்பாடுகள், சமூக ஈடுபாடுகள், சமூகப் பொருளாதாரத் தகுதி ஆகியவற்றில் தன் குழுவினைச் சார்ந்த மற்ற சாமானியர்களைவிட மேம்பட்டிருப்பான் என்று சுருக்கமாகக் குறிப்பிட்டுள்ளார். மேலும், தலைமைக்கான தன்மைகளும், பண்புகளும், திறமைகளும், தலைவன் செயல்படுவதற்கான சூழ்நிலையின் தன்மைகளைப் பொறுத்துள்ளது என்றும் அவர் கூறுகின்றார். இந்த முடிவுகள், 15-க்கும் மேற்பட்ட ஆய்வுகளின் முடிவுகளால் உறுதிப்படுத்தப்பட்டுள்ளன.

மேலும் தான் பகுத்தாய்ந்த பத்திற்கும் மேற்பட்ட ஆய்வு முடிவுகளின் அடிப்படையில் ஸ்டாக்டில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார். சமூகத் தன்மை, தொடங்கும் தன்மை, விடாமுயற்சி,

எதையும் சாதிக்கும் அறிவு, தன்னம்பிக்கை, விழிப்புத் தன்மை, உட்காட்சி, ஒத்துழைக்கும் தன்மை, மக்களிடைச் செல்வாக்கு, பொருந்தும் தன்மை, சொல்லின் வலிமை, எளிமை நயம் ஆகிய பண்புகளில், தலைமை தாங்கும் ஒரு சாமானியன் தன் குழுவி லுள்ள மற்றவர்களைவிட மேம்பட்டிருப்பான்.

ஆதலால், இளையோரிடத்து தலைமையை ஏற்பவர்கள், மற்றவர்களிடமிருந்து அவர்களைப் பிரித்துக் காட்டுகின்ற பண்பு களையும், மற்றவர்களைவிடச் சிறந்த உடல் தோற்றத்தினையும் அமைப்பினையும் பெற்றிருப்பர். அப்போது தான், அக்குழுவினர் நெருக்கடி நேரங்களில் அவனை நாடவும் மதிக்கவும் முடியும். மேலும், அவர்கள் மற்றவர்களைவிட நுண்ணறிவு மிக்கவர் களாகவும், மனமுதிர்ச்சியுள்ளவர்களாகவும், கல்வித் தகுதிகளில் தேர்ந்தவர்களாகவும், தன்னம்பிக்கை மிக்கவர்களாகவும் இருப்பர். இவர்கள் மற்றவர்களைவிடச் சூழ்நிலையை விரைவில் புரிந்து கொண்டு, அதற்கேற்ற தீர்வுகளைக் காண முயற்சியை மேற் கொள்வர். மேலும் இவர்கள் பிறரின் நலத்தில் அக்கறை உள்ள வர்களாகவும். பழகுவதற்கு இனியவர்களாகவும், பொறுப் புணர்ச்சி மிக்கவர்களாகவும் இருப்பர். நம்பிக்கைக்குரிய தன்மை, பற்றுறுதி, புறமுகத்தன்மை (Extraversion), விரைவில் ஒரு முடிவிற்கு வருதல், சமூக அறிவு (Social Insight) சமூகத்தன்மை, சக்திமிக்க தன்மை, நகைச்சுவையுணர்வு, வளமிக்க தன்மை, நற் பண்புடைமை, தொடங்கும் தன்மை ஆகிய குணநலன்களை இவர் களிடம் எதிர்பார்க்கலாம். இவர்கள் மனவெழுச்சி முதிர்ச்சி யினையும், சமநிலைத் தன்மையினையும் பெற்றவர்களாகவும், பதட்ட மின்றி, நிதானித்துச் செயல்படுபவர்களாகவும், சூழ்நிலையோடு நன்கு பொருந்தி நடப்பவர்களாகவும், நரம்புப்பிணி (Neurotic tendency) யற்றவர்களாகவும் இருப்பர். பெண்பிள்ளை களின் தலைவர்கள், ஆண்களுக்குரிய தைரியத்தினையும், மனோ திடத்தையும், நடத்தை முறைகளையும் கொண்டு விளங்குவர்.

குழந்தைகளின் தலைவனுக்கும், இளையோர்களின் தலைவ னுக்கும் இடையே உள்ள முக்கியமான வேறுபாடு அத்தலைவர்கள் கையாளும் கட்டுப்பாட்டு முறையினுள் உள்ளது. குழந்தைப் பருவத்துக் குழுவினர் தங்களை அடக்கியாளுகின்ற, வன்முறையில் ஆதிக்கம் செலுத்துகின்ற தலைவனுக்குக் கட்டுப்பட்டு நடக்கின் றனர். ஆனால் முதிர்ச்சி எய்தியவர்கள், தங்கள் தலைவனிடம் ஒத்துழைக்கும் தன்மையினை வெகுவாக விரும்புகின்றனர். ஆதலால், இளையோரின் தலைவன் ஒத்துழைக்கும் தன்மையினைக் கொண்டே தன் குழுவின் நடவடிக்கைகளை வெற்றிகரமாக வழி

நடத்த முடியும். மேலும், இளையோரின் தலைவன் தன் குழுவினரின் பொருத்தமான பிரதிநிதியாக இருப்பதோடு, அவன் தன் குழுவின் நடத்தைக் கோலத்துடன் ஒன்றியிருக்கவேண்டும். குழந்தைகளின் குழுவினரைப் போலின்றி இளையோரின் குழுவினர், தங்கள் குழுவின் கோலத்தினின்று மிகவும் வேறுபட்டு இருக்கின்றவர்களை வெறுத்து, எதிர்க்கின்றனர். ஆதலால், வெற்றியுடன் திகழும் இளையோரின் தலைவன், பொதுவாக, தன் குழுவினரின் மேல் வெளிப்படையாக ஆதிக்கம் செலுத்தாது, அவர்களின் மேல் தன் கட்டுப்பாட்டினை நுட்பமாகக் கையாளுகின்றான். அவன், தன் குழு வினரின் தேவைகளையறிந்து, வன்முறையான ஆதிக்கத்தினைத் தவிர்த்து, அவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கான முயற்சியினை மேற்கொள்கிறான்.

லூயின், லிப்பிட், வைட் (Liwin, Lippit and White) ஆகியோர் குழந்தைகளின் தனித்த நடத்தைகளையும், குழு நடத்தைகளையும், மூன்று விதமான சமூகச் சூழ்நிலைகளில் ஆய்ந்தனர். அச்சமூகச் சூழ்நிலைகள் எதேச்சாதிகாரத் தலைமையுடைவதாகவும் (Authoritarian), குடியாட்சித் தலைமையுடையதாகவும் (Democratic), ஒரு விதக் கட்டுப்பாடும் வழிகாட்டுதலும் இல்லாத தலைமையை யுடையதாகவும் (Laissez Faire Leadership) இருந்தன. பொது வாக இவ்வாய்வில், கட்டுப்பாட்டமைதியும், ஒழுங்குணர்வும் (Morale) குடியாட்சித் தலைவனைக் கொண்ட குழுவில் மற்ற இரு குழுவினை விட அதிக அளவில் காணப்பட்டது. குடியாட்சித் தலைவனைக் கொண்ட குழுவில் மற்ற இரு குழுவினைவிட அதிக அளவில் குழு நடவடிக்கைகளின் பாலான ஆர்வமும், புகழத்தக்க செயல்முறைகளும் காணப்பட்டன. மேலும், குடியாட்சித் தலை மைக்குழுவில், உட்குழு விரைப்புகளும், வெளிப்படையாக வன்மையினைக் காட்டுதலும் மிகவும் குறைந்து காணப்பட்டன. ஆதலால், இளையோரின் குழு, அதன் செயல் நோக்குகளையும், குறிக்கோள்களையும் சிறந்த வகையில் அடைவதற்குக் குடியாட்சி முறையில் இயங்கும் தலைமையே சாலச் சிறந்ததாகும்.

### எதிர்பாலினர் மீதான ஆர்வங்களின் தோற்றம் (The Emergence of Heterosexual Interest) :

இளையோர் பருவத்தில் ஏற்படும் சமூக வளர்ச்சியில் மிக முக் கியமானது எதிர்பாலினரின் பால் தோன்றும் ஆர்வங்கள் ஆகும். தனியன், குழந்தைப் பருவத்தில், தன் பெற்றோர்களுடன் அன்பு கொண்டு இணைந்து, உறவினருடனும் தன் நண்பர்களுடனும், ஆசிரியர்களுடனும் தொடர்புகொண்டு பழகுவதில் சமூக வளர்ச்சி யினைப் பெறுகின்றான். ஆனால், சிறு வயதில் பாலின ஆர்வங்கள்

வெகுவாகக் காணப்படுவதில்லை. பின் குழந்தைப் பருவத்தில், இரு பாலினரிடமும், எதிர்பாலினரின் மீது போட்டி மனப்பாங்கே காணப்படுகின்றது. இப்பருவத்தில், இருபாலினரும் பெரும் பாலானோர் ஒருவரையொருவர் பொருட்படுத்தாமலும், வெறுப் புடனும் நடந்து கொள்கின்றனர். இந்நிலையில், சிறுவர்கள் பெண்களைச் சீண்டுவதிலும், கேலி செய்வதிலும் ஈடுபடுவர். எனவே, இளையோர் பருவத்திற்கு முந்திய காலத்தில் சிறுவர் களும், சிறுமியர்களும் ஒருவரோடொருவர் ஒத்துப்போவதில்லை என்பது தெளிவாகின்றது. இளையோர் பருவத்தின் தொடக் கத்தில் பாலின உணர்வுகள் தோன்றுவதால் எதிர்பாலினர்மீது ஆர்வம் ஏற்படுகின்றது. ஸ்டான்லிஹால் தனது நாட்குறிப்பு ஆய்வின் மூலம் இளையோரைப் பற்றி அறிய முற்பட்டபோது, 12 வயது முதல், வயது அதிகரிக்க அதிகரிக்க எதிர்பாலினரின் பால், கவர்ச்சியடையும் தன்மையும், பாலுணர்வும் அதிகமாவதைக் கண்டார். பிள்ளைகளின் விருப்பத் தேர்வுகளையறிய நடத்தப்பட்ட ஆய்வு ஒன்றில், ஆறுவது வகுப்பு வரையிலுள்ள பிள்ளைகள் எதிர் பாலினரை மிகக் குறைந்த அளவிலேயே விரும்பித் தேர்ந் தெடுத்ததும், பின்னர் இளையோர் பருவத்தை அவர்கள் அடையும் போது எதிர்பாலினரை வெகுவாக விரும்பித் தேர்ந்தெடுத்ததும் கண்டறியப்பட்டன. 535 இளையோரின் ஓய்வு நேரச் செயல்களை ஆய்ந்த ஜேம்ஸ், மூர் (James and F. T. Moore) ஆகியோர், பாலின உணர்வினால் தூண்டப்பட்டு, அதன்பால் ஆர்வம் மிகுந்து காணப்பட்ட செயல்களே இளையோரின் ஓய்வுநேரச் செயல்களில் அதிகமாக இருந்ததனைக் கண்டனர்.

எனவே, இளையோர் பருவத்தில் ஏற்படும் உடல், உடலியல் மாற்றங்கள் பாலின ஆர்வங்களையும் உந்துக்களையும் தோற்றுவிக் கின்றன. இந்தப் புதிய ஆர்வத்தின் தோற்றம் பெண்களிடம் ஆண்களைவிட ஓராண்டு முன்னரே ஏற்படுகின்றது. இதன் விளைவாக, இந்த ஒரு வருட காலத்தில் சிறுமியர் சிறுவர்களின் மேல் ஆதிக்கம் செலுத்துபவர்களாகக் காணப்படுகின்றனர். இந்த வளர்ச்சி ஒன்பதாவது படிவத்தின் பிள்ளைகளில் மிகவும் வெளிப்படையாகக் காணப்படுகின்றது.

எதிர்பாலினர் மீது ஏற்படும் ஆர்வங்கள், சில திட்டவட்ட மான நிலைகளில் முதிர்ச்சியடைகின்றன. இவற்றில் மூன்று நிலைகள் குறிப்பிடத்தக்கவை. அவை. 1. நெருக்கு—தலைவர் வழிபாடு நிலை (Crush—Heroworship Phase) 2. ஆணின்பால் ஆர்வ வெறிநிலை அல்லது பெண்ணின் பால் ஆர்வ வெறி நிலை (Boy Crazy or Girl Crazy Phase) 3. காதல் ஏற்படும் நிலை (Phase of Romantic Interest).

முதல் நிலையானது, பொதுவாக, தன்னைவிட வயதான ஒரே பாலினரின் பால் அல்லது எதிர்பாலினரின் பால் மிகுந்த பற்று தலைக் குறிக்கும். ஒரே பாலினரின் பால் ஏற்படும் இத்தகைய பற்று, நெருக்கு (Crush) என்றும், எதிர்பாலினரின் பால் ஏற்படும் இத்தகைய பற்றானது தலைவர் வழிபாடு (Hero worship) என்றும் குறிப்பிடப்படுகின்றன. இத்தகைய பற்று, இளையோன் போற்றும் முதிய பள்ளி நண்பன் ஒருவனுடனோ, ஆசிரியருடனோ, திரைப்பட நடிகர், நடிகையுடனோ ஏற்படுகின்றது. தன்னிடம் இல்லாத, ஆனால், மேற்குறிப்பிட்டவர்களிடம் காணப்படும், சில போற்றத் தக்க பண்புகளின் அடிப்படையில் இத்தகைய கவர்ச்சியும் பற்றும் ஏற்படுகின்றது, இத்தகைய அன்பானது, பரிசுகள் வழங்குதலின் மூலமும், அன்பு செலுத்தப்படுபவரின் செயற்கை நடைகளைப் பின் பற்றுதலின் மூலமும் (Imitation of Mannerisms) வெளியிடப்படு கின்றது. நெருக்குகள் பெரும்பாலும் முன்னிளையோர் பருவத்தில் ஏற்படுகின்றன. பொதுவாக, இவை சிறுமியர்களில் அதிகமாகக் காணப்படுகின்றன.

நெருக்குகளைவிட மிகையாகக் காணப்படுவது தலைவன் வழி பாடாகும். இதில், திரைப்பட நட்சத்திரங்களின் பாலோ, சமூக வாழ்க்கையில் புகழ்பெற்று, சிறந்து விளங்குவோரின் பாலோ தனிப்பட்ட ஆர்வமும் மிகுந்த பற்றும் ஏற்படுகின்றது. இவர்கள் ஏற்றுக் கொள்ளும் வகையில் உடைகளையணிதலையும், அலங் கரித்துக் கொள்வதையும், பிறவற்றையும் இளையோர் செய்கின் றனர். இத்தகைய பற்றினைக் கன்றுக்குட்டிக் காதல் (Calf-love) எனவும் குறிப்பிடுகின்றனர்.

உயர்நிலைப்பள்ளியின் மேல் வகுப்புகளை அடையும்போது, இளையோரின் பற்றுதல்கள் தங்களின் சம வயது எதிர்பாலினரின் பால் மாறுகின்றது. இநநிலையில், இளையோரின் கவர்ச்சி, ஒரு குறிப்பிட்ட ஆண்பிள்ளையின் பாலோ பெண் பிள்ளையின் பாலோ ஏற்படாமல் பொதுவாக எதிர்பாலினர் எல்லோரிடமும் ஏற்படு கின்றது. பெண் பிள்ளைகள், ஆண் பிள்ளைகளைவிடச் சிறிது முன்னரே முதிர்ச்சியடைவதால், அந்த ஆண்—ஆர்வவெறி அவர் களிடம், ஆண்களைவிட ஓரிரு ஆண்டுகட்கு முன்னரே, அதாவது அவர்கள் 15 ஆண்டுகள் வயது எய்தும்போதே ஏற்படுகின்றது. இதில், தொடர்ந்து சீண்டுதல், அறிவுக் கூர்மையான நகைச்சுவைப் பேச்சுகளில் ஈடுபடுதல், விளையாட்டான வகையில் நேரடியாக மோதல், போன்ற வகைகளில் இளையோர் நடந்துகொள்வதால் இது நாய்க்குட்டிக் காதல் (Puppy love) எனவும் குறிப்பிடப்படு கின்றது. எதிர்பாலினரின் அங்கீகாரத்தினையும் கவனத்தினையும்

ஈர்ப்பதற்கு ஏற்றவண்ணம் தங்கள் தோற்றத்தின்பால் அதிக கவனமும் நேரமும் செலவிடப்படுகின்றன. இதற்கு முன்னர் இவர்களிடம் காணப்பட்ட வெட்கம், இப்போது மறைந்து, வலி யத்தாக்கும் வகையான நடத்தைகளில் இவர்கள் ஈடுபடு கின்றனர்.

காதல் ஏற்படும் நிலையானது, இளையோர் பருவத்தின் பிற் பகுதியில் தொடங்குகின்றது. நாய்க்குட்டி அன்பு நிலையினைப் போலன்றி, இந்த நிலை, முதிர்ச்சி பெற்ற, நிலைத்த தன்மை யுடைய, மும்முரமான அன்பினைக் கொண்டதாகும். காதலர் தாம் காதலிக்கும் தனிப்பட்ட நபர்களின் உறவில் ஆழ்ந்திருப்ப தால், மற்ற எதிர்பாலினரை அவர்கள் கவனிப்பதில்லை. மேலும், அவர்கள் ஆர்வத்துடன் பங்குகொண்டிருந்த குழு நடவடிக்கை களையும், இப்போது பொருட்படுத்துவதில்லை. இத்தகைய காதல் பற்றிய ஆய்வொன்றில், 16, 20 வயதுகளுக்கிடையில் காதல் நிகழ்ச்சிகளின் எண்ணிக்கை பெண்களிடம் அதிகமாகவும், 21, 25 வயதுகளுக்கிடையில் இதன் எண்ணிக்கை ஆண்களிடம் அதிக மாகவும் இருந்ததாகக் கண்டறிந்தனர். இதிலிருந்தும் பெண் களின் முற்பட்ட முதிர்ச்சி தெளிவாகின்றது.

**உள—பாலின வளர்ச்சி (Psycho-sexual Development):**

இளையோனின் உள-பாலின வளர்ச்சியில் அவன் வாழ்க்கை யினைப் பாதிக்கவல்ல எல்லா முக்கிய விசைகளும் (Forces) இணைந்து செயல்படுகின்றன. பாலுணர்வு எழுச்சி பெறும்போது அதனை உடனடியாக நிறைவேற்றவேண்டிய நெருக்கடி நிலை தோன்றுகின்றது. மேலும், பாலின உந்தானது இளையோனின் மற்ற உந்துக்களையும், பிறரின்பால் அவன் கொண்டுள்ள மனப் பாங்குகளையும், தொடர்புகளையும் பாதிக்கவல்லது. இளையோனின் வாழ்க்கையினைப் பாதிக்கின்ற உடல், உள்ளம், அறநெறி சார்ந்த காரணிகள் அனைத்துமே ஒன்றிணைந்து பாலின வளர்ச்சியினை உருவாக்குகின்றன.

பாலின உணர்வு இளையோனிடம் ஓர் உடல்சார்ந்த பசியாகத் தோன்றுகின்றது. ஓர் உயிர் மற்ற உயிர்களைத் தோற்றுவிக்க வேண்டுமென்னும் மூலமுதலான தூண்டுதலின் அடிப்படையில் இந்த ஆர்வம் ஏற்படுகின்றது. இதனைத் தவிர, பாலுணர்வு மற்ற நோக்கங்களையும் கொண்டுள்ளது. பாலுணர்வு சிறுவர்களிடம் ஆண்களுக்குரிய பணிகளை உணர்வதற்கும் காரணமாக இருக் கின்றது, மேலும் ஒருவன் தன்னுடைய தகுதியினைப்பற்றி அவன் கொண்டுள்ள மனப்பாங்குகளும் தன்னம்பிக்கையும், தன்னுடைய

ஆர்வங்களைப் பற்றித் தானே கொள்ளும் குற்ற உணர்வும், பிறரின்பால் அவன்கொள்ளும் சந்தேகத் தன்மையும், நட்புரிமைத் தன்மையும், பாலுணர்வினைப்பற்றி அவன் கொண்டுள்ள கருத்துக்களைப் பிரதிபலிப்பனவாக உள்ளன. ஆரோக்கியமான வளர்ச்சிபெறும் இளையோனிடம், பாலின வளர்ச்சியானது மன வெழுச்சி வளர்ச்சியுடன் தொடர்புகொண்டு நடைபெறுகின்றது. இதனால்தான் பாலின ஆர்வம் எழும்போது நெகிழ்ச்சி உணர்வும் தோன்றுகிறது.

பாலின நடத்தையினைச் சார்ந்த குற்ற உணர்வுகள் இரு பாலினரிலும் காணப்படுகின்றன. இக்குற்ற உணர்வுகள், இளையோர் தாங்கள் செய்யத்தகாத செயல்களில் ஈடுபட்டதை நினைத்துத் துயரங்கொள்வதைப் பிரதிபலிக்கின்றன. ஆனால் இளையோர் சிலர், தாங்கள் செய்திருக்கக்கூடியவற்றை செய்யாமல் விட்டுவிட்டதைப்பற்றியும் வருத்தமடையலாம் என ஜெர்ஸிட் நகைச்சுவையாகக் கூறுகின்றார்.

பாலினம் சார்ந்த குற்ற உணர்வும், அச்சமும் ஆண்பிள்ளைகளை விடப் பெண்பிள்ளைகளிடம் மிகுந்திருக்கிறது. பெண்பிள்ளைதான் மணத்திற்கு முந்திய கர்ப்பமடைதலைப் (Premarital pregnancy) பற்றிப் பெரிதும் அச்சம்கொள்ள வேண்டியவளாய் இருக்கின்றாள். மேலும் சந்தர்ப்பவசமாக, ஆணும் பெண்ணும் நெறிபிறழ் நடத்தையில் ஈடுபட்டுப் பெரியவர்களால் கண்டுபிடிக்கப்பட்டால், அந்த நடத்தைக்காக சமுதாயம் அளிக்கும் தீர்ப்பின் முடிவு பெண்ணின்மேல்தான் அதிகமாக விழுகின்றது. எனவே, சமூகத்தினால் தவிர்க்கப்பட்ட பாலின நடத்தைகளின் பால் பெண் பிள்ளைகள் தான் ஆண்பிள்ளைகளை விட மிகுந்த எச்சரிக்கையும், பயமும் கொண்டிருக்கின்றனர்.

மேலைநாட்டுப் பண்பாட்டினைப் பற்றிப் பேசுகையில், மீட் (Mead) எனும் அம்மையார் அப்பண்பாட்டில் ஆண், பெண் பிள்ளைகள் ஒருவரோடொருவர் பழகுவதற்குக் கொடுக்கப்பட்டி ருக்கும் சுதந்திரம், அவர்கள் நெறிபிறழ்ந்த பாலின நடத்தை களில் ஈடுபடுவதற்கு அனுகூலமாயுள்ளது என்றும், அங்ஙனம் அவர்கள் நெறிபிறழ்ந்து நடந்துகொள்ள நேரிடுகையில், அச்சமூகம் அதை மிகவும் கடுமையாகவும், கண்டிப்பு மிக்கதாயும் கருது கின்றது என்றும் கூறுகின்றார். மேலும், இத்தகைய நடத்தைகள் நிகழ்வதற்கான வாய்ப்புகளை பெரியவர்களே பிள்ளைகளுக்கு அளித்துவிட்டுப், பின்னர் அத்தகைய நடத்தைகள் நிகழும்போது, அவர்களைக் கண்டித்துத் தண்டனைக்குள்ளாக்குகின்றனர் எனவும்

அவ்வம்மையார் கூறுகின்றார். எனவே, பூப்படைந்த ஆண், பெண் பிள்ளைகள் ஒருவரோடொருவர் பழகுவதை ஒரு வரை யறைக்குள் அனுமதிப்பதும், ஓரளவிற்கு அலர்களைப் பிரித்து வைப்பதும், நெறிபிறழ்ந்த பாலின நடத்தைகளையும் மணமாகாத தாய்கள் Unmarried (Mothers) உருவாவதையும் தவிர்க்கப் பயனுடையதாய் இருக்கும்.

தொழிலுக்கான வளர்ச்சி : (Vocational Development)

இளையோன் முழு முதிர்ச்சியினை அடையும் காலத்தில், தனக் கேற்ற ஒரு தொழிலினைத் தேர்ந்தெடுப்பதில் அதிக கவனத்தினைச் செலுத்துகின்றான். எனினும், தொழிலுக்கான ஆர்வங்கள் தனிய னிடம் குழந்தைப் பருவத்திலேயே தொடங்குகின்றன. குழந்தை கள், அதிக உணர்ச்சியூக்கத்தினைத் தருகின்ற, ஆனால், குறைந்த மதிப்புடைய, தொழில்களின் பால் நாட்டங்கொள்கின்றனர்; சான்றாக, அவர்கள் ஓட்டுநர்களாகவும், சிப்பாய்களாகவும், காவலர்களாகவும் (Police), புகைவண்டி அதிகாரிகளாகவும், விமானிகளாகவும் இருக்க ஆசைப்படுகின்றனர், எனினும், தொழில் சார்ந்த ஆர்வங்கள் நாளடைவில் மாறுகின்றன. ஆசிரியர்களின் தொழில் சார்ந்த ஆர்வங்களைப் பற்றி அறியும் நோக்கில் நடத்தப்பட்ட ஆய்வொன்றில், ஆசிரியர்கள் 6-8 வயது களுக்கிடையில் புகைவண்டிப் பொறியியலாளராகவும், 14 வயதில் கால்பந்து விளையாடுபவர்களாகவும், 16 வயதில் மருத்துவரா கவோ பொறியலாளராகவோ விருப்பம் கொண்டிருந்தனர் என்றும், இறுதியில், இவர்கள் ஆசிரியர்களாயினர் என்றும் அறிந்தனர். ஆசிரியைகள் 12-14 வயதுகளில் நடிகைகள் ஆகவோ, பாடகிகள் ஆகவோ, தாதிகள் ஆகவோ விரும்பினர். 16-18 வயதுகளுக்குள் அலுவலக வேலையின் பாலும், நூலக வேலையின் பாலும் அவர்கள் ஆர்வங் கொண்டிருந்தனர். இவர்களும் இறுதியில், ஆசிரியத் தொழிலில் அமர்ந்தனர். தொழிலின் பாலான ஆர்வங்கள் வளர்ச்சியின் செயற்பாங்கில் எவ்வாறு மாறுதலடைகின்றன என்பதனை இவ்வாய்வின் முடிவுகளிலிருந்து தெளிவாக அறியலாம்.

இளையோரின் தொழில் சார்ந்த ஆர்வத்தேர்வுகள் முதன் முதலில், அவர்களின் திறமைகள், வேலைவாய்புகளின் அடிப் படையில் பொருத்தமற்றுக் காணப்படுகின்றன. பின்னர் வயதிற் கேற்ப, இளையோர் தங்களின் சுயதிறமைகளைக் கணித்து, அவை களின் வரம்பெல்லைகளை நன்கு அறிகின்றனர். மேலும், தேவைக்

கேற்பவே வழங்குதலும் அமையவேண்டும் (Supply Depends Upon Demand) எனும் கோட்பாட்டினை இவர்கள் அறிந்து கொண்டு, வெவ்வேறு தொழில்களுக்குத் தேவையான தகுதிகளை இவர்கள் நாளடைவில் கற்றறிகின்றனர். எனவே, இளையோரின் தொழில் சார்ந்த ஆர்வங்கள் இப்பொழுது நடைமுறைக்கு உரியதாகவும், மெய்யானதாகவும் அமைகின்றன. இளையோரின் தொழில் தேர்ந்தெடுப்பினை நிர்ணயிக்கும் காரணிகளை அறிவதன் பொருட்டு செய்யப்பட்ட ஆய்வொன்றில், இளையோரின் தொழில் தேர்ந்தெடுப்பில், பெற்றோர்களின் விருப்பமும், அறிவுரையும் தான் மிகுந்த செல்வாக்கினையுடையதாயிருக்கின்றது என்று கண்டறியப்பட்டது. மேலும், நண்பர்கள், சுற்றுப்புறத்தார் ஆகியோரின் அறிவுரைகளும் இதில் பெருமளவில் செல்வாக்கினைப் பெற்றுக் காணப்பட்டன. மொத்தத்தில் 61 சதவிகித இளையோர் தம் பெற்றோர்கள், உறவினர், நண்பர்கள், ஆசிரியர்களின் அறிவுரைகளைப் பின்பற்றுபவர்களாக இருக்கின்றனர். ஆதலால் இளையோரின் தொழில் தேர்ந்தெடுப்பில் செல்வாக்கினைப் பெற்றுள்ள இவர்கள், அவர்களின் திறமைகள், உளநாட்டங்களுக்கேற்ப அவர்களுக்குத் தொழிற் சார்ந்த அறிவுரை நலம் பயக்கும்.

இளையோர், பிற்காலத்தில் ஒரு குறிப்பிட்ட தொழிலினை ஏற்றுச் செயல்பட அவர்களுக்கு அறிவுரை கூறுதலில், எண்ணற்ற காரணிகளை நன்கு ஆராய வேண்டியிருக்கின்றது. அவர்களின் பெற்றோர்கள் தங்களின் ஆர்வங்களுக்கேற்ப, தங்களுக்குச் சிறந்ததாகப்படும் ஒரு தொழிலின்பால் அவர்களை ஊக்குவிக்க முயற்சி கொண்டிருக்கலாம். அந்நிலையில், அத்தகைய தொழில்களின்பால் உண்மையாகவே அவர்களுக்குத் திறமையும் உளநாட்டமும் இருந்தால், அதில் அவர்கள் சிறந்து விளங்க வாய்ப்பு உள்ளது. ஆனால் உண்மையிலே, அவர்களுக்கு அதில் நாட்டமும் திறமையும் இல்லாதபோது, பெற்றோர்கள் அவர்களை வற்புறுத்தி அதனை அவர்கள் ஏற்கச் செய்வது, அவர்களின் பிற்காலத் தொழில் வாழ்க்கையினைப் பாதிப்பதாக அமையும். அவர்கள் தாங்களாகவே ஆர்வங் கொண்டிருக்கும் தொழிலிலும் முன்னேற முடியாத நிலை ஏற்பட்டு, இரண்டுங் கெட்ட நிலையில் தவிப்பர். இதனைப் போன்றே, உண்மையில் தங்களிடம் ஒரு குறிப்பிட்ட தொழிலுக்கு வேண்டிய திறமையினைச் சிறிதும் பெற்றிராது, பிறர் அத்தொழிலைபற்றிப் பேசுவதையும், பாராட்டுவதையும் கேள்வியுற்று, அவர்களும் அத்தொழிலில் ஈடுபட்டு, முன்னேற முயற்சிப்பது, "வான்கோழி மயிலாகி ஆட முயற்சித்த" நிலையினைப் போன்றதாகும். தங்களின் உண்மை நிலையினை அறிந்து

கொள்ளாது, இளேயோர் அதில் ஈடுபட்டுத் தோல்வியுறும்போது, இவர்களின் தன்னம்பிக்கை வெகுவாகப் பாதிக்கப்பட்டுவிடும். இதனல் இவர்கள் எடுத்துக்கொண்ட தொழிலிலும், சமூகத்திலும், நடத்தைப் பொருத்தப்பாடுச் சிக்கல்கள் இவர்களுக்கு ஏற்படலாம். எனவே, இளேயோரில் காணப்படும் தொழிலின் பாலான ஆர்வங்களே அறிந்து, உண்மையாகவே அவர்கள் அத்தொழில்களுக்குரிய திறமைகளேப் பெற்றிருக்கின்றனரா என்பதனே ஆராயவேண்டியது அவசியமாகும். பின்னர், சமூகச் சூழ்நிலேயும், அவர்கள் வாழ்கின்ற நிலேயும், அவர்களுக்கு இதன்பால் வாய்ப்புகளே நல்குமா என்பதனே ஆய்ந்து, அவர்களுக்கு ஏற்ற தொழிலின்பால் அவர்களே ஊக்குவிக்க வேண்டியது, ஆசிரியர், பெற்றேர், உளவியல் வழி காட்டுவோர் ஆகியோரது தலேயாய கடமையாகும். அப்பொழுதுதான், இளேயோர் தாங்கள் தேர்ந்தெடுத்த தொழிலில் சிறந்து விளங்கி, தொழில் பொருத்தப்பாட்டினேயும், அத்தொழிலால் மன நிறைவினேயும் (Job Satisfaction) அடைய இயலும்.

அதிகாரச் சுருக்கம்:

தனியன் உருவாவதும், அவனது நடத்தை முறைகள் நிலே பெறுவதும் அவன் சார்ந்திருக்கும் சமூகத்தினேத் தழுவியே நடைபெறுகின்றன. இவ்வாறு அவன் சமூகத்தால் ஊக்குவிக்கப்படவோ, பாதிக்கப்படவோ செய்கின்றன். சமூகத்தன்மை பெறல் என்பது சமூகத்தின் நியதிகள், சட்டதிட்டங்கள், வழக்கங்கள் ஆகியவைகளுடன் ஒருவன் இயைந்து நடக்கக் கற்றுக்கொள்வதேயாகும். இளேயோர் பருவத்து சமூக வளர்ச்சி பெரும்பாலும் தன் சமவயது எதிர் பாலினரோடும், பெற்றேரற்ற மற்ற பெரியோர்களோடும் அவன் பழகக் கற்றுக்கொள்ளும் வளர்ச்சியைப் பற்றியதேயாகும்.

தனியன் சமூகத்தன்மை பெறுவதில் இல்லம் பெரும்பங்கு வகிக்கிறது. சமூகப் பொருத்தப் பாட்டில் ஏற்படும் சிக்கல்களுக்கு, பெற்றேர்களின் புறக்கணிப்பு, அளவுக்கு மீறிய செல்லம், உடன்பிறந்தோரின் போட்டி மனப்பான்மைகள், சமநிலேயற்ற தன்மை, குடும்பத்தின் பொருளாதார நிலே, பெற்றேரிடையே உள்ள உறவுமுறை, உடல்நிலே ஆகியவை காரணங்களாகும்.

குடும்பத்திற்கு அடுத்த படியாக, இளேயோரின் சமூகக் குழுக்கள் முக்கிய இடத்தைப் பெறுகின்றன. கூட்டம் உட்குழு, கூட்டாளிக் குழு போன்றவை அத்தகைய அமைப்புகளாகும்.

இளையோரின் குழுக்களின் தோற்றமும், அமைப்பும் அவர்களின் நடத்தைகளை வெகுவாகப் பாதிப்பனவாகவுள்ளன. உட்குழுக்கள், கூட்டங்கள், கூட்டாளிக் குழுக்கள் ஆகியவற்றைச் சார்ந்த இளையோர் தங்கள் குடும்பத்தின் பயன் மதிப்புகளைவிட, சம வயதுக் குழுவினரின் பயன்மதிப்புகளையே அதிகமாக மதிக்கின்றனர். மேலும் குழுவோடு ஒத்தொழுகுவதில் ஆர்வம் மிகுந்தவன் ஆகவும் இருக்கின்றான்.

ஒருவன் தன் இளம்வயதில் எத்தகைய நண்பர்களாலும், குழுக்களாலும் தூண்டப்பட்டு, அறிவு வளர்ச்சியினைப் பெறுகின்றானோ, அதைப் பொறுத்தே அவனுடைய பிற்கால சமூக உணர்வும் அமையும். நட்பு ஏற்படுவதில், பாதுகாப்புணர்வும், சார்புணர்வும் முக்கிய காரணிகளாக இருக்கின்றன. சிலருக்கு ஆதிக்க உணர்வு தேவையாக இருக்கிறது. அருகாமை நிலை ஒத்த சமூகப் பொருளாதார நிலை, ஒத்த வாழ்க்கைப் பயன் மதிப்புகள், ஒத்த ஆளுமைத்தன்மை போன்றவைகளும் நட்பு ஏற்படக் காரணங்களாக உள்ளன. நட்பில், பாலின வேறுபாடுகள் காணப்படுகின்றன. இளையோரின் நட்பு முறிவுக்குக் காரணம் பெரும்பாலும் சூழ்நிலை, குடியிருப்பின் மாற்றம், பெற்றோர்களின் வற்புறுத்தல் ஆகியவையாகும்.

இளையோர் பங்கேற்கும் பல்வேறு நிகழ்ச்சிகளிலும் அவர்கள் தலைமை ஏற்றுச் செயல்புரியும் நடத்தையைப்பற்றி உளவியலார் மிக்க கவனத்தைச் செலுத்தியுள்ளனர். இளையோரிடத்து தலைமையை ஏற்பவர்கள், மற்றவர்களிலிருந்து பிரித்துக் காட்டுகின்ற பண்பு நலன்களையும், மற்றவர்களைவிடச் சிறந்த உடல் தோற்றத்தையும், நுண்ணறிவையும், மன முதிர்ச்சியையும், பெற்றிருப்பர். அப்போதுதான், அக்குழுவினர் நெருக்கடி நேரங்களில் அவனை நாடவும், மதிக்கவும் இயலும்.

இளையோர் பருவத்தில் ஏற்படும் சமூக வளர்ச்சியில் மிக முக்கியமானது எதிர்பாலினரின்மீது தோன்றும் ஆர்வங்களே ஆகும். இளையோர் பருவத்தில் ஏற்படும் உடலியக்க மாற்றங்கள் பாலின ஆர்வங்களையும், உந்துக்களையும் தோற்றுவிக்கின்றன. இவ்வாறான ஆர்வங்கள் சில திட்டவட்டமான நிலைகளில் முதிர்ச்சியடைகின்றன. கன்றுக்குட்டிக் காதல், நாய்க்குட்டிக் காதல் போன்றவைகளை உளவியலார் குறிப்பிடுகின்றனர். காதல் பற்றிய ஆராய்ச்சி ஒன்றில் பதினாறு, இருபது வயதுகளுக்கிடையில் காதல் நிகழ்ச்சிகளின் எண்ணிக்கை பெண்களிடம் அதிகமாகவும், இருபத்தொன்று, இருபத்தைந்து வயதிற்கிடையில் ஆண்களிடம் அதிக

மாகவும் இருப்பது தெரிந்தது. இதிலிருந்து பெண்களின் முற்பட்ட முதிர்ச்சி தெளிவாகின்றது.

பாலின உணர்வு இளையோனிடம் ஓர் உடல்சார்ந்த பசியாகத் தோன்றுகிறது. பாலின நடத்தையினைச் சார்ந்த குற்ற உணர்வுகள் இருபாலினரிலும் காணப்படுகின்றன. ஆண், பெண் ஒருவரோடொருவர் நெருங்கிப் பழக வாய்ப்பளிக்கும் மேலைநாட்டுப் பண்பாடு, நெறிபிறழ்ந்த பாலின நடத்தையில் ஈடுபட வழிவகை செய்கிறது என மீட் எனும் அம்மையார் குறைகூறுகிறார்.

இளையோன் முதிர்ச்சியடைந்ததும், தனக்கேற்ற ஒரு தொழிலினைத் தேர்ந்தெடுப்பதில் கவனம் செலுத்துகிறான். எனினும், தொழிலுக்கான ஆர்வங்கள், தனியனிடம் குழந்தைப் பருவத்திலேயே தோன்றுகின்றன. இளையோன் ஒரு குறிப்பிட்ட தொழிலினை ஏற்றுச் செயல்பட அறிவுரை கூறும்போது, எண்ணற்ற காரணிகளை ஆராய்ந்து கூறவேண்டும். இதற்கு பெற்றோர், ஆசிரியர், வேலை வழிகாட்டுநர் ஆகியோர் உதவ வேண்டும்.

# 6. நுண்ணறிவின் வளர்ச்சி

## (Development of Intelligence)

மனிதன் பெற்றுள்ள உன்னதமான தன்மைகளில் மிகவும் தலையாயது அவனது அறிவுத்திறனே ஆகும். உலகத்தின் பரப்பில் ஒரு சிறிய அணுவாகக் காணப்படுகின்ற மனிதன் அந்த உலகையே கட்டி ஆளுவதும், அவ்வுலகத்தின் வயிற்றைக் கீறி, உள்ளே புகுந்து கனிவளத்தை எடுப்பதும், உலகத்தை விட்டு அப்பாற் பறந்து, வேறு பல மண்டலங்களுக்குச் சென்று வருவதும், இந்த அணுபோன்ற மனிதனிடம் உள்ள சிந்தனைச் சக்தியால் தான். இந்த சிந்தனைச் சக்திக்கு அடிப்படையாக உள்ளது அவனது அறிவுத்திறனேயாகும். எனவே மனிதன் என்ற சொல்லுக்கே அறிவுத்திறன் பெற்றவன் என்று பொருள்வரையறை செய்வது மிகவும் பொருத்தமாகக் காணப்படுகின்றது. அறிவுத் திறன் எனும் பொதுவான திறமை அமைப்பானது, சில தனித்த செயற் பாங்குகளை அல்லது திறமைகளைத் தன்னுள் கொண்டுள்ளது. அவற்றில் மிக முக்கியமானவை நுண்ணறிவும், ஆக்கத்திறமும் ஆகும். ஆக்கத்திறத்தைப் பற்றியும், அதன் வளர்ச்சியைப் பற்றியும் அடுத்த அதிகாரத்தில் நாம் காண்போம். இங்கு நாம் நுண்ணறிவையும், அதன் வளர்ச்சியையும் பற்றிக் கவனிப்போம்.

ஒரு தனியனின் திறமைகளை நிர்ணயிக்கின்ற முக்கிய காரணி களில் நுண்ணறிவின் வளர்ச்சியும், முதிர்ச்சியும் பெரும் பங்கினைப் பெற்றிருப்பதால், இளையோரின் நடத்தைகளையும் பொருத்தப் பாடுகளையும் தெரிந்து கொள்ள முற்படும் நாம், அவர்களின் நுண்ணறிவு வளர்ச்சித் தன்மைகளைப் பற்றி அறிந்து கொள்வது அவசியமாகும். இளையோருக்கு, எக்காலத்தில், எத்தகைய, அனுபவங்களுக்கான வாய்ப்புகள் தரவேண்டும்? எத்தகைய அனுபவங்கள் அவர்களுக்குச் சிக்கலை ஏற்படுத்துகின்றன? என்பவற்றின் அடிப்படையில் கல்வித் துறையினர் சிறந்த கல்வித் திட்டம் ஒன்றினை உருவாக்கி, அதைச் செயல்பட வைப்பதற்கு

இளையோரின் நுண்ணறிவு வளர்ச்சித் நுன்மைகளைப் பற்றிய அறிவு பயனுள்ளதாக இருக்கும். இதைத் தவிர, பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளைச் சிறந்த வகையில் முன்னேற வைக்கவும், அவர்களின் பிற்கால வாழ்க்கைக்குத் தேவையானவற்றை உருவாக்கித் தரவும், நுண்ணறிவின் வளர்ச்சியைப் பற்றிய அறிவு பயன் அளிக்கக் கூடும்.

நுண்ணறிவின் வளர்ச்சி, ஏனைய உடல், உடலியல் வளர்ச்சிகளைச் சார்ந்தும், அவைகளோடு தொடர்பு கொண்டும் நிகழ்கின்றது. ஒருவன் சிறப்பான முறையில் செயல்படுவதற்கு, அவனது நரம்பு மண்டல வளர்ச்சியும், கடந்த கால அனுபவங்களும் ஒன்றோடொன்று இணைந்து துணைபுரிகின்றன. ஆதலால், ஒரு தனியனின் நுண்ணறிவு வளர்ச்சியும், கடந்த கால அனுபவங்களும் அவனுக்குத் துணையாயிருக்கும் அளவிற்கு வளர்ச்சி ஏற்படாது இருந்தால், அவன் தனது நிகழ்கால அனுபவங்களின் மூலம் எந்தவிதப் பயனையும் பெற இயலாது. மேலும், நுண்ணறிவு வளர்ச்சியின் வெவ்வேறு கட்டங்கள் ஒருவன் வேறுபட்ட செயல்களில் சிறந்து விளங்குவதற்குத் துணையாயிருக்கும்.

நுண்ணறிவைப் பற்றி உளவியலார்கள் எண்ணற்ற வகையில் வரையறை (Definitions) செய்துள்ளனர். இந்த எண்ணற்ற பொருள் 'வரையறைகளைப் பகுத்து ஆய்ந்தால் அவற்றை எல்லாம் மூன்று வகைகளில் பிரிக்கமுடியும். முதல் வகைப் பகுப்பில் அடங்கும் நுண்ணறிவு என்பது ஒரு தனியனின் கற்றுத் தேறுகின்ற திறமையைக் குறிக்கின்றது எனக் கூறுகின்றனர். இவ்வகையினைப் பொறுத்தவரை, ஒரு தனியன் எந்த அளவிற்குக் கல்வியில் தேர்ச்சிகளைப் பெற்றுள்ளானோ, அந்த அளவிற்கு நுண்ணறிவுத் திறன் மிக்கவன் என்று கருதலாம். இரண்டாம் வகையினைச் சார்ந்தவை, ஒரு தனியன் தன் சூழ்நிலைக்கேற்ப, தன்னைச் சரிசெய்து கொள்ளும் திறமையே நுண்ணறிவு எனும் பொருள்வரையறையைச் செய்கின்றன. அதாவது, புதிய, மாறுகின்ற, சூழ்நிலைகளுக்கேற்ப ஒருவன், தன் நடத்தைகளைச் சரிசெய்துகொண்டு, எந்த அளவிற்குச் சிறந்த முறையில் பொருந்தி நடக்கின்றானோ அந்த அளவிற்கு அவன் நுண்ணறிவுத் திறன் மிக்கவன் ஆவான். ஸ்பென்சர் (Spencer) என்பாரின் நுண்ணறிவுப் பொருள்வரையறை இவ்வகையினைச் சார்ந்ததாகும். மூன்றாம் பகுப்பு, உயர்ந்த வகை உளச்செயல்களான சிந்தித்தல், பகுத்தறிதல் போன்றவைகளுக்கான திறமையினையே நுண்ணறிவு எனக் குறிக்கின்றது. இவை, தனியன் எந்த அளவிற்குக் கருத்தியல் சிந்தனையில் ஈடுபட்டுச் சிறக்கின்றானோ, அந்த அளவிற்கு அவன்

நுண்ணறிவுத் திறன்மிக்கவன் என்று விளக்குகின்றன. பீனே (Binet) ஸ்பியர்மன் (Spearman) டெர்மன் (Terman) போன்ற உளவியலாரின் வரையறைகள் இந்தப் பகுப்பில் அடங்குகின்றன.

நுண்ணறிவு பற்றிய இம்மூன்று பொருள் வரையறைகளும், முறையே கற்கும் திறன், பொருத்தப்பாடு, சிந்தனை ஆகிய மூன்று பண்புகளை வலியுறுத்துகின்றன. இவைகளை நோக்குங்கால், இவை முற்றிலும் தனிப்பட்டவை அன்று என்றும், இவை ஒன்றோடொன்று தொடர்புகொண்டவை என்றும் நாம் அறியலாம். ஏனெனில், கல்வியில் சிறந்த தேர்ச்சியைப் பெறுதவன், புதியதும், மாறுகின்றதுமான சூழ்நிலைகளுக்கேற்ப சிறந்த வகையில் பொருத்தப்பாடுகளைக் கொண்டிருக்க முடியாது. இதுபோன்றே ஒரு தனியன் சூழ்நிலையுடன் நன்கு பொருந்தி இருக்காத நிலையில் அவன் கல்வியில் நல்ல தேர்ச்சியினை அடையமுடியாது. மேலும் சிறந்த கல்வித் தேர்ச்சியைப் பெற்றிருக்கின்ற தனியன் கருத்தியல் சிந்தனையில் ஈடுபட்டுச் சிறக்க முடியும். எந்த அளவிற்கு ஒரு தனியன் கருத்தியல் சிந்தனையில் சிறந்து விளங்குகின்றானோ, அந்த அளவிற்கு அவன் கல்வியிலும் முன்னேறிச் சிறந்து விளங்க முடியும். இவ்வாறே, புதியதும், மாறுகின்றதுமான சூழ்நிலைகளுக்கு நன்கு பொருந்தி நடக்கும் தன்மையுடையவன், கருத்தியல் சிந்தனையில் நன்கு ஈடுபட முடியும். கருத்தியல் சிந்தனையில் முன்னேறியுள்ளவன், தன்னுடைய சூழ்நிலையுடன் நன்கு பொருந்தியிருக்க இயலும். ஆதலால், இம்மூன்றுவகைப் பொருள்களும் ஒன்றையொன்று சார்ந்தேயுள்ளன என்றும், மறைமுகமாக ஒன்றையொன்று குறிப்பிடுகின்றன என்றும் அறியலாம். இதனை மனதிற்கொண்டே, வெஸ்லர் என்பார் (Wechsler) நுண்ணறிவு பற்றிய தன்னுடைய பொருள் வரையறையைப் பின்வருமாறு தந்துள்ளார். "நுண்ணறிவு என்பது ஒரு நோக்கத்தின்பால் செயல்படவும், பகுத்தறிவின் அடிப்படையில் சிந்திக்கவும், சுற்றுப்புறச் சூழ்நிலையுடன் சிறந்த வகையில் தொடர்புகொள்ளவும் தனியனுக்கு ஏதுவாயிருக்கும் திறமைகள் அனைத்தையுமே தன்னில் ஒருங்கே கொண்ட கூட்டுத்திறமையாகும்."

**நுண்ணறிவுச் சோதனைகளின் வளர்ச்சி :**

19-ம் நூற்றாண்டின் துவக்கத்தில், பாரீஸ் நகராட்சி அதிகாரிகள் தங்கள் பள்ளிகளில் படிக்கும் பிள்ளைகள் பலர், படிப்பில் பின் தங்கியுள்ளதைப் பற்றி வருந்தி, அதற்கான காரணத்தை அறிய முற்பட்டனர். வழக்கமாகப் பின்பற்றி வந்த போதனைக் கல்வியின் மூலம் அப்பிள்ளைகள் எந்தவிதப் பயனையும்

பெறுவதாக அவர்களுக்குத் தோன்றவில்லை. இப்பிள்ளைகளின் பின்தங்கிய நிலை, ஆசிரியர்கள் வழக்கமாக நினைப்பதுபோல் கவனம் செலுத்தாததனாலும், குறும்பு செய்வதனாலும் ஏற்படு வதா அல்லது புத்திக் குறைவினால் உண்டாவதா என்பதைத் தெரிந்துகொள்ள அந்த அதிகாரிகள் விரும்பினர். எனவே, அவர்கள், 1904-ஆம் ஆண்டு, நகராட்சிப் பள்ளிகளிலிருந்த பிள்ளை களின் நுண்ணறிவை ஆராயவும், அதை அளவிட ஏற்ற முறைகளை உருவாக்கவும் ஆல்பிரட் பீனே (Alfred Binet) என்ற உளவியலார் தலைமையில் ஒரு ஆணைக்குழுவினை (Commission) அமைத்தனர்.

பீனே அப்போது ஒரு புகழ்பெற்ற உளவியலாராக விளங்கி னார். மந்த புத்தியுள்ள பிள்ளைகளைத் தனி வகுப்பில் பாடம் சொல்லிக் கொடுக்கவேண்டும் என்ற கருத்தினை ஏற்கனவே அவர் தெரிவித்திருந்தார். ஆதலால், இதைப்பற்றி ஆராயும்படி அவரைக் கேட்டுக்கொண்டபோது, அவர் அதை விருப்பத்துட னும் ஆர்வத்துடனும் ஏற்றுக்கொண்டார். பிள்ளைகளின் மன வளர்ச்சியையும், நுண்ணறிவையும், புறநிலைச் சோதனைகளின் வழி (Objective tests) நிர்ணயிப்பதே நம்பகம் வாய்ந்த, ஏற்புடைய முறை என பீனே கருதினார். எனவே, அவர் வேறுபட்ட வயதினையுடைய ஏராளமான பிள்ளைகளைப் பல்வகைப்பட்ட பணிகளின் மூலம், ஆய்ந்தார். இவற்றின் மூலம் எந்த ஒரு தனிப்பட்ட பணியின் அடிப்படையிலும் ஒரு தனியனின் நுண்ணறிவை நிர்ணயித்து அறிய முடியாதென்ற முடிவுக்கு அவர் வந்தார். ஆதலால், அவர் அப்பிள்ளைகளுக்குப் பல வகைப்பட்ட ஏராளமான பணிகளைச் செய்யச் சொன்னார். அவைகளின் மூலம், வெவ்வேறு வயதினைச்சார்ந்த பெரும்பான்மை யான பிள்ளைகள் எவ்வகைப் பணிகளைச் செய்து முடிக்கும் திறமையைக் கொண்டிருக்கின்றனர் என்பதை அவர் அறிய முனைந்தார். ஒரு குறிப்பிட்ட வயதுப் பிள்ளைகளில் பெரும் பான்மையினர் வெற்றியுடன் செய்து முடித்த பணிகள் அவ்வயதுப் பிள்ளைகளின் சராசரி திறமையினைக் குறிப்பனவாகும் எனக் கொள்ளலாம். இந்த வகையில், ஒரு பிள்ளை செய்து முடித்த பணிகளை, அவன் வயதிற்கான சராசரியுடன் ஒப்பிட்டு, அந்தப் பிள்ளை சராசரித் திறமையினைக் கொண்டிருக்கின்றதா, அல்லது உயர்ந்த திறமையினைப் பெற்றிருக்கின்றதா என்பதை நிர்ண யிக்கலாம்.

ஒரு குறிப்பிட்ட வயதுப்பிள்ளைகளில் பெரும்பான்மையினர் வெற்றியுடன் செய்து முடித்த பணிகள், அவ்வயதுக்கான நுண் ணறிவுச் சோதனையில் சேர்க்கப்படுகின்றன. இந்தவிதத்தில்,

*1905*-ல் நுண்ணறிவுச் சோதனைகளின் முதற் தொகுப்பை பீனே வெளியிட்டார். இச்சோதனைத் தொகுப்பில், *30* வகையெண்கள் (Items), படிப்படியாகக் கடினமாகும் வகையில் இருந்தன. வயது முதிர்ந்த பிள்ளைகள் இச்சோதனையில் மிகுதியான வகையெண்களை வெற்றியுடன் முடிப்பார்கள் என எதிர்பார்க்கப்படுகின்றது. இவ்வாறு, பீனே நுண்ணறிவுச் சோதனைகளின் தந்தையாகக் கருதப்படுகின்றார். பீனேயின், முதன்முதலான இச்சோதனைகளை பீனேயும் அவர் உடனுழைப்பாளர், மருத்துவர் சைமனும் (Simon), *1911*-ஆம் ஆண்டில் திருத்தியமைத்தார்கள்.

**உளவயதின் கருத்துரு (Concept of Mental Age)**

இத்துறையில் பீனேயின் மிக முக்கியத்துவம் வாய்ந்த பணியானது நுண்ணறிவை ஒரு தொகையின் அடிப்படையில் அளவிட முயன்றதேயாகும். எதையும் அளவிட ஓர் அளவுகோல் தேவை. நுண்ணறிவையும் அளவிட்டுக்கூற எண்ணலகு (Unit Measure) ஒன்றினை பீனே உருவாக்கினார். நுண்ணறிவானது வயதுக்கேற்ப மாறுபடுகின்றது என்பதன் அடிப்படையில், பீனே வேறுபட்ட வயதினருக்கான சோதனைகளை ஏற்படுத்தினார். இந்தச் சோதனைகளின் மூலம் பிள்ளைகள் அடைந்திருக்கும் மனமுதிர்ச்சியின் நிலையை அறிய இவர் முற்பட்டார். ஒரு குறிப்பிட்ட வயதினரில் பெரும்பான்மையினர் வெற்றியுடன் செய்து முடித்த பணிகளே அவ்வயதிற்கான சோதனைகளில் சேர்க்கப்பட்டிருந்ததால், அச்சோதனையே அவ்வயதிற்கான சராசரி மன முதிர்ச்சியைக் குறிப்பதாகும். எனவே, இச்சோதனைப் பணிகளை உண்மையில் செய்து முடிக்கும் திறமை, ஒரு பிள்ளை எய்திருக்கும் மனமுதிர்ச்சியினைக் காட்டுகின்றது. ஆதலால், ஒரு பிள்ளை அதன் வயதிற்குரிய சோதனையை வெற்றியுடன் செய்து முடித்தால், அப்பிள்ளை சாதாரண அல்லது சராசரியான (Normal or Average) பிள்ளை எனக் கருதப்படும். ஆனால், ஒரு பிள்ளை தன் வயதிற்கான சோதனையைச் சரிவரச் செய்துமுடிக்க இயலாது, தனக்குக் கீழ்பட்ட வயதினரின் சோதனையினையே முடிக்க இயன்றதெனில் அது திறங்குன்றிய (Subnormal) பிள்ளை எனக் கருதப்படும். ஏனெனில், அது தன் வயதினர் அடைந்துள்ள மனமுதிர்ச்சி நிலையிலிருந்து குறைந்த அளவு மனமுதிர்ச்சியினையே பெற்றிருக்கின்றது. மேலும், ஒரு பிள்ளை தன் வயதிற்குரிய சோதனையினை நன்கு முடித்துவிட்டு, தன் வயதிற்கும் மேற்பட்ட சோதனையினையும் வெற்றியுடன் செய்து முடித்தால், அப்பிள்ளை திறம் மிகுந்த (Supernormal) பிள்ளையெனக் கருதப்படும். ஏனெனில், அப்பிள்ளை தன் வயதிற்கும் முற்பட்ட வயதினர் அடைந்துள்ள மனமுதிர்ச்சி நிலையினை எய்தியிருக்கின்றது. இவ்வாறு பீனே, தன்னுடைய புகழ்

பெற்ற "உளவயதின் கருத்துருவை" உருவாக்கினர். ஒரு பிள்ளையின் உளவயதானது அது உண்மையில் அடைந்திருக்கும் மனமுதிர்ச்சியினைக் காட்டுகின்றது. அப்பிள்ளையின் மனமுதிர்ச்சியினை அது வெற்றியுடன் முடித்த சோதனையிலிருந்து அறியலாம். ஆதலால், ஒரு பிள்ளை எந்த வயதுச்சோதனை வரை வெற்றியுடன் முன்னேறுகின்றதோ, அதுவே அப்பிள்ளையின் உளவயதினைக் குறிக்கும். சான்றாக, ஒரு 5 வயதுப் பிள்ளை 4 வயதிற்கான சோதனையினை நன்கு முடித்து, தன் வயதிற்கான சோதனையில் தோல்வியுற்றால், அப்பிள்ளையின் கால வயது 5–ஆக இருந்தாலும், அதன் உளவயது 4 வருடங்கள் தான் ஆகும். இப்பிள்ளையை அறிவில் பின்தங்கிய பிள்ளை எனலாம். மேலும், 5 வயதுப் பிள்ளை தன் வயதிற்கான சோதனையில் நன்கு தேர்ந்து, 6 வயதிற்கான சோதனையில் தோல்வியுற்றால், அப்பிள்ளையின் உளவயது அதன் கால வயதினை ஒத்திருக்கும். இப்படிப்பட்ட பிள்ளைதான் சாதாரண அல்லது சராசரியான பிள்ளை எனக் கருதப்படும். மாறாக, ஒரு 5 வயதுப் பிள்ளை தன் வயதிற்கான சோதனையை நன்கு முடித்து, 6 வயதிற்கான சோதனையிலும் நன்கு தேர்ந்து விட்டால், அப்பிள்ளையின் கால வயது 5 ஆண்டுகளே இருந்தாலும், அதன் உளவயது 6 ஆண்டுகளாகக் கருதப்பட வேண்டும். இது அறிவில் மேம்பட்ட (Superior) பிள்ளையாகும். ஆதலால், ஒரு பிள்ளையின் உளவயது அதன் உள இயக்கங்கள் எந்த வயதினரின் உள இயக்கங்களை ஒத்திருக்கின்றதோ, அதைப் பொறுத்துள்ளது. எனவே, உ. வ. எனக் குறிப்பிடப்படும் உளவயதானது ஒரு பிள்ளை அடைந்துள்ள மன முதிர்ச்சியினை எடுத்துக் காட்டுகின்றது.

**நுண்ணறிவு ஈவு (I. Q.) :**

உளவயது ஒரு பிள்ளை அடைந்திருக்கும் மனமுதிர்ச்சியின் நிலையினைக் காட்டுகின்றதெனினும், அதில் ஒரு குறைபாடு உள்ளது. கால வயதினைத் தெரிந்து கொள்ளாமல், உளவயதின் அடிப்படையில் மட்டும் ஒரு பிள்ளையின் அறிவுக் கூர்மையையோ, மந்த புத்தியையோ நிர்ணயிக்க முடியாது. சான்றாக, ஒரு பிள்ளை 5 வருடங்களைக் கொண்ட உள வயதினைக் கொண்டிருக்கின்றது எனும் போது, அப்பிள்ளை 5-வருட கால வயதினையுடைய பிள்ளைகள் எய்தியிருக்கும் மனமுதிர்ச்சியினை அடைந்திருக்கின்றது என்பது மட்டும் பொருள்படுமேயன்றி, அதிலிருந்து அப்பிள்ளை சாதாரணப் பிள்ளையா அல்லது அறிவு கூர்மையுடையதா, அன்றி மந்த புத்தியுடைய பிள்ளையா என்பதை நாம் அறிய முடியாது. இந்தக் குறைபாட்டை நிவர்த்தி செய்ய, வில்லியம் ஸ்டெர்ன் (William Stern) என்ற ஜெர்மானிய உளவியலார் "உள ஈவு" (Mental Quotient) எனும் கருத்துருவைத் தந்தார். டெர்மன் என்ற

அமெரிக்க உளவியலார் நுண்ணறிவு ஈவு (Intelligence Quotient) என்று இதைச் சிறிது திருத்தி அமைத்தார். நுண்ணறிவு ஈவானது, உளவயதிற்கும் கால வயதிற்கும் உள்ள விகிதத்தினைக் குறிக்கின்றது. இந்த விகிதம் பின்னத்தில் இருப்பதைத் தவிர்க்க, அதை 100-ஆல் பெருக்கி ஒரு முழு எண்ணாகக் கூறப்படுகின்றது. நுண்ணறிவு ஈவினைக் கணிக்க கீழே காணப்படும் சூத்திரம் பயன்படுகின்றது.

$$\text{நுண்ணறிவு ஈவு (நு. ஈ.)} = \frac{\text{உளவயது}}{\text{காலவயது}} \times 100$$

இந்தச் சூத்திரத்தின்படி, ஒரு பிள்ளை தன் வயதிற்கான மனமுதிர்ச்சியினை அடைந்திருந்தால், அதாவது தன் வயதிற்கான நுண்ணறிவுச் சோதனைகளை அது வெற்றியுடன் முடித்தால், அதன் உளவயதும் காலவயதும் ஒத்திருப்பதனால், அதன் நுண்ணறிவு ஈவு 100 ஆக விளங்கும். இது சாதாரண அறிவுடைய பிள்ளையாதலால், சாதாரண நுண்ணறிவின் ஈவு 100 ஆக எடுத்துக் கொள்ளவேண்டும். ஆனால் பல காரணங்களால், இத்தகைய திட்டவட்டமான தனித்த ஒரு எண்ணைப் பெறுவது கடினமானதால், சாதாரண அல்லது சராசரி நுண்ணறிவு ஈவின் பரப்பு 90—110 ஆகக் கொள்ளப்படுகின்றது. ஒரு 5 வயதுப் பிள்ளையின் உளவயது 4 ஆக நிர்ணயிக்கப்பட்டால் அப்பிள்ளையின், உள வயது கால வயதினை விடக் குறைந்திருப்பதால், இச்சூத்திரத்தின்படி அப்பிள்ளையின் நுண்ணறிவு ஈவு 100ஐ விடக் குறைந்திருக்கும். இதிலிருந்து அது திறங்குன்றிய பிள்ளை என நாம் அறிந்து கொள்ள இயலும். மேலும், ஒரு 5 வயதுப் பிள்ளையின் உளவயது 6-ஆக நிர்ணயிக்கப்பட்டால், அதன் நுண்ணறிவு ஈவு இச்சூத்திரத்தின்படி 100-க்கு மேற்பட்டு இருக்கும். இதிலிருந்து அப்பிள்ளை மேம்பட்ட அறிவினையுடையது என அறியப் பெறலாம்.

**நுண்ணறிவுச் சோதனைகளின் வகைகள் :**

நுண்ணறிவுச் சோதனைகளை, தனியாள் சோதனைகள், குழுச் சோதனைகள் என்று இரு வகைகளாகப் பிரிக்கலாம். பீனே-சைமனின் சோதனை தனியாள் சோதனையாகும். இத்தகைய சோதனைகள், ஒரு நேரத்தில் ஒரு தனியனை மட்டுமே சோதித்து அளவிடப் பயன்படுபவையாகும். குழுச் சோதனையானது, ஒரு குழுவினரை ஒரே நேரத்தில் சோதிக்கப் பயன்படுவதாகும். இதில் சோதிக்கப்படவேண்டிய எல்லோரும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் இவற்றைத் தொடங்கி முடிக்க வேண்டும். இவற்றில் கால வரையறை நிலையானது. கொடுக்கப்பட்ட நேரத்தில்

வெற்றியுடன் செய்து முடித்த பணிகளின் அடிப்படையில் ஒருவனின் நுண்ணறிவு நிர்ணயிக்கப்படுகின்றது. தனியாள் சோதனை, குழுச் சோதனையை விடச் சிறந்தது. ஏனெனில், சோதிப்பவர் தன்னுடைய முழுக்கவனத்தையும் சோதிக்கப்படு பவரின் பால் இதில் செலுத்த முடிகின்றது. மேலும், சோதிக்கப் படுபவர் நன்கு செயல்புரிய இதில் வாய்ப்பும் உள்ளது. ஆனால் குறைந்த கால அளவில், எண்ணற்றோர்களைச் சோதிக்க குழுச் சோதனையே ஏற்றது. குழுச் சோதனைகள் முதன் முதலாக முதல் உலகப்போரின் போது ஏற்படுத்தப்பட்டன. அப்போது அமெரிக்க இராணுவத்திற்காக இராணுவ ஆல்பா (Army Alpha), இராணுவ பீடா (Army Beta) ஆகிய சோதனைகள் அமைக்கப்பட் டன. குறைந்த காலத்தில் நுண்ணறிவுத் திறன்மிக்க வீரர்களைத் தேர்ந்தெடுத்துப் பயிற்சியளிக்க இச்சோதனைகள் மிகவும் பயன் பட்டன. ஸிரில் பர்ட் (Cyril Burt) என்ற ஆங்கிலேய உளவிய லார் இராணுவ ஆல்பா சோதனையை ஆங்கிலேய இராணுவத் திற்கு ஏற்றதாகத் திருத்தியமைத்தார். இது குழுச்சோதனை 33 (Niip Group Test 33) எனக் குறிப்பிடப்படுகின்றது. இரண்டாம் உலகப்போரின் போது அமெரிக்க இராணுவ உளவியலார் இராணுவ ஆல்பா சோதனையைத் திருத்தியமைத்து அதற்கு பொதுவகைப்படுத்தும் இராணுவச் சோதனை (Army General Classification Test) என்று பெயரிட்டனர்.

நுண்ணறிவுச் சோதனைகளை, சொற் சோதனை சொல்லிலாச் சோதனை, செயற் சோதனை என மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். சொற் சோதனை ஒரு மொழியினை எழுதப்படிக்கத் தெரிந்தவர் களுக்காகப் பயன்படுத்தப்படுகின்றது. இவை, மொழியின் நடை முறை வழக்கத்தினையும், அதன் சொற்களுக்கான பொருள்களையும் நன்கு தெரிந்து கொண்டிருப்பதன் அடிப்படையில் .பயன்படுத்தப் படுகின்றது. பெரும்பாலான நுண்ணறிவுச் சோதனைகள் சொற் சோதனைகளேயாகும். பீனே, ஸைமனின் சோதனை, இராணுவ ஆல்பா சோதனை, மற்றும் பல சோதனைகள் சொற் சோதனைகளே யாகும். எழுதப் படிக்கத் தெரியாதவர்களிடம் இத்தகைய சோதனைகளைப் பயன்படுத்த முடியாது. இந்நிலையில் சொல்லிலாச் சோதனைகள் உருவாக்கப்பட்டன. சொல்லிலாச் சோதனைகள் படங்களையும் உருவங்களையும் கொண்டனவாக உள்ளன. முதல் உலகப்போரின் போது அமெரிக்க இராணுவத்தில் எண்ணற்ற கல்வியறிவில்லாத வீரர்களைப் படையில் சேர்த்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டதால், அவர்களின் நுண்ணறிவினை அளவிட்டறிய இராணுவ பீடா சோதனை தயாரிக்கப்பட்டது.

இது, எழுதப் படிக்கத் தெரியாதவர்களுக்குப் பயன்படுத்தப்படுவதாகும்.

சொல்லிலாச் சோதனைகளை ஏற்படுத்தியதற்கு மற்றொரு காரணமும் நோக்கமும் உண்டு. சொற்சோதனைகள் பண்பாட்டுக் கலாச்சாரக் காரணிகளால் பாதிக்கப்படுகின்றன என்றும், ஒரு குறிப்பிட்ட பண்பாட்டுக் குழுவினைச் சார்ந்தவர்களை மட்டுமே சோதித்தறிய அவற்றைப் பயன்படுத்த முடியும் என்றும் கருதப்பட்டன. ஆகையால், பண்பாட்டுக் காரணிகளின் பாதிப்பற்ற சோதனைகளை (Culture Free Tests) உளவியலார் உருவாக்கினர். எனவே, இத்தகைய சோதனைகள் படங்களையும், உருவங்களையும் கொண்டுள்ளன. எனினும், பண்பாட்டுக் காரணிகளின் பாதிப்பற்ற சோதனைகளை உருவாக்கும் முயற்சி வெகுவாக வெற்றி காணவில்லை.

சொல்லிலாச் சோதனைகளில் ஒரு தனிப்பட்ட வகை, செயற் சோதனைகளாகும். இதில் சோதிக்கப்படுவோர், எளிய இயக்கங்கள் சிலவற்றைச் செய்யும்படி கேட்டுக் கொள்ளப்படுகின்றனர். இதற்கான அறிவுரை சொல்வழி தரப்படுகின்றது. இவ்வகைச் சோதனையில் அடங்கியுள்ள இயக்கச் செயல்கள், வேறுபட்ட கடினத் தன்மையைக் கொண்டுள்ளன. ஆதலால், நுண்ணறிவின் வேறுபட்ட தரத்தினை இதைக்கொண்டு பொருத்தமாக அளவிட முடியும். செயல் சோதனைகளில் சிறப்பு வாய்ந்த சில சோதனைகள் அலெக்ஸாண்டரின் கடந்து செல்லும் சோதனை (Alexander's Pass Along Test), ஹீலியின் படம் நிறைசோதனை (Healy's Picture Completion Test), படத்தைச் சரியமைக்கும் சோதனை (Picture Arrangement Test), கோவின் கட்டைகள் வகை மாதிரிச் சோதனை (Koh's Block Design Test), கனசதுரம் அமைக்கும் சோதனை (Cube Construction Test), பல்வகை உருவப் பலகைகள் (Form Boards) ஆகியவையாகும்.

நவீன நுண்ணறிவுச் சோதனைகள் ஒரே வகைப்பட்ட வகையெண்களை உடையதாயில்லை. ஆனால் அவை சொல், சொல்லிலா வகையெண்கள் அனைத்தினையும் ஒருங்கே கொண்டுள்ளன. நுண்ணறிவின் எந்தக் காரணியினையும் சோதிக்கப்படாமல் விட்டுவிடாது, நுண்ணறிவின் எல்லாப் பண்புகளையும் நன்கு அளவிட இத்தகைய கலப்புச் சோதனைகள் ஏற்றதாக உள்ளன. பல்வகைச் சோதனைகளைக் கொண்டுள்ள கலப்புச் சோதனை, சோதனைத் தொகுதி (Test Battery) என்று குறிப்பிடப்படுகின்றது. இக்காலத்தில் தனிச்சோதனைகளைவிட இத்தகைய சோதனைத் தொகுதி

களே பெரும்பாலும் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. இத்தகைய சோதனைத் தொகுதிகளுக்கான சிறந்த சான்றானது வெஸ்லர்—பெல்லெவியு சோதனை (Wechsler Bellevue Test) ஆகும். இச் சோதனையில் இரு படிவங்கள் உள்ளன. குழந்தைகளுக்கான சோதனையின் படிவம் வெஸ்லரின் குழந்தைகளுக்கான நுண்ணறிவு அளவை ஆகும் (Wisc) முதிர்ந்தோருக்கான சோதனையின் படிவம் வெஸ்லரின் முதிர்ந்தோர் நுண்ணறிவு அளவை (Wais) எனப்படும். இத்தகைய சோதனைகளைப் பற்றி நன்கு அறிந்து கொள்வதற்கு ஏற்ற வழியானது அவற்றைச் சோதனைக் கூடத்தில் கையாண்டு அறிவதேயாகும்.

**மனவளர்ச்சியின் வேகமானம் (Rate of mental growth) :**

மனவளர்ச்சியின் வேகமானத்தைப் பல்வகையான சோதனைகளின் மூலம் உளவியலார் ஆய்ந்துள்ளனர். இவர்கள் ஒரு தனியனை அல்லது கட்டுப்படுத்தப்பட்ட ஒரு குழுவினரைத் தொடர்ந்து திரும்பத் திரும்ப பல ஆண்டுகளுக்குச் சோதனைக் குட்படுத்தி அவர்களிடம் மனவளர்ச்சி வீதத்தினை, நீள்வகை ஆய்வு முறையில் கணிக்க முயன்றனர். இவ்வாய்வுகள், மன வளர்ச்சியானது இறுதிவரை ஒத்த அளவில் ஒரே சீராக ஏற்படுவதில்லை என்ற உண்மையை எடுத்துக்காட்டுகின்றன. மேலும், மன வளர்ச்சி குழந்தைப் பருவத்தில் துரிதமாக நடைபெறுகிறதென்றாலும், இளையோர் பருவத்தில் அதன் வேகம் குறையத் தொடங்குகின்றதென்றும் காணப்பட்டது. மனவளர்ச்சியானது குழந்தைப் பருவத்தில் தொடங்கி இளையோர்ப் பருவத்தில் உச்ச எல்லையை அடைகின்றது. பின்னர் அது வெகுகாலம்வரை அதே அளவில் நிலைத்திருந்து, அதற்குப் பின்னர் சிறிது சிறிதாகக் குறையத் தொடங்குகின்றது.

நுண்ணறிவுச் சோதனையின் மதிப்பெண்களின் அடிப்படையில் வரையப்பட்ட வளர்ச்சி வளைவுகள், நுண்ணறிவு வளர்ச்சி குழந்தைப் பருவத்தில் துரிதமாக இருப்பதையும், 8 முதல் 15 ஆண்டுகள் வரை இந்த வேகம் குறைவதையும், 15 ஆண்டுகளுக்குப் பிறகு வளர்ச்சி வீதம் இன்னும் குன்றி இளையோர் பருவ இறுதியில் அது உச்ச எல்லையையடைந்து, அதற்குப் பின்னர் மெதுவாகக் குறையத் தொடங்குவதையும் எடுத்துக்காட்டுகின்றன.

இவ்வாய்வுகளில் தனி மனித வேறுபாடுகள் மிகுந்து காணப்பட்டன. மேலும், மேம்பட்ட, சராசரியான, குன்றிய நுண்ணறிவுடைய பிள்ளைகளில், நுண்ணறிவின் வளர்ச்சி மாறுபட்ட விகிதத்தில் நடைபெறுவதையும் இவ்வாய்வுகள் எடுத்துக்காட்டியுள்ளன.

வயது அதிகரிக்க, அதிகரிக்க இம்மூன்று வகையினரிடையேயுள்ள மாறுபாடுகள் அதிகரிப்பதாகக் காணப்படுகின்றன. பின்தங்கிய பிள்ளைகளைச் சராசரி திறமையுடையவர்களோடு ஒப்பிடுகையில், வயதின் அதிகரிப்பில் அவர்கள் இன்னும் பின் தங்கிவிடுகின்றனர் என்றும், இதைப்போலவே மேம்பட்ட நுண்ணறிவுடையவர்கள் சராசரியானவர்களைவிட இன்னும் உயர்ந்து விளங்குகின்றனர் என்றும் அறியப்பட்டது.




வரை படம்-9.

பூப்பின் தோற்றம் மனவளர்ச்சியைத் துரிதமாக்குவதாகக் காணப்படவில்லை. பூப்பின் தோற்றத்துடன் உடல், உடலியல் கூறுபாடுகளின் வளர்ச்சி ஏற்படும்போது, நுண்ணறிவின் வளர்ச்சி அங்ஙனம் ஏற்படுவதில்லை என்று ஆராய்ச்சிகளின் மூலம் தெரிகின்றது. ஸ்டோனும், பார்கரும் (Stone and Barker) 175 பூப்பெய்தாத பெண்பிள்ளைகளையும், 175 பூப்பெய்திய பெண் பிள்ளைகளையும், அவர்களின் வயதிற்குத் தக்கவாறு சோதனைக்குட் படுத்தியதில், இவ்விரு குழுவினரிடமும் நுண்ணறிவின் வளர்ச்சி மிகக் குறைந்த அளவே வேறுபட்டுக் காணப்பட்டதாகக் கண்டறிந்தனர். பூப்பெய்திவிட்ட குழுவினர் பூப்பெய்தாத குழுவினரைவிட 2·25 நுண்ணறிவு மதிப்பெண்களை உயர்வாகப் பெற்றிருந்த போதிலும், இவ்வேறுபாடு புள்ளியியல் முறைப்படி குறிப்பிடத் தக்கதாக இல்லை (Statistically insignificant). ஆதலால் பூப்பானது உடல், உடலியல் வளர்ச்சிகளின்பால் தான் முக்கியத்துவம்

கொண்டிருக்கின்றது என்றும். மன வளர்ச்சியின்பால் அவ்வளவு முக்கியத்துவம் கொண்டிருக்கவில்லை என்று அறியலாம். எனவே, பூப்பின் தோற்றத்தோடு, நுண்ணறிவினைவிட உடல், மன வெழுச்சி மாற்றங்களே நெருங்கிய தொடர்பினைக் கொண்டிருக்கின்றன.

**அறிவு வளர்ச்சியின் உச்ச எல்லை :**

எந்த வயதில் மன வளர்ச்சி நின்றுவிடுகின்றது என்பதை அறிய எண்ணற்ற ஆராய்ச்சியாளர்கள் முயற்சி செய்தனர். முதல் உலகப் போரின்போது இதனைக் கணிக்க முற்பட்ட ஆராய்ச்சியாளர்கள் மன வளர்ச்சி 13 அல்லது 14 ஆண்டுகளில் நின்றுவிடுவதாகத் தீர்மானித்தனர். ஆனால் 1921-24 ஆண்டுக் காலத்தில் நடத்தப்பட்ட சோதனைகள் 16 ஆண்டுகள் வரை மன வளர்ச்சி தொடர்ந்து நிகழ்வதாக எடுத்துக் காட்டின. புரூக் (Brooke) என்பார் மனவயது 15 வயதிலும் தொடர்ந்து வளர்ந்து கொண்டிருப்பதாகவும், பால்டுவின்னும், ஸ்டெக்கரும் (Baldwin And Stecher) அது 16 வயதிலும் வளர்ந்துகொண்டிருப்பதாகவும் தங்களின் ஆய்வுகளின் வழி கூறியுள்ளனர். ஜான்ஸன் (Johnson) என்பார் அறிவு வளர்ச்சியின் எல்லை 18 வயதிற்குப் பின்னர்தான் அடையப்படுகின்றதென்று கூறினர். இவ்வாறே, தார்ன்டைக் என்பார் (Thorndike) 18 வயதிற்கு மேற்பட்டும் மனவயது வளர்ந்துகொண்டிருப்பதாகக் கண்டார்.

1924-ஆம் ஆண்டிற்குப் பின்னர் செய்யப்பட்ட ஆய்வுகள், மன வளர்ச்சியின் உச்ச எல்லை 20 ஆண்டு வயதில் ஏற்படுவதாகக் காட்டியுள்ளன. பர்க்ஸ், ஜென்ஸன், டெர்மன் (Burks, Jensen and Terman) ஆகியோர் தங்கள் ஆய்வுகளில் மனவளர்ச்சி 19 வயது வரை நீடிப்பதாகக் கண்டனர். ஜோன்ஸும், கான்ரடும் (Jones and Conrad) 1911-ல் நியூ இங்கிலாந்தின் கிராமப் புறத்தினரை இராணுவ ஆல்பா (Army Alpha) சோதனையைக் கொண்டு ஆராய்ச்சி நடத்தியதில், மன வளர்ச்சியின் வேகமானம் 16 வயதுவரை மிகவும் துரிதமாக இருப்பதாகவும், பின்னர் 19, 20 வயதுவரை அது தொடர்ந்து மெதுவாக இருப்பதாகவும் கண்டனர். இவர்களைப் பொறுத்தவரை, மன வளர்ச்சியின் உச்ச எல்லை 19-க்கும் 20-க்கும் இடையில் ஏற்படுகின்றது. அதற்குப் பின்னர் மனவளர்ச்சி மெதுவாகக் குறையத் தொடங்கி, 50 வயதில் 14 வயதின் நிலைக்கு வந்து சேருகின்றது. ஏனைய ஆராய்ச்சிகளும் இதைப் போன்ற முடிவுகளையே தந்துள்ளன. ஆதலால் நுண்ணறிவின் வளர்ச்சி நின்றுவிடும் காலம், ஐம்பது வயதினைத் தாண்டியே ஏற்படுகின்றது என்பதை அறியலாம்.

இளையோர் பருவத்தில்தான் மனிதன் நுண்ணறிவின் உச்ச நிலையை அடைகின்றான். எனவே, முதிர்ந்த பருவத்தில் அவனுக்குள்ள கற்கும் திறம், இப்போது இளையோர் பருவத்திலேயே அவனிடம் உள்ளது. ஆதலால், அவனுடைய கற்கும் திறமையினைப் பெருமளவில் பயன்படுத்தி, அதனைக் கூர்மையாக்கும் பொருட்டு, அதற்கான கல்வி அனுபவங்களின் வாய்ப்புகளை அவனுக்கு இப்பொழுது அளிக்கவேண்டும். கல்விப் பாடத்திட்டம் இளையோரின் இயற்கை ஆற்றலின் தகுதிக்கும், உள நாட்டத்திற்கும் (Aptitude) ஏற்றதாகவும், பிற்காலத்தில் அவர்கள் மேல் நிலைப் பயிற்சிகள் பெறுவதற்கு ஏற்ற வகையில் பயன்படும்படியாகவும் அமையவேண்டும்.

### நுண்ணறிவு ஈவின் நிலைத்த தன்மை (Constancy of I. Q.):

மனவளர்ச்சி உடல் வளர்ச்சியினுடன் தொடர்ந்து நடைபெறுவதாலும், நுண்ணறிவு ஈவானது உடல் வயதிற்கும் உள வயதிற்கும் இடையில் இருக்கும் விகிதமாக உள்ளதாலும், ஒரு தனியனின் நுண்ணறிவு ஈவு, நிலைத்த தன்மை உடையதாக இருக்கும். கால வயதுடன் உளவயது தான் மாறுமே தவிர நுண்ணறிவு ஈவு மாறாமல் நிலைத்திருக்கும். நுண்ணறிவு ஈவின் நிலைத்த தன்மையினைப் பற்றிப் பல்வகை ஆய்வுகள் நடத்தப்பட்டன. ஆனால், இளையோர் பருவத்தில் நுண்ணறிவு ஈவின் நிலைத்த தன்மை பற்றிய ஆய்வுகள் மிகவும் குறைவாகவே உள்ளன. இவ்வாய்வுகள் பெரும்பாலும், நுண்ணறிவு ஈவு ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் நிலைத்துக் காணப்படுகின்றது என்று காட்டியுள்ளன. ஆனால், மேம்பட்ட அறிவுடைய குழுச் சிறுவர்களில் குறிப்பிடத்தக்க மாற்றம் ஏற்பட்டதாக டெர்மன் (Terman) கண்டறிந்தார். ரக் (Rugg) என்பார் பினே சோதனையைப் பயன்படுத்தி, ஒரே குழுவினரை மீண்டும் பரிசோதித்தபோது, சோதனை—மறு சோதனை தொடர்பாட்டுக் கெழு ·95 ஆக இருந்ததைக் கண்டார். பால்டுவினும், ஸ்டெக்கரும் (Baldwin and Stecher), 485 பிள்ளைகளை ஸ்டான்போர்டு—பினே (Stanford-Binet) சோதனையின் அடிப்படையில் ஆய்ந்து, சோதனை—மறு சோதனை தொடர் பாட்டுக்கெழு ·72 முதல் ·94 வரை இருந்தது எனக் கண்டறிந்தனர். மறு சோதனையில் காணப்பட்ட மாற்றங்கள் முதல் சோதனையின் மதிப்பீட்டிலிருந்து 5 புள்ளிகளுக்குள் கூடியோ குறைந்தோ இருந்தன. நுண்ணறிவில் குன்றிய குழுவினரையும், அதில் மேம்பட்ட குழுவினரையும் ஆய்ந்ததில், நுண்ணறிவு ஈவில் குறிப்பிடத்தக்க மாறுபாடுகள் காணப்பட்டன. ஆண்டர்ஸன், ஹில்டென், குல்மன் (Anderson Hilden and Kuhlmann) ஆகியோர் குறைந்த நுண்ணறிவின் பாற்

பட்ட பிள்ளைகளை ஆய்ந்ததில், வயதின் அதிகரிப்புடன் அவர்களின் நுண்ணறிவு ஈவு குறைந்ததைக் கண்டனர். ஆனல் பிரவுன், ஹென்மன், பர்ன்ஸ் (Brown, Henmon and Burns) ஆகியோரும், லிங்கனும் (Lincoln) தங்களின் ஆய்வுகளில் அறிவு குன்றியவர்களின் நுண்ணறிவு ஈவு, வயதுடன் குறையாது இருந்ததைக் கண்டனர், காட்டெல், லிங்கன், நெம்ஜெக் (Cattell, Lincoln and Nemzek) ஆகியோர் தங்கள் ஆய்வுகளில், உயர்ந்த நுண்ணறிவு ஈவு வயதுடன் கூடுவதில்லை எனக் கண்டறிந்தனர்.

ஸ்கோடாக் என்பார் (Skodak) தத்து எடுக்கப்பட்ட பிள்ளைகளை ஆய்ந்ததன் அடிப்படையில், நுண்ணறிவு ஈவு குழந்தைகள் வளர்கின்ற வளர்ப்பு இல்லத்தின் (Foster Home) சூழ்நிலையைப் பொறுத்து அமைகின்றது என்றும், நல்ல சாதகமான சூழ்நிலை நுண்ணறிவு ஈவினை அதிகரிக்கச் செய்கின்றது என்றும் கூறுகின்ருர். தாண்டைக் (Thorndike) 1100 தனியார் பள்ளிச் சிறுவர்களை சோதனை-மறுசோதனை மூலம் ஆய்ந்ததில், 2½ ஆண்டுகள் இடைவெளியில், அவர்களின் மதிப்பெண்கள் 50 எண்கள் அதிகரிப்பிலிருந்து 45 எண்கள் குறைவு வரை மாறுபட்டிருந்தன எனக் கண்டறிந்தார்.

| உயர்வு | | தாழ்வு | |
|---|---|---|---|
| புள்ளிகள். | எண். | புள்ளிகள். | எண். |
| 50 | 2 | 45 | 1 |
| 45 | 3 | 40 | 1 |
| 40 | 7 | 35 | 6 |
| 35 | 11 | 30 | 4 |
| 30 | 15 | 25 | 8 |
| 25 | 45 | 20 | 21 |
| 20 | 60 | | |

அட்டவணை—2. 2½ ஆண்டு இடைக்காலத்தில் சோதனை—மறு சோதனையில் காணப்பட்ட நு. ஈ மாற்றம். (தார்ண்டைக்)

இவ்வாய்வுகள் அனைத்தும், சூழ்நிலைக் காரணிகள், நாம் கருதுவதைவிட அதிகமான அளவில் நுண்ணறிவினைப் பாதிக்கின்றன என்றும், சாதகமான அல்லது பாதகமான சூழ்நிலைகள் ஒருவரின் கல்வித் தரத்தை நிர்ணயிக்கின்றன என்றும் காட்டுகின்றன. எனவே, மரபுநிலை ஒருவனின் நுண்ணறிவின் வளர்ச்சிக்கான வரையறையினைப் பரந்த வகையில் நிர்ணயிக்கின்றது என்றும், அவன் உண்மையில் அடைகின்ற நுண்ணறிவு வளர்ச்சியானது அவன் வாழ்க்கையின் தொடக்க கால சூழ்நிலையைப் பொறுத்துள்ளது என்றும் இவ்வாய்வுகளின் மூலம் அறியலாம்.

தனிப்பட்ட திறமைகளின் வளர்ச்சி :

உள்ளத்தின் வேறுபட்ட செயல்களைப் பற்றிய ஆய்வுகள், நினைவு (Memory), சிந்தனைத் திறமை (Reasoning Ability) ஆய்ந்தறி சிந்தனை (Critical Thinking) பொருள்படுத்தும் திறமை (Interpretative Ability), இன்னும் ஏனைய உளச் செயல்கள் ஒழுங்கான முறையில் வளர்கின்றன என்பதைக் காட்டுகின்றன. மேலும், இவற்றின் வளர்ச்சி குழந்தைப் பருவம் முதல் முதிர்ச்சியடையும் வரை தொடர்ந்து நடைபெறுவதாகக் கண்டறியப் பட்டது.

நினைவின் வளர்ச்சித்தன்மை, ஏனைய உள்ளச் செயல்களின் வளர்ச்சியினைப்போன்றே உள்ளது என வளர்ச்சி வளைவுகள் காட்டுகின்றன. மேலும், இத்தகைய வளர்ச்சி வளைவுகள், வயதிற்கும் அனுபவத்திற்கும் ஏற்ப நினைவாற்றல் மேம்படுவதாகக் காட்டுகின்றன. உளவயதிற்கும் நினைவாற்றலுக்கும் இடையே மிகுந்த தொடர்பாடு இருப்பதாகவும் காணப்படுகின்றது.

மனிதனின் அறிவுத்திறமை, அவன் பேசுகின்ற மொழியில், அவன் எய்துகின்ற வளர்ச்சியினைப் பொறுத்தே அமைகின்றது. தன் எண்ணங்களை, மொழியைக் கொண்டு தெரிவிக்க இயலாத ஊமையன், அறிவு வளர்ச்சி பெறுவதில் பாதிக்கப்படுகின்றான். எனவே, ஒருவன் தான் பேசுகின்ற மொழியில் அடையும் சிறப்பான தேர்ச்சியும், முதிர்ச்சியும் அவனது அறிவு வளர்ச்சியுடன் தொடர்பு கொண்டிருக்கின்றது.

ஒருவன் ஒரு மொழியில் பெறும் தேர்ச்சி, அவன் அம்மொழியிலுள்ள சொற்களை இயன்ற அளவில் அதிகமாகக் கற்றுத் தேறுவதைப் பொறுத்துள்ளது. சிறந்த அறிவாற்றல் பெற்றவன் தான் நினைத்ததை அப்படியே எடுத்துரைக்கத் தேவைப்படும் எல்லா வகைச் சொற்களையும் அறிந்துகொண்டிருக்க வேண்டும். இவ்

வகையில் நடத்தப்பட்ட ஆய்வுகள், ஒரு தனியன் குழந்தைப் பருவத்திலும், இளையோர் பருவத்திலும் கற்றுத்தேறும் சொற்க ளின் எண்ணிக்கை வயதுடன் அதிகமாகிக்கொண்டே வருகின்றது எனக் காட்டுகின்றன.

நுண்ணறிவு வளர்ச்சிக்கு ஏற்ப காரண, காரியத் தொடர்புகளை அறிந்துகொள்கின்ற திறமையின் வளர்ச்சியும் காணப்படுகின்றது. இத்தகைய காரண, காரியத் தொடர்புகளுக்கான அறிவின் வளர்ச்சி ஒருவன் பெறுகின்ற கல்வி வளர்ச்சியினைப் பொறுத்து நடைபெறுகின்றது. ஐந்து, ஆறு வகுப்புகளில் படிக்கின்ற பிள்ளைகள், ஏனைய கீழ் வகுப்புகளில் பயிலும் பிள்ளைகளைவிட சூழ்நிலைகளைப் புரிந்துகொண்டு, அதன் பின் விளைவுகளை உடனே அறிந்துகொள்ளும் திறமையில் தேர்ச்சிபெற்றவர்களாய் உள்ளனர். எனவே, காரண, காரியத் தொடர்புகளை அறிந்து கொள்ளுகின்ற திறமை இளையோர் பருவத்தில் மிகவும் வளர்ச்சி பெற்றுச் சிறந்து காணப்படுகின்றது.

### நுண்ணறிவின் பரவல் (Disribution of Intelligence) :

பொதுவாக ஒரு குறிப்பிட்ட வயதினைச் சார்ந்த குழுவினர் களில், நுண்ணறிவானது இயல்பான நிலையில் பரவியுள்ளது. ஒரு மாதிரிக் குழுவானது மிகப்பெரியதாகவும், எந்த அடிப்படையிலும் அன்றி தேர்ந்தெடுக்கப்பட்டதாகவும் இருக்குமேயானால், அதன் மூலம் பெறப்படும் நுண்ணறிவின் பரவல், இயல்பான மணி உருவ வளைவு அமைப்பில் (Normal Bell-shaped curve) இருக்கும். அவ்வாறின்றி மாதிரிக் குழுவினர், ஏதாவதொரு தொடர்புள்ள காரணியின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தால், அந்தக் குழுவினுடைய "நுண்ணறிவின் பரவல் வளைவு" சிதை வுற்ற மணி உருவ அமைப்பில் இடப்புறத்திலோ, வலப்புறத்திலோ சாய்ந்திருக்கும் (Skewed).

இளையோர் பருவத்தில் காணப்படும் நுண்ணறிவின் வளர்ச்சித் தரத்தினை ஆசிரியர்கள் உணர்ந்திருப்பார்களேயானால், அவர்களில் காணப்படும் தனியாள் வேறுபாடுகளுக்கேற்ப, அவர்கள் கற்பிற்கும் பொருளினையும் முறையினையும் பொருத்தியமைத்து மிகுந்த பலனைக் காணமுடியும். வகுப்பறையில் கற்பிக்கப்படுவன வற்றைப் புரிந்துகொள்ள முடியாத நிலையிலிருந்து தவிக்கும் மாணவர்களின் பிரச்சினைகளையும், மன முறிவுகளையும் ஆசிரியர்கள் நன்குணர்ந்து, அதற்கேற்றவகையில் தங்களின் போதனை முறைகளை மாற்றியமைத்துக்கொண்டு அவர்களுக்குக் கற்பிக்க வேண்டும்.

மாணவர்கள் பலர் தங்களின் திறமைகளுக்கேற்ற வகையில் அக்கறையும் முயற்சியும் படிப்பில் எடுப்பதில்லை. இதற்கு மாருக, இன்னும் பலர் தங்களின் திறமைகளுக்கு அப்பாற்பட்டும் முயற்சி எடுத்து உழைக்கின்றனர். மேலும் மாணவர்களிடம் காணப்படும் பிரச்சினைகளின் காரணங்களை நன்கு அறிந்து கொள்ளாமல், அவர்களை ஆசிரியர்கள் தண்டித்தல் முறையன்று; ஏனெனில், ஆசிரியர்களின் கடமை மாணவர்களுக்கு உறுதுணையாக இருப்பதேயாகும். இப்பொறுப்பினை நிறைவேற்ற, மாணவர் களின் திறமைகளையும், அவற்றின் எல்லைகளையும் ஆசிரியர்கள் நன்கு அறிந்து, அவர்களின் திறமைகளுக்கு ஏற்ற வகையில் அவர் களைச் செயல்பட வைக்கவேண்டும். எவனொருவனும் எத்தகைய கடினமான முயற்சி செய்தாலும், அவன் தன் திறமைகளுக்கப்பால் செயல்பட அறவே முடியாது என்பதை ஆசிரியர்கள் நன்கு நினைவிற்கொள்ள வேண்டும். மாணவன் ஒருவன் தன் திறமை களுக்கு அப்பாற்பட்டு முயற்சி எடுக்கும் பொருட்டுத் தொடர்ந்து வலிபுறுத்தப்பட்டால், அதன் பின் விளைவுகள் அவனுக்கும், அவனுடன் தொடர்பு கொண்டிருப்பவர்களுக்கும் தீமையினையே விளைவிக்கும். பள்ளிப் பாடங்கள், தங்கள் திறமைகளுக்கப்பாற் பட்டு உள்ளதைக் காணும் மாணவர்கள், பாடத்திற்கு அப்பாற் பட்ட நடவடிக்கைகளில் பங்குகொண்டு, அவற்றின் மூலம் இந்தக் குறையினை ஈடுசெய்துகொள்ள முயற்சிப்பது நன்று. ஆனல் இந்தக் குறையை ஈடுசெய்வதற்கு ஏற்ற வாய்ப்புகள் அவர் களுக்குக் கிட்டாவிடில், அவர்களின் நிலை மிகவும் கவலைக்குள்ளாகி விடும்.

நுண்ணறிவில் பாலின வேறுபாடுகள் :

நுண்ணறிவில் பாலின வேறுபாடுகள் உண்டா என்பதைப் பற்றி எண்ணற்ற ஆய்வுகள் நடத்தப்பட்டன. இவ்வாய்வு களின்மூலம், பொதுவாக நுண்ணறிவில் பாலின வேறு பாடுகள் வெகுவாக இல்லை என்று அறியப்பட்டது. இவ்வகை யில் நடத்தப்பட்ட பல ஆய்வுகளின் சோதனைக் குறிப்புகளை 56 ஒப்புமைகளின் மூலம் கஜ்னெட்ஸும், மக்னெமரும் (Kuznets and Mcnemar) பாலின, வயதின் அடிப்படையில் ஆய்ந்தனர். இதில், மூன்று ஒப்புமைகளில் வேறுபாடு ஒன்றும் அற்று, 28 ஒப்புமைகளில் ஆண்களின் மதிப்பீடுகள் அதிகமாகவும், 25 ஒப்புமைகளில் பெண்களின் மதிப்பீடுகள் அதிகமாகவும் காணப்பட்டன. எனவே, இதைப்பற்றிக் கூற வந்த டெர்மன், நுண்ணறிவு வளர்ச்சியில், பொதுவாக, பாலின வேறுபாடுகள் காணப்படவில்லை என்றும், சில ஆய்வுகளில் காணப்பட்ட வேறுபாடுகள் மிகக் குறைந்தும், நிலையற்றும்

இருப்பதால், அவைகளைக் கொண்டு, ஒரு பாலினர் எதிர்பாலினரை விட நுண்ணறிவில் மேம்பட்டு உள்ளனர் எனக் கூறமுடியாது என்றும் தெரிவித்துள்ளார். கான்ரெட், ஜோன்ஸ், ஸியேவ் (Conrad, Jones and Hsaeo) ஆகியோர் 12 முதல் 21 வயது வரையுள்ள 509 ஆண், பெண் பிள்ளைகளை, இராணுவ ஆல்பா சோதனையின் மூலம் ஆராய்ந்தனர். இதில் பெண்பிள்ளைகள் தம் வயது ஆண்பிள்ளைகளை விட ஆல்பா சோதனையின் எல்லாப் பிரிவுகளிலும் மிகுதியான மதிப்பீடுகளைப் பெற்றிருந்தனர். பொது அறிவு, எதிர்மறைகள், ஒப்புமைகள், ஆகிய சோதனைப் பிரிவுகளில், பெண்பிள்ளைகள், ஆண்பிள்ளைகளைவிட மேம்பட்டும், கணக்கு விஞக்கள் (Arithmetical Problems) பொதுச் செய்திகள் ஆகியவற்றில் ஆண் பிள்ளைகள், பெண்பிள்ளைகளைவிட மேம்பட்டும் இருந்தனர். ஆனால் இதில் காணப்பட்ட எந்த வேறுபாடும் குறிப்பிடத் தக்கவாறு அமையவில்லை என இவ்வாராய்ச்சியாளர்கள் முடிவு தெரிவித்துள்ளனர். ஆனால் புரூம் என்பார் (Broom) டெர்மன் குழுச்சோதனையைக் கொண்டும், கால்பர்ஸ் என்பார் (Kaulfers) ஸ்டான்போர்டு—பீனே சோதனையைக் கொண்டும் ஆம்ஸ்டிராங் என்பார் (Armstrong) ஓடிஸ் (Otis), இராணுவ ஆல்பா, இராணுவ பீடா ஆகிய சோதனைகளைக் கொண்டும் ஆய்ந்ததில், எந்த விதப் பாலின வேறுபாடுகளும் காணப்படவில்லை என்று தெரிவித்துள்ளனர். பொதுவாக இளையோர் பருவத்தில், பெண்பிள்ளைகள் மொழியினைச் சார்ந்த சோதனைகளில் ஆண்பிள்ளைகளை விட மேம்பட்டும், ஆண் பிள்ளைகள் கணக்கும், அறிவியலும் சார்ந்த சோதனைகளில் பெண்பிள்ளைகளைவிட மேம்பட்டும் இருந்தனர் எனக் கூறலாம். இந்த வேறுபாடுகள் சமூகப் பண்பாட்டுக் காரணிகளால் ஆண், பெண் பிள்ளைகளின் ஆர்வத்தில் ஏற்படும் மாற்றங்களைப் பிரதிபலிக்கின்றனவே தவிர, இயல்பாக உள்ள வேறுபாடுகள் எதையும் காட்டுவன அன்று எனலாம்.

**ஏனைய மாறிகளுடன் நுண்ணறிவின் தொடர்பு (Relation of Intelligence to other variables) :**

ஆசிரியர்கள், வேறுபட்ட இனம், மதம், சமூகப் பொருளாதாரச் சூழ்நிலைகளைச் சார்ந்த இளையோருடன் தொடர்புகொள்ள வேண்டியிருக்கின்றது. ஏனெனின், நுண்ணறிவிற்கும், இத்தகைய மாறிகளுக்கும் இடையேயுள்ள தொடர்புகளை அவர்கள் அறிந்திருப்பார்களேயானல், இவ்வறிவின் மூலம், தங்கள் செயல்களிலும், தொடர்புகளிலும் அவர்கள் மிகுந்த பயனைக் காண முடியும். இனம், நாடு, சமூகப் பொருளாதாரக் காரணிகளுக்கும், நுண்ணறிவிற்கும் இடையேயுள்ள தொடர்புகளைப் பற்றி

ஆராய்ச்சிகள் பல செய்யப்பட்டன. இவைகளின் முடிவுகள் வெவ்வேறாகவும், முரண்பட்டதாகவும் இருந்தன. ஒருசிலர் மாறுபாடுகளைக் காணாதபோது, ஏனைய சிலர் குறிப்பிடத்தக்க மாறுபாடுகள் இருக்கக் கண்டனர். இவ்வாய்வுகளின் முடிவுகளைப் பகுத்தாய்வோமானால், இவைகளில் காணப்பட்ட வேறுபாடுகள் தனியன் பிறந்து, வளர்ந்த சமூகச் சூழ்நிலைக் காரணிகளின் தன்மைகளாலும், சோதனை நடத்தப்பட்ட சூழ்நிலைகளாலும் உண்டாகியிருந்தனவேயன்றி, அவர்களிடை இயல்பாகவே இருந்த வேறுபாடுகளைப் பிரதிபலிப்பனவாக இல்லை என நாம் அறியலாம்.

நுண்ணறிவினைப் பொறுத்த வரையில், பொதுவாக இன வேறுபாடுகள் ஒன்றுமில்லை எனக் கூறலாம். ஆனால், வெள்ளை நிறத்தவர்களைக் காட்டிலும் நீக்ரோக்கள் குறைந்த நுண்ணறிவைப் பெற்றுள்ளனர் என நுண்ணறிவுச் சோதனைகள் காட்டியுள்ளன. இந்த வேறுபாடுகள், நீக்ரோக்களின் வாழ்க்கைச் சூழ்நிலையில் போதிய வாய்ப்புகளும் வசதிகளும் அற்று இருப்பதனால் உண்டாகியிருக்கலாம் எனும் முடிவிற்கு நாம் வர இடமுண்டு.

இளையோரின் நுண்ணறிவு வளர்ச்சிக்குச் சமூகப் பொருளாதார நிலைகள் மிகவும் சாதகமாக உள்ளன. இத்துறையில் நடத்தப்பட்ட ஆய்வுகளில், வேறுபட்ட சமூகப் பொருளாதாரத் தரத்தைச் சார்ந்த பிள்ளைகளிடையில் எல்லா வயதிலும் நுண்




வரைபடம்–10 பெற்றோர்களின் தொழிலுக்கும் பிள்ளைகளின் நுண்ணறிவிற்கும் உள்ள தொடர்பு.

ணறிவு ஈவில் வேறுபாடுகள் காணப்பட்டன. இத்த வேறுபாடுகள் உயர்ந்த வயதுகளில் மிகுந்து காணப்படுவதால், இதிலிருந்து நுண்ணறிவிற்கும், சமூகப் பொருளாதாரத்திற்குமிடையில் உள்ள தொடர்பினை நாம் அறியலாம். எனினும், இத்தகைய வேறுபாடு களுக்கிடையிலும் பல மாறுபாடுகள் காணப்படுகின்றன. தாழ்ந்த சமூக பொருளாதாரத் தரத்தினைச் சார்ந்த பிள்ளைகள் பலர், மிகவும் மேம்பட்ட நுண்ணறிவினையுடையவர்களாகவும், உயர்ந்த சமூகப் பொருளாதாரத் தரத்தினைச் சார்ந்த பிள்ளைகள் பலர் குறைந்த நுண்ணறிவினையுடையவர்களாகவும் இருப்பதை நாம் காண் கின்றோம். இதனால் தான் ஏழ்மையிலும், போதிய வாய்ப்பினையும் வசதியினையும் அற்ற சூழ்நிலையிலும் பிறந்து, வளர்ந்து முன் னேற்றம் கண்ட சிந்தனையாளர்கள், அறிவாளிகள் பலரின் சாதனைகளை வரலாற்றில் நாம் காண்கின்றோம். இவர்கள் போதிய வாய்ப்பினையும், வசதியினையும் அற்ற, தாழ்ந்த சமூகப் பொருளாதார நிலைகளில் தோன்றி வாழ நேர்ந்திருந்தாலும், அக்குறைகளையே தங்களை ஊக்குவிக்கும் தூண்டல்களாகக் கொண்டு, விழிப்புணர்ச்சியுடன் தங்களை முன்னேற்றிக்கொண் டனர். எனவே, சமூகப் பொருளாதார நிலைகள் இயல்பான நுண் ணறிவுடன் தொடர்பு கொண்டில்லை என்றும், ஆராய்ச்சிகளில் காணப்பட்ட வேறுபாடுகள் சூழ்நிலையின் காரணமாகத்தான் உண்டாகியிருந்தன என்றும் நாம் அறியலாம்.

சமூகப் பொருத்தப்பாட்டுடன் நுண்ணறிவின் தொடர்பு (Relation of Intelligence to Social Adjustment) :

டெர்மன் என்பார் 1000 அருந்திறப் பிள்ளைகளின் (Gifted Children) உடல், உளப்பண்புகளை ஆய்ந்தபோது, அப்பிள்ளை களின் சமூக ஆர்வங்கள் (Social Interests), சமூக நுண்ணறிவு (Soial Intelligence), விளையாட்டு நடவடிக்கைகள் (Play Activities) அனைத்துமே இயல்பான தன்மையுள்ளவையாக இருந்ததைக் கண் டார். இந்த உண்மை, அருந்திறம் படைத்தவர்கள், சமூக வாழ் விற்குப் பொருத்தமற்றவர்கள் (Social misfits) என்று பொதுவாக நம்பப்படும் கருத்தினைப் பொய்யாக்கிவிட்டது. மேம்பட்ட நுண்ணறிவு படைத்தவர்கள், பலவகை சமூகத் திறமைகளையும் அறிவாற்றலையும் பெற்றுள்ளனர். ஆதலால் நடைமுறையில் பய னற்றுக் காணப்படும் முறைகளை எளிதில் கைவிட்டு, சமூகப் பொருத்தப்பாட்டிற்கு உகந்த முறைகளைக் கையாளுவதில் அவர்கள் சிறந்து விளங்குகின்றனர்.

டால் என்பார் (Doll), அறிவாற்றல் குறைந்த பிள்ளைகளிடம் காணப்படும் சமூகத்தன்மைப் பற்றுக்குறையினைக் (Social in

sufficiency) குறிப்பிடுகையில், அவர்களிடம் காணப்படும் இயல்பு (சாதாரண) நிலையிலிருந்து குன்றிய, சமூகப் பொறுப்புணர்வு, தன்–துணை (Self-support), தற்றூண்டுதல் (Self-Direction) ஆகிய தன்மைகளை எடுத்துக்காட்டியுள்ளார்.

நுண்ணறிவில் மேம்பட்டவர்களிடம் சிறந்த சமூகப் பொருத்தப்பாடுகளும், நுண்ணறிவில் மிகவும் குன்றியவர்களிடம் குறைவான சமூகப் பொருத்தப்பாடுகளும் காணப்படுகின்றன. எனினும், சாதாரணப் பிள்ளைகளில் நுண்ணறிவிற்கும், சமூகப் பொருத்தப்பாட்டிற்கும் இடையே தொடர்பு காணப்படவில்லை. ஆதலால், ஒரு பிள்ளை சமூகத்தில் கொண்டிருக்கும் பொருத்தப் பாடு, அதன் சமூகச் சூழ்நிலையிலுள்ள தூண்டல்களையும் அத் தூண்டல்களுக்கேற்ப அப் பிள்ளை எந்த அளவிற்குத் தன்னைச் சரி செய்துகொள்ளும் திறமையினைப் பெற்றிருக்கின்றது என்பதனையும் பொறுத்துள்ளது.

**நுண்ணறிவில் மேம்பட்ட, குன்றிய பிள்ளைகளின் பிரச்சினைகள் (Problems of the bright and the dull Children):**

பள்ளிகளிலுள்ள நுண்ணறிவு குன்றிய குழந்தைகள், தங்கள் தோல்விகளின் காரணமாக மற்றவர்களின் கேலிக்கும், ஏளனத் திற்கும் ஆளாக நேர்ந்து, தங்கள் செயல்களில் தன்னம்பிக்கையை இழந்துவிடுகின்றனர். அவர்கள் படிப்பில் காணும் இந்தக் குறையை, மற்றத் துறைகளில் அடையும் தகுதிகளின்மூலம் சிறப்பான முறையில் ஈடுசெய்யக்கூடும். இங்ஙனமின்றி அவர்கள் மிகையான உணர்ச்சி வயப்படும் தன்மை உடையவர்களாக இருந்தால், அல்லது தங்களின் இக் குறையினை, விளையாட்டுகள், கைத்திறன், கலைத்திறன் போன்ற வேறு துறைகளில் அவர்கள் ஈடு செய்ய இயலாவிடில், அவர்களின் ஆளுமை மிகவும் பாதிக்கப் பட்டுச் சமூகப் பொருத்தப்பாட்டில் சிரமம் காண்பர். மேலும், அவர்களின் பெற்றோர்கள், அவர்களைப்பற்றி உயர்ந்த நம்பிக்கை யினைக்கொண்டு, தொடர்ந்து அவர்களின் தோல்விகளையும், குறை பாடுகளையும் சுட்டிக்காட்டிக் குறைகூறித் தங்களுக்கு ஏற்பட்டி ருக்கும் ஏமாற்றத்தினை வெளிப்படையாகக் காட்டுவார்களே யானால், அப் பிள்ளைகளின் நிலை மிகவும் மோசமாகிவிடும். இத்தகைய நிலைகளில் அப் பிள்ளைகள் போட்டியும், போராட்டமும் மிகுந்த இந்த உலகத்தினின்று பின்வாங்கித் தங்களுக்குள் ஒரு கற்பனை உலகத்தினைத் தோற்றுவித்துக்கொண்டு, அந்தக் கற்பனைக் கனவுகளில் தங்களின் விருப்பங்களை நிறைவேற்ற முயல்வர். இதுவன்றி, இவர்கள் கட்டுப்பாடற்ற வன்முறைச் செயல்களில்

ஈடுபட்டுச் சமூகத்திற்கு எதிரான நடவடிக்கைகளின் மூலம் சமூகத்தைப் பழிதீர்க்கவும் விரும்பலாம்.

இவ்விரு நடத்தை முறைகளில் பின்வாங்கிக்கொள்ளும் நடத்தை (Withdrawal) அப் பிள்ளைகளின் எதிர்காலத்தினை மிகவும் பாதிப்பதாக உள்ளது. இத்தகைய நடத்தைகள் தொடர்ந்து ஏற்படும்பொழுது விரைவில் அவர்கள் உளக் கோளாறுகளால் பீடிக்கப்படலாம். இரண்டாம் வகையினைச் சார்ந்தவையான சமூகத்திற்கெதிரான நடத்தைகளை, சமூகமும், நாட்டின் சட்டங்களும் நியதிகளும் ஏற்றுக்கொள்வதில்லை. இதன் விளைவால் இத்தகைய நடத்தையின்பாற்பட்டவர்கள், சமூகத்திற்கு எதிரிகளாக மாறுவதற்கு இடமுண்டு. இப்போது, சமூகம் இவர்களைக் கண்டித்தும், தண்டித்தும், திருத்த முற்படுகின்றது. மாறாக, இவர்கள் வளர்ந்து, சமூகத்திற்கு எதிரிகளாக மாறி, கொள்ளைக் கூட்டத்தவர்களாகவும், புரட்சிக்காரர்களாகவும் வாழ்க்கையினைத் தொடங்கி, தங்களை எதிர்க்கும் சமூகத்தினைத் தண்டிக்கவும், தங்களைப் பற்றிய ஒரு பய உணர்ச்சியை அதில் தோற்றுவிக்கவும், அச் சமூகத்தை அடக்கி, ஒடுக்கி ஒரு சிலரை அழித்துவிடவும் முயற்சி செய்வர். இவர்களால் சமூகம் பாதிக்கப்படுகின்றதெனினும், இவர்கள் சில சமயத்தில் தங்கள் நடவடிக்கைகளை மாற்றிக்கொண்டு, திருந்திவிடுவதற்கும் இடம் உண்டு. நம் நாட்டின் வடபகுதியில் இருக்கும் மத்தியப் பிரதேசத்தில் உள்ள கொள்ளைக் கூட்டத்தினர் எண்ணற்றோர், தங்களைத் திருத்திக் கொள்ளும் பொருட்டுச் சமீபத்தில் சரணடைந்திருப்பதை நாம் அறிந்திருக்கின்றோம் அல்லவா!

நுண்ணறிவு குன்றிய இளையோர் கல்வியில் சிறந்து, முன்னேற்றம் காண இயலாதபோது, பள்ளிக்குப் புறத்தேயுள்ள நடவடிக்கைகளில் தங்களை நன்கு ஈடுபடுத்திக்கொண்டு அவற்றில் சிறந்து விளங்குவார்களேயானால், பள்ளியில் அவர்கள் அடையும் தோல்விகளை அதன்மூலம் ஈடுசெய்து, பள்ளிச் சூழ்நிலையிலும் அவர்கள் பொருந்தி நடக்க இடமுண்டு. மேலும், வீட்டில் இத்தகையவர்களின் பெற்றோர்கள் இவர்களின் உளநிலையினைப் புரிந்துகொண்டு இவர்களுடன் பொருந்தி நடப்பார்களேயானால், இவர்களின் ஆளுமை வளர்ச்சி பாதிக்கப்பட வேண்டிய அவசியம் இல்லை.

மேம்பட்ட நுண்ணறிவினையுடைய பிள்ளைகள், தங்களுக்கெதிராகப் போட்டியிடத் தகுதியானவர்கள் எவரும் தம் வகுப்பில் இல்லை என்றெண்ணிச் சாதாரணமான முயற்சிகளைக் கொண்டே தங்கள் வகுப்புகளில் சிறந்து விளங்க முடியும் என்ற பழக்கத்

திற்குள்ளாகி விடுகின்றனர். இதன் விளைவால், ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் அவர்களுக்குக் கிட்டும் பாராட்டுகள், வெற்றிகளின் மூலம் எல்லாச் சூழ்நிலையிலும் இங்ஙனமே தாங்கள் வெற்றி அடையும் திறமைகளைப் பெற்றவர்கள் என்றும், தாங்களே உயர்ந்த மதிப்பெண்களைப் பெறும் உரிமையுள்ளவர்கள் என்றும் தங்களைப் பற்றி நினைத்துக் கொள்கின்றனர். இத்தகைய மனப் பாங்கினுடன் அவர்கள் இருக்கையில், வாழ்க்கைச் சூழ்நிலை மாறி, மாறுபட்ட சூழ்நிலையில் அவர்கள் வாழ நேர்ந்தால், அந்தப் புதிய சூழ்நிலைக்கேற்பத் தங்களைச் சரிசெய்து கொள்வதில் சிரமம் அடைகின்றனர். இங்ஙனம் உயர்நிலைப்பள்ளியில், எல்லாத் துறைகளிலும் தேர்ந்து, பிறரால் பாராட்டப்பட்ட ஒருவன், கல்லூரி சென்று படிக்கும்போது, அங்கே அவனைவிட மேம்பட்ட அறிவினை உடையவர்களுடன் போட்டியிட வேண்டிய நிலை ஏற்படும்போது, அவன் தோல்வி காண நேர்ந்தால், அதை அவன் ஏற்றுக்கொள்ள மறுத்துவிடுகின்றான். எனவே, தனக்கு ஏற்பட்டு விட்ட தாழ்ந்த நிலையை ஒத்துக்கொள்ளவும் மறுத்து, தன்னை வென்றுவிட்ட பிறரின் முன்னேற்றத்தை ஏற்றுக் கொள்ளவும் முடியாமல் அவன் தவிக்கின்றான். இத்தகைய சூழ்நிலையில், அவன் கல்லூரிப் படிப்பினைத் தொடர்ந்து பயில இயலாது பாதியில் விட்டுவிடவும் நேரலாம். இவனுடைய பெற்றோர்களும், உயர்நிலைப் பள்ளியில் முதல் இடத்தைப் பெற்றுத் திகழ்ந்தவன், கல்லூரிப் படிப்பினைத் தொடர்ந்து முடிக்க இயலாது இவ்வாறு திரும்பிவிட்டதை நினைத்துக் கலக்க மடைகின்றனர். இத்தகைய சூழ்நிலையில் இருக்க நேரிடும் ஒரு சிலர், கல்லூரியில் சேர்ந்த ஓரிரு மாதங்களுக்குள், தொடர்ந்து உடல் நலக் குறைவாலும் வியாதிகளாலும் பாதிக்கப்பட்டு, அதையே காரணமாக வைத்துக்கொண்டு அக் கல்லூரிச் சூழ்நிலையை விட்டு வெளியேற முயல்கின்றனர். இத்தகையோருக்குத் தனிப் பட்ட முறையில் ஆலோசனையும், வழிகாட்டலும் தரவேண்டியது அவசியமாகும்.

குறைந்த நுண்ணறிவுடையவர்களைப் போன்றே, நுண்ணறி வில் மேம்பட்டு இருக்கின்றவர்களும், சமூகத்தின் கண்காணிப்பில் இருக்க வேண்டியது அவசியமானது. ஒரு சமூகத்தின் செழிப்பும் சிறப்பும் அதன் பிற்கால முன்னேற்றமும், அச் சமூகத்திலுள்ள நுண்ணறிவு மிக்கவர்களின் கையிலேதான் இருக்கின்றன. இத் தகையவர்களினிடையுள்ள ஆக்கத்திறம் மிக்கவர்களே சமூகத்தின் எதிர்கால வாரிசுகளாகவும், தலைவர்களாகவும் உருவாகின்றனர். எனவே, இத்தகையோரை அடையாளம் கண்டு, அவர்களிடம் காணப்படும் பண்பு, திறமைகளை உரியவகையில் 'வளர்க்கும்

பொறுப்பு, அந்தச் சமூகத்தினையே சார்ந்ததாகும். இதன் பொருட்டு, பயிற்சி தருவதற்கான நுணுக்கங்களையும், விதிமுறைகளையும் அறிந்து, அதற்கேற்பப் பாடத்திட்டத்தை வகுத்து, இவர்களுக்குச் சாதகமான சூழ்நிலைகளையும், வாய்ப்புகளையும் தோற்றுவித்துத் தருவது ஒரு சமூகத்தின், நாட்டின் தலையாய கடமையாகும். இத்தகையோரை அடையாளம் கண்டுகொள்ளவும், ஆற்றுப்படுத்தவும் கல்வி உளவியலாளர்களும், உளவியல் வழிகாட்டுநர்களும் பெரும் பணியாற்றலாம்.

இவ்வாறு குறைந்த, மேம்பட்ட நுண்ணறிவுடையவர்களின் பால் கவனம் செலுத்துகையில் சாதாரண, சராசரி நுண்ணறிவினையுடைய பிள்ளைகளைப் புறக்கணித்துவிட முடியாது. ஏனெனில், நாளைய சமூகத்தின் தொழிலாளிகளும், பின்பற்றுவோரும், சமயத் தலைவர்களும், குடிமக்களின் பெரும்பான்மையினரும் இவர்களே யாவர். ஆதலால், சராசரி நுண்ணறிவினையுடைய பிள்ளைகளின் கல்வியும், கேள்வியும் சிறந்து விளங்குவதற்குப் போதிய முயற்சிகள் எடுக்கப்பட வேண்டும்.

அதிகாரச் சுருக்கம் :

ஒரு தனியனின் திறமைகளை நிர்ணயிக்கின்ற முக்கியக் காரணிகளில் நுண்ணறிவு மிக முக்கியப் பங்கினை வகிக்கின்றது. எனவே, இளையோரின் நடத்தைகளையும், பொருத்தப்பாடுகளையும் அறிய, அவர்களின் நுண்ணறிவு வளர்ச்சியினைப் பற்றி அறிவது மிக அவசியமாகும். நுண்ணறிவின் வளர்ச்சி, ஏனைய உடல், உடலியல் வளர்ச்சிகளைச் சார்ந்தும், கடந்தகால அனுபவங்களைச் சார்ந்துமுள்ளது. நுண்ணறிவு பற்றிப் பல்வேறு வரையறைகள் உள்ளன. அவைகளுள், கற்கும் திறன், பொருத்தப்பாடு, சிந்தனை ஆகிய பண்புகளையே வலியுறுத்துகின்றன. 'நுண்ணறிவு என்பது ஒரு நோக்கத்தின்பால் செயல்படவும், பகுத்தறிவின் அடிப்படையில் சிந்திக்கவும், சுற்றுப்புறச் சூழ்நிலையுடன் சிறந்த வகையில் தொடர்பு கொள்ளவும், தனியனுக்கு ஏதுவாயிருக்கும் திறமைகள் அனைத்தையுமே தன்னில் ஒருங்கே கொண்ட கூட்டுத் திறமையாகும்' என்கிறார் வெஸ்லர்.

நுண்ணறிவுச் சோதனைகளின் தந்தையான பீனே, 1905-ஆம் ஆண்டு நுண்ணறிவுச் சோதனைகளின் முதற் தொகுப்பை வெளியிட்டார். ஆறு ஆண்டுகளுக்குப் பின்னர் இவரும், சைமனும் சேர்ந்து திருத்தியமைத்தார்கள். உள வயது என்பது ஒரு குழந்தையின் உள இயக்கங்கள், எந்த வயதினரின் உள இயக்கங்களை ஒத்திருக்கின்றதோ அதைப் பொறுத்துள்ளது. எனவே,

இது மன முதிர்ச்சியினைக் காட்டுகின்றது. இதிலுள்ள குறை பாட்டை நிவர்த்தி செய்ய, வில்லியம் ஸ்டெர்ன் என்பார் 'உள ஈவு' எனும் கருத்துருவைக் கண்டார். இதைத் திருத்தி அமைத்த டெர்மனின் நுண்ணறிவு ஈவானது, உள வயதிற்கும், கால வயதிற்கும் உள்ள விகிதத்தினைக் குறிக்கின்றது. இதனை முழு எண்ணாகக் கூற 100 ஆல் பெருக்கப்படுகின்றது.

நுண்ணறிவுச் சோதனைகளைத் தனியாள் சோதனைகள், குழுச் சோதனைகள் என இரு வகையாகப் பிரிக்கலாம். இதனை மேலும், சொற்சோதனை, சொல்லிலாச் சோதனை, செயற் சோதனை எனப் பகுக்கலாம். நவீன நுண்ணறிவுச் சோதனைகள் ஒரே வகைப்பட்ட வகையெண்களை உடையதாயில்லை. ஆனால் அவை சொல், சொல்லிலா வகையெண்கள் அனைத்தினையும் ஒருங்கே கொண் டுள்ளன. நுண்ணறிவின் எல்லாப் பண்புகளையும் நன்கு அளவிட இத்தகைய கலப்புச் சோதனைகள் பயன்படுகின்றன.

மன வளர்ச்சியின் வேகமானத்தைப் பல்வகையான சோதனை களின் மூலம் உளவியலார் ஆய்ந்துள்ளனர். இவ் வாய்வுகள், மன வளர்ச்சியானது இறுதிவரை ஒத்த அளவில் ஒரே சீராக ஏற்படுவ தில்லை என்ற உண்மையை எடுத்துக்காட்டுகின்றன. எந்த வயதில் மன வளர்ச்சி நின்றுவிடுகின்றது என்பதை அறிய எண்ணற்ற ஆராய்ச்சியாளர்கள் முயற்சி செய்தனர். இளையோர் பருவத்தில் நுண்ணறிவு உச்சநிலையை அடைகின்றது. எனவே, முதிர்ந்த பருவத்தில் அவனுக்குள்ள கற்கும் திறன் இப் பருவத்திலேயே அவனிடம் உள்ளது. மன வளர்ச்சி, உடல் வளர்ச்சியினுடன் தொடர்ந்து நடைபெறுவதாலும், நுண்ணறிவு ஈவானது உடல் வயதிற்கும், உளவயதிற்கும் இடையில் இருக்கும் விகிதமாக உள்ள தாலும், ஒரு தனியனின் நுண்ணறிவு ஈவு, நிலைத்தன்மை உடைய தாக இருக்கும். சூழ்நிலைக் காரணிகள் அதிகமான அளவில் நுண்ணறிவைப் பாதிக்கின்றன. மரபுநிலை ஒருவனின் நுண்ணறி வின் வளர்ச்சிக்கான வரையறையினைப் பரந்த வகையில் நிர்ணயிக் கிறது என்றும், அவன் உண்மையில் அடைகின்ற நுண்ணறிவு வளர்ச்சியானது, அவன் வாழ்க்கையின் தொடக்க கால சூழ்நிலை யைப் பொறுத்துள்ளது என்றும் ஆய்வுகள் மூலம் தெரிகிறது.

நினைவு, சிந்தனைத் திறன், ஆய்ந்தறி சிந்தனை, பொருள் படுத்தும் திறமை, மற்ற உளச்செயல்கள் ஒழுங்கான முறையில், குழந்தைப் பருவம் முதல் முதிர்ச்சியடையும்வரை தொடர்ந்து வளர்வதாகத் தெரிகிறது. ஒரு குறிப்பிட்ட வயதினைச் சார்ந்த குழுவினர்களில், நுண்ணறிவானது இயல்பான நிலையில் பரவி யுள்ளது. நுண்ணறிவில் பாலின வேறுபாடுகள் அதிகமாகக்

காணப்படவில்லையெனினும், தனியாள் வேற்றுமைகள் காணப்பட்டன. வேறுபட்ட இனம், மதம், சமூகப் பொருளாதாரச் சூழ்நிலைகளைச் சார்ந்த இளையோருடன் ஆசிரியர்கள் தொடர்பு கொண்டு, நுண்ணறிவிற்கும் இத்தகைய மாறிகளுக்கும் இடையேயுள்ள தொடர்புகளை அறிந்திருந்தால், மிக்க பலனைக் காண முடியும். அதிக நுண்ணறிவு படைத்தவர், பல்வகைச் சமூகத் திறமைகளையும், அறிவாற்றலையும் பெற்றிருப்பதால், நடைமுறையில் பயனற்றுக் காணப்படும் முறைகளை எளிதில் கைவிட்டு, சமூகப் பொருத்தப்பாட்டிற்கு உகந்த முறைகளைக் கையாளுவதில் அவர்கள் சிறந்து விளங்குகின்றனர்.

குறைந்த நுண்ணறிவுடையவர்களைப்போன்றே, நுண்ணறிவில் மேம்பட்டு இருக்கின்றவர்களும் சமூகத்தின் கண்காணிப்பில் இருக்கவேண்டியது அவசியமாகும். இத்தகையோருக்குத் தனிப்பட்ட முறையில் ஆலோசனை கூறி வழிகாட்டுதல் மிக்க பயனளிக்கும்.

# 7. ஆக்கத்திறமை

## (Creativity)

உளவியலாரின் தனிப் பொறுப்பில் அடங்கும், எந்த ஒரு தலைப்போ, இயல் நிகழ்ச்சியோ ஆக்கத் திறத்தைப் போன்று நீண்டகாலமாக வெகுவாகப் புறக்கணிக்கப்படவில்லை. அவ் வாறே, ஆக்கத்திறம் திடீரென உயிர்ப்பிக்கப்பட்டு எழுச்சி பெற்றதுபோல் எந்த ஒரு தலைப்போ, இயல் நிகழ்ச்சியோ எழுச்சி பெறவும் இல்லை. இவ்வாறு, மனித வரலாற்றில் மிகவும் புறக் கணிக்கப்பட்ட தலைப்பாக ஆக்கத்திறம் இருந்து வந்துள்ளது.

ஆக்கத்திறம் என்றாலே தெய்வீக சக்தி என்றும், கடவுளின் அருளைப் பெற்றவர்களின் பண்பு என்றும் அண்மைக் காலம் வரை கருதப்பட்டதால், விஞ்ஞானச் சோதனைகளுக்கும், ஆராய்ச்சி களுக்கும், ஆக்கத்திறத்தை உட்படுத்த இயலாது என்று வாளா விருந்தனர். மேலும், உளவியலார்கள் நுண்ணறிவை, போதனைக் கல்வி வழியில் பொருள் வரையறை செய்வதிலும், அதனை அள விடப் பொருத்தமான முறைகளைக் கண்டுபிடிப்பதிலும் நாட்டங் கொண்டிருந்தனர். வாழ்க்கையின் சாதனைகளுக்கு நுண்ணறிவு தான் மிகவும் அவசியமானது என்று அக்காலத்தில் கருதப் பட்டதால், அது மிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டு ஆராயப் பட்டது. இந்தச் சூழ்நிலையில்தான், ஆக்கத் திறத்தின்பால் உள வியலார் போதிய கவனம் செலுத்தாது இருக்க நேரிட்டது.

1950ஆம் ஆண்டில், அமெரிக்க உளவியல் மன்றத்தில் (American Psychological Association) கில்பர்டு (Guilford) எனும் உளவியலார் ஆற்றிய பேருரையே, மனித அறிவுத் திறத்தைப் பற்றிய கோட்பாடுகளை மறுபரிசீலனை செய்ய வேண்டியதன் அவ சியத்தையும், அறிவுத் திறத்தின் கருத்துக் கோட்பாடுகளின் ஆக்கத் திறத்தையும், அறிவுத் திறத்தின் ஒரு முக்கியக் கூறாகக் கருதவேண்டிய அவசியத்தையும் வலியுறுத்தி, உளவியலாரின்

கவனத்தை ஆக்கத் திறத்தின்பால் திருப்பியது. இசை விணக்கம் (Flexibility), தொடங்கும் தன்மை (Initiative), அறிவுக் கூர்மை (Ingenuity), பொருந்தும் தன்மை (Adaptability), இயல்பாயியங் குந்தன்மை (Spontaneity), தற்படைப்புத்தன்மை (Originality) ஆகிய பண்புக் கூறுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது ஆக்கத் திறம்.

அன்றிலிருந்து, ஆக்கத்திறம் பற்றிய ஆய்வுகள் பன்மடங்கில் வளர்ந்து, கண்டுபிடிப்புகள் வெடிக்கத் தொடங்கின. அடுத்த பத்தாண்டுகளின் முடிவில் ஆக்கத்திறத்தைப் பற்றிய கருத்துகள், அவைகளைச் சூழ்ந்திருந்த மர்ம மேகங்கள் கலைக்கப் பட்டு, ஓரளவு தெளிவடையப்பெற்றன. ஆக்கத்திறத்தை விஞ்ஞான ரீதியின் வழியாக ஆய்வுக்கு உட்படுத்த முடியும் என்றும், ஆக்கத்திறமுடையவர்களையும் மற்றத் திறமைகளையுடைய மனிதர்களைப் போன்று மதிப்பிட்டு, நிர்ணயிக்கமுடியும் என்றும் இன்று ஒப்புக்கொண்டுள்ளனர். இப் புதிய, பெரும் ஆர்வ அலை களின் விளைவால், உளவியலார் ஆக்கத்திறத்தை ஆராய்ந்து கொண்டிருக்கின்றனர். தொழில் அதிபர்கள் தங்கள் தொழிற் சாலைகளில் இதனை நாடிக்கொண்டிருக்கின்றனர்; பொதுப் பேச் சாளர்கள், இதனைப் பெரிதும் புகழ்ந்துகொண்டு மிருக்கின்றனர். எனவே, ஆக்கத்திறம் திடீரென, அறிவாளிகள், நிபுணர்களின் பேச்சு வழக்கில் காணப்படும் ஒரு மந்திரச் சொல்லாக மாறி விட்டது. மேலும், ஆக்கத்திறத்தைப் பற்றிப் பேசுவது நவீன நடப்பு வழக்காகவும் ஆகிவிட்டது.

### ஆக்கத்திறத்தின் கருத்துக் கோட்பாடு (The concept of creativity) :

அன்பைப் போன்று, ஆக்கத்திறமும் பல சிறப்புகள் கொண்ட தாகும். எனவே, ஆராய்ச்சியாளர்கள் இச் சொல்லைப் பலவாறுகப் பொருள் வரையறை செய்துள்ளனர். புதிதாக ஒன்றைத் தோற்றுவிக்கும் திறமையை இது குறிப்பதாகப் பலர் எண்ணு கின்றனர். மற்றவர்கள் இது ஒரு திறமையைக் குறிப்பதன்று என்றும், புதிய, மதிப்புள்ள பொருள்களை உண்டுபண்ணும் செயற் பாங்கினை இது குறிப்பதென்றும் கருதுகின்றனர். இன்னும் சிலர் இது செயற்பாங்கினைக் குறிப்பதன்று; ஆக்க விளைபொருளைக் குறிக்கின்றது என்றும் நம்புகின்றனர். சுருங்கக்கூறின் ஆக்கத் திறத்தைப் பற்றிய பொருள் வரையறைகள், அது சாதாரணமான பிரச்சினைகளுக்குத் தீர்வு காணுதல் என்பதிலிருந்து, ஒருவனின் தனித்த உள்ளிடைச் சக்திகளெல்லாம் முழுமையாக வெளிப் படுத்தப்பட்டு, நிறைவேறி மெய்யாகுதலே ஆக்கத்திறத்தின் பயன் விளைவு என்பதுவரை உள்ளன.

இப் பல்வகைப்பட்ட பொருள் வரையறைகளிலிருந்து சிறந்த ஒன்றைப் பொறுக்கி எடுப்பது இயலாது. ஏனெனில், ஆக்கத் திறம் என்பது இந்தப் பொருள் வரையறைகளையெல்லாம் குறிப்பது மட்டுமன்றி இன்னும் பல பொருள்களையும் கொண்டது. உண்மையில், ஆக்கத்திறம் பலமுகக் கருத்துக்கூறுகளைக் கொண்ட இயல் நிகழ்ச்சியாகும் (Multifaceted Phenomenon).

ஆதலால், ஆக்கத்திறம் என்பது ஓர் ஒருமித்த செயற்பாங்கி னைக் குறிக்கின்றது எனக் கருதுவது தவறானதாகும். மாறாக, புலன் காணுதல், நினைவுறுத்தல், கற்பனை செய்தல், சிந்தித்தல், திட்ட மிடுதல், தீர்மானித்தல் போன்ற உளச்செயல்களை நிர்மாணிக் கின்ற அடிப்படைச் செயற்பாங்குகளான அறிதல், ஊக்குவித்தல், மனவெழுச்சிபெறல் ஆகியவை ஒருங்கேயமைந்த ஒரு சிக்கலான அமைப்பைத்தான் ஆக்கத்திறம் எனும் சொல் குறிக்கின்றது. இவ்வாறு கருதுங்கால், இத் தலைப்பின் முக்கியப் பகுப்புகளில் குறைந்த அளவு நான்கின்மீதாவது நாம் கவனம் செலுத்த வேண்டியது அவசியமாகின்றது. அவை ஆக்கச் செயற்பாங்கு (Creative process), ஆக்க விளைவுப்பொருள் (Creative product), ஆக்கத்திறமுடையவன் (Creative person), ஆக்கச்சூழ்நிலை (Creative Situation) என்பனவாகும் (Rhodes). இவை ஒவ்வொன்றைப் பற்றி யும் விஞ்ஞான ரீதியான ஆராய்ச்சிகள் பல செய்யப்பட்டுள்ளன.

ஆக்கச் செயற்பாங்கின் இயல்பு என்ன? பிரச்சினைகளை ஆக்கத் தீர்வுகாண உதவும் உளச் செயற்பாங்குகளின் வகைகளும், குணச் சிறப்புகளும் யாவை? ஆக்க விளைவுப் பொருள்கள் யாவை? அவைகளை இனங்கண்டுகொள்ளக்கூடிய குணச் சிறப்புகள் யாவை? ஆக்கத் திறமுடையவனின் சிறப்பான பண்புகளும், குணங்களும் யாவை? ஆக்கச் சந்தர்ப்பத்தின் தன்மைகள் யாவை? எந்த விதமான வாழ்க்கைச் சந்தர்ப்பங்கள் அல்லது சமூகக் கலாசார தொழிற் சூழ்நிலைகள், ஆக்கச் சிந்தனையும், செயலும் மேலோங்கி யிருப்பதற்கு அனுகூலமாகவும், உற்சாகம் ஊட்டுவதாகவும் உள்ளன போன்ற பிரச்சினைகளை எழுப்பி உளவியலார் ஆக்கத் திறம் பற்றிய ஆராய்ச்சிகள் பலவற்றை நடத்தி வருகின்றனர்.

**ஆக்கச் செயற்பாங்கு (The Creative Process) :**

ஆக்கச் செயற்பாங்கு ஒரு பிரச்சினையைக் காணும்பொழுதோ அன்றி உணரும்பொழுதோ இயங்கத் தொடங்குகின்றது. ஏதோ தவறாகவுள்ளது, குறைவாயிருக்கின்றது அல்லது புதிராகத் தோன்றுகின்றது என்று ஒருவன் உணரத் தொடங்கும்போது, ஆக்கத்திறன் மூலவேர் முளைக்கத் தொடங்குகின்றது.

ஆக்கத்திறம் என்பது கண்களைப் பார்ப்பதற்கு மட்டுமன்றி, உற்றுநோக்கி அறிவதற்கும் பயன்படுத்தும் திறமை; செவிகளை ஒலிகளை உணர்வதற்கு மட்டுமன்றி, கவனமாகக் கேட்டு அறிவதற்கும் பயன்படுத்தும் திறமை; கைகளைத் தொடுவதற்கு மட்டுமன்றி, தொட்டதை உணர்வதற்காவும் பயன்படுத்தும் திறமையாகும். மேலும் ஆக்கத்திறம், ஒரு பொருளை அல்லது ஒரு சூழ்நிலையை அறியும் பொருட்டுள்ள உயர்ந்த ஆயத்த நிலையாகும். ஒரு பிரச்சினையை மற்றவர்கள் காணாத நிலையில், அதைக் காண்கின்ற திறமை, ஆக்கத்திறம் உடையவனின் குணச் சிறப்புகளில் ஒன்றாகும். இத்தகைய குணச் சிறப்பினால், ஆக்கத் திறமுடையவன் அடிக்கடி சமூகத்தில் செல்வாக்கினை இழக்கின்றான். தொடர்ந்து கேள்வி எழுப்புகின்ற, மனப்பாங்குடன் வாழ்வது என்பது எளிதானதன்று. எனினும், இத்தகைய மனப்பாங்கு இராதநிலையில், எண்ணற்ற பிரச்சினைகள் கண்டு கொள்ளப்படமாட்டா; அவைகளுக்கான ஆக்க பூர்வமான தீர்வுகளையும் அடைய முடியாது. சீரிய ஆக்கச் சிந்தனையாளர்கள் அனைவரையும் போன்றே, ஐன்ஸ்டின் (Einstein) என்ற விஞ்ஞானியும், வெளிப் படையானவைகளை அறிந்துகொள்ள முடியாத தன்மையைப் பெற்றிருந்தார் என்றும், இத்தன்மை அவருடைய விவேகத் தன்மையின் ஒரு பகுதியாகும் என்றும் சொல்லப்படுகின்றது. ஆக்கத்திறம் உடையவன் தன்பால் அல்லது உலகத்தின் பால் ஒருவிதமான திருப்தியற்ற நிலையில் இருக்கும்பொழுது, பிரச்சினையை உணரும் தன்மை அவனுக்கு உண்டாகின்றது. மேலும், வாழ்க்கையில் எவனொருவன் மிகவும் திருப்தியடைந்து இருக்கின்றானோ, அவன் தன்னிலும், தன் சூழ்நிலையிலும் இருக்கின்ற குறைபாடுகளைக் காணவியலாத குருடனாக விளங்குவான். எனவே, ஏதாவதொரு மாற்றத்தை அல்லது முன்னேற்றத்தை ஒருவன் ஏற்படுத்த வேண்டுமேயானால், தற்போதைய சூழ்நிலையுடன் அவன் ஓரளவேனும் திருப்தியற்றிருப்பது இன்றியமையாததாகும். இதனைத்தான் கவிஞர்கள், தெய்வீக மனநிறைவின்மை (Divine Discontent) என்றும், வால்டேர் (Voltaire) என்ற அறிஞர், ஆக்க மனநிறைவின்மை (Constructive Discontent) என்றும் குறிப்பிட்டுள்ளனர்.

பொதுவாக, பிரச்சினைகள் பெரும்பாலும், தெளிவாக அறிந்து கொள்ள முடியாத நிலையில் சரியாகப் பொருள்வரையறை செய்யப்படாது காணப்படுவதால், ஆக்கத் திறமுடையவன் ஒரு பிரச்சினையை உணர்ந்தவுடன், அதை அவன் உணர்ந்த நிலையிலிருந்து, ஒரு புதிய நோக்கில் பார்த்தறிகின்றான். அதாவது, உணர்ந்தறிதலின் இசைவிணக்கத்துடன் அவன் செயல்பட்டு, ஒரு

பிரச்சினையை ஆழ்ந்துணர்ந்து, வேறு வகையில் அதனை மாற்றியமைத்து, ஆக்கத் தீர்வினை அடைய முயல்கிறான். ஆக்கத்திறமுடையவன் எண்ணற்ற தீர்வுகளையும், கருத்துகளையும் உண்டாக்குகின்ற திறமையைப் பெற்றிருப்பது மட்டுமன்றி, சிந்தனையில் இசைவிணக்கத்தையும் பெற்றிருக்கின்றான். அவன் தன் சிந்தனையை ஒரே பக்கம் செலுத்தி, தடைபட்டு முடங்கிக் கிடக்காது பல திக்குகளில் தன் சிந்தனையைத் திருப்புகின்ற தன்மையைப் பெற்றிருக்கின்றான். மேலும், அவன் மறுபொருள் வரையறை (Redefinition) செய்யும் அல்லது மாற்றியமைக்கும் திறமையைப் பெற்றிருக்கின்றான். இந்தத் திறமையினால், சூழ்நிலைகளைத் திருத்தி அமைக்கவும், அவைகளின் பயன்களையும் வேலைகளையும் மாற்றி அமைக்கவும், அவைகளைப் புதிய வகையில் காணவும் முடிகின்றது. இந்தச் செயற்பாங்கு ஏற்கெனவே தெரிந்தவைகளைப் புதிய, பல்வேறு நோக்கங்களின்பால் பயன்படுத்த உதவுகின்றது. இவ்வாறு எண்ண ஓட்டம் (Fluency), இசைவிணக்கம், அறிவுக் கூர்மை, பொருந்தும் தன்மை, இயல்பாய் இயங்குந்தன்மை, தற்படைப்புத் தன்மை (Originality) போன்ற செயற்பாங்குகள் ஆக்கச் சிந்தனைகளைச் சிறப்புறச் செய்கின்றன.

கில்பர்டு (Guilford) தமது அறிவுத் திற அமைப்பின் மாதிரியில் (The Structure of Intellect Model), அறிவுத்திறத்தின் இயக்கங்களில் கூர்த்த சிந்தனை (Convergent Thinking), பரந்த சிந்தனை (Divergent Thinking) ஆகியவற்றை அடக்கியுள்ளார். கூர்த்த சிந்தனை என்பது நுண்ணறிவு பற்றி, வழக்கத்திலுள்ள கருத்தினடிப்படையில் சிந்தனையைக் குறுக்கி, ஒரு சரியான விடையைக் காண்பது ஆகும். ஆனால், பரந்த சிந்தனையானது ஒருவர் தம் சிந்தனையில் வழக்கத்தினின்றும் விலகி, கூடுமான வெளிப்பாடுகள் பலவற்றை உண்டுபண்ணுகின்ற திறமையைக் குறிக்கின்றது. வாலக்கும், கோகனும் (Wallach and Kogan) கில்பர்டின் இக் கருத்துக்கோட்பாட்டினைத் தெளிவாக்கியுள்ளனர். நுண்ணறிவு பற்றிய வழக்கத்திலுள்ள கருத்தும், ஆக்கத்திறமும் சிந்தனைச் செயற்பாங்குகளிடையே, பொதுவாகவும் அடிப்படையாகவும் உள்ள வேறுபாடுகளைக் குறிக்கின்றன என்பதோடு நம் சிந்தனை இயங்கும் வெவ்வேறு விதங்களையும் இவைகள் குறிக்கின்றன என்றும் அவர்கள் கூறியுள்ளனர்.

மால்ட்ஜ்மனும் (Maltzman) மற்ற ஆராய்ச்சியாளர்களும், ஆக்கத்திறத்தினை அளவிடுவதற்கும், நிர்ணயிப்பதற்கும் வேண்டிய கருவிகளை அமைப்பதற்காக, ஆக்கத்திறத்தின் அடிப்படைச் செயற்பாங்குகளைக் கண்டறிவதில் ஆர்வம் கொண்டிருந்தனர்.

சிறிய ஆக்கச் சிந்தனையாளர்களின் அகநோக்குக் குறிப்புகளை (Introspective accounts) அவர்கள் ஆய்ந்தறிந்து, ஆக்கத்திறம் பற்றிய இயைபு கொள்கையை (Associative Conception) உரு வாக்கியுள்ளனர். இந்த நோக்கில், ஆக்கத்திறம் என்பது இயைபு மூலகங்களைப் (Associative elements) புதிய வகையில் இணைப்பதே என்றும், இந்தப் புதிய இணைப்புகளின் மூலக்கருத்துகள் ஒன்றுக் கொன்று எவ்வளவு தொலைவில் நம் உள்ளத்தில் விலகி இருக் கின்றனவோ அந்த அளவிற்கு அவை அதிக ஆக்கத்திறமுள்ள தீர்வுகள் என்றும், மெட்னிக் (Mednick) கருதுகின்றார். எனவே, ஒருவரின் அனுபவத்திலுள்ள கருத்துகளிலிருந்து, புதிய புதிய இயைபுகளை உருவாக்குவதே ஆக்கத்திறத்தின் அடிப்படையான செயற்பாங்கு என நாம் அறியலாம்.

மெட்னிக்கின் வழியைப் பின்பற்றி வாலக்கும், கோகனும் தங் களின் சொந்த ஆராய்ச்சிகளின் அடிப்படையிலும், வேறுபல ஆராய்ச்சியாளர்களின் சோதனைக் குறிப்புகளை மீண்டும் பகுத் தாய்ந்ததன் அடிப்படையிலும், இந்த இயைபு கொள்கையினை விரி வாக்கியுள்ளனர். இவற்றின் அடிப்படையில் ஆக்கத்திறம் என்பது ஏராளமான, அருந்தனிச் சிறப்புமிகுந்த இயைபுகளைத் தோற்று விக்கின்ற திறமையே என்ற இறுதி முடிவிற்கு அவர்கள் வந் துள்ளனர். அவர்கள் தங்கள் கோட்பாட்டில், ஆக்கத்திற மானது, எண்ண ஓட்டம் (Fluency), அருந்தனித்தன்மை (Uniqueness) ஆகிய இரண்டு அடிப்படைக் காரணிகளைக் கொண் டுள்ளதெனக் கருதுகின்றனர். மற்ற ஆராய்ச்சியாளர்களும் இந்தக் கோட்பாட்டினைத் திறமைக்கூறு பாகுபாட்டு முறையில் (Factor-Analysis) ஆய்ந்து, இந்தக் கருத்து, திறமைக்கூறு பாகுபாட்டின் வழி ஏற்புடையதாய் இருக்கின்றது எனக் கண்டுள்ளனர்.

**ஆக்க விளைவுப் பொருள் (Creative Product) :**

ஒரு சில உளவியலார்களைப் (Rogers, Arnold) பொறுத்தவரை 'ஆக்க விளைவுப் பொருள்' என்ற சொல், ஒரு கவிதை, கலைப் பொருள், அல்லது ஒரு விஞ்ஞானக் கோட்பாடு போன்ற தெளி வாகப் புரியக்கூடிய விளைவுப் பொருளைக் (Tangible product) குறிக் கின்றது. ஆக்க விளைவுப் பொருள் என்பது குறிப்பிட்ட தேவை களைப் பூர்த்தி செய்வதாகவும், ஏதாவதொரு விதத்தில் பய னுள்ளதாகவும் இருத்தல்வேண்டும் என்று மெட்னிக் கருதுகின்றார். இவருடைய இந்தக் கூற்று, சாதாரணமான ஆக்கத்திறம் உடைய வர்களைப் பற்றியும், அவர்களது படைப்புகளைப் பற்றியும் கொண் டுள்ள கருத்தை அடிப்படையாகக் கொண்டதாகும்.

எனினும், உளவியலின் முறைப்படி, காகிதத்தில் எழுது கோலினுல் இழைத்த இழைப்புகள், மொழிந்த சொற்கள், வெளிப் படுத்தப்பட்ட கருத்துகள், மேலும், வெறுமனே யோசிக்கப்பட்ட எண்ணங்கள், ஒன்றைத் தெளிவாக எடுத்து விளக்குகின்ற கொள்கைகள் போன்றவைகளும் ஆக்க விளைவுப் பொருள்களாகும். இவைகளை உளவியல் விளைவுப் பொருள்கள் எனவும் கூறலாம். உளவியலார்கள் கருத்தின்படி, வெவ்வேறு கண்டுபிடிப்புகள் நிகழ்வதற்குக் காரணமாய் இருந்துவந்துள்ள உள நடத்தைகள், அடிப்படையில் ஒரே தன்மையுடையுவையாகும். எனினும், ஆக்க விளைவுப் பொருளின் முக்கியமான முதனிலை அறிகுறியானது, நூதன அல்லது அபூர்வத் தன்மையே என உளவியலார் வலியுறுத்தி யுள்ளனர். நூதன அல்லது அபூர்வத்தன்மையானது, விளைவுப் பொருள்களின் ஒரு குறிப்பிட்ட திரளோடு ஒப்பிட்டுக் கணிக்கப் படுகின்றது. மேலும் ஒரு விளைவுப் பொருளின் பயனுடைமையே ஆக்க விளைவுப் பொருளின் கூடுதலான அறிகுறியாகக் கருதப்படு கின்றது. அதாவது, ஆக்க விளைவுப் பொருள், ஒரு பிரச்சினையைத் தீர்ப்பதற்கும், ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கும், சமூக அங்கீகரிப்பு வாய்ந்த இலக்கு ஒன்றை அடைவதற்கும் ஏற்றதாக இருக்கவேண்டும். சுருங்கக் கூறின், ஆக்க விளைவுப்பொருள் ஒரு சூழ்நிலைக்குப் பொருத்தமாக இருக்கவேண்டும்.

பொதுவாக இரண்டுவகை ஆக்கத் திறன்களும், ஆக்க விளைவுப் பொருள்களும் உள்ளதாக ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. அவை அறிவியல் சார்ந்த ஆக்கத்திறமும் (Scientific creativity), விளைவுப் பொருளும், கலைசார்ந்த ஆக்கத் திறமும் (Artistic ereativity) விளைவுப் பொருளும் ஆகும். எனினும், ஆக்க விளைவுப் பொருள், கலை, விஞ்ஞானத் துறைகளில் மட்டுமல்லாது கல்வி, சமூகம், வாணிகம், அரசியல் ஆகிய தெளிவற்ற விளைவுகளைக் கொண்ட துறைகளிலும் காணப்படுவனவாக உள்ளன.

**ஆக்கத்திறமுடையவன் (The Creative Person):**

ஆக்கத்திறமுடையவர்களின் ஆளுமைத் தன்மையினைப் பற்றி வேறுபட்ட முடிவுகள் பலவற்றை ஆராய்ச்சிகள் காட்டியுள்ள போதிலும், அவர்களின்பால் காணப்பட்ட, பொதுவான ஒத்த குணத்தன்மைகள் பலவற்றையும் அவை எடுத்துக் காட்டியுள்ளன. எனவே, ஆக்கத்திறமுடையவர்களிடம் காணப்படுகின்ற பொது வான பண்புக் கூறுகளில் முக்கியமான சிலவற்றை இங்குக் கவனிப்போம்.

ஆக்கத்திறமுடையவர்கள், பொதுவாக, நுண்ணறிவு மிக்கவர்களாகவும், தங்களின் சிந்தனையிலும், செயலிலும் பிறரைச் சார்ந்திராது தாங்களே சுதந்திரமாகச் செயல்படுபவர்களாகவும் இருப்பர். அவர்களின் தற்படைப்புச் சிந்தனையை ஊக்குவிக்கும் சூழ்நிலை இருக்கையில், எதையும் சாதிப்பதற்கு ஏற்ற உறுதியான உந்துகளை (Drives) அவர்கள் பெற்றிருப்பர். வெளியுலக அனுபவங்களையும், அகத்தே எழும் அனுபவங்களையும் திறந்த மனப் போக்குடன் அவர்கள் ஏற்றுக்கொள்வர். புலன் காட்சிக்கும் பகுத்துணர்வதற்கும் இடையே, புலன் காட்சியின்பால் அவர்கள் நாட்டம் கொண்டிருப்பர். 'அவர்கள், எதையும் அப்படியே பெற்றுக் கொள்பவர்களாகவும் (Receptive), வாழ்க்கையைப் பற்றிய உண்மைகளை எந்த அளவிற்கு அதிகமாகத் தெரிந்து கொள்ளமுடியுமோ அந்த அளவிற்கு அவைகளைத் தெரிந்து கொள்ள முயற்சிப்பவர்களாகவும் இருப்பர். அவர்களின் புலன் காட்சி சார்ந்த மனப்பாங்கு, எதையும் அவர்கள் ஆவலோடு கவனிப்பதில் வெளிப்படுகின்றது. இந்த ஆவல் மனப்பாங்குதான், எதையும் ஆராய விரும்புகின்ற அவர்களின் உள்ளத்தின் அறிகுறியாகும்.

ஆக்கத்திறம் உடையவர்கள் பலவகைப்பட்ட விவரங்களை அறிந்திருப்பர். ஆனால், அளவுக்கு அதிகமாக விவரங்களை ஒருவன் அறிந்திருப்பது ஆக்கத்திறம் வெளிப்படுவதற்குச் சில வேளைகளில் இடையூறாகி விடும். எண்ணற்ற, முக்கியமான கண்டுபிடிப்புகள் அந்தந்தத் துறைகளில் தேர்ச்சி பெறாதிருந்தவர்களால் கண்டு பிடிக்கப்பட்டு இருப்பது சந்தர்ப்ப வசத்தினால் அல்ல. சிறந்த நிபுணர்கள் பலர், தங்கள் கொள்கையின் அடிப்படையிலும், அறிவியல் கண்டுபிடிப்புகளின் அடிப்படையிலும், ஒரு சில விஷயங்கள் அவ்வாறு இருப்பதில்லை என்றும், அவைகளை அவ்வாறு செய்வது இயலாது என்றும் கருதுவர். ஆனால், ஆக்கத்திறமுடையவன், தான் அனுபவமற்று இருப்பினும், நிபுணர்கள் துணிந்து முயற்சி செய்திராத துறைகளில் துணிந்து ஈடுபட்டுப் போதிய வெற்றியையும் அடைகின்றான். நிபுணர்களால் எதிர்மறையானவை எனக் கருதப்படுகின்றவைகளை இணைக்கின்ற குறிப்பிடத்தக்க பண்பினையும், குழந்தையிடம் காணப்படும் ஆச்சரிய மிக்க எளிமையான புலன்காட்சியையும், ஆக்கத்திறமையுடையவன் பெற்றிருப்பான். ஆக்கத்திறமுடையவர்கள் தங்களின் புலன் நோக்கிலும், சிந்தனையிலும் உள்ளுணர்வுத் (Intuitive) தன்மையைப் பெற்றிருப்பர். அவர்கள் தங்களுக்குப் புலனாகின்ற பொருள்களின்பால், தங்கள் கற்பனையைச் செலுத்தாதன்றி, 'அவற்றை அப்படியே ஏற்றுக்கொள்வதில்லை. மாறாக, அவர்கள் விரைவில்

ஒரு பொருளின் உள்ளார்ந்த அர்த்தங்களை அறிந்து கொள்பவர்களாகவும், அவைகளை எந்த விதத்தில் உபயோகப்படுத்த முடியும் என்பதை அறிந்தவர்களாகவும் இருப்பர். அவர்கள் தங்கள் கருத்துகளை அலசி ஆராய்ந்து, தாங்கள் எடுத்துக் கொண்டுள்ள பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதற்கு உதவியாக இருப்பவைகளை உருவாக்குவதில் திறன்மிக்கவர்களாக இருப்பர்.

ஆக்கத் திறமுடையவர்கள் கொள்கை சார்ந்த, அழகியல் சார்ந்த பயன் மதிப்புகளைப் பெரிதாகக் கருதுவர். சென்னைமா நகரத்து மாநிலக் கல்லூரியின் உளவியல் தலைமைப் பேராசிரியர் டாக்டர் பரமேஷ் அவர்கள் (Paramesh), அமெரிக்க உயர்நிலைப் பள்ளியின் 107 வெள்ளை மாணவ மாணவியரை, பாரன்-வெல்ஷ் கலை அளவையைத் தழுவி உருவாக்கப்பட்ட கலை அளவை (Revised Art Scale) ஒன்றைக்கொண்டும், ஆல்போர்ட், வெர்னன், லிண்ட்ஸே பயன்மதிப்பு அளவையைக் (Allport-Vernon-Lindzey study of values) கொண்டும் ஆய்ந்தார். அதில் உயர்ந்த ஆக்கத் திறன் குழுவினர், குறைந்த மிதமான ஆக்கத்திறமுடைய குழுவினர்களைவிடப் பொருளாதாரம் சார்ந்த பயன்மதிப்பில் குறிப்பிடத்தக்க விதத்தில் குறைந்து காணப்பட்டனர். மற்றப் பயன்மதிப்புகளில், இக் குழுக்கள் வேறுபாடற்று இருந்தன. மேலும் இப் பேராசிரியர், சென்னை மாநகரத்து உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் 216 பேரை, வால்க்-கோகன் ஆக்கத்திறக் கருவிகளைக்கொண்டும், ஆல்போர்ட்-வெர்னன்–லின்ட்ஸே பயன்மதிப்பு அளவையினைத் தழுவி இயற்றப்பட்ட புதிய பயன்மதிப்பு அளவை ஒன்றைக் கொண்டும் ஆராய்ந்தார். இதில், உயர்ந்த ஆக்கத் திறமுடையவர்கள், குறைந்த மிதமான ஆக்கத் திறமுடையவர்களைவிடக் கோட்பாடு, அழகியல் சார்ந்த பயன் மதிப்புகளில் குறிப்பிடத்தக்க வகையில் உயர்ந்து காணப்பட்டனர். கொள்கை சார்ந்தவைகளைப் பெரிதாக மதிக்கின்ற குணம், ஆக்கத் திறமுடையவர்களின் உள்ளுணர்வின் தன்மையுடன் ஒத்திருக்கின்றது. ஏனெனில், இவ்விரண்டும் அவர்களின் புலன்களுக்கு முன்னால் இருக்கின்றவைகளைக் கடந்து, ஆழ்ந்த, பொருள் நிறைந்த உண்மை நிலையைத் தேடுவதில் அவர்களை ஈடுபடுத்துகின்றது; உண்மையான ஆக்கத் திறமுடையவர்கள் தங்கள் தீர்வுகள் அழகியலுக்கு ஏற்ப மகிழ்வூட்டக் கூடியதாக அல்லது நேர்த்தியானதாக, சீரியதாகக் காணப்படாத வரை அத் தீர்வுகளைப் பொறுத்தவரை திருப்தியடைவதில்லை.

மற்றோர் ஆராய்ச்சியில், பேராசிரியர் பரமேஷ், சென்னை மாநகரத்து இளையோர் பருவத்து ஆண்பிள்ளைகளின் ஆளுமைத் தன்மையை நிர்மாணிக்கும் பொருட்டு ஆய்ந்ததன் முடிவுகள்

பின்வருமாறு: ஆக்கத்திறமுடையவன் அகமுகனும் அல்லன்; புறமுகனும் அல்லன்; அவனிடம் நரம்புப் பிணித் தன்மையும் (Neuroticism), தவிப்பும் (Anxiety) மிகுதியாகவோ குறைவாகவோ இல்லை. மேலும், அவன் தன் ஆளுமை அமைப்பில் சமநிலைத் தன்மையை உடையவனாகவும், கொள்கை, அழகியல் சார்ந்த பயன்மதிப்புகள் மிகுந்துள்ளவனாகவும் இருக்கின்றான். இதன்மூலம், ஆக்கத் திறமுடையவன் சிக்கலான ஆளுமைத் தன்மையுடையவனாயிருக்கின்றான் என்பது தெளிவாகின்றது.

மனிதனின் எண்ணற்ற உள்ளிடைச் சக்திகள் அவனுடைய நனவிலி உள்ளத்தில் செயலற்று வெளிப்பாடற்றுக் கிடக்கின்றன. நனவிலி உள்ளத்தில் இருப்பவைகளை அனுபவிப்பதும் முற்றிலும் தன்னுணர்வுடன் அவைகளை வெளிப்படுத்துவதும் எளிதானதன்று. ஆகவே, பெரும்பான்மையானோர் ஒருசில உள்ளிடைச் சக்திகளைத்தாம் மெய்யாக்கிக் காண்பவர்களாகவும், இதன் விளைவில் ஒருவிதமான அரைகுறை வாழ்க்கையை வாழ்கின்றவர்களாகவும் இருக்கின்றனர். எனினும், ஆக்கத் திறமுடையவர்கள் எதிர்மாறானவைகளை அனுபவித்து, அவற்றைத் தங்களுடைய தனிப்பட்ட தன்மைகளுக்கேற்றவாறு இணைக்கின்ற மனோதிடத்தைப் பெற்றிருக்கின்றனர். இத்தகைய மனோதிடம்தான் ஆக்கத்திறமுடையவனின் குணமாகவும், அவனது வாழ்வின் முக்கிய மூலப் பண்பாகவும் உள்ளது. இது உடல்சார்ந்த திடமன்று; மாறாக, இது உள்ளத்தின்பாற்பட்ட தைரியம் ஆகும். பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டவைகளின் ஏற்புடைமைகளை எதிர்த்துக் கேள்வி கேட்கவும், எவரும் எண்ணிப்பாராதவற்றை எண்ணிப் பார்க்கவும், அகம் சார்ந்த, புறம் சார்ந்த அனுபவங்களை ஏற்றுக் கொள்ளவும், இயலாதவைகளைக் கற்பனை செய்து அவைகளை அடையவும், மனிதக் கூட்டத்திலிருந்து தனித்து நிற்கவும், தேவைப்பட்டால் அதனோடு முரண்பட்டு இருக்கவும் வல்ல இந்த மனோதிடம்தான் ஆக்கத் திறமுடையவனுக்கு உறுதுணையாக இருக்கின்றது. இத்தகைய மனோதிடமே, ஒருவன் தன் ஆற்றல்களை மெய்யாக்கி, தன்னைத் தானாகக் காணச்செய்வதும் ஆகும்.

**ஆக்கச் சூழ்நிலை (The Creative Situation):**

ஒருவனின் ஆளுமைத் தன்மையானது ஓரளவிற்கு அவனது வாழ்க்கைச் சூழ்நிலையைப் பொறுத்துள்ளது. ஒரு தனியன் ஒன்றுமே இல்லாத வெற்றிடத்தில் வளருவதில்லை என்பதால் ஆக்கத்திறமுடையவர்களின் ஆளுமைக் குணங்களை ஆராய்வதில்,

அவர்கள் வளர்க்கப்பட்ட வாழ்க்கைச் சூழ்நிலையைப் பற்றியும் ஆராய்வது அவசியமாகின்றது. வாழ்க்கையின் துவக்ககால நிகழ்ச்சிகளும் குழந்தை, வளரும் சமூக, கல்வி, அறிவு சார்ந்த சூழ்நிலைகளும், ஆக்க உள்ளிடைச் சக்திகளை வெளிபடுத்துவதற்கு மிகவும் முக்கியமானவைகளாகும்.

பிள்ளைகளின் பயன் மதிப்புகளும், மனப் பாங்குகளும் பெற்றோர்களின் வழியே உருவாகின்றன. பெற்றோர்களின் பயன் மதிப்புகள் அவர்கள் சார்ந்துள்ள கலாச்சாரம், பண்பாடுகளில் இருந்து பெறப்படுகின்றன. ஆக்கத்திறமுடையோரின் பெற்றோர்கள், குழந்தையை வளர்க்கும் முறை, ஒழுக்க நெறிகள் ஆகியவைகளைப் பற்றிய பொதுவான கருத்துகளிலிருந்து மாறுபட்ட கருத்துகளைக் கொண்டுள்ளனரா? இந்தக் கேள்விக்கு வெய்ஸ்பர்க், ஸ்பிரிங்கர் (Weisberg and Springer), மெக்கின்னன் (Mackinnon), கெட்ஸெல்ஸ், ஜாக்ஸன் (Getzels and Jackson) போன்றவர்களின் ஆராய்ச்சி முடிவுகள் 'ஆம்' என்ற திட்டவட்டமான பதிலை அளிக்கின்றன. இவர்களின் ஆராய்ச்சிகளில், உயர்ந்த ஆக்கத்திறமுடையவர்களின் குடும்பத்தில், பல்வகை ஆக்கத்திறச் செயற்பாங்குகள் நன்கு செயல்பட்டு, மிகையாக வெளிப்படுவதற்குப் பெரிதும் உகந்த சூழ்நிலை இருந்ததாகக் குறிப்பிட்டுள்ளனர்.

டிரெவ்டால் (Drevdahl) தன் ஆராய்ச்சியில், ஆக்கத்திறமிக்க உளவியலாருக்கு, அவர்களின் குடும்பங்களில் ஆக்கத்திறம் குறைந்த உளவியலாரைவிட அதிகமான பொறுப்புகள் தரப்பட்டிருந்தன எனக் கண்டறிந்துள்ளார். மெக்கின்னன் என்பார் ஆக்கத்திறமிக்க கட்டிடக்கலை வல்லுனர்களின் பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளின் அறிவு விஷயங்களில் தலையிடாதவர்களாக இருந்தனர் என்பதைக் கண்டறிந்துள்ளார். ஸ்டீன் (Stein) என்பாரும் தாம் சோதனைக்குட்படுத்திய ஆக்கத்திறமிக்க மருந்துவகை ஆராய்ச்சியாளர்களும் (Research chemists), இவ்வாறே அவர்களின் பெற்றோர்களால் சிந்தனை, செயல் சுதந்திரம் அளிக்கப்பட்டிருந்தனர் என்று கண்டார். இத்தகைய கண்டுபிடிப்புகள், அறிவு சார்ந்தவைகளில், பெற்றோர் தம் பிள்ளைகளின் விஷயத்தில் தலையிடாதிருப்பது, ஆக்கத்திறம் சார்ந்த பல்வேறு சிந்தனைகளின் வளர்ச்சிகளுக்குத் துணையாக உள்ளது என்று வலியுறுத்துகின்றன.

எண்ணற்ற ஆராய்ச்சியாளர்கள், ஆக்கத்திறத்தில் பாலின வேறுபாடுகள் நிலவுவதாக அறிவித்துள்ளனர். ஆக்க சாதனைகள் பெரும்பாலும் ஆண்களினாலேயே அடையப்பட்டுள்ளன என்பதை

வரலாறும் காண்பிக்கின்றது. பெட்டிகுரு (Pettigrew), வாலக்காரன் (Wallach and Caron) ஆகியோர் ஆண்களைவிடப் பெண்கள் குறுகிய பகுப்பாளர்களாக (Narrow Categorizers) உள்ளனர் என்று தெரிவித்துள்ளனர். கிராப்லி (Cropley) என்பாரும் பெண் பிள்ளைகளைவிட ஆண் பிள்ளைகளிடமே அதிக அளவில் தற்படைப்பும், தற்சிந்தனையும் காணப்படுகின்றன என்று கூறியுள்ளார்.

இத்தகைய பாலின வேறுபாடுகள், பெண்களில் காணப்படும் இயல்பான அல்லது அடிப்படையான திறமைக் குறைவினால் தோன்றியனவாகக் கருதுவதற்கு இடமில்லை. மாறாக, அவர்கள் சார்ந்துள்ள ஆண்-பெண் பற்றிய கலாச்சார எதிர்பார்ப்புகளினால் இந்த வேறுபாடுகள் தோன்றியிருக்க இடமுண்டு. பெண்களின் சுதந்திரம், பாலினச் சமத்துவம் போன்ற இயக்கங்களைக்கொண்ட இக்காலத்திலும் கூட, அடக்க வொடுக்கம், பிறருடன் ஒத்துப் போதல் போன்றவைகள் பெண்களிடம் எதிர்பார்க்கப்படுகின்றன. மரபு மீறிய தன்மைகள் ஆண்களைவிட பெண்களிடம் மிகவும் கண்டிக்கப்படுகின்றன. எனவே, பெண்களுக்கான சமூக அங்கீகரிப்பு வாய்ந்த நடத்தை முறைகள், பெண்கள் பரந்த சிந்தனையில் ஈடுபடுவதற்கு அனுகூலமாய் இல்லாது தடைகளாகவே உள்ளன.

ஆக்கத்திறமும் நுண்ணறிவும் (Creativity and Intelligence) :

ஆக்கத்திறத்திற்கும் நுண்ணறிவிற்கும் இடையே உள்ள தொடர்பு மிகவும் சிக்கலானது. கில்பர்டு, டாரன்ஸ் ஆகியோரின் ஆக்கத்திறச் சோதனைகளின் மதிப்பீடுகள் நுண்ணறிவின் மதிப்பீடுகளுடன் மிதமான தொடர்பாடு ($\gamma = 0{\cdot}25$ இலிருந்து $0{\cdot}30$) கொண்டுள்ளன. இதை மேற்போக்காக நோக்குகையில், நுண்ணறிவைப் பற்றிய வழக்கமான கருத்துகளிலிருந்து மாறுபட்ட, அறிவுத் திறத்தின் ஒரு தனிப்பட்ட திறமைத் தொகுதியாக ஆக்கத் திறத்தை இது குறிப்பிடுவதாகத் தோன்றும்.

ஆனால் ஆக்கத் திறத்தின் பல்வேறுபட்ட பகுப்புகள் எந்த அளவிற்கு நுண்ணறிவுடன் தொடர்பாடு கொண்டுள்ளனவோ அந்த அளவிற்கே தங்களுக்குள் ஒன்றுக்கொன்று தொடர்பாடு கொண்டிருக்கின்றன என்ற உண்மையை மேற்குறிப்பிட்ட ஆக்கத்திறச் சோதனைகளைக் கொண்டு செய்யப்பட்ட ஆராய்ச்சிகள் வெளிப்படுத்தியுள்ளன. இக்கண்டு பிடிப்புகள் ஆக்கத்திறம் நுண்ணறிவிலிருந்து வேறுபட்ட, தங்களுக்குள் பொதுப்பண்புகளையுடைய அறிவுத் திறத் தொகுதியைக் குறிப்பிடுவனவல்ல என்று காட்டுகின்றன. அதிகமாக நடைமுறையில் பயன்படுத்தப்

பட்டு வரும் கில்பர்டு, டாரன்ஸ் ஆக்கத்திறச் சோதனைத் தொகுதிகள் நுண்ணறிவிலிருந்து வேறுபாடற்ற, உணர்ந்தறிகின்ற திறமைகளை (Cognitive Abilities) அளவிடுவதாக உள்ளன. எனவே, இத்தகைய சோதனைகளின் அடிப்படையில் ஆக்கத் திறமிக்கவர்களையும் நுண்ணறிவு மிக்கவர்களையும் தீர்மானிப்பது தவருன முடிவுகளை அளிக்கும்.

இந்த கண்டுபிடிப்புகளுக்கு எதிர்மாருக பிளெஷர் (Flesher), வாலக், கோகன் (Wallach and Kogan) ஆகியோர் ஆக்கத்திறத்திற்கும் நுண்ணறிவிற்கும் இடையே மிகவும் குறைவான, புறக்கணிக்கப்படக்கூடிய தொடர்பாடுகளே இருப்பதாக அறிவித்துள்ளனர். எனினும் பிளெஷருடைய ஆய்வில் அவருடைய ஆக்கத்திறச் சோதனைத் தொகுதியின் உட்பிரிவுகட்கு இடையேயும் புறக்கணிக்கப் படக்கூடிய தொடர்பாடுகளே இருந்தன. ஆதலால், பிளெஷரால் அளவிடப்பட்ட திறமைகள், ஒருங்கிணைந்த திறமைத் தொகுதி ஒன்றை (ஆக்கத்திறம்) பிரதிபலிப்பனவாக இல்லை என்று கருதலாம். ஒன்ருேடு ஒன்று மிகுந்த தொடர்புகளைப் பெற்று, ஆனுல், நுண்ணறிவு மதிப்பீடுகளுடன் புறக்கணிக்கப்படக்கூடிய தொடர்பாடுகளையுடைய உட்பிரிவுகளைக் கொண்ட ஆக்கத் திறச் சோதனைகளை உருவாக்கிய பெருமை, வாலக்கையும் கோகனையுமே சாரும். அவர்களுடைய ஒரே சீரான ஆக்கத்திறச் சோதனைகள், அவை அளவிடும் ஆக்கத்திற மூலக் கூறுகளுக்கிடை திருப்தியான அளவிற்குப் பொதுத் தன்மைகளைப் பிரதிபலிப்பனவாக இருப்பதால், அவைகள் நிலையான, உணர்ந்தறிகின்ற திறமை ஒன்றினையே சோதிக்கின்றன என்பது புலப்படும். எனவே, வாலக்-கோகனின் அளவீட்டுக் கருவிகள், மூலக் கூறுகள் ஒருங்கிணைந்த, நுண்ணறிவிலிருந்து மாறுபட்ட ஆக்கத்திறத்தை அளவிட்டறிய பயனுடையதாக உள்ளன. இக்கருவிகளைப் பயன்படுத்தி ஆக்கத்திறத்தை நிர்ணயித்து இவர்கள் செய்த ஆராய்ச்சிகளிலும் ஏனையோர் செய்த ஆராய்ச்சிகளிலும் நுண்ணறிவிற்கும் ஆக்கத்திறத்திற்கும் இடையே மிகக் குறைந்த, புறக்கணிக்கப் படக்கூடிய தொடர்பாடுகளே இருந்தன. இவ்வகையில் பேராசிரியர் பரமேஷ் (1971) சென்னை மாநகரத்து உயர்நிலைப்பள்ளி இளையோரை இக்கருவிகளைக் கொண்டே ஆய்ந்ததில், ஆக்கத்திறமானது நுண்ணறிவுடன் தொடர்பற்று இருப்பதாகக் கண்டார்.

நுண்ணறிவிற்கும், நடைமுறை வாழ்க்கைச் சாதனைவழி வெளிப்படும் உண்மையான ஆக்கத்திறத்திற்கும் இடையே உள்ள தொடர்பு, நுண்ணறிவிற்கும் உளவியல் சோதனைகளால் நிர்மாணிக்கப்படும் ஆக்கத்திற மதிப்பீட்டிற்கும் இடையே உள்ள

தொடர்பிலிருந்து ஓரளவே மாறுபட்டுக் காணப்படுகின்றது. கலை, இலக்கியம், அறிவியல் ஆகியவற்றில் ஈடுபட்டுள்ள ஆக்கத் திறமிக்கவர்கள், ஆக்கத்திறமில்லாதவர்களைவிட நுண்ணறிவு மிக்கவர்களாயிருக்கின்றனர் என்ற உண்மையை ஆராய்ச்சிகள் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளன (Drevdahl and Cattell, Hitt and Stock). மேலும், நுண்ணறிவு மிக்கோர் பல்வேறு துறைகளில் மற்றவர்கள் இவர்களிடமிருந்து எதிர்பார்க்கின்ற அளவிற்கு மேல் குறிப்பிடத்தக்க, தற்படைப்பு வாய்ந்த படைப்புகளை வெளியிடுகின்றனர் (Terman and Oden). எனவே, நுண்ணறிவும், ஏனைய உணர்ந்தறிகின்ற குணப் பண்புகளைப்போன்று, நடைமுறை வாழ்க்கையில் உண்மையான ஆக்கத்திறத்தை வெளிப்படுத்த ஏதுவானதாய் இருக்கின்றது என்பதை ஊகித்து அறியலாம். சுருங்கக்கூறின், ஒருவரின் ஆக்க உள்ளிடைச் சக்திகளை மெய்ப்பித்து நிருபிக்க, சராசரி நுண்ணறிவுக்கும் மேற்பட்ட ஒரு குறிப்பிட்ட குறைந்த அளவு நுண்ணறிவு தேவை. எனினும், இந்த வரையறை எல்லைக்குமேல், நுண்ணறிவுக்கும் உண்மையான ஆக்கத்திற்கும் இடையே எவ்விதத் தொடர்பும் இல்லை. (Drevdahl; Mackinnon; Terman and Oden). இந்தக் கருத்தை வரம்பு எல்லைக் கருத்துக்கோள் (Threshold concept) என்று ஆண்டர்சன் (Anderson) குறிப்பிடுகின்றார். இந்தக் கருத்துருவினைப் பொறுத்தவரை, நுண்ணறிவு ஈவின் (I. Q.) ஒரு வரம்பு எல்லை வரை பரந்த செயற்பாங்குகள் நுண்ணறிவின்றி செயலாற்ற முடியாத நிலையில் இருக்கின்றன என்றும், அதற்குமேல் அவை நுண்ணறிவுத் திறத்தின் தொடர்பிலிருந்து விடுபட்டுச் சுதந்திரமாக இயங்கத் தொடங்குகின்றன என்பதையும் நாம் ஊகித்து அறியலாம். நுண்ணறிவு ஈவின் ஒரு குறிப்பிட்ட வரையறைப் புள்ளியை அடையப்பெற்றதும் நன்கு பலனளிக்கின்ற ஆக்கத்திறச் செயல்கள் நுண்ணறிவு ஈவோடல்லாது ஏனைய காரணிகளைச் சார்ந்து செயல்படுகின்றன என்று ஆண்டர்சன் கூறுகின்றார். டாரன்ஸ், யாமமோடோ (Yamamoto), இன்னும் மற்றவர்களும் இந்த நுண்ணறிவு ஈவு வரம்பெல்லையை (I.Q. Threshold) 120 எனத் தீர்மானித்துள்ளனர்.

வழக்கமாக நிலவிவரும் நுண்ணறிவு பற்றிய கருத்துருவிலிருந்து பண்பின் அடிப்படையில் மாறுபட்ட ஓர் உணர்ந்தறியும் திறனே ஆக்கத்திறம் என்பது அமெரிக்க உளவியலார்களின் கருத்து. ஆனால், ஆங்கிலேய (English) உளவியலார்களின் நோக்கு, இதற்கு மாறாக, ஆக்கத்திறம் நுண்ணறிவிலிருந்து பண்பின் அடிப்படையில் மாறுபட்டதல்ல என்றும் அது நுண்ணறிவின் உயர்ந்த எல்லையைத்தான் குறிக்கின்றது என்றும் உள்ளது. இந்த

நோக்கு, பரந்த இயல்புடைய சிந்தனை செயல்படுவதற்கு, கூர்த்த இயல்புடைய சிந்தனை இன்றியமையாத அடித்தளமாக அமைகின்றது என்பதைக் காட்டுகின்றது. பர்ட் (Burt), புருனர் (Bruner), பிரிப்ராம் (Pribram) ஆகியோர் இந்தவகைக் கொள்கையினைச் சார்ந்தவர்கள் ஆவர். அவர்களைப் பொறுத்தவரை, தற்படைப்பு வாய்ந்த விளைவுகள் தற்செயலாக ஏற்பட்டுவிடுவதில்லை; மாறாக அவைகள் ஏற்கெனவே தெரிந்துள்ளவைகளின் பரந்த தன்மையினையே குறிப்பதாகும். தெரிந்துள்ளவைகளின் எல்லைகளைக் கூர்த்த சிந்தனைகளின் மூலம் அடைந்து தேர்ச்சியைப் பெற்றபின்னர், அவற்றைப் பரந்த செயற்பாங்குகளினால் பெருக்கமடையச் செய்யும்போது தான் ஆக்கத்திறம் வெளிப்படுகின்றது.

ஆக்கத்திறமும் கல்விச்சாதனையும் (Creativity and Academic Achievement):

இப்பிரச்சினை, ஆக்கத்திறத்திற்கும் நுண்ணறிவுக்கும் இடையே உள்ள தொடர்பினைப் போன்றது. ஏனெனில், கல்விச் சாதனை, நுண்ணறிவுத்திறத்தைச் சார்ந்தே தோன்றுவது என்று பல ஆராய்ச்சிகள் எடுத்துக் காட்டியுள்ளன. ஆனால், ஆக்கத்திறத்திற்கும், கல்விச் சாதனைக்கும் இடையே உள்ள தொடர்பினைப் பற்றி முரண்பாடான ஆராய்ச்சிச் சான்றுகள் உள்ளன. கெட்ஸெல்ஸும், ஜாக்சனும், டாரன்ஸ், யாமமோடோ, கிராப்ளி இன்னும் பலர், கில்பர்ட், டாரன்ஸ் வழிவந்த ஆக்கத்திறச் சோதனைகளின் மதிப்பீடுகள் நுண்ணறிவுச் சோதனைகளுடன் எந்த அளவிற்குத் தொடர்பாடு கொண்டுள்ளனவோ அந்த அளவிற்குக் கல்விச் சாதனைகளின் மதிப்பீடுகளுடனும் தொடர்பு கொண்டிருக்கின்றன என்று அறிவித்துள்ளனர். இவர்கள், உயர்ந்த நுண்ணறிவுமிக்க குழுவிற்கும், உயர்ந்த ஆக்கத்திறமிக்க குழுவிற்கும் இடையில் நுண்ணறிவு ஈவில் சராசரியாக இருபது எண்ணிக்கைகள் வேறுபாடு இருந்த போதிலும், அவ்விரு குழுவினர்களும் கல்விச் சாதனைகளில் எந்தவித வேறுபாட்டையும் பெற்றிருக்கவில்லை எனக் கண்டுள்ளனர். எனினும், பிளெஷர் என்பவர் ஆக்கத்திறத்திற்கும், கல்விச் சாதனைக்கும் இடையே எந்தவிதக் குறிப்பிடத்தக்க தொடர்பையும் காணவில்லை. நாம் ஏற்கெனவே பிளெஷருடைய ஆக்கத்திற அளவீடுகள், நுண்ணறிவு அளவீடுகளுடன் தொடர்பற்று இருந்தன என்று கண்டுள்ளோம். ஆதலால் இவரது ஆய்வில் ஆக்கத்திறத்திற்கும், கல்விச்சாதனைக்கும் இடையே எந்தவிதத் தொடர்பும் காணப்படாதது இயற்கையே. ஏனெனில், கல்விச் சாதனைகள் நுண்ணறிவைச் சார்ந்தனவே என்பது நன்கு நிரூபிக்கப்பட்டதொரு உண்மையாகும். ஆகையால், மற்ற ஆய்வுகளில், ஆக்கத்திறத்திற்

கும் கல்விச் சாதனைக்கும் இடையே காணப்பட்ட உடன்பாட்டுத் தொடர்பானது அந்த ஆய்வுகளில் பயன்படுத்தப்பட்ட ஆக்கத் திறச் சோதனைக்கும், நுண்ணறிவுச் சோதனைக்கும் இடையே இருந்த தொடர்பினையே பிரதிபலித்துள்ளன எனப் பொருள் கொள்ளலாம். எனினும், கல்விச் சாதனையில் நுண்ணறிவு கொண்டிருக்கின்ற செல்வாக்கினைப் புள்ளியியல் வழியாகக் கட்டுப்படுத்திய பிறகும், ஆக்கத்திறமிக்கோர் ஆக்கத்திறம் குறைந்தவர்களை விடக் கல்விச் சாதனைகளில் மேம்பட்டிருந்தனர் என யாமமோடோ கண்டது, மேற்கூறிய விளக்கத்தை ஏற்றுக்கொள்ள முடியாததாகச் செய்கின்றது. யாமமோடோ பயன்படுத்திய ஆக்கத்திறச் சோதனை தங்களுக்கிடையில் குறைந்த அளவே தொடர்பாடுகளைப் பெற்றிருந்ததால், ஒருசில குறிப்பிட்ட பாடப்பகுதிகளில், தனியர் தங்களுக்கே உரிய தற்படைப்பு வாய்ந்த சாதனைகள் எதையும் தோற்றுவிக்க முடியாவிட்டாலும், அவற்றில் நல்ல தேர்ச்சியைப் பெறும்வரையாவது, கல்விச்சாதனையோடு இந்தச் சோதனைகளில் சற்று தொடர்பு கொண்டிருந்திருக்க இடமுண்டு.

ஆகையால், நுண்ணறிவுடன் தொடர்பில்லாத, ஆனால் தங்களுக்குள் ஒருங்கிணைந்த ஆக்கத்திறச் சோதனை மூலம் நிர்மாணிக்கப்படும் ஆக்கத்திறம், கல்விச்சாதனையுடன் தொடர்பற்று இருக்கின்றது என்பதை நாம் அறியலாம். மேற்கண்டவாறு வாலக், கோகனின் ஆக்கத்திறச் சோதனைத் தொகுதி, அத்தகையதொரு நம்பகமான கருவியாக உள்ளது. உண்மையில் இவ்வாராய்ச்சியாளர்கள் ஆக்கத்திறம், கல்விச்சாதனையை எந்தவிதத்திலும் பாதிப்பது இல்லை என்ற சோதனை முடிவுகளைப் பெற்றுள்ளனர்.

இவ்வகையில், பேராசிரியர் பரமேஷ் சென்னை மாநகரத்து 155 உயர்நிலைப்பள்ளி மாணவர்களை, வாலக், கோகன் ஆக்கத்திறக் கருவிகளின் தொகுதியைக் கொண்டு ஆய்ந்ததில், கல்விச் சாதனை (தேர்வின் மதிப்பெண்கள்) ஆக்கத்திறத்துடன் தொடர்பற்று இருந்ததையும், ஆனால், நுண்ணறிவுடன் குறிப்பிடத்தக்க அளவிற்கு தொடர்பைக் கொண்டிருந்ததையும் கண்டார். எனினும், இக்கருவிகளைக் கொண்டு இத்துறையில் அறிவியல் ஆராய்ச்சிகள் மிகக் குறைவாகவே நடைபெற்றுள்ளன. எனவே, இந்நிலையில் இதைப் பற்றிய திட்டவட்டமான முடிவுகளை நாம் எதிர்பார்க்க இடமில்லை.

**ஆக்கத்திறத்தை மதிப்பிடுதல் (Assessment of Creativity):**

ஆக்கத்திறத்தை நிர்ணயிப்பதற்கான சிறந்த முறை, ஒரு தனியனின் அனுபவம், முதிர்ச்சி, வளர்ச்சி ஆகியவற்றின் அடிப்

படையில், அவனது சாதனைகளை வல்லுநர்கள் மதிப்பிடுவதே என்று ஈஸ்னர் (Eisner) கருதுகின்றார். இவ்வாறு அனுபவமிக்க வல்லுநர்கள் ஒரு தனியனின் ஆக்கத்திறத்தை, அது முதிர்ந்து பல்வகை விளைவுகளின் மூலம் வெளிப்பட்ட பிறகே, அதை நம்பகமாக, ஏற்புடைத்ததாக மதிப்பிடுவதற்கு இயலும் என்றாலும், ஆக்கத்திற உள்ளிடைச் சக்திகள் வளர்ந்து மலர்வதற்கு முன்னரே அவற்றைக் கண்டுணர்ந்து மதிப்பீடு செய்தல் என்பது கடினமானதாகும்.

உளவியலார் பலர் ஆக்கத்திறத்தை அளவிட்டறியப் பல்வேறு முறைகளைப் பயன்படுத்தியுள்ளனர். இவற்றில் முக்கியமானவை தன் தரவீடு (Self—Rating), சம வயதினர் அல்லது ஆசிரியர் தரவீடு (Peer or teacher rating), உள அளவைக் கருவிகள் (Psychometric Devices) ஆகியவை ஆகும். சம வயதினர், ஆசிரியர் தரவீடு என்பன தனியர்களைப் பற்றி அவர்கள் அறிந்துள்ளவற்றின் அடிப்படையில் அவர்களின் ஆக்கத்திறத்தைத் தரவீடு செய்வது ஆகும். இந்த முறை அக எண்ணம் சார்ந்தது (Subjective) என்பதால், இது குறைந்த அளவே நம்பகத்தையும் (Reliability), ஏற்புடைமையையும் (Validity) பெற்றிருக்கின்றது. எனவே, ஆக்கத்திறத்தை நிர்ணயிக்க உள அளவை முறை பெரும்பாலும் அதிகமாகப் பயன்படுத்தப்படுகின்றது. ஆக்கத்திறத்தை அளவிட்டறிய ஐந்து முக்கிய சோதனைகள் உள்ளன. அவை :

1. கில்பர்ட் ஆக்கத்திறச் சோதனைகள் (Guilford tests of creativity).

2. மின்னெஸோடா ஆக்கச் சிந்தனைச் சோதனைகள் (Minnesota Tests of Creative Thinking).

3. பாரன்—வெல்ஷ் கலைச் சோதனை (The Barron—Welsh Art Scale).

4. தொலை இயைபுச் சோதனைகள் (The Remote Associates tests — R. A. T.).

5. வாலக்—கோகன் ஆக்கத்திறக் கருவிகளின் தொகுதி (The Wallach — Kogan battery of creativity instruments).

**கில்பர்ட் ஆக்கத்திறச் சோதனைகள் :**

ஆக்கத்திறத்தின்பால் உள்ள முக்கியத்துவம் வாய்ந்த அறிவுத் திறக் காரணிகள், ஒரு பிரச்சினையைப் பற்றிய மிக்குணர்வு

அடைதல் (Sensitivity to problems) சொல் ஓட்டத் தன்மை, கருத்தோட்டத் தன்மை, சொற் பொருள் இசைவிணக்கம் (Semantic, Flexibility), இயைபோட்டத் தன்மை, தற்படைப்புத் தன்மை ஆகியவை என்று கில்பர்ட் கருதுகின்றார். இவற்றில் ஒவ்வொரு காரணியையும் அளவிட்டு அறிவதற்காக, கில்பர்ட் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட சோதனைகளை ஏற்படுத்தியுள்ளார். அவைகளில் சிலவற்றைக் கீழே கொடுத்துள்ளோம் :

i) பிரச்சினைகளைக் காணல் (Seeing problems) :

இது, ஒரு பிரச்சினையைப்பற்றி உணர்வடையும் காரணியை அளவிடப் பயன்படும் சோதனை ஆகும். . இதில், சோதனைக்குட் படுபவர் ஒரு மரம்போன்ற சாதாரணப் பொருளைப்பற்றி எழக் கூடிய பிரச்சினைகளையெல்லாம் கூறுமாறு கேட்டுக்கொள்ளப் படுகின்றார்.

ii) முன்னீடுகளும் பின்னிணைப்புகளும் (Prefixes and suffixes) :

இவ்விரு சோதனைகளும் சொல்லோட்டத் தன்மையை அளவிடுவதற்காகும். இதில் 'நற்' போன்ற முன்னீடுகளைப் பயன்படுத்தி அல்லது 'படும்' என்ற பின்னிணைப்புகளைப் பயன்படுத்தித் தனியர் எத்தனை வார்த்தைகளை எழுதமுடியுமோ அத்தனை வார்த்தைகளை எழுதும்படிக் கேட்டுக்கொள்ளப்படுவர்.

iii) பொருள் வகையினம் (Things categories) :

இது கருத்து ஓட்டத்தன்மையை நிர்ணயிப்பதற்காகும். இதில் தனியர், சான்றாக, உருண்டையாக உள்ள பொருட்களின் பெயர்களை அவர்களால் முடிந்த அளவிற்கு எழுதும்படிக் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

iv) பயன்கள் (Uses) ;

இது சொற்பொருள் இசைவிணக்கத்தைத் தீர்மானிப்பதற்காகும். இதில் சுத்தியல், செங்கல் போன்ற சாதாரணப் பொருட்களை எவ்வாறு வழக்கத்தில் இல்லாத வகையில் பயன்படுத்த முடியும் என்பதைப் பற்றிச் சிந்தித்துக் கூறும்படி தனியர் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர்.

v) கட்டுப்படுத்தப்பட்ட இயைபுத்தன்மை (Controlled Association) :

இது இயைபு ஓட்டத் தன்மையை நிர்ணயிப்பதற்காகும். இதில் ஒரு சொல்லின் எண்ணற்ற ஒரு பொருள் பன்மொழிகளைச் (Synonyms) சிந்தித்து எழுதவேண்டும்.

vi) பின் விளைவுகள் (Consequences) :

இது தற்படைப்புத் தன்மையை (Originality) மதிப்பீடு செய்வதற்காகும். இதில் உலகில் ஏற்படக்கூடிய அசாதாரண மான சூழ்நிலைகள் பல கொடுக்கப்பட்டிருக்கின்றன. சோதனைக் குட்படுபவர், கொடுக்கப்பட்ட சூழ்நிலைகளிலிருந்து அசாதாரண மாக ஏற்படக்கூடிய பின் விளைவுகளை யோசித்து எழுதவேண்டும். சான்றாக, தொடர்ந்து இடைவிடாது மழை பெய்துகொண் டிருந்தால் என்ன நடைபெறும் என்பதற்குக் கூடுமான எண்ணள வில் அதன் அசாதாரண பின் விளைவுகளைச் சிந்தித்து எழுத வேண்டும்.

இச்சோதனைகளுக்கெல்லாம் குறிப்பிட்ட காலவரையறைகள் உண்டு. ஒவ்வொரு சோதனையின் விடைகளையும் எண்ண ஓட்டம், இசைவிணக்கத் தன்மை, தற்படைப்புத் தன்மை ஆகியவைகளின் அடிப்படையில் மதிப்பிடவேண்டும். இதில், விடைகளின் மொத்த எண்ணிக்கை எண்ண ஓட்டத் தன்மையையும், வகையின மாற்றங் களின் மொத்த எண்ணிக்கை இசைவிணக்கத்தையும் குறிக்கின்றன. தற்படைப்புத் தன்மையை மதிப்பிட ஒரு குறிப்பிட்ட வயதுடைய குழு சோதனைக்குள்ளாக்கப்பட்டபோது, ஒரு குறிப்பிட்ட சோதனை வகையெண்ணிற்கு (Item) அவர்கள் அளித்த விடையின் அடிப்படையில் ஒல்வொருவரின் விடைகளுக்கும் மதிப்பெண்கள் தரப்படுகின்றன. ஒப்பிடப்படும் குழுவில் குறைந்த அலைவெண்களை யுடைய பதில்களுக்கு உயர்ந்த மதிப்பெண்கள் அளிக்கப்படு கின்றன.

எனினும், கில்பர்ட் சோதனைகளை நுட்பமாக ஆய்ந்த தார்ன்டைக் (Thorndike), வாலக், கோகன் (Wallach and Kogan) ஆகியோர் இந்தச் சோதனைகள் ஆக்கத்திறத்தை அளவிட்டறிவ தற்கு ஏற்ற நல்ல சோதனைகள் அல்ல என்ற முடிவைத் தெரிவித் துள்ளனர்.

2. மின்னெஸோட்டா ஆக்கச் சிந்தனைச் சோதனைகள் (Minnesota tests of creative thinking) :

இந்தச் சோதனைத் தொகுதிகளை டாரன்ஸ் (Torrance) என்பார் ஏற்படுத்தினர். எனவே, இவை முதன்முதலில் டாரன்ஸின் ஆக்கச்சிந்தனைச் சோதனைகள் என்று கூறப்பட்டன. கில்பர்டின் சோதனைகளை மாற்றியும், விரிவுபடுத்தியும், டாரன்ஸ், மின்னெஸோட்டா பல்கலைக் கழகத்தில் எண்ணற்ற சோதனைகளை உருவாக்கினர். இவற்றில் சில கில்பர்டின் சோதனைகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டனவாக உள்ளன. இவைகள் ஒவ்வொன்

றுக்கும் குறிப்பிட்ட காலவரையறைகள் உள்ளன. இச்சோதனை களில் சில கீழே விளக்கப்பட்டுள்ளன.

i) கேள்வி எழுப்பி ஊகிக்கும் சோதனை (Ask and Guess Test) :

இதில், சோதனைக்குட்படுபவர் ஒரு படத்தைப் (சான்றாக, ஒரு தாய்—வாத்து) பார்த்து, அதை அப்படியே பார்த்து பதிலளிக்க முடியாத வகையில் கேள்விகளைக் கேட்குமாறு கோரப்படுகின்ற னர். பின்னர் அந்தச் சூழ்நிலைக்கு முன் நிகழ்ந்தவைகளையும், அதைத் தொடர்ந்து ஏற்படக் கூடியவைகளையும் ஊகித்துக் கூறும் படி கேட்கப்படுகின்றனர். விடைகளை எண்ண ஓட்டம், இசை விணக்கத் தன்மை, தற்படைப்புத் தன்மை போன்றவற்றின் அடிப் படையில் மதிப்பிடலாம்.

ii) முழுமையடையாப் படச் சோதனை (Incomplete Figure Test) :

இதில், முழுமைப்பெறாத படங்கள் தரப்பட்டு, அவைகளைப் பூர்த்தி செய்யுமாறும், அவைகளுக்கேற்ற பொருத்தமான தலைப் புகளைத் தரும்படியும் கோரப்படுகின்றது. இந்தச் சோதனை, ஊடுருவி அறியும் தன்மை (Penetration), விரிவாக்கும் தன்மை (Elaboration), தற்படைப்புத் தன்மை (Originality) போன்றவை களைச் சோதித்து அறியப் பயன்படுகிறது.

iii) வடிவங்களின் சோதனை (Shapes Test or Picture Construction Test) :

இதில், திட்டவட்டமான வடிவங்கள் உடைய நிறத்தாள்கள் ஒரு வெள்ளைத்தாளில் ஒட்டித்தரப்படுகின்றன. சோதனைக்குட் படுபவர் இவைகளை அடிப்படையாகக் கொண்ட படங்களை அமைக்குமாறும் அவைகளுக்கேற்ற பொருத்தமான தலைப்பு களைத் தரும்படியும் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர்.

iv) ஆக்கத்திற எழுத்துப் படைப்புச் சோதனை (The creative Writing Test) :

இதில், ஒருசில தலைப்புகள் தரப்பட்டு, அவைகளில் ஒன்றைப் பற்றிக் கதை எழுதுமாறு கேட்டுக்கொள்ளப்படுகின்றது. வழக்கத் திற்கு மாறான பண்புகளையுடைய மனிதர்கள், விலங்குகளைப் பற்றி இந்தத் தலைப்புகள் இருக்கும். சான்றாக, பறக்கின்ற குரங்கு, பேசாத பெண் போன்ற தலைப்புகள் தரப்பட்டு அவற்றைப் பற்றிக் கதை எழுதுமாறு கேட்கப்படுகின்றது.

v) வட்டங்களும் சதுரங்களும் (Circles And Squares) :

35 வட்டங்களையும் சதுரங்களையும் கொண்ட சோதனைத்தாள் ஒன்று தரப்பட்டு, வட்டத்தை மூலப்பகுதியாக வைத்து வழக்கத்திற்கு மாறான வகையில் பல படங்களை வரையும்படி கேட்கப்படுகின்றது. அவை ஒவ்வொன்றுக்கும் கீழ் அப்பொருள்களின் பெயர்களை எழுதவேண்டும்.

vi) பொருளை மேம்படுத்தும் சோதனை (Product Improvement Test) :

இதில், சோதனைக்குட்படுத்தப்படுபவர்கள் நாய், குரங்கு போன்ற பொம்மைகளின் படங்கள் தரப்பட்டு அவற்றில் எந்தவித மாற்றங்களை ஏற்படுத்தினால், சிறுவர்களுக்கு மிகவும் வேடிக்கையாகவும் கவர்ச்சியாகவும் இருக்கும் என்று கூறும்படி கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

vii) 'சற்று ஊகித்துப்பார்' சோதனை ('Just Suppose' Test) :

இதில், வழக்கத்திற்கு மாறான ஒரு சூழ்நிலையின் பின் விளைவுகளைப் பற்றி முன்னறிவிக்கும்படி கோரப்படுவதால், இது கில்பர்டின் பின் விளைவுச் சோதனையைப் போன்று உள்ளது. எனினும், இங்கு அந்தச் சூழ்நிலையைப் பற்றிய விளக்கத்தை வார்த்தை மூலமாகத் தருவது மட்டுமின்றி, அந்தச் சூழ்நிலையை விளக்குகின்ற படமும் தரப்படுகின்றது. சான்றாக, இங்கு சூழ்நிலையாகத் தரப்படுகின்ற வகையெண்கள் பின் வருமாறு இருக்கும்

(அ) "நம்முடைய நிழல்கள் மெய்யாகி உயிர் பெற்று, விட்டால்"

(ஆ) "மழை பெய்கின்றபோது, மழைத்துளிகள் வான வெளியிலேயே நின்றுகொண்டு நகராவிட்டால், மேலும் அவை திடப்பொருட்களாகவும் ஆகிவிட்டால்."

viii) வழக்கத்திலற்ற பயன்கள் (Unusual uses) :

இது கில்பர்டின் பயன் சோதனையின் (Uses Test) நேரடி மாற்றமேயாகும். இதில், செங்கற்களுக்குப் பதிலாக, தகரக் குவளைகளும், புத்தகங்களும் சோதனை வகையெண்களாகக் கொடுக்கப்பட்டு, அவைகளை விநோதமான, புத்திசாலித்தனமான, வழக்கத்திலற்ற எண்ணற்ற வகையில் ஏவ்வாறு பயன்படுத்த முடியும் என்று எண்ணிச் சொல்லும்படி கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

இச்சோதனைகளைப் பற்றிப் பகுத்து ஆய்ந்த மாக்லர் (Mackler), வோட்கே (Wodke) ஆகியோர் இச்சோதனைகள் திருப்தியற்ற நம்பகத்தையுடையனவாய் இருக்கின்றன என்று கூறியுள்ளனர். மேலும், இச்சோதனைகள், கில்பர்ட் சோதனைகளுக்குரிய குறைபாடுகளைத் தன்னகத்தேயும் கொண்டிருக்கின்றன. இச்சோதனைகளின், சொற் சோதனையும், சொல்லிலாச் சோதனையும், ஒன்றுக்கொன்று இடையே குறைந்த அளவு தொடர்பாடுகளையே கொண்டிருக்கின்றன. இவைகள் பெரும்பாலும் ஒன்றுக்கொன்று சுதந்திரமாகக் காணப்படுகின்றன என்று கோவானும் (Gowan), டாரன்ஸூமே (Torrance) கருதுகின்றனர்.

3. பாரன்-வெல்ஷ் கலை அளவை (The Barron-Welsh Art Scale) :

*1948*ம் ஆண்டு ஜார்ஜ் வெல்ஷ் (George Welsh) என்பார் மின்னெஸோடா பல்நோக்கு ஆளுமைச் சோதனையை (M.M.P.I.) ஒத்த, சொல்லிலாச் சோதனை ஒன்றினை உருவாக்கினார். அதற்கு வெல்ஷ் சித்திர விருப்பத் தேர்வுச் சோதனை (Welsh Figure Preference Tests) என்று பெயர். இந்தச் சோதனை எண்ணற்ற வரிக்கோடுப் படங்களைக் கொண்டுள்ளது. இதில், கருவி கொண்டு வரையப்பட்ட படங்களும், கருவியின்றி இயல்பாகக் கையினால் வரையப்பட்ட படங்களும் உள்ளன. அவற்றில் சில பார்வைக்கு எளிதானவையாகவும், சமச்சீர் வடிவுடையனவாகவும், இன்னும் சில சிக்கலான அமைப்புகள் உள்ளனவாகவும் சமச்சீர் அற்றவையாகவும் உள்ளன. கலை உணர்விற்கும், ஆளுமைத் தன்மைக்கும் இடையே உள்ள தொடர்பினைத் தீர்மானிப்பதற்கு வெல்ஷ் செய்த ஆய்வில், எளிதான சமச்சீர் உள்ள படங்களை விரும்பித் தேர்ந்தெடுத்தவர்கள், பழமைப் பற்றாளர்களாகவும் (Conservative), மாறுதல்களை வெறுப்பவர்களாகவும் இருப்பதையும், சிக்கலான அமைப்புள்ள சமச்சீர் அற்ற படங்களை விரும்பித் தேர்ந்தெடுத்தோர், பழமையை வெறுப்பவர்களாகவும், தற்படைப்புடையவர்களாகவும் இருப்பதையும் அறியப் பெற்றார்.

கலைஞர்கள் (Artists), கலைஞர் அல்லாதவர்கள் (Non-Artists) ஆகியோரைச் சோதனைக்கு உட்படுத்திய பாரனும், வெல்ஷூம், கலைஞர்கள், கலைஞர் அல்லாதவர்களைவிட, குறிப்பிடத்தக்க அளவிற்குச் சிக்கலான அமைப்புள்ள, சமச்சீர் அற்ற வடிவங்களை அதிகமாக விரும்பித் தேர்ந்தெடுத்ததைக் கண்டனர். இந்த ஆராய்ச்சியின் அடிப்படையில், கலைஞர்களையும், கலைஞர் அல்லாதவர்களையும் குறிப்பிடத்தக்க அளவிற்கு வேறுபடுத்திக் காட்டிய 62 வடிவங்களைக் கொண்ட ஒரு தனிப்பட்ட சோதனையை, பின்னால் அவர்கள் உருவாக்கினர். இந்தச் சோதனையே பாரன்-வெல்ஷ் கலை அளவை என்று குறிப்பிடப்படுகின்றது.

இந்தச் சோதனையில், கலைஞர்களின் விருப்பத் தேர்வுகளை ஒத்து இருக்கின்ற துலங்கல்களுக்கும் விடைகளுக்கும் அதிக மதிப்பெண்கள் தரப்படுகின்றன. இச் சோதனையைக் கொண்டு ஆக்கத்திறத்தினுள் அடங்கியிருக்கும் அழகியல் சார்ந்த காரணிகளை (Aesthetic Factors) நிர்ணயிக்கலாம். இதில் உயர்ந்த ஆக்கத்திறமுடையவர்கள், குறைந்த ஆக்கத்திறமுடையவர்களை விட அதிக மதிப்பெண்களைப் பெறுகின்றனர் என்று கண்டறியப்பட்டது. கலிபோர்னியா பல்கலைக் கழகத்தில் உள்ள, ஆளுமை மதிப்பீடு ஆராய்ச்சி நிறுவனத்தால் (I. P. A. R.) நடத்தப்பட்ட பல்வேறு ஆராய்ச்சிகளில், 'பாரனும்' அதிகமாகப் பயன்படுத்தப்பட்டவைகளில் இதுவும் ஒன்றாகும்.

4. தொலை இயைபுச் சோதனை (R. A. T.):

இது மெட்னிக் என்பவரால் தயாரிக்கப்பட்டது. இதில் ஒவ்வொரு வகையெண்ணும் மூன்று சொற்களைக் கொண்டுள்ளது. இதில் 30 வகையெண்கள் உள்ளன. இந்த மூன்று சொற்களுக்குள் ஏதாவதொரு வகையில் இயைபுத் தொடர்பு இருக்கும். சோதனைக் குட்படுவோர், இந்த மூன்று சொற்களோடும் தொடர்புடைய நான்காவது சொல்லைத் தரவேண்டும். ஒவ்வொரு வகையெண்ணிற்கும் ஒரே ஒரு சொல்தான் சரியான விடையாக இருக்கும். சான்றாக, எலி, நீலம், குடில் ஆகிய முச்சொல்லுக்கு பாலாடைக்கட்டி என்ற நான்காவது சொல் சரியான விடையாகும். இச்சோதனை முழுவதற்கும் காலவரையறை 40 நிமிடங்களாகும். சரியான விடைகளின் மொத்த எண்ணிக்கை சோதனைக் குட்படுபவரின் சோதனை மதிப்பு (Score) ஆகும்.

இச்சோதனை பற்றிக் கணிக்கும்போது, இது ஒரே ஒரு சரியான விடையைக் கொண்டிருப்பதால், கில்பர்டின் கூர்ந்த சிந்தனைக் கருத்தேற்றத்தை, இது ஒத்திருக்கின்றது எனச் சொல்லலாம். மேலும், ஏற்கெனவே சோதனையாளருக்குத் தெரிந்திருக்கும் சரியான விடை ஒன்றினையே சோதனைக்குட்படுபவர் ஊகித்துச் சொல்லவேண்டும். ஆதலால், இந்தச் செயற்கை முறையின் அடிப்படையில் பெறப்படும் விடைகள் எதையும் ஆக்கத்திறத்தைக் குறிப்பதாகக் கொள்ள முடியாது. இறுதியாக, இச்சோதனை வழி நிர்ணயிக்கப்பட்ட ஆக்கத்திறத்திற்கும் நுண்ணறிவிற்கும் இடையே மிதமான, ஆனால் குறிப்பிடத்தக்க தொடர்பாடு உள்ளது எனச் சில ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

5. வாலக்-கோகன் ஆக்கத்திறச் சோதனைக் கருவிகளின் தொகுதி (Wallach-Kogan Battery of Creativity Instruments):

ஆக்கத்திறத்தினை அளவீடு செய்வதற்கு இப்போதுள்ள சோதனைகளில் மிகவும் திருப்தியானதாகவும், ஏற்புடையதாகவும்

இருப்பது இச் சோதனைக் கருவிகளின் தொகுதியேயாகும். இத் தொகுதியில் இரு பிரிவுகள் உள்ளன. அவை மொழி சார்ந்த (Verbal) சோதனை, பார்வை சார்ந்த (Visual) சோதனை எனப் படும். மொழிசார்ந்த சோதனைகளில் மூன்று பணிகள் உள்ளன. அவை எடுத்துக்காட்டுகள் (Instances), மாற்றுப் பயன்கள் (Alternate Uses), ஒப்புடைமைகள் (Similarities) ஆகியவை ஆகும். பார்வை சார்ந்த சோதனைத் தொகுதியில் இரண்டு பிரிவுகள் உள்ளன. அவை படிவப்பொருட்கள் (Pattern Meanings), வரைகோட்டுப் பொருட்கள் (Line Meanings) என்பனவாகும்.

இச்சோதனைக் கருவிகளை அழுத்தமற்ற விளையாட்டைப் போன்ற சூழ்நிலையில், காலவரையறையின்றிப் பயன்படுத்த வேண்டும். உண்மையில், இவைகளை உருவாக்கிய வாலக்கும், கோகனும் இவற்றைச் சோதனைகள் என்று குறிப்பிட விரும்பாது பணிகள் அல்லது கருவிகள் என்றே குறிப்பிட்டுள்ளனர். தொடக்கத்தில் இந்தக் கருவிகள் தனியார் சோதனை என்ற நோக்கில் உருவாக்கப் பட்டன. எனினும், கிராப்ளி (Cropley) இவற்றின் பயன் குன்று விதத்தில், இவைகளைக் குழுச் சோதனையாகப் பயன்படுத்தி யுள்ளார். இதுபோன்றே, வாலக்கும், விங்கும் (Wallach and Wing) இவற்றை அஞ்சலின் மூலம் அனுப்பி, குறிப்புகளைச் சேகரிக்கும் முறையில் (Mailing Technique) வெற்றிகரமாகப் பயன்படுத்தியுள்ளனர்.

வாலக்-கோகன் ஆக்கத்திறக் கருவிகளை இந்தியச் சூழ்நிலைக்குப் பொருந்துமாறு, அதன் தழுவல் கருவி (Adaptation) ஒன்றினை, பேராசிரியர் பரமேஷ் (1971) இயற்றினர். இந்தத் தழுவல் கருவி சென்னை மாநகரத்து உயர்நிலைப்பள்ளிகளைச் சார்ந்த இளையோரைக் கொண்ட மாதிரிக்குழு ஒன்றின்மேல் சோதிக்கப்பட்டது. இந்தத் தழுவல் கருவியானது போதிய அளவில் நம்பகத்தையும், ஏற்புடைமையையும் பெற்றிருந்தது.

**ஆக்கத்திறத்தின் வளர்ச்சி (Development of Creativity):**

ஆக்கத்திறத்தின் வளர்ச்சியை விவரிக்கும் வரைபட வளைவின் தன்மை, ஏனைய மனித வளர்ச்சியை எடுத்துக்காட்டும் வளர்ச்சி வரை படங்களிலிருந்து வேறுபட்டு இருக்கின்றது. இந்தக் காரணத்தால், ஆசிரியர்களும் அறிவுரையாளர்களும் ஆக்கத்திறச் செயற்பாங்கின் வளர்ச்சியை அறிந்திருப்பது அவசியமாகின்றது.

**தொடக்க கால வளர்ச்சி (Development During Early Period);**

ஆண்ட்ரூஸ் (Andrews) என்பார் பள்ளிக்கு முந்திய காலத்தில், கற்பனைத் திறத்தின் வளர்ச்சியைப் பற்றி ஆராய்ந்தார். அதில்

கற்பனைத் திறத்தின் மொத்த மதிப்பீடுகள் 4 ஆண்டிலிருந்து 4 ஆண்டு 6 மாதங்கள்வரை மிகஅதிகமாகக் காணப்பட்டு, குழந்தை, விளையாட்டு முறைப் பள்ளியில் (Kinder Garten) சேரும் 5-வது வயதில், அது திடீரெனக் குறைவதாகக் கண்டறிந்தார். மறு வரையறை செய்தல், மாற்றியிணைத்தல் போன்ற திறமைகளின் வளர்ச்சி, மூன்றிலிருந்து நான்கு வயதுக்குள் உச்சநிலையை அடைந்து பிறகு குறையத் தொடங்குகிறது. ஒப்புமைத் திறமை (Analogy), நான்காவது வயதில் வளர்ச்சியின் உச்ச எல்லையை அடைகிறது; பின்னர், ஐந்தாவது வயதில் குறையத் தொடங்குகிறது. இவ்வாறு ஆக்ககற்பனைத்திறத்தின் வளர்ச்சி, மூன்று ஆண்டுகள் 6 மாதத்திலிருந்து 4 ஆண்டுகள் 6 மாதங்கள் உள்ளிட்ட காலத்தில் பெரும் வளர்ச்சியை அடைந்து, மிகக் குறைவான நிலையை ஐந்தாவது ஆண்டில் பெறுகின்றது. மைப்புள்ளிகளைப் பயன்படுத்தி (Ink-Spots) கிர்க், பாட்ரிக் (Kirk Patrick), முதல் மூன்று வகுப்புப் பிள்ளைகள், நான்காவது, ஐந்தாவது வகுப்புப் பிள்ளைகளைவிட, கற்பனைத் திறத்தின் வளர்ச்சியில் உயர்ந்து காணப்படுகின்றனர் என அறிவித்துள்ளார். மேலும், அவரது ஆய்வில் இந்தக் கற்பனைத் திறத்தின் வளர்ச்சி, ஏழாவது, எட்டாவது வகுப்புகளில் மீண்டும் அதிகரித்தன. மியர்னோ (Mearno) என்பார், ஆக்கத்திறமைகள் முதல் மூன்று வகுப்புகளில் இடையூறற்று வெளிப்படுகின்றன எனவும், நான்காவது, ஐந்தாவது வகுப்புகளில் உள்ள பிள்ளைகளில் ஓரளவே எஞ்சிக் காணப்படுகிறது எனவும் கருதுகின்றார். அவரைப் பொறுத்தவரை, ஆறாவது, ஏழாவது வகுப்புகளில் ஆக்கத்திறச் செயல்கள் துரிதமாகக் குறைவடைந்து நாளடைவில் முற்றிலும் கைவிடப் படுகின்றன என்பதாகும்.

இதற்கு மாறாக, வெர்னன் (Vernon) என்பார் சாதாரண அறிவும் மனவெழுச்சியும் பெற்ற குழந்தையிடம் ஆக்கக் கற்பனை 11 வயதுவரை தோன்றுவது இல்லை என்று தெரிவித்துள்ளார். கொடுக்கப்பட்ட பாடங்களை நன்கு புரிந்துகொண்டு அவற்றை முழுமையாகப் பொருள்படுத்தி விளக்கம் கூறுகின்ற திறமையை அடிப்படையாகக்கொண்டே இவர் தன் முடிவுகளை வெளியிட்டுள்ளார்.

வில்ட் (Wilt) என்பார் கூட்டாளிக் குழுப் பருவத்தில் (Gang age), ஆக்கத்திற வளர்ச்சி மிகவும் குறைகின்றது என்று வலியுறுத்தியுள்ளார். இந்தக் குறைவுத் தன்மையானது, சம வயதினர் குழுவின் நியதிகளுடன் ஒத்துப்போவதற்கான விருப்பம், தனியனிடம் இக்காலத்தில் மிகுந்து இருப்பதன் காரணமாக நிகழ்

கின்றது என்றும் இவ்வம்மையார் கூறுகின்றார். இந்த நிலையில் மிகவும் அரிதான, தனிச்சிறப்பு வாய்ந்த ஒருசில குழந்தைகளே தங்கள் குழுவுடன் ஒருங்கிணைந்து, ஒத்து நடக்கவேண்டிய கட்டுப் பாட்டை எதிர்த்து முன்னேறுகின்றனர். இப்படி ஒரு சிலரிடம் மட்டும் ஆக்கச் சிந்தனை தொடர்ந்து நிலவுவதாகக் காணப்படு கின்றது. பெரும்பாலோரில் அது முற்றிலும் நிரந்தரமாக இழந்து விடப்படுகின்றது என்று இவ் வம்மையார் தமது கருத்தினை அறிவித்துள்ளார்.

மின்னெஸோட்டா பல்கலைக் கழகத்தில் நடத்தப்பட்ட ஆய்வு களின் அடிப்படையில் விளையாட்டுக் கல்விமுறைப் பள்ளி முதல் கல்லூரிப் படிப்பு வரையுள்ள எல்லாப் பிள்ளைகளின் ஆக்கத்திறன் வளர்ச்சியைப்பற்றி நிர்ணயிப்பதற்கான முறைகள் சில உருவாக்கப் பட்டன. இதன்மூலம், முதல் வகுப்பிலிருந்து பட்டப் படிப்புவரை ஆக்கத்திறம் நன்கு வளர்ந்து வருவதாகக் கண்டுபிடிக்கப்பட்டது. பெரும்பாலான ஆக்கச் சிந்தனைத் திறமைகளின் வளர்ச்சியை விளக்கும் வளர்ச்சி வளைவுகள் கீழ்க்கண்டவாறு பொதுவான தன்மைகளைப் பெற்றிருந்தன. முதல் வகுப்பிலிருந்து மூன்றாவது வகுப்புவரை ஒரே சீரான வளர்ச்சி காணப்பட்டது. மூன்றாம் வகுப்பு முதல் நான்காம் வகுப்புவரை நுண்ணிய தாழ்ச்சி ஒன்று ஏற்பட்டது. பின்னர், அதைத் தொடர்ந்து ஐந்து, ஆறாவது வகுப்புகளில் ஒரு சிறிய உயர்வு காணப்பட்டது. இதற்குப் பின்னர், ஆறு, ஏழு படிவங்களின் இடையில் இன்னுமொரு வீழ்ச்சி ஏற்பட்டு, உயர்நிலைப் பள்ளி இறுதிவரை தொடர்ச்சியான வளர்ச்சி காணப் பட்டது. டாரன்ஸும் அவரைச் சார்ந்தவர்களும், நான்காவது, ஏழாவது படிவங்களில் ஏற்படுகின்ற தாழ்ச்சிகளுக்குக் காரணமாக உள்ள விளக்கங்களை அளித்துள்ளனர். பெரும்பாலான பிள்ளை களில் இத்தாழ்ச்சிகள் காணப்படுகையில், ஒரு சிலரில் ஆக்கத்திற வளர்ச்சி இத்தகைய தாழ்ச்சியேதும் இன்றித் தொடர்ந்து வளர் கின்றது என, சில நீள்வகை ஆய்வுகள் காட்டியுள்ளன. எனவே, இந்த வீழ்ச்சி ஏற்படும் பலரில் அவர்களின் ஆக்கத்திறம் நிரந்தர மாகவே இழக்கப்படுவதால், மானிட உள்ளிடைச் சக்திகள் ஏராளமாகவே வீணாகிவிடுகின்றன. ஆக்கத்திறத்தின் இந்தத் திடீர் வீழ்ச்சிகளே உள்ளத்தின் பிறழ்நிலைகள் பலவற்றிற்கும், இளம் குற்ற நடத்தைகளுக்கும் மூலக்காரணமாக இருக்க இடமுண்டு என்று டாரன்ஸ் கூறுகின்றார்.

ஹாரிஸ்டாக் ஸல்லிவன் (Harry stack sullivan) என்பார், சமூக மயமாக்கும் செயற்பாங்குகள், பெரியவர்கள் எந்த வகைப் பட்ட செயல்களை ஏற்றுக்கொள்வர் என்பதைப் பற்றிக் குழந்தை

களுக்கு 4வது படிவம் வருவதற்குள் உணர்த்திவிடுகின்றன என்று கூறுகின்றார். பெரியவர்கள் ஏற்கின்றவைகளையே குழந்தை இப்போது மதிக்கத் தொடங்குகின்றது. இதன் விளைவாக, வழக்கத்திற்கு மாறான எண்ணங்களைக் கேட்கும்போது, குழந்தையானது அத்தகைய எண்ணங்களைச் சிரிப்புக்கும் கேலிக்கும் கண்டனத்திற்கும் உரியதாக எண்ணுகிறது. இதனால் குழந்தையிடம் புதிய எண்ணங்கள் எதுவும் தோன்றுவதற்கு இடமில்லாது போய்விடுகின்றது. ஏழாவது படிவத்தில் இளையோர் பருவ மாற்றம் நிகழ்கையில், ஒத்துப்போவதற்கான சமூக அழுத்தங்கள் இன்னும் பல தோன்றுகின்றன. இந்தப் புதிய அழுத்தங்கள், தாழ்வு மனப்பான்மையையும் பாதுகாப்பற்ற உணர்வையும் உண்டாக்குகின்றன. இதன் விளைவாக, ஆக்கச் சிந்தனை தடைபட்டுவிடுன்றது. இதனைப்போன்றே, வளர்ச்சி வளைவில் தோன்றுகின்ற பல்வேறு தாழ்வுகளைக் கல்வி வழிமுறைகளில் நிகழும் மாற்றங்களின் அடிப்படையிலும் விளக்க முடியும்.

யூனியன் கல்லூரியின், குணப் பண்புகள், ஆராய்ச்சித் திட்டத்தின் (Union College Character Research Project) முடிவுகளின் அடிப்படையில் லிகான் (Ligon) என்பார் குழந்தைகளின் ஆக்கக் கற்பனை 6 முதல் 8 வயதிற்குள் வெளி உலக உண்மை நிலையை நோக்கித் திரும்புகின்றது என்றும், இந்தத் திருப்பத்தினால் குழந்தைகள் தங்கள் விளையாட்டுகளிலும் வெளியுலக உண்மைகளை ஏற்று நடக்கின்றனர் என்றும் கூறுகின்றார். குழந்தைகள் இந்த நிலையை அடையும்போது தாய், தந்தையர், விமானி, தளபதி, ஆசிரியர் போன்ற பாகங்களை ஏற்று விளையாடுவதைப் பெரியவர்கள் ஊக்குவிக்க வேண்டுமென்று லிகானும் அவரைச் சார்ந்தவர்களும் கருதுகின்றனர். இதுவே, பாடங்கள், கதைகள், விவாதங்கள், ஆகியவற்றின் மூலமாகக் குழந்தைகளுக்கு ஒழுக்க நீதிக் கருத்துக்களை எடுத்துக் கூறவேண்டிய காலம் ஆகும். லிகானைப் பொறுத்தவரை, 8 முதல் 10 வயது வரை உள்ள ஆண் பிள்ளை, ஆக்கத் திறமைகளை அதிகமாகப் பயன்படுத்தவும், அவற்றைப் பயன்படுத்தும் பல வழிமுறைகளைக் காணவும் இயன்றவனாகின்றான். அவன் தன்னை மிகப்பெரிய வெற்றி வீரர்களுடனும், தலைவர்களுடனும், கதாநாயகர்களுடனும் ஒப்புமை செய்து கொள்ள விரும்புகின்றான். எனவே 8 முதல் 10 வயது வரையுள்ள பிள்ளைகள் தங்களின் நற்பண்புத் தன்மையையும், அறிவுக் கூர்மையையும் வெளியிடுவதற்கு வேண்டிய எல்லா வாய்ப்புகளையும் தரவேண்டுமென்று யூனியன் கல்லூரி ஆய்வாளர்கள் கருதுகின்றனர். பெரியவர்கள் அவனுக்குத் தன் திறமைகளைப் பயன்படுத்த ஏற்ற வாய்ப்புகளை உருவாக்கித் தந்து அவனது திறமைகளை

அவன் உணரும்படிச் செய்யவேண்டும். ஏனெனில் இப்பொழுது அவன் கற்றதைப் பயன்படுத்துவதற்கான வாய்ப்புகளைப் பெற வேண்டியவனாக இருக்கின்றான். எனினும், அவன் தன் முயற்சியில் தோல்வியுறும்போது போதிய ஆதரவையும், பணிகள் மிகவும் கடினமாக இருக்கின்றபோது அதைச் செய்வதற்கான போதனைகளையும் நாடுகின்றான்.

பொருள்களை ஆராய்ந்தறிவதில் 10 முதல் 12 வயதிற்குள் தனியர் ஆர்வம் மிக்கவர்களாகவும், மகிழ்ச்சி உடையவர்களாகவும் உள்ளனர். பெண்பிள்ளைகள், புத்தகங்களில் உள்ளவற்றை ஆராய ஈடுபடும்போது, ஆண்பிள்ளைகள் தாங்களே சுயமாக, முதன் முதலாக ஏற்கின்ற அனுபவங்களைப் பெற விரும்புகின்றனர். இந்நேரத்தில் தான் புத்தகங்களைப் படிப்பதில் மிகுந்த ஆர்வம் காணப்படுகின்றது. கலை, இசை சார்ந்த ஆர்வங்கள் இப்பொழுது மிக வேகமாக வளர்கின்றன. இந்த வயதில் தனியர்கள் எத்தகைய அனுபவங்களையும் ஏற்க விழைகின்றனர். ஆனால் அவர்களது முயற்சியின் விளைவுகள் வெளியே பிறருக்குத் தெரியவருமானால் தன்னம்பிக்கை குன்றிவிடுகின்றனர். ஆதலால், 10லிருந்து 12 வயதுவரை தனியர்களுக்கு எதையும் ஆராய்வதற்கும் அமைப்பதற்கும் படிப்பதற்கும் ஏற்ற எல்லாவித வாய்ப்புகளும், அவர்களது அனுபவங்களைப் பிறருக்குத் தெரிவிப்பதற்கான வாய்ப்புகளும் தரப்பட வேண்டுமென்று தெரியவருகின்றது. எனவே, லைகான் (Ligon), தனியர்களுக்கு இக்காலத்தில், புகழ்பெற்ற, குணச் சிறப்புடைய, துன்பங்களையும், கடினங்களையும் வெற்றிகண்ட பெரியோர் பலரின் வாழ்க்கை வரலாறுகளைப் படிப்பதற்கான வாய்ப்பை ஏற்படுத்தித் தரவேண்டும் என யோசனை கூறுகின்றார். பெரியோர்கள் இவ்வயதுச் சிறுவர்களை உலக இயற்கையிலும் மக்கள் வாழ்க்கையிலும் காணப்படுகின்ற நியதிகளைக் கண்டுணரத் தைரியப்படுத்தி, அவர்களின் பயத்தினைப் போக்க முயற்சிக்க வேண்டும். இவ்வயதுச் சிறுவர்கள் தங்களின் கருத்துகளை நடைமுறையில் பயன்படுத்தி அவற்றின் ஏற்புடைமைகளை அறியவும், தங்களின் திறமைகளின் எல்லைகளைச் சோதித்து அறியவும் ஏற்ற வாய்ப்புகள் தரப்படவேண்டும்.

**உயர்நிலைப்பள்ளிப் பருவத்தில் வளர்ச்சி (Development During High School Period):**

உயர்நிலைப்பள்ளிப் பருவத்தில் தனியர்களின் ஆக்கத்திற வளர்ச்சிகளை ஆராய நடத்தப்பட்ட ஆய்வுகள் மிகவும் குறைவாகவே யுள்ளன. பெரும்பாலான ஆய்வுகள் 6 முதல் 7 படிவங்களுக்குள் கற்பனைத் திறமை குறைகின்றது என்றும், ஒரு சில

ஆய்வுகள் அது, எட்டாவது படிவத்தில் குறைகின்றது என்றும் அறிவிக்கின்றன. இதையடுத்து உயர்நிலைப்பள்ளியின் இறுதி வரை ஆக்கத்திறம் தொடர்ந்து வளர்ச்சி பெற்று, அதற்குப் பின்னர் ஒரு சமநிலையை அடைகின்றது; அல்லது சிறிது குறைகின்றது. ஆக்கத் திற எழுத்துப் படைப்புகளைப் பொறுத்தவரை, உயர்நிலைப்பள்ளிப் பருவம் முழுவதும் அது தொடர்ந்து குறைகின்றதென கால்வினும், மெயரும், (Colvin and Meyer) தெரிவித்துள்ளனர். ஸிம்ஸன் என்பார் (Simpson) ஆறுவது படிவத்தில் வளர்ச்சியின் உச்ச எல்லையையும் அதற்குப் பின்னர், ஏழு எட்டுப் படிவங்களில் சிறிது வீழ்ச்சியையும் கண்டதாக அறிவிக்கின்றார். உயர்நிலைப்பள்ளியின் தொடக்கத்தில் ஏற்படுகின்ற வீழ்ச்சியானது இக்காலத்தில் சமூகத்துடன் ஒத்துப் போவதில் ஏற்படுகின்ற புதிய அழுத்தங்களின் விளைவினாலேயே தோன்றுகின்றது; எனவே இந்த வீழ்ச்சிக்கு முக்கிய காரணிகளைத் தெளிவாக அறிந்து கொள்வதற்கு, ஏழு எட்டுப் படிவங்களில் உள்ள பிள்ளைகளைக் கொண்டு ஆராய்ச்சி செய்வதும் நீள்வகை (Longtitudinal) ஆய்வுகளை நடத்த வேண்டியதும் அவசியமாகின்றது.

யூனியன் கல்லூரி ஆய்வுகளைப் பொறுத்தவரை 12 முதல் 14 வயது வரை இளையோர், நிகழ் காலத்தைப் பற்றியே அக்கறையுள்ளவர்களாகக் காணப்படுகின்றனர் என்றும், எதிர்காலம் பற்றிச் சிந்தித்துத் திட்டமிடுவதில்லை என்றும் தெரிய வருகின்றது. இவர்கள் எதிலும் முன் யோசனையின்றி துணிந்து ஈடுபடுகின்ற தன்மையை உடையவர்களாக இருக்கின்றனர். சமூகத்தன்மையையும் உணர்வெழுச்சியையும் பொறுத்தவரை, இது துணிச்சலான செயல்களை விரும்புகின்ற காலமாகும். ஆக்கத்திறமுள்ள பிள்ளைகள், இந்தப் பருவத்தில் இலக்கியம், கலை, இசை, இயந்திரம் ஆகிய துறைகளில் சிறப்பு மிக்க படைப்புகளை உருவாக்குகின்றனர்.

14 முதல் 16 வயது வரை இளையோரின் கற்பனை எதிர்கால வாழ்க்கையைப் பற்றியதாகி விடுகின்றது. இரு பாலினரும், இன்னும் துணிச்சலான செயல்களிலேயே ஈடுபட்டிருப்பர். ஆர்வங்களும், நாட்டங்களும் மிக விரைவில் வளர்கின்றனவென்றாலும், இன்னும் அவை நிலையற்றதாகவும் உறுதியற்றதாகவும் காணப்படுகின்றன. இக்காலத்தில் இளையோன், ஒரு சில பிரச்சினைகளுக்குத் தீர்வே இல்லை என்று கருதுகின்றான்; எனினும் தான் சரியானது, தவறானது என்று கருதுகின்ற கருத்துகளை சூழ்நிலைக்கேற்ப எவ்வாறு பயன்படுத்துவது என்பதை அவன் இன்னும் கற்றுக் கொள்ளவில்லை. அவன் தன் வயதினரால் ஏற்றுக் கொள்ளப்படுவதைப் பற்றியே மிகவும் எண்ணுகின்றான். தன்

திறமைகளைச் சோதிக்கின்ற அல்லது தன் உள்ளிடைச் சக்திகளை இயக்குகின்ற எந்தச் சூழ்நிலையையும், செயலையும் தவிர்க்கின்றான். பயிற்சியின் மூலம் அவன் தனது மனவெழுச்சிகளை, ஆக்கத்திறம் சார்ந்தவைகளாக ஆக்கமுடியும் என்று லைகான் கருதுகின்றார்.

யூனியன் கல்லூரி ஆய்வைப் பொறுத்தவரை, 14 முதல் 16 வயது வரையுள்ள இளையோரை அவர்களின் திறமைகளைப் பற்றிச் சிந்திக்கச் செய்து, அவற்றைத் தங்களின் வேலைகளில் எவ்வாறு சிறந்த முறையில் பயன்படுத்த முடியும் என்று எடுத்துக்காட்ட வேண்டும். இளையோர் தங்களைச் சார்ந்த சமூகத்தின் தேவைகளையுணர்ந்து அவைகளைப் பூர்த்தி செய்ய தேவைப்படும் கருத்துகளையும் திட்டங்களையும் வளர்த்துச் செயல்படுவதற்காக இந்த வயதில் அவர்களுக்கு ஏற்ற வாய்ப்புகளும், பயிற்சிகளும் தரப்பட வேண்டும். இளையோர், தங்களின் திறமைகளை மெய்யாக மதிப்பிட்டு அறிய அவர்களுக்கு உதவவேண்டும். 12 முதல் 14 வயது வரையுள்ள இந்தக் காலமே பிரச்சினைகளுக்கான ஆக்கத் தீர்வு காணும் திறமைகளைக் கற்கின்ற பருவம் ஆகும்.

லைகான் (Ligon), 16 முதல் 18 வயது வரையுள்ள இளையோர், எவை எவை முக்கியம், எவை எவை முக்கியமல்ல என்பதன் பால் தங்களின் கற்பனையைச் செலுத்த வேண்டுமென்று கருதுகின்றார். இவ்வாறு இளையோர் செய்யும்போது, அவர்களது செயலைப் பெரியோர்கள் கண்டிக்காமல் அவர்களைப் பாராட்டவேண்டுமென்று அவர் கருதுகின்றார்.

கருத்தியல் சிந்தனையில் ஈடுபடுவதற்கு இப்போது அவர்களிடம் திறமை இருக்கின்றது. இந்த நாட்களில் அவர்கள் தங்களின் உணர்வெழுச்சிச் சக்திகளை ஆக்க வழிகளில் திருப்பிப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கும், சமூக நடத்தைகளில் நன்கு ஈடுபடுத்துவதற்கும் இயலும். 16 முதல் 18 வயது வரையுள்ள இளையோர், தாங்கள் கற்றறிந்தவற்றை, ஆக்கத்திறம் சார்ந்த முறையில் பயன்படுத்த ஏற்ற வாய்ப்புகளை விரும்புகின்றனர். அவர்கள் தங்களின் நம்பிக்கையின் வழி நிற்கவும், சமூகக் கோட்பாடுகளை நடைமுறைப் படுத்தவும் ஏற்ற ஆக்கத்திற வழிமுறைகளையடைவதற்கு நாம் ஆதரவளிக்க வேண்டும்.

**உயர்நிலைப்பள்ளிக்குப் பின்னர் வளர்ச்சி (Development After High School):**

இக்காலத்தின் பாற்பட்ட, ஆக்க வளர்ச்சியைப் பற்றிய ஆய்வுகள் அதிகமாக இல்லை. மால்ட்ஜ்மனும், அவரைச் சார்ந்த

வர்களும், இன்னும் பல உளவியலார்களும் பல்வேறு துறைகளில், ஆக்கச் சிந்தனையைப் பற்றிய ஆராய்ச்சிகள் பலவற்றை நிகழ்த்தியுள்ளனர். இவைகளின் அடிப்படையில், பலவகைப் பட்ட பயிற்சிகளும், தூண்டல்களும், ஆக்கச் சிந்தனையை அளவிலும், இயல்பிலும் வளர்ச்சியடையச் செய்கின்றன என்று அவர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர்.







வரை படம்—11. விஞ்ஞான இலக்கியத் துறைகளில் வயதினடிப்படையில் உற்பத்தித் திறனளவு.

லெஹ்மன் (Lehman) என்பார், வயதிற்கும், ஆக்க விளைவுத் திறத்திற்கும் இடையேயுள்ள தொடர்புகளையறிய, பல் வேறுபட்ட துறைகளில் ஈடுபட்டிருப்பவர்கள் எந்த வயதில் அவர்களுடைய சாதனைகளில் உச்ச எல்லையை அடைகின்றனர் என்பதனை ஆராய்ந்தார். படைப்புகளின் மொத்த எண்ணிக்கை, நிபுணர்களால் அப்படைப்புகளுக்குத் தரப்பட்ட தரவீடுகள் (Ratings), வருமானம், தலைமை வகிக்கும் நிலை ஆகியவற்றின் அடிப்படையில் சாதனைகளின் உச்ச எல்லையை இவர் நிர்ணயித்தார். இவ்வாராய்ச்சியில், வேதியியலார்கள் 26 முதல் 30 வயதிற்குள்ளும், கணக்கியலார்களும், இசைக்கலை அறிஞர்களும் 30 முதல் 40 வயதிற்குள்ளும், கதாசிரியர்கள் 45 வயதிற்குள்ளும், தத்துவ அறிஞர்கள் 35 முதல் 39 வயதிற்குள்ளும், தங்களின் சாதனைகளின் உச்ச எல்லையை எய்தியிருந்தனர் என்று கண்டறியப்பட்டது. எண்ணற்ற உயர்தர ஆக்க சாதனைகள், மிகவும் முதிர்ந்த வயதில் ஏற்படுகின்றன என்றாலும் உயர்தர ஆக்கத்திறம், பொதுவாக 30 முதல் 40 வயதிற்குள் வளர்ச்சியின் உச்ச எல்லையை எய்தி, பிறகு மெதுவாகக் குறையத் தொடங்குகின்றது என்று லெஹ்மன் முடிவுக்கு வந்துள்ளார்.

தன் ஆராய்ச்சிகளின் அடிப்படையில், பல துறைகளில் வெளிப்படும் ஆக்கத் திறத்திற்கும், வயதிற்கும் இடையில் உள்ள தொடர்பினைப் பற்றி மூன்று பொது நியதிகளை லெஹ்மன் உருவாக்கியுள்ளார். ஒரு நபரின் மிக உயர்தர சாதனைகளின் உச்ச அளவு, தரத்தில் குறைந்த அவரது சாதனைகளைவிட, வயதில் முன்கூட்டியே ஏற்பட்டுவிடுகின்றது. தரத்தில் சிறந்த சாதனைகளின் எண்ணிக்கை, இளமைக்கும்-முதுமைக்கும் இடைப்பட்ட வயதில் அதிகமாக மாறுவதில்லை. பிறகு, வயது ஆக, ஆக அதன் எண்ணிக்கை மெதுவாகக் குறையத் தொடங்குகின்றது. ஒருவனின் மிகச்சிறந்த சாதனைகள் அவன் வாழ்க்கையின் ஒரு குறுகிய கால அளவிற்குள் ஏற்பட்டுவிடுகின்றன. அந்தக் குறுகிய கால அளவில் அவனுடைய சாதனைகள் உச்ச எல்லையை எய்திய பின் மிக வேகமாக குறையத் தொடங்குகின்றன. இதற்கு மாறாக, தரத்தில் குறைந்த சாதனைகள், நீண்டகால அளவுவரை ஏற்படுகின்றன. அவை அந்த நீண்டகால அளவில் உச்ச எல்லையை எய்திய பின் மெதுவாகக் குறையத் தொடங்குகின்றன.

ஆக்கச் சாதனைகளில் ஏற்படும் குறைவு, வயதினால் ஏற்படுவதல்ல; மாறாக அது வயதின் பின் விளைவுகளால் ஏற்படுகின்றது. ஆக்கச் சாதனைகள் குறைவதற்குக் காரணமாயுள்ள வயதின், பதினாறு பின்விளைவுகளை லெஹ்மன் அட்டவணைப்படுத்தியுள்ளார். முதியோரின் ஆக்கச் செயற்றிறத்தை நன்கு செயல்பட உதவும்

உளவியல் அறிவுரையாளர்கட்கு(Counseling Psychologists) அந்த அட்டவணை பயனுள்ளதாக இருக்கும்.

இந்த வகையில் நடத்தப்பட்ட ஏனைய ஆய்வுகளின் முடிவுகளும், லெஹ்மன் கண்டறிந்தவைகளுடன் மிகவும் ஒத்திருக்கின்றன. சான்ருக, அறிவியல் உண்மைகளைக் கண்டு உணர்பவர்கள், ஏனைய துறைகளில் செயலாற்றும் தனியர்களைவிட, இளமைக் காலத்திலேயே தங்களின் கண்டுபிடிப்புகளை வெளியிடத்தொடங்கி விடுகின்றனர் என்று ராஸ்மனின் ஆய்வுகள் அறிவிக்கின்றன. அவரது ஆய்வுகளில் புதியவைகளைப் படைத்த 710 நபர்களில் 61 சதவிகிதத்தினர் தங்களின் முதல் கண்டுபிடிப்புகளை 25 வயதிற்கு முன்னரே அடைந்திருந்தனர். முதல் கண்டுபிடிப்பின் சராசரி வயது 21·3 ஆண்டுகளாக இருந்தது. மேலும் கண்டுபிடிப்புகளில் வெற்றி கண்டவர்கள் தனிக்காப்புரிமைப் பட்டயத்தை (Patents) அதிக எண்ணளவில் 25 முதல் 29 வயதிற்குள் பதிவு செய்தனர் எனக் கண்டறியப்பட்டது.

ஆக்கச் செயல் திறங்களை வழிகாட்ட, இந்த ஆராய்ச்சி முடிவுகள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவையாகும். நம் பள்ளிகளில் உள்ள ஆக்கச் செயற்றிறம் மிகுந்தவர்களை, ஆக்கத் திறப் படைப்புகளின்பால், உற்சாக மூட்டவேண்டும். அப்போது தான் அவர்களின் ஆக்கத்திறப் படைப்புகள் வெளிப்படும். மேலே குறிப்பிட்ட காலத்தை அடையும்போது, அவ்வாறு செய்வதற்கு ஆயத்தமாக இருக்க முடியும். இதற்கான அடிப்படைச் சான்றுகளையும், ஆதாரக் கருத்துகளையும் இச்சோதனை முடிவுகள் தருகின்றன. மேலும், முதியவர்கள், தங்களின் ஆக்கச் செயல்திறம் வயதின் பின் விளைவுக் காரணிகளினல் பாதிக்கப்பட்டுக் குன்றுவதைத் தவிர்த்து, இயலுமாயின் தொடர்ந்து ஆக்கத்திறப் படைப்புகளை ஏற்படுத்துவதற்கு ஏற்ற வகையில், கற்பனைமிக்க உளவியல் ஆலோசகர்கள் இவர்களுக்கு அறிவுரை கூறி வழிகாட்டுவதற்கு, இவ்வாராய்ச்சிகளின் முடிவுகள் பயன்படுவனவாகவுள்ளன.

ஆக்கத்திறத்தின் முக்கியத்துவம் (Importance of creativity) :

மனித அறிவுத்திறத்தின் கூறுகளான புதியன புனையும் திறத்தைப் பற்றியும் (Inventive ability), மாறுதல்களை உண்டு பண்ணும் திறத்தைப் பற்றியும் (Innovative ability) ஆராய்ந்து அறிவது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ஏனெனில், ஆக்கச் சிந்தனை வாயிலாகத்தான் மனித இனம், தன் முற்காலத்து எளிய, செப்பமுருத, பண்பற்ற நிலையிலிருந்து, இன்று நாம் பெருமைப்படும் வண்ணம் நாகரீக முன்னேற்ற உயர்ச்சியை எய்தியுள்ளது.'

ஆக்கத்திறம், மனிதன் தன்னையும், தன் சமூகத்தையும் புதுப்பித்துக்கொண்டு, பண்படுத்திக்கொள்ள மிகவும் இன்றியமையாததாகும் (Gardner). அது, மனிதனது மூல வளத்தின் இன்றியமையாத பண்புக்கூறு என்று டாய்ன்பீ (Toynbee) குறிப்பிட்டுள்ளார். ஆக்கத்திறமானது சிறந்த உள நலத்தின் விளைவாக ஏற்படும் தன்மையாதலால், அது உள நலத்தின் (Mental Health) ஒரு முக்கிய மூலக்கூறு என பாரன் (Barron) கருதுகின்றார். ப்ரூனர் என்பார் (Bruner), கணக்கிடும் பெரும்பொறியின் (Computer) ஆதிக்கமும் புகழும் பரந்து, மிகுந்து இருக்கும் இக்காலத்தில், மனித இனத்திற்கு ஒரு தகுதியையும், மேன்மையையும், உயர் மதிப்பையும் நல்குவது ஆக்கத்திறமே என்று வாதாடுகின்றார்.

இந்த அரும்பெரும் திறமையை நாம் அனைவரும் ஓரளவிற்கேனும் பெற்று இருக்கின்றோம். இதனால்தான் மாஸ்லோ (Maslow) என்பார், எந்த ஒரு குழந்தையும் முன்னேற்பாடின்றி உடனடியாக ஒரு பாடலை அல்லது கவிதையை இயற்றவும், ஒரு படத்தினை வரையவும், ஒரு விளையாட்டினைத் தோற்றுவிக்கவும் ஏற்ற திறமையைப் பெற்றுள்ளது என்று குறிப்பிட்டிருக்கின்றார். எனவே, இந்தத் திறமையானது ஒரு சிலரின்பால் மட்டும் அன்றி எல்லோரின்பாலும் காணப்படுகின்றது. ஆனால், இத்திறமையின் இயல்பிலும் அளவிலும் தனி மனித வேறுபாடுகள் மிகுந்து காணப்படவே செய்கின்றன (Mackinnon).

ஆக்கத்திறத்தினைத் தாங்கள் பெற்றிருக்கவில்லை என்று வருந்தும் பலர், கற்பனைத்திறன் மிக்கவர்கள் கொண்டுள்ள அத்தனை எண்ணங்களையும், சிந்தனைகளையும் அவர்கள் பெற்றிருக்கலாம். ஆனால், அவர்கள் அவற்றை, வளர்த்துக் கொள்ளாமலும், நடைமுறை வாழ்க்கையோடு இணைக்காமலும், அந்த நிலையிலேயே விட்டுவிடுகின்றனர். கோடிக் கணக்கானோர், ஆப்பிள் பழம் பழுத்து மரத்திலிருந்து கீழே விழுவதைப் பார்த்திருக்கின்றனர். ஆனால், நியூட்டன் (Newton) என்பார்தான் அதைக் கண்டதும் தன் கற்பனையை அதன்பால் செலுத்தி, புவி ஈர்ப்பு விசையைப் பற்றிய பெரும் உண்மையைக் கண்டுபிடித்தார். இப்போது நாம் அனுபவிக்கும் எண்ணற்ற கண்டுபிடிப்புகள் மிகவும் எளிதானவையாய்க் காணப்படுவதால், அவை நம் அறிவிற்குப் படவில்லையே என்று நாம் ஏக்கமும் ஆச்சரியமும் அடையவே செய்கின்றோம். இதன் காரணம், நாம் நம்மிடம் உட்பொதிந்து கிடக்கும் ஆக்கத்திற உள்ளிடைச் சக்திகளைத் தூண்டி வளர்த்துக் கொள்ளாததேயாகும். எனவே ஆக்கத்திற உள்ளிடைச் சக்திகளைப் பெற்றிருத்தல் ஒன்று; அந்த உள்ளிடைச் சக்திகளை நடைமுறையில் மெய்யாக்கி, மனநிறைவடைதல் என்பது மற்றொன்றாகும்.

இதனையே ஹியூஜெஸ் என்பார் (Hughes) பின் வருமாறு கூறு கின்றார்: "எல்லாக் குழந்தைகளும் ஆக்கத்திறத்தைப் பெற்றிருக் கின்றனர். மனிதர்கள் என்ற முறையில் அது அவர்களின் மரபு நிலைத்தன்மையின் ஒரு பகுதியாகும். ஏனைய உள்ளிடைச் சக்தி களைப் போன்றே ஆக்கத்திறமும் வளர்க்கப்பட வேண்டும்."

ஆக்கத்திறம் நம்மிடையேயுள்ள மேதைகளுக்கே உரிய சொத்து அன்று. ஆனால், அது ஒவ்வொரு குழந்தையிலும் ஓரளவிற் கேனும் குடியிருக்கும் ஒரு மென்மையான அரும்பாகும். இந்த அரும்பானது சிறந்து மலர்ச்சியுறுவதற்கு, கூருணர்வுள்ள கற்பனை ததும்பும் போதனை தேவை. இவ்வாறு மர்பி (Murphy) கருதுவது போன்று, ஆக்கத்திறம் தன் போக்கில் தோன்றிவிடும் ஒரு தன்மை அல்ல; அது சிறந்து விளங்க, பொருத்தமான விதையும், நிலமும், வானிலையும் தேவையாயுள்ளது. இந்த விண்மம், (Uranium) போன்ற திறத்தினை வளர்ப்பதற்கு இல்லமும் பள்ளியும் ஏற்றதொரு சூழ்நிலையினை உருவாக்கித் தந்து உதவலாம். இத் தகைய திறமைகள் ஊக்குவிக்கப்பட்டு வெளிப்படுவதில், பெற்றோர், ஆசிரியர்களின் மனப்பாங்குகள் கொண்டிருக்கும் செல்வாக்கினைப் பல ஆராய்ச்சிகள் எடுத்துக் காட்டியுள்ளன.

குழந்தை, வழக்கத்திற்கு மாறான கட்டுப்பாடற்ற விதத்தில் சிந்திக்கும் பயிற்சியைப் பெறுவதற்கும், அதன்மூலம் பலவகைப் பட்ட எண்ணங்களை உண்டாக்கவும், தன் கற்பனையைப் பயன் படுத்தி பலதரப்பட்ட எண்ணங்களைத் துணிந்து ஊகிக்கவும், அவற்றின் ஏற்புடைமையை ஆய்ந்தறியவும் வேண்டிய வாய்ப்பு களை, இல்லமும் பள்ளியும் நல்குவது அவசியமானது (Williams), நம் குழந்தைகள், நம் பயிற்சியிலும் கண்காணிப்பிலும் இருந்து வளர்வதால், அவர்களில் பெரும்பான்மையோரின் ஆக்கத்திறம் குன்றிவிடுகிறது என்ற செய்தி வருந்தத் தக்கதாகும். நமது பண் பாடும் சூழ்நிலையும், குழந்தைகளின் ஆக்கத்திற உள்ளிடைச் சக்திகளைச் தடைசெய்து அவற்றைப் பயனற்றதாக்கி விடுகின்றன. இளம்பிள்ளைகள், தங்கள் ஆக்கத்திற வளர்ச்சியில் ஏற்படும் தேக்கத்தின் விளைவாக, வாழ்க்கையில் மகிழ்ச்சியற்று விடு கின்றனர். இவர்கள், ரோஜர்ஸ் (Rogers) குறிப்பிட்டிருப் பதைப் போன்று "யூரேகா உணர்வு" ('Eureka' Feeling) அற்றுவிடு கின்றனர். இதனால், இவர்கள் தங்கள் இதயத்தை நிரப்பும் உணர்ச்சி யூக்கத்தின் பொலிவை இழந்தவர்களாகி விடுகின்றனர்.

சான்றாக, நம் பள்ளிகளில் சாதாரணமாக நடக்கின்றவைகளை நாம் இங்கு கவனிப்போம். பள்ளியில் ஆசிரியர் தன் பதவி

அதிகார மனப்பாங்கின் மூலம், தான் கற்பிப்பதையும் கட்டளை இடுவதையும் மாணவர்கள் ஏற்று நடக்கும் பொருட்டு, செயல் புரிவதால் பிள்ளைகள் தங்களுக்குள் இயல்பாகவே எழும் எண்ணங் களையும், உணர்வுகளையும் வெளிப்படுத்த அனுமதிக்கப்படுவதில்லை. இதன் விளைவாக இளையோனின் உள்ளார்ந்த எண்ணங்கள் முளையிலேயே கிள்ளி எறியப்படுகின்றன.

இவ்வகையில், ஆண்டர்சன் என்பார் (Anderson) விளை யாட்டுப் போதனை முறைப் பள்ளியின் ஆசிரியை ஒருவரைப் பற்றி சான்று தந்துள்ளார். அந்த ஆசிரியை தனது மாணவர் களுக்காக எத்தகைய துயரங்களையும் கடினங்களையும் ஏற்று நடக்கத் தயங்காது இருந்தார். ஒருநாள், அவர் பள்ளியில் இரவில் நெடுநேரம் வரை தங்கி, குழந்தைகளுக்காக வண்ணக் காகிதங் களில் கோடுகளை இழைத்து, பல்வகை வண்ணக் காகிதங்களைக் கொண்டு வைர வடிவங்கள் பலவற்றை வெட்டினார். மறுநாள் காலை, காகிதத்தில் தான் இழைத்திருந்த கோடுகள் வழியாக அதை மடித்து எவ்வாறு கூடையைப் படைக்கலாம் என்று தன் வகுப்புப் பிள்ளைகளுக்குக் கற்றுக் கொடுத்தார்.

அக்கூடைகளின் பக்கங்களில், அலங்காரத்திற்காக வைர வடிவங்களை ஒட்டவேண்டிய சமயத்தில், பெரும்பாலான பிள்ளை கள் கடமையுணர்வுடன் தங்கள் ஆசிரியை காண்பித்தவாறு அதை ஒட்டினர். ஆனால், ஒரு சில பிள்ளைகள், இச்சமயத்தில் தங்களுக்கே உரிய ஆக்கத்திற எண்ணங்களுக்கேற்ப, செயல்படத் தொடங்கினர். இவர்களில் ஒரு சிறுவன் தனது முதல் வைர வடி வத்தை இடையாக ஒட்டமுனைந்தான். அத்தருணத்தில் ஆசிரியை குறுக்கிட்டு அது தவறென்றும், அதை மறுபடியும் சரியான முறை யில் ஒட்டும்படியும் கூறினார். ஆனால், அச்சிறுவன் தனக்குத் தான் செய்தவண்ணமே நன்றாக இருக்கிறது என்று பதிலளித்தான். ஆனால், அது அவ்வாறு இருப்பது சரியல்ல என ஆசிரியை கூறி, அச் சிறுவனுக்குச் சரியான முறையைக் காட்டும் பொருட்டு, தானே அதைச் செங்குத்தாக ஒட்டினார். அவ்வாறு செய்ததன் காரண மாக அவர் அச்சிறுவனின் ஆக்கத் திறத்தை வளர்ச்சியுறுவதி லிருந்து கடிவாளமிட்டுத் தடுத்துவிட்டார் என்பதை அவர் உணர வில்லை.

"ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை"

என்கிறார், வள்ளுவர்.

ஆக்கத்திறமுடைய தனியன், பள்ளிப் படிப்பை முடிப்ப தற்குள் தன்னுடைய இயல்பாயியங்கும் தன்மையை இழந்து விடுகின்றான். இதன் காரணமாக, அவன் தன் ஆழ்ந்த உணர்வை யும், உறுதியான தீர்மானத்தையும், குறிக்கோளையும், சுதந்திரமாக, வழக்கத்திற்கு மாறாகச் செயல்படும் தன்மையையும், தன் உள்ளிடைச் செய்திகளை வெளிப்படுத்துவதன் பொருட்டு அவனில் இருந்த நாட்டங்களையும் இப்பொழுது அறியாமலும் மதிக்காம லும் இருக்கின்றான். அவன் தன் சமூகத்தின் பொருட்டும், தன் பொருட்டும், மற்றவைகளைப் பின்பற்றி ஒத்துச் செல்லும் வகையில் கற்பிக்கப்பட்டுவிடுகின்றான். என்னே இந்த அநீதி !

தற்காலத் தொடக்கப்பள்ளிச் சிறுவர்களும் உயர்நிலைப்பள்ளி இளையோரும் எதிர்காலத்தில் உலகத்தின் இந்த நிலைகளை மாற்றி யமைத்து, முற்றிலும் புதிதான வாழ்க்கை நிலைகளை உருவாக்கும் பொறுப்பினை ஏற்கவேண்டியிருக்கும் என்பது தெளிவு. மானிட உறவுகளின் பாற்பட்ட, பிரச்சினைகள், மக்கள்தொகைப் பெருக்கம், உலக நாடுகளிடையே நல்லுறவு, தொழில் நுணுக்க வளர்ச்சியின் விளைவாக ஏற்படும் துரித மாற்றங்களின் பாற்பட்ட பிரச்சினைகள் போன்ற பெரும் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண வேண்டுமேயானால் ஆக்கத்திறத்தை வளர்ப்பதும், ஊக்குவிப்பதும் நம் கல்வித் திட்டத்தின் முக்கிய குறிக்கோளாக அமையவேண்டியது இன்றி யமையாததாகும்.

ஆக்கத்திறம் போன்ற மிக முக்கியமான மானிடத் திறமை யினைத் தற்செயலாக, அதன்போக்கில் வளர விட்டுவிடல் கூடாது எனும் கருத்து இக்காலத்தில் மூதுரையாகி விட்டது. ஏனெனில், ஆக்கத்திறமே பரந்த, முழுமையான நோக்கில் அறிந்து கொள்ளப்படும் கல்வியின் உயிர்நாடியாகவும், மனித இனத்தின் தீவிரமான பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண்பதற்கான திறவு கோலாகவும் விளங்குகின்றது (Guilford). இதைத்தான் உலகப் பிரசித்திபெற்ற வரலாற்றறிஞர் டாய்ன்பீ (Toynbee), ஒரு சமூகம் தன்பால் காணப்படும் ஆக்க உள்ளிடைச் சக்தியை வளர்த்து, செயல்பட வைப்பதற்கு எந்த அளவிற்கு ஏற்ற சூழ்நிலையையும் வாய்ப்பினையும் கொண்டிருக்கின்றதோ, அதைப் பொருத்தே அதன் வாழ்வும் அழிவும் உள்ளது ; ஏனெனில் மக்கள் தொகையில் ஒரு சிறிய சதவீதத்தினரின் பால் காணப்படும் மிகவும் மேம்பட்ட உயர்தர ஆக்கத்திறமே மனித இனத்தின் மூலாதாரமான சொத்தாகும் என்று மிகவும் பொருத்தமாகக் குறிப்பிட்டுள்ளார். எனவே ஆக்கத்திறத்தை வளர்ப்பதன்பாலும், ஊக்குவிப்பதன் பாலும் கொள்ளப்படும் முயற்சியானது, சமூகத்தின் எதிர்கால

வளத்தின், முன்னேற்றத்தின்பால் கொள்ளப்படும் முயற்சியாகும்.

ஆக்க உள்ளிடைச் சக்தியையும், செயல் திறத்தையும் பேணி வளர்ப்பதற்காகத் திட்டப்படும் எந்தத் திட்டமும் பெற்றோர்கள், ஆசிரியர்கள், சமூகத்தின் ஆக்க வளர்ச்சிக்கெதிரான மனப்பாங்குகள், அவற்றைத் தகர்த்து வீணாக்கிவிடுவதற்கு முன்னர் செயல்படத் துவங்கவேண்டும். ஏனெனில் உளவியலாரும், கல்வி நிபுணர்களும் கண்டுள்ள உண்மைகள், வகுப்பறையிலும் சமூகத்திலும் நிலவும் சாதகமற்ற சூழ்நிலையின் காரணமாக ஆக்க உள்ளிடைச் சக்தி பெருமளவில் வாடி, வதங்கி அழிந்து போகின்றது என்பதனை எச்சரிக்கின்றன. டாரன்ஸ், சமூகம் ஆக்க சிந்தனையாளர்களின்பால், குறிப்பாக அவர்கள் இளமையின்போது முற்றிலும் கொடூரமாக உள்ளது எனக் கூறி, ஆக்கச் சிந்தனையாளர்களைச் சமூகம் தஞ்சம் அளித்து, தங்கள் எண்ணங்களை வெளிப்படுத்தும் வகையில் அவர்களை ஊக்குவிக்கவேண்டும் என்ற ஆலோசனையை வெளியிட்டுள்ளார்.

## ஆக்கத்திறத்தினைப் பேணி வளர்த்தல் (Nurturing Creativity) :

ஆக்கத்திறத்தினைப் பேணிவளர்ப்பதை ஈகையைப் போன்று, இல்லத்தில் துவக்குவது நன்று. இல்லமே ஆக்கச் சிந்தனையை வளர்ப்பதற்கான சிறந்த நிலமாகும். இதன் வாயிலாகவே பல வகைப்பட்ட எண்ணங்கள் உருவாகின்றன. ஆக்கச் சிந்தனையை வளர்ப்பதற்குப் பிள்ளைகளை, இடரில்லா வரம்புக்குள், பொருள்களோடும், எண்ணங்களோடும், கட்டுப்பாடின்றி, தாராளமாக விளையாடுவதற்கு அனுமதித்து அவர்களை ஊக்குவிக்கவேண்டும். பிள்ளைகளிடம் ஆக்கத்திறம் வாடி உலர்ந்துவிடுவதற்கு ஒரு முக்கியக் காரணம் அச்சம் அல்லது கோழைத்தனமாகும். ஒரு பிள்ளை, தான் வெளிப்படுத்திய 'அறிவற்ற' (Silly) கருத்துகளுக்காக கேலியும் ஏளனமும் செய்யப்பட்டால், அவன் தன்னுள் தோன்றும் புதிய எண்ணங்களை வெளிப்படுத்துவதற்கு அச்சங்கொள்வான். எனவே, அச்சமற்ற தன்மையானது, புதிய கிளர்ச்சிவாய்ந்த எண்ணங்களைப் பெறுவதற்கும், அவைகளைத் தங்குதடையின்றி வெளிப்படுத்துவதற்கும் இன்றியமையாத தூண்டலாகும். மேலும் ஒருவனின் சாதனைகளைக் குறைவாக மதிப்பிடுவது, அவன் தன் எண்ணங்களைத் தாராளமாக வெளிப்படுத்தும் தன்மையினை அழுத்திவிடவல்லது. இதனால்தான் ஆக்கச் செயல் திறத்தை, அங்கீகரித்து, அதற்குப் பரிசளிக்க வேண்டும் என டாரன்ஸ் ஆலோசனை தந்துள்ளார்.

நாம் சிறு குழந்தைகளை நோக்கினுல், அவர்கள் செயல்படு வதற்கான ஒருவகை சுதந்திர உணர்வு இருப்பதை அறியலாம். ஒரு குறிப்பிட்ட செயலைப்பற்றி நாம் பெருமளவில் அறிந்து கொண்டிருப்பினும் இந்த உணர்வு அத்தகைய அறிவினைப் பொருட் படுத்தாது இயங்குவதற்கான சுதந்திரமாகும். சான்ருக, சிறு பிள்ளைகள் தாங்கள் முதன் முதலில் நடப்பதற்குத் துணையாக யிருக்கும் தசைகளைக் கட்டுப்படுத்துவது பற்றி, அறிவுசார்ந்த வகையில் தெரிந்துகொள்ளாதிருப்பினும், தாங்களாகவே நடக்கக் கற்றுக்கொள்கின்றனர். எனவே, ஒருவன் அறிந்துகொண்டிருப்ப வையும் அறியாதிருப்பவையும், அவனில் காணப்படும் ஆக்கபூர்வ மாக செயல்படுந் தன்மையோடு சிறிதும் தொடர்பு கொண்டிருக்க வில்லை.

ஆக்கச் செயற் பாங்கில் தெளிவான கட்டங்கள் சில உள்ளன என்றும் அவைகளில் முதலாவதும் முக்கியமானதுமாக இருப்பது தன்னை ஆயத்தமாக்கிக் கொள்ளல் என்றும் சிலர் கருதுகின்றனர். எனினும், பிள்ளைகள் தாங்கள் ஒரு சமயத்தில் பெற்றிருக்கும் அறிவுடனே புதியவற்றைப் படைப்பதை நாம் காண்கின்ரேம். புதியவற்றைப் படைக்கும் இச்செயலே மேற்கொண்டு செயல் படுவதற்கான புதிய உள்நோக்கினையும், புதிய அறிவினையும் அளிக்க வல்லது. சிறப்பாகக் கூற வேண்டுமாயின் புதியவற்றைப் படைப்பதற்கான சிறந்த முன்னேற்பாடு புதியவற்றைப் படைத் தலேயாகும். உண்மையான அறிவினைப் பெருமளவில் பெறுவது வரை செயல்படாமல் காத்திருப்பது, அல்லது ஒரு பொருளைப் பற்றி பிள்ளைகள் நன்கு அறிந்துகொண்டு, அதன் அடிப்படையில் செயல்பட ஆயத்தமாகும்வரை, அவர்களுக்கு' புதியவற்றைப் படைப்பதற்கான வாய்ப்பினை அளிக்காதிருத்தல், அவர்கள் அவ்வாறு செயல்படுவதில் தடையையுண்டாக்குமேயன்றி, அச் செயலில் முன்னேற உதவாது. பிள்ளை, தான் பெற்றிருக்கும் அறிவினுடன் அடிக்கடி புதியவற்றைப் படைப்பதற்கான வாய்ப் பினைப் பெற்றிருத்தலே, எதிர்காலத்தில் அந்தப்பிள்ளை ஆக்கத் திறத்தில் மேம்பட்டு விளங்குவதற்கான சிறந்த முன்னேற் பாடாகும்.

எனவே, பிள்ளைகளின் ஆக்கத் திறத்தினைப் பேணி வளர்ப் பதற்கான அடிப்படை நியதிகள் மூன்று உள்ளன. முதலாவதாக, எப்பொழுதாவது ஒருமுறை, நாம் நினைப்பது போலன்றி, அவர் கள் நினைக்கும் வண்ணமே பிள்ளைகளுக்கு எதையும் செய்வதற்கு வாய்ப்பளிக்க வேண்டும். இரண்டாவதாக, பிள்ளைகளை, அவர் களுக்கே உரிய விதத்தில், பல நடவடிக்கைகளைப்பற்றி கற்பனை

செய்வதற்கான வாய்ப்புகளைப் பெருக்கி, அவைகளை மகிழ்ச்சி யூட்டுவனவாக ஆக்கவேண்டும். இறுதியாக, சிறுவன் ஏதாவ தொன்றை உண்டாக்கும்போது, அது எவ்வளவு அர்ப்பமாக இருப்பினும், அதன்பால் நாம் மிகுந்த மகிழ்ச்சியையும் ஆர்வத் தையும் காட்டவேண்டும்.

கற்பனைத் திறத்தைச் சிறந்த வகையில் வளர்ப்பதற்கான அடிப்படை நியதியானது, பொருள்கள் எவ்வாறு இருக்கின்றன என்பதை நோக்குவதற்குப் பதிலாக, அவை எவ்வாறெல்லாம் இருக்க இயலும் என்பதைப்பற்றி நோக்கவும் சிந்திக்கவும் செய்ய வெண்டியது ஆகும். இந்த ஊக்கமூட்டும் மேற்கோளானது பிள்ளைகளின் எண்ணங்களுக்கு இறக்கைகளைத் தந்து, அதன்மூலம் அவர்களின் உள்ளங்கள் புதிய, இன்னும் கண்டுபிடிக்கப்படாத, கண்டு பிடிக்கப்பட்டு ஆயப்படாத பகுதிகளின் பால் பறந்து சென்று, அவைகளைப் பற்றிய உண்மைகளைக் கண்டறிவதற்கு உதவியாக இருக்கும்.

ஆக்கத் திறத்தைப் பேணிக் காப்பது, இல்லத்திலும், பள்ளி யிலும் இடையறுது, ஒன்றையொன்று வலிவூட்டும் வண்ணம் நடை பெறவேண்டும் (Williams). பள்ளியில் பிள்ளைகள் தங்கள் வகுப்பு களில் முன்னேறுகையில் தங்கள் ஆக்கத்திறத்தில் குன்றிவிடு கின்றனர் எனும் உண்மையை, ஆக்கத்திறன் வளர்ச்சி வளைவுகள் காட்டுவதை நாம் முன்பே கண்டுள்ளோம். எனவே, அச்சமயத்தில் தான் ஆக்கத் திறத்தினை மீட்டுக் கொள்ள வேண்டிய வழிவகை களை நாம் மேற்கொள்ள வேண்டும். இதன் பால் பள்ளியானது மிகுந்த பங்கினை மேற்கொள்ளலாம். இதில் ஆசிரியர் செய்ய வேண்டிய, மிக அடிப்படையானதும் பலன் மிக்கதுமான தொண்டு, அவர் தனக்கு வசதியாயுள்ள ஆதிக்க முறையினைக் கைவிடுதலேயாகும். ஆசிரியரும் பாடப் புத்தகமும் தான் நிலைத்த, மாற்றமுடியாத, சரியான விடைகளையும், தீர்வுகளையும் அளிக்க வல்லவைகள் என்று பள்ளியில் நிலவும் நிலை மாற்றப் பட்டு, ஆசிரியர்கள், பாடப் புத்தகங்கள் ஆகியவைகளின் முக்கியத்துவம் குறைக்கப்பட வேண்டும். இதன் பொருட்டு, பாடப் புத்தகத்தில் காணப்படாத, ஆசிரியர் அறிந்திருத மாண வரது புதிய எண்ணங்கள் பல, வகுப்பில் வரவேற்கப்பட்டு அங்கீகரிக்கப்படல் நன்று. இதன்மூலம், பிள்ளைகள் கற்பனைத் திறம் மிகுந்தவர்களாகவும், அறிவு சார்ந்த விஷயங்களில் இசை விணக்கம் கொண்டவர்களாகவும் விளங்குவதற்கு ஊக்குவிக்கப் பட வேண்டும்.

நம்முடைய தற்காலத்துக் கல்வித் திட்டத்தில், உண்மையான செய்திகளையும், விபரங்களையும் கற்றுத் தேருவது மிகவும் வலி யுறுத்தப்பட்டுள்ளது. ஒரு தேர்வில் வெற்றி அல்லது தோல்வி அடைவது, ஒரு வகுப்பிலிருந்து உயர்ந்த வகுப்பிற்குத் தேர்வு பெறுவது, மேலும் பள்ளியில் தொடர்ந்து இருப்பது ஆகியவை ஆசிரியருக்கு ஏற்கெனவே தெரிந்துள்ள செய்திகளையும், விபரங் களையும் கற்றுத் தேர்ச்சியடைவதையும், நெட்டுருச் செய்வதையும் பொருத்துப் பெரும்பாலும் உள்ளன. எனவே, பள்ளியின் நோக்கமும், பணியும், செய்திக்கூறுகளைப் பதிவு செய்து, பின்னர் அதற்கான சைகையைப் பெறும் போது அவற்றை மீண்டும் ஒப்பிக்கும் பொருட்டு மக்களை உருவாக்குவதாகவே உள்ளது. இவ் வாறு, சரியான செய்திக் கூறுகளை ஒப்பிக்கும் திறமையில் மாணவன் ஒரு குறிப்பிட்ட தேர்ச்சியைப் பெற்றுவிட்டதும், அவன் பள்ளியில் தேர்வு அடையப் பொருத்தமானவன் எனக் கருதப்படுகின்றான். இதில் வருந்தத்தக்கது யாதெனின், துண்டு துண்டு விபரங்களையும், செய்திக் கூறுகளையும் மீண்டும் ஒப்பிக்க உதவும் இந்தத் திறமை, வாழ்வகையில் சிறந்து, நல்ல பொருத்தப்பாடுகளையுடைய மனித னாகச் சமூகத்தில் திகழ்வதற்கு அவசியமான திறமையோடு மிகச் சிறிதளவு தொடர்பினையே கொண்டிருப்பதுதான். வகுப்புகளுக் குப் புறத்தே எய்தப் பெறும் சாதனைகளை, அதாவது ஒருவனின் உண்மை வாழ்க்கை நடவடிக்கைகளில் வெளிப்படும் ஆக்கத்திறத் தினைப் பேணி வளர்க்கவும், அதனைப் பெருக்குவதன் பாலும் நாம் ஆர்வத்தினையும் முயற்சிகளையும் கொண்டிருக்கின்றோம். இதன் பொருட்டு, பள்ளிகளில் ஊக்குவிக்கப்பட்டு, சோதிக்கப்பட வேண்டிய திறமைகள் உண்மை வாழ்க்கையில் சிறந்து விளங்குவ தற்குத் தேவையான திறமைகளின் குறியீடாகவே அமைய வேண்டும். வகுப்பிற்குள்ளிருக்கும் உலகமானது, அதன் புறத்தே யிருக்கும் உலகத்திற்குத் தேவையானவற்றின்பால் பிள்ளைகளை ஆயத்தமாக்கும் உண்மையான "பயிற்சிக் களமாய்" இருத்தல் வேண்டும். பள்ளியில் பெறப்படும் திறமைகள், உண்மை வாழ்க்கையில் பொருந்தாது போய்விடின், அவைகளை எந்த அடிப்படையில் திறமைகள் என்று கருத முடியும் என்ற கேள்வியை இப்பொழுது நாம் எழுப்பவேண்டிய அவசியமேற்படுகின்றது. ஆனால், ஆக்கத்திறத்திற்கும், எதிர்கால உண்மை வாழ்க்கையின் சாதனைகளுக்குமிடையே மிகுந்த தொடர்பு இருப்பதை ஆராய்ச்சி கள் காட்டியுள்ளன (Wallach and Wing). பள்ளித் தேர்வில் பெறப்படும் மதிப்பெண்கள் மட்டுமே நமது இறுதியான நோக்க மில்லை. அவ்வாறு இருத்தலும் பயனற்றது. தேர்வின் மதிப்பெண்களை உயர்த்தும்படியான ஆர்வத்தினை நாம் கொண் டிராது, அதற்கு மாறாக உண்மை வாழ்க்கையின் சாதனை

களை உயர்ந்தும் ஆர்வத்தினைக் கொண்டிருத்தலே நன்று. இந்தக் கட்டத்தில், தேர்வின் மதிப்பெண்கள் வாழ்க்கையைப் பற்றி என்ன தெரிவிக்கின்றன எனும் கேள்வி எழுகின்றது. இதன் பால் செய்யப்பட்ட ஆராய்ச்சிகள் இவையிரண்டிற்கும் இடையே தொடர்பு சிறிதுமில்லை எனும் வேதனையான முடிவினைத் தெரிவிக்கின்றன.

பேராசிரியர் பரமேஷ் சென்னை நகரத்து உயர்நிலைப்பள்ளிகளில், 155 மாணவர்களை ஆராய்ந்ததில், ஆக்கத் திறத்திற்கும் கல்விச் சாதனைக்கும் (மதிப்பெண்கள்) இடையே எவ்விதத் தொடர்பும் இல்லாதிருந்ததைக் கண்டார். மேலும், சோதனையினடிப்படையில் தீர்மானிக்கப்பட்ட மிக உயர்ந்த ஆக்கத்திறமையுடைய ஆண்பிள்ளைகள் பலர், உயர்நிலைப்பள்ளிப் பொதுத்தேர்வில் (S.S.L.C. Public Examination) தோல்வியுற்றனர் என இவ்வாய்வில் கண்டறியப்பட்டது. இந்த முடிவானது உண்மையில் ஆக்கத் திறமுடைய மாணவன் கல்லூரியில் தோல்வியடைவான் என்றும், குறைந்த ஆக்கத்திறமுடைய மாணவர்கள் தான் கல்லூரியில் தேறுகின்றனர் என்றும் சில ஆராய்ச்சியாளர்கள் விவாதித்திருப்பதை உறுதிப்படுத்துவதாக உள்ளது. (Hoyt) ஹாய்ட் என்பவர் இதன்பால் செய்யப்பட்ட ஆராய்ச்சிகளை ஆய்ந்ததில், கல்லூரியில் பெறப்பட்ட மதிப்பெண்கள், மாணவர்கள் பிற்காலத்தில் ஏற்று செயல்பட்ட தொழிலில் எய்திய சாதனைகளுடன் தொடர்புகொண்டிருக்கவில்லை எனக் கண்டார். அமெரிக்க உயர்நிலைப்பள்ளிகளில் உள்ள மிக உயர்ந்த திறமையினையுடைய குழுவிலும் (National Merit Scholarship Finalists), வகுப்பிற்குப் புறத்தே அடையப்பெற்ற செயல்திறச் சாதனைகளுக்கும் கல்விச் சாதனைக்கும் இடையே மிகச்சிறிதளவு தொடர்பே காணப்பட்டது. இங்குதான் ஆக்கத்திறம் குறிப்பிடும்படியான பெரும் பங்கினைக் கொண்டுள்ளது.

கற்றலுக்கான திறமை, வயதுக்கு வயதும், தனியனுக்குத் தனியனும் மாறுபடுகின்றது. இந்தத் திறமையானது அறிவாற்றலுடன் மட்டுமின்றி, சமூகம், மனவெழுச்சி, புலன் காட்சி, உடல், உள்ளம் சார்ந்த காரணிகளுடனும் தொடர்புடையதாயிருக்கின்றது. மொத்தத்தில், கற்றலானது, மிகவும் சிக்கல் வாய்ந்ததாகும். ஆதலால், கற்பிக்கும் முறைகளில் எந்த ஒரு முறையையும் மிகச் சிறந்ததென்று கருதவியலாது. செய்திக் கூறுகளையும் துண்டான விஷயங்களையும் மீண்டும் ஒப்பிப்பதற்கான திறமையை

வளர்ப்பதற்கு நாம் மேற்கொள்ளும் முயற்சியானது மானிட வளர்ச்சியில் பங்குபெறும் ஒரேயொரு காரணியையே தேவை யற்ற அளவிற்கு வலியுறுத்தி அதன்பால் மிகையான கவனத்தைச் செலுத்துவதாகும். இந்த ஒரு காரணியையே நுண்ணறிவுச் சோதனைகள் நிர்ணயிக்கின்றன. நுண்ணறிவைப்பற்றி நாம் இக்காலத்தில் அறிந்திருப்பதைப் பொறுத்தவரை, மனித இனம் உய்த்திருப்பதற்கு அவசியமாயுள்ள பல்வகைப்பட்ட சிந்தனைத் திறமைகளெல்லாம் அதனுள் அடங்கியிருக்கவில்லை. கேள்வியை எழுப்புதல், விடைகளை நாடிப் பெறுதல், அமைப்பினையும், முறை யினையும் கண்டறிதல், மறு சிந்தனைசெய்து அமைப்பினை மாற்றி யமைத்தல், புதிய தொடர்புகளைக் கண்டறிதல் போன்ற திறமை களை வளர்ப்பதற்குப் பொதுவாக பிள்ளைகளுக்குப் பயிற்சி அளிக்கப்படுவதில்லை. உண்மையில், இவை நமது கல்வித் திட்டத் தில் சேர்க்கப்பட வேண்டுவனவாகும்.

அறிவின் பெருக்கம் தற்காலத்தில் மடக்கையளவில் (Logarithmic) ஏற்பட்டிருப்பதால், பிள்ளைகளின் கற்கும் திறமைகளை முன்னேறவைக்கும் எந்த முறையையும் நாம் புறக்கணித்து விடக் கூடாது. பிள்ளைகள் பயனுள்ள விதத்தில் கற்கவேண்டுமே யானால், பொருளுணரக் கற்றல் முறைகள் மட்டும் போதியதல்ல. மாற்றங்களைக் காணும் இக்காலத்தில், பிள்ளை தன் சூழ்நிலையுடன் சிறந்த விதத்தில் தொடர்பு கொள்வதற்கு அவனது அறிவுத் திறனின் உள்ளிடைச் சக்தி ஒன்றை மட்டுமின்றி அனைத்தையுமே இயங்கச் செய்யவேண்டும். இந்தக் கருத்தினை கெட்ஸெல்ஸ், ஜாக்ஸன், (Getzels and Jackson) டாரன்ஸ் (Torrance) ஆகியோர் வலியுறுத்தியுள்ளனர். மூர் (Moore), ஆர்ன்ஸ்டீன் (Ornstein) மற்றும் பலர் நடத்திய பரிசோதனைகள் ஆக்கபூர்வமான முறையில் கற்பது, அப்படியே பொருளுணராவிதத்தில் கற்பதைவிடச் சிக்கனமானது எனக் காட்டியுள்ளன. மேலும், வழக்கமான முறைகளைக் கொண்டு நன்கு கற்கவியலாத பிள்ளைகள் சிலர், ஆக்கச் சிந்தனைத் திறமைகளைப் பயன்படுத்திக் கற்றுத் தரும்போது நன்கு கற்பவர்களாகத் திகழ்கின்றனர். எனவே, மாணவர்களின் ஆக்கச் சிந்தனைத் திறமைகளைப் பயன்படுத்திக் கற்பிக்கும் முறைகள் மிக்க பலனுள்ளவிதத்தில் கற்றலை மேம்படுத்துகின்றது.

நம் பள்ளிகளில் மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட வேண்டிய ஓர் அடிப்படைத் திறமையானது ஆசிரியரிடமிருந்து விடைகளையும் அறிவுரைகளையும் பெறுவதற்கு அடக்கமாகக் காத்திருப்பது அன்றி, தாங்களே விடைகளைக் கண்டுபிடிப்ப தற்கும், தேடுவதற்கும் உரிய திறமையேயாகும். மேலும்

பிள்ளைகள் எல்லோரும் கேட்கவும், வியக்கவும், ஊகிக்கவும், உத்தேசிக்கவும், கேள்வி எழுப்பவும் அதன்பால் துருவி நோக்கவும், வல்லவர்களாக இருப்பதால், ஆக்கத்திறத்தினைப் பேணி வளர்க்கின்ற பாடத் திட்டம், மாணவர்கள் எல்லோரும் நன்கு கற்றுத் தேறுவதற்கு அடிகோலும்.

பொருளுணராக் கற்கும் வழியில் கற்கப்பட்டவை, மாணவர்களை மேலும் மேலும் அறிவினை நாடுவதற்கு ஊக்குவிக்கும் சக்தியினைப் பெற்றிருக்கவில்லை. பொருளுணராக் கற்கும் செயல்களில் கற்றலுக்கான உந்து, அவ்வாறு கற்பதன்மூலம் பெறப்படும் அறிவின்பால் அல்லாது, அதற்குப் புறத்தேயுள்ளது. அத்தகைய கற்றலுக்கான உந்து, சான்றாக, தேர்வில் வெற்றியடைவதிலும், உதவிச் சம்பளம் பெறுவதிலும், பெற்றோர் ஆசிரியர்களின் கண்டனத்தைத் தவிர்ப்பதிலும் இருக்கலாம். இத்தகைய நோக்கங்களின்பால் முயற்சி செய்வதில் தீங்கு ஒன்றுமில்லை. எனினும் இந்த நோக்கங்களின்பால் மட்டுமே கற்பது கவர்ச்சியில்லாமலும் ஆற்றல் வளமில்லாமலும் போவதால், இவ்வாறு கற்பது உண்மையில் நோக்கமற்றதாகவும் பொருளற்றதாகவும் ஆகிவிடுகின்றது. இதற்கு மாறாக, கற்கப்பட்டவையே மாணவனின் அறிவார்வத்திற்கும் அறிவுக் கூர்மைக்கும் திருப்திகரமாக இருந்து, அவனுடைய அறிவாற்றலுக்கு அறைகூவும் வண்ணம் காணப்படின், அவன் தொடர்ந்து கற்பதற்கு, புறத்தேயுள்ள வெகுமானமோ தண்டனையோ தேவையில்லை. ஏனெனில் இத்தகைய கற்றலானது, உள்ளார்ந்த ஊக்கிகளைக் கொண்டதாகும். அதாவது இத்தகைய கற்றலுக்கு மேலும் மேலும் அறிவைப் பெறுவதே ஊக்கிகளாய் ஆகிவிடுவதால், புறத்தேயுள்ள நோக்கம் எதையும் அது சார்ந்திராது, தொடர்ந்து நடைபெறுகின்றது.

வழக்கமான முறையில் கற்பிக்கப்படும் வகுப்புகளில், கொடுக்கப்படும் பிரச்சினைக்கும், கண்டுபிடிக்கப்படும் தீர்வுக்கும் இடையேயுள்ள வேறுபாட்டின்பால் கவனம் செலுத்தப்படுவதில்லை. சான்றாக, பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கும், அல்லாது முன்னரே அறிந்துள்ள அறிவியல் விதிகளைத் தவிர, மற்ற எத்தகைய விளக்கங்களும் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. இதனால் மாணவன் தான் அறிந்துகொள்ளாதவைகளின்பால் கவனத்தைச் செலுத்துவதில் பயனில்லை என்றும், தான் அறிந்துகொண்டிருப்பவைகளை நிலைநிறுத்தி, அவற்றை மீண்டும் ஒப்பிக்கும் திறமையைப் பெற்றிருப்பதில்தான் பலனுண்டு என்றும் எண்ணுகின்றான். இக்கருத்தின் அடிப்படையில் கற்பிக்கப்பட்டவை, வெவ்வேறான

தொடர்ச்சியற்ற அறிவுகளாகவும், மற்ற அறிவுத்துறைகளுடன் தொடர்பற்றுக் காணப்படுகின்றது. எனவே, கற்பிக்கும் முறைகள் மாணவர்கள் தாங்களாகவே பிரச்சினைகளையும் அவற்றிற்கான தீர்வுகளையும் கண்டுபிடிக்கும் முக்கியத்துவத்தை வலியுறுத்துவன வாக அமைய வேண்டும். பொதுவாக, ஒரு பிரச்சினைக்குத் தீர்வு காண்பதில் பல வழிகள் உண்டு எனும் உண்மை வலியுறுத்தப் பட்டால், அவர்கள் ஒரே சூழ்நிலையில் பல்வகை முறைகளில் சிந்தித்துச் செயல்படுவதற்கான திறமையைப் பெற்று விளங்க முடியும்.

வழக்கமான முறையில் கற்பிக்கப்படும் வகுப்புகளில், ஆக்கத் திற வளர்ச்சியைத் தடைசெய்யும் எதிர்மாறான பழக்கங்கள் சில பின்பற்றப்படுகின்றன. முதலாவதாக, மாணவன் தன் படிப்பில் பிழையற்றுச் 'சரியாக' விளங்கவேண்டுமென வற்புறுத்தப்படு கின்றான். இரண்டாவதாக, மாணவனுடைய படைப்புகளும், விடைகளும் அவனுக்குத் திருப்தியை அளிக்கும் அடிப்படையில் அவனாலேயே மதிப்பீடு செய்யப்படாது, மற்றவர்களால் (ஆசிரியர் களால்) சரியெனக் கருதும் அடிப்படையில் மதிப்பீடு (External evaluation) செய்யப்படுகின்றன. இவற்றின் விளைவாக அவன் தன் மனதில் பல்வகை எண்ணங்களையும், கருத்துகளையும் பெறுவ தற்கான வாய்ப்பினையும் ஊக்கியையும் இழந்து விடுகின்றான். மூன்றாவதாக, பாடத் திட்டத்தின்படி தேவைக்கேற்ப ஆசிரியர் ஒரு குறிப்பிட்ட பாடப் பகுதியை ஒரு குறிப்பிட்ட காலவரம்பிற் குள் முடிக்கவேண்டியிருப்பதால். எல்லாவகை எண்ணங்களுக்கும் கருத்துகளுக்கும் வகுப்பு நேரத்தை ஒதுக்கிட ஆசிரியரால் முடிவ தில்லை. நான்காவதாக, மாணவன் உயர்நிலைப் பள்ளியில் புகும் போது, சம வயதினருடன் ஒத்து நடக்கும் தன்மையின் பிடிப்பு அதிகமாக அவனிடம் ஏற்படுவதால், இளையோன் படிப்பிலும் மற்றவர்கள் செய்யும் வண்ணமும் செயல்படவேண்டியவனாகிறான். எனவே, தன்னுடைய தற்படைப்புத் தன்மையை இழக்க நேரிடு கின்றது. இறுதியில், நம் இந்தியப் பண்பாட்டில், வேலைக்கும், விளையாட்டிற்கும் இடையே முனைப்பான வேறுபாடு காண்பிக்கப் படுவதால், பிள்ளைகள் தங்கள் தீவிர வேலையான பள்ளிப் பணி களில், விளையாட்டான மனப்பாங்கினைக் கொண்டு தங்கள் கற் பனைத் திறமையினைக் கட்டின்றிப் பயன்படுத்துவதற்கும், நகைச் சுவையான, வேடிக்கையான மனப்போக்கினைப் படிப்பில் மேற் கொள்வதற்கும் இடமில்லாமல் போய்விடுகின்றது. எனவே ஆக்கத்திற வளர்ச்சிக்கு இடையூறாகவுள்ள இப்பழக்கங்கள் பள்ளி யில் மாற்றியமைக்கப்பட வேண்டும்.

ஆக்கத் திறத்தினைப் பேணி வளர்க்கவும், ஊக்குவிக்கவும், வகுப்பறையில் ஆசிரியர் பின்பற்றவேண்டிய சிலவற்றை இங்கு தருவது பொருத்தமெனத் தோன்றுகின்றது. டாரன்ஸ் தந்துள்ள யோசனைகளில் முக்கியமானவையாவன :—

1. ஆக்கச் சிந்தனையின் பயனை மதித்து நடத்தல்.

2. பொருள்களையும், எண்ணங்களையும் புதிய விதங்களில் கையாளுவதற்கு மாணவர்களை ஊக்குவித்தல்.

3. புதிய எண்ணங்களின்பால் சகிப்புணர்ச்சியை வளர்த்துக் கொள்ளல்.

4. ஒரு குறிப்பிட்ட நடத்தைக் கோலத்தை மாணவர்களின் பால் திணிக்காது இருத்தல்.

5. மாணவனைத் தன்னுடைய ஆக்கச் சிந்தனையின் பயன், மதிப்பை உணரவைத்தல்.

6. மாணவன் தானாகவே எண்ணங்களையும் பிரச்சினைகளையும் தோற்றுவித்து எண்ணங்களை இணைத்து உருவாக்கவும், பிரச்சினை களுக்குத் தீர்வு காணவும் ஊக்குவித்து மதிப்பீடு செய்தல்.

7. பல்வகை எண்ணங்களை நடைமுறையில் செயல்படுத்து வதற்கான வழிவகைகளை அறிவுறுத்தல்.

8. விமர்சிக்கும் திறமைகள் (Critical Ability) ஆக்கபூர்வமான வகையில் வளரும் பொருட்டு பயிற்சியளித்தல்.

9. பல்வேறு துறைகளின்பால் அறிவை மேம்படுத்திக் கொள்ள மாணவர்களை ஊக்குவித்தல்.

10. பெற்றோர்களும், ஆசிரியர்களும் துணிவோடு செயல் படுதல்.

செயற்றிறம் வாய்ந்தவர்களிடமும், அருந்திறம் வாய்க்கப் பெற்றவர்களிடமும் சமூகத்தின் தலைமைப் பொறுப்பினை ஒப்ப டைக்கும் பொருட்டு, அத்தகையோரைக் கண்டறிவதற்கான முறைகளை உருவாக்குவதே மனித நாகரீக வளர்ச்சியில் ஒரு முக்கிய பெரும் பிரச்சினையாக நெடுங்காலமாக இருந்து வந்துள்ளது. பிளேடோவின் (Plato) காலத்தைப்போன்று, இன்றும் நாம் மானிடப் பிரச்சினைகளைத் தீர்க்கவல்ல "பொன்னன மனிதர்களைக்"

(Men of Gold) கண்டறிவதில் முனைந்துள்ளோம். இந்திய வரலாற்றின் நெருக்கடியான இந்தக் கட்டத்தில், அறிவியலின் வாயிலாகத்தான் நம் நாட்டிற்கு மிகையான பலன்கிட்ட முடியும். நம் நாட்டு மக்கள்வளத்தின் மொத்த ஆற்றல்களை இயன்றஅளவில் பயன்படுத்திக்கொள்வதற்கு ஏற்ற வழிமுறைகளை உருவாக்கும் கடமை, உளவியலார்களுக்கும், கல்வி நிபுணர்களுக்கும், ஏனைய அறிவியலார்களுக்கும் உரியது, இவ்வாறு ஆக்க உள்ளிடைச் சக்தியுடையவர்களைச் சிறுவயதிலேயே கண்டறிந்து, அவர்களின் ஆக்கத் திறமைகள் நன்கு மலரும்பொருட்டு அவர்களைப் பேணி வளர்த்து வழிகாட்டுவோமேயானால், எதிர்காலத்தில் அவர்கள், "புதியதோர் உலகினைச் செய்திட முடியும்."

அதிகாரச் சுருக்கம் :

வெகுகாலமாகப் புறக்கணிக்கப்பட்டு வந்த 'ஆக்கத்திறம்' கில்ஃபோர்டு என்பாரின் பெருமுயற்சியினால் மேடையேறி, இன்று மாப்புகழ் எய்தியிருக்கும் அறிவுத்திறத்தின் கூறாகும். அன்பைப் போன்று இது பல சிறப்புகளைத் தன்னகத்தே கொண்டது. ஆக்கத்திறம் பற்றிய வரையறைகள், சாதாரணப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணுதல் என்பதிலிருந்து, ஒருவனின் தனித்த உள்ளிடைச் சக்திகளெல்லாம் முழுமையாக வெளிப்படுத்தப்பட்டு நிறைவேறுதலே ஆக்கத்திறத்தின் பயன் விளைவு என்பதுவரை பல்வகைப்பட்டுள்ளன.

ஆக்கத்திறமுடையவன், ஒரு பிரச்சினையை உணர்ந்தவுடன், அதை அவன் உணர்ந்த நிலையிலிருந்து ஒரு புதிய நோக்கில் பார்த்தறிகிறான். கில்ஃபோர்டு தனது "அறிவுத்திற அமைப்பின் மாதிரியில்" அறிவுத்திறனின் இயக்கங்களில் கூர்த்த சிந்தனை, பரந்த சிந்தனை ஆகியவற்றை அடக்கியுள்ளார். கூர்த்த சிந்தனை என்பது நுண்ணறிவு பற்றி வழக்கத்திலுள்ள கருத்தினடிப்படையில் சிந்தனையைக் குறுக்கி, ஒரு சரியான விடையைக் காண்பதாகும். ஆனால் பரந்த சிந்தனையானது ஒருவர் தன் சிந்தனையில் வழக்கத்தினின்றும் விலகி, கூடுமான வெளிப்பாடுகள் பலவற்றை உண்டு பண்ணுகின்ற திறமையைக் குறிக்கின்றது.

ஆக்கத்திறமுடையவர்கள், பொதுவாக நுண்ணறிவு மிக்கவர்களாகவும், தங்களின் சிந்தனையிலும் செயலிலும் பிறரைச் சாராது தாங்களே சுதந்திரமாகச் செயல்படுபவர்களாகவும் இருப்பர். அவர்களின் தற்படைப்புச் சிந்தனையை ஊக்குவிக்கும் சூழ்நிலை இருக்கையில், எதையும் சாதிப்பதற்கு ஏற்ற உறுதியான உந்துக்களை அவர்கள் பெற்றிருப்பர். வெளியுலக அனுபவங்களையும்

அகத்தே எழும் அனுபவங்களையும், திறந்த மனப்போக்குடன் அவர்கள் ஏற்றுக்கொள்வர். ஆவல் மனப்பாங்கும், எதையும் ஆராய விரும்பும் தன்மையும் பெற்றிருப்பர். "ஆக்கத் திறமுடையவன் அகமுகனும் அல்லன், புறமுகனும் அல்லன்: அவனிடம் நரம்புப்பிணித் தன்மையும், தவிப்பும் மிகுதியாகவோ குறைவாகவோ இல்லை. அவன் சமநிலை ஆளுமையும், கருத்தியல், அழகியல் சார்ந்த பயன் மதிப்புகள் மிகுந்துள்ளவனுகவும், இருக்கின்றுன்" என்பது பரமேஷின் ஆராய்ச்சி முடிவாகும். ஆக்கத்திற வளர்ச்சிக்கு ஏற்றதொரு சூழ்நிலையை அமைத்துத் தரவேண்டும். பெண்களைவிட ஆண்களிடமே அதிக அளவில் தற்படைப்பும், தற் சிந்தனையும் காணப்படுகின்றன என்கிருர், கிராப்லி.

நுண்ணறிவிற்கும், ஆக்கத்திறத்திற்குமிடையே மிகக் குறைவான தொடர்பாடுகளே இருந்தன. சென்னை மாநகரத்து உயர்நிலைப்பள்ளி இளையோரை ஆராய்ந்ததிலும் இக்கருத்து வெளிப்பட்டது. வாலக்-கோகன் ஆக்கத்திறக் கருவிகளின் தொகுதியைக் கொண்டு இவ்விளையோரை ஆய்ந்ததில், கல்விச் சாதனை அதாவது தேர்வில் பெறும் மதிப்பெண்கள், ஆக்கத் திறனேடு தொடர்பற்று இருப்பதும், நுண்ணறிவு குறிப்பிடத்தக்க அளவில் தொடர்பாடு கொண்டிருப்பதும் தெரிந்தன. ஆக்கத் திறத்தினை அளவிட்டறியப் பல்வகைச் சோதனைகள் உள்ளன.

உயர்நிலைப்பள்ளிப் பருவத்திலுள்ள இளையோரின் ஆக்கத்திற வளர்ச்சிகளை ஆராய்ந்ததில் 6 முதல் 7 படிவங்களுக்குள் கற்பனைத் திறன் குறைகின்றது என்றும், ஒரு சில ஆய்வுகள் அது எட்டாவது படிவத்தில் குறைகின்றது எனவும் பகர்கின்றன. சிலர், உயர் நிலைப் பள்ளியின் இறுதிவரை ஆக்கத்திறம் தொடர்ந்து வளர்ச்சி பெறுவதாகக் கூறுகின்றனர். ஒருவனின் மிகச்சிறந்த சாதனைகள், அவன் வாழ்வின் ஒரு குறுகியகால அளவிற்குள் ஏற்பட்டு விடுகின்றன. ஆக்கச் சாதனைகளில் ஏற்படும் குறைவு வயதினலன்றி வயதின் பின் விளைவாலாகும். ஆக்கச் சாதனைகள் குறைவதற்கான வயதின், பதினறு பின் விளைவுகளை லெஹ்மன் அட்டவணைப்படுத்தியுள்ளார். இவ்வட்டவணை உளவியல் வழிகாட்டுநர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் பேருதவியாகும்.

எல்லாக் குழந்தைகளும் ஆக்கத் திறத்தினைப் பெற்றிருக்கிருர்கள். அது ஒருசிலருக்கே உரிய சொத்தல்ல. அது சிறந்து விளங்க, நல்ல விதையும், நிலமும், வானிலையும் தேவை. எனவே ஆசிரியர்களும், பெற்றோர்களும், பிள்ளைகளுக்கு ஏற்ற நல்ல சூழ்நிலையை அமைத்துத் தர வேண்டும். அவர்களின் ஆக்கத்

திறத்தினைப் பேணி வளர்ப்பதற்கான அடிப்படை நியதிகள் மூன்று உள்ளன. முதலாவதாக, எப்போதாவது ஒருமுறை நாம் நினைப்பது போலன்றி அவர்கள் நினைக்கும் வண்ணமே பிள்ளைக்கு எதையும் செய்வதற்கு வாய்ப்பளிக்க வேண்டும். இரண்டாவதாக, பிள்ளைகளை, அவர்களுக்கே உரியவிதத்தில், பல நடவடிக்கைகளைப் பற்றி கற்பனை செய்வதற்கான வாய்ப்புகளைப் பெருக்கவேண்டும். மூன்றாவதாக, சிறுவன் ஏதாவதொன்றை உண்டாக்கும்போது, அது எவ்வளவு அற்பமாக இருப்பினும், அதனிடம் மகிழ்ச்சியையும், ஆர்வத்தையும் காட்டவேண்டும். இதனையே வள்ளுவர் ஆற்றுகின்ற செயல் எவ்வளவு சிறியதாயினும், அதைத் தூற்றாமல், போற்றவேண்டும் என்கின்றார். தரணி போற்றும் தங்கத் தலைவர்களை உருவாக்கவும், சமுதாயச் சிற்பிகளைத் தாயகம் பெறவும், ஆக்கத் திறத்தினை ஊக்குவிப்போம்!

# 8. ஆர்வங்கள்

## (Interests)

இளையோரை அறிந்துகொள்ள முற்படும் நாம், அவர்கள் ஒரு சில நடத்தைகளில் ஏன், எவ்வாறு, எதனால் ஈடுபடுகின்றனர் என்பதை அறிந்துகொள்ளவேண்டியது அவசியம். ஒரு மனிதனது ஆர்வங்கள், அவன் தன் வாழ்க்கையில் கொண்டுள்ள விருப்பங்களையும், ஆசைகளையும் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. ஒரு தனியன் தான் கொண்டுள்ள ஆசைகளையும் விருப்பங்களையும் நிறைவேற்றுவதற்கு அதற்கான வழிமுறைகளை வகுத்துக்கொண்டு செயல்படத் தொடங்குகின்றான். அதே சமயத்தில், தனக்கு ஆர்வமற்ற செயல்களின்பால் தன் கவனத்தைச் செலுத்தாதும், அவற்றில் ஈடுபடாதும் இருக்க முனைகின்றான். இவ்வாறு அவனிடம் காணப்படும் ஆர்வங்கள், அவனுடைய வாழ்க்கையினை வெகுவாகப் பாதிக்கின்ற காரணிகளாக உள்ளன. ஆதலால், இளையோரின் நடத்தைகளை முன்னறிந்து, அவைகளைக் கட்டுப்படுத்துவதற்கு அவர்களின் ஆர்வங்களைப் பற்றிய அறிவு அவசியமாகிறது. இதனால் இப் பருவத்தில் காணப்படும் குறிப்பிடத்தக்க ஆர்வங்களையும், அவை தோன்றி வளர்ச்சியடையும் விதத்தினையும், அவற்றை எவ்வகையில் பயன்படுத்திக்கொள்ள முடியும் என்பதனையும் இந்த அதிகாரத்தில் கவனிப்போம்.

மனிதன் தனக்கு இன்பமளிக்கும் அல்லது சமூக, தொழிற்துறைகளில் தனக்குப் பயனளிக்கும் நோக்கத்தின் பால் செயல்படுவதற்குக் காரணமாய் உள்ளவை ஆர்வங்களாகும். எனவே, ஆர்வங்கள் மனிதனை ஒரு குறிப்பிட்ட செயலின் பால் ஈடுபடுத்தும் உளச்சார்பு நிலையாகும். ஒருவனது நடத்தை ஆர்வங்களினால் உந்தப்படும் போது, அவன் தன் சூழ்நிலையில் இருக்கும் பொருள்களில் தன் ஆர்வங்களுக்கு உகந்தவற்றின் பால் மட்டுமே தனித்த கவனம் செலுத்துகின்றான். இவ்வாறு, ஒரு தனியன் ஏன் தன் சூழ்நிலையிலுள்ள ஒரு சில பகுதிகளை மட்டுமே தேர்ந்தெடுத்து

அவற்றின் பால் தன் கவனத்தைச் செலுத்துகின்றான் என்பதற்கு ஆர்வங்கள் விளக்கமளிக்கின்றன.

இளையோர் பருவம், எண்ணற்ற பல்வேறுபட்ட ஆர்வங்களைத் தன்னகத்தே கொண்டது. இவ்வார்வங்களை நாம் இருவகைகளாகப் பிரிக்கலாம். அவை உள்ளார்ந்த (Intrinsic) ஆர்வங்கள், வெளிச்சார்ந்த (Extrinsic) ஆர்வங்கள் என்பனவாகும். ஒருவன் தனக்குக் கிட்டும் மகிழ்ச்சிக்காகவும், களிப்பிற்காகவும் மட்டுமே ஒரு விளையாட்டில் பங்குகொள்கின்றானெனின், அந்த ஆர்வம் உள்ளார்ந்த ஆர்வமாகும். ஆனால் தனது உடல் ஆரோக்கியத்தினைக் கருதியும்; தன் குழுவினரையும் பள்ளித் தோழர்களையும் மகிழ்விக்கவும், தன் திறமையினால் தன் குழுவிற்குப் புகழினைத் தேடித் தருவதோடு, சமூகத்தில் தனக்கு உயர்ந்த மதிப்பினையும் புகழினையும் தேடிக்கொள்ளவும், ஒரு சில விளையாட்டுகளில் ஆர்வம் செலுத்துவானேயானால், அது வெளிச் சார்ந்த ஆர்வமாகும். எனவே ஒரு செயலில் எவ்வித நோக்கமும் இன்றி அந்தச் செயலுக்காகவும் அதில் கிட்டும் மகிழ்ச்சிக்காகவும் மட்டுமே ஈடுபடுவது உள்ளார்ந்த ஆர்வத்தினைக் காட்டுகின்றது. மாறாக, ஒரு செயலில் ஒரு நோக்கத்தோடு ஈடுபடுவது வெளிச் சார்ந்த ஆர்வமாகும். இளையோரிடம் இவ்விரு வகைப்பட்ட ஆர்வங்களும் காணப்படுகின்றன.

ஆர்வங்களை அறியும் முறைகள் :

இளையோரின் ஆர்வங்களை அளவிட்டறிய உளவியலார் பல முறைகளைக் கையாளுகின்றனர். இளையோர் தாங்களாகவே விரும்பி ஈடுபட்டுச் செயல்படும் நடவடிக்கைகளையும் அவைகளின் தன்மைகளையும் பகுத்தாய்வதன் மூலம் அவர்களின் ஆர்வங்களைப் பற்றி நாம் அறிய முடியும். எனினும், இத்தகைய முறை அறவே குறைபாடு இல்லாதது என்று நாம் கருத முடியாது. ஏனெனில், ஒரு இளையோன் ஒரு குறிப்பிட்ட செயலின் பால் அளவிற்கதிகமான ஆர்வம் மீதூறப் பெற்றிருந்தாலும், அவனது சூழ்நிலை, குடும்பநிலை, பொருளாதார வசதியின்மை போன்ற காரணிகளால் அவன் அந்தச் செயலில் ஈடுபட முடியாது இருக்க நேரிடலாம். சான்றாக, உயர்நிலைப்பள்ளியிலும் கல்லூரியிலும் பயிலும் மாணவர்கள் தங்களின் பாடப் புற நடவடிக்கைகளான (Extra curricular activities) விளையாட்டுப் போட்டிகள், இலக்கியப் போட்டிகள், சுற்றுலா செல்லுதல் போன்ற நடவடிக்கைகளில் பங்குகொள்ளாதிருப்பது, அவர்களுக்கு அவைகளில் விருப்பம் இல்லாததனால் தான் என்று சொல்ல முடியாது. இத்தகைய நடவடிக்கைகளில் இவர்களுக்கு விருப்பங்கள் இருப்பினும், மற்றச் சூழ்நிலைக் காரணிகள்

தங்கள் விருப்பத்துடன் ஒத்துவராத காரணத்தினால் அவர்கள் அத்தகைய நடவடிக்கைகளில் ஈடுபட முடிவதில்லை. ஆதலால், இவர்கள் பங்குகொள்ளாத நடவடிக்கைகளில் இவர்களுக்கு ஆர்வமே இல்லை என்று கருத முடியாது.

இளையோரின் உரையாடல்களை (Conversations) ஆய்வது, அவர்களின் ஆர்வங்களைப் பற்றி அறிந்துகொள்ளப் பயன்படும் மற்றொரு முறையாகும். இளையோர் தங்கள் அருகில் பெரியவர்களோ, பெற்றோர்களோ இல்லாத நேரத்தில் தங்கள் நண்பர்களுடன் அளவளாவும் உரையாடல்களை ஆராய்வது இம்முறையாகும். ஒரு சமூக நிகழ்ச்சிக்காக மக்கள் கூடும்போது ஒரு உட்குழுவினர் பேசுகின்ற விஷயங்களைச் சேகரிப்பதன் மூலமும், விடுதியில் தங்கியிருக்கும் மாணவர்கள் படுக்கப்போகுமுன் பேசுகின்றவைகளையும், அவர்கள் தங்களின் அந்தரங்க விஷயங்களைப் பரிமாறிக் கொள்வதையும், ஆராய்வதன் மூலமும், இளையோரில் காணப்படும் முக்கியமான ஆர்வங்களைப் பற்றி அறியலாம்.

இளையோரின் எழுத்துப் படைப்புகளை, சிறப்பாக, அவர்களின் நாட்குறிப்பேடுகள், நண்பர்களுக்கு எழுதும் கடிதங்கள் போன்றவற்றை ஆராய்வதன் மூலமும் இளையோரின் ஆர்வங்களைப் பற்றி அறிய முடியும். பள்ளி, கல்லூரி ஆண்டு மலர்களில் இவர்கள் எழுதும் எழுத்தோவியங்களும் இவர்களின் ஆர்வங்களைப் பிரதிபலிப்பனவாக இருக்கும். ஆதலால் இவைகளை ஆராய்வதன் மூலமும் அவர்களின் ஆர்வங்களைப் பற்றி அறியலாம்.

பல்வேறுபட்ட சூழ்நிலைகளில் இளையோரிடம் உண்டாகும் உடல் மாற்றங்களைக் கொண்டும் அவர்கள் ஆர்வங்களை அறியலாம். சான்றாக, இளையோரிடம் தோன்றும் முகபாவனைகளைக் கொண்டு அவர்களிடம் எந்தப் பொருள் அல்லது சூழ்நிலை விருப்பமானது அல்லது விருப்பமற்றது என்று அறிந்து, அவைகளின் மூலம் இளையோர் எவ்வகைச் செய்திகளை, விஷயங்களை ஆர்வத்தோடு ஏற்கின்றனர் என்றும், எத்தகைய விஷயங்களைப் புறக்கணிக்கின்றனர் என்றும் தீர்மானிக்க முடியும். திரைப்படம், விளையாட்டுப் போட்டிகள், சமூக நிகழ்ச்சிகள், மேடைப் பேச்சுகள், தனித்த உரையாடல்கள் போன்றவற்றை இளையோர் கவனிக்கும் போது, அவர்களில் ஏற்படும் முகபாவனைகளை நாம் உற்றுநோக்கி, எந்தெந்த விஷயங்களுக்கு, நிகழ்ச்சிகளுக்கு அவர்கள் எத்தகைய முகபாவனைகளைக் கொள்கின்றனர் எனக் கண்டு, அவற்றின்மூலம் அவர்களின் ஆர்வங்களை நாம் அறிந்துகொள்ளலாம்.

இவை எல்லாவற்றையும் விடச் சிறந்த முறையானது இளையோர்களிடமே, அவர்களின் விருப்பங்களைப் பற்றி எடுத்துக் கூறும்படிக் கேட்பதாகும். சிறுவர்களும் சிறுமியர்களும் பெரும் பாலும் பருப்பொருள்களின் பால் ஆசைகொண்டிருக்கையில், வயது அதிகரிக்க அதிகரிக்க இத்தகைய பருப்பொருள்களின் பாலான ஆர்வங்கள் குறைந்து, எதையாவது சாதிக்கும் பொருட்டும், ஏதாவதொரு குறிக்கோளை அடையும் பொருட்டும் ஆர்வம் கொள்கின்றனர். உயர்நிலைப்பள்ளி கல்லூரி, மாணவர் களைப் பேட்டி கண்டதில் உயர் தொடக்கப்பள்ளி மாணவர்கள் பொருள்களைப் பெற்றிருப்பதில் மிகுந்த ஆர்வத்தினைக் கொண்டி ருந்தும், தங்களை முன்னேற்றிக்கொள்ளும் விஷயங்களில் ஆர்வத் தினைச் செலுத்தாமலும் இருந்தனர். ஆனால், உயர்நிலைப்பள்ளி கல்லூரி மாணவர்கள் தங்கள் முன்னேற்றம் பற்றிய விஷயங்களில் அதிக ஆர்வத்தினைக் கொண்டிருந்தனர்.

விளையாட்டு, பொழுதுபோக்கு ஆர்வங்களைக் கண்டறிய லெஹ்மன் பயன்படுத்திய கேள்வி நிரலும் (Lehman's Interest Questionnaire), தொழில் சார்ந்த ஆர்வங்களைக் கண்டறிய ஸ்டிராங் உருவாக்கிய தொழில் ஆர்வத்தாளும் (Strong's Vocational Interest Blank) இந்த முறையினைச் சார்ந்தவை. இளையோர் பருவத்து ஆண்பிள்ளைகள் தங்கள் சுயதேவைகளை நிறைவேற்றுவதி லும், தங்கள் கல்வியிலும் நிரந்தரமான வேலைகளில் சேருவதிலும் ஆர்வத்தினைக்கொண்டவர்களாக இருந்தபோது பெண்பிள்ளைகள் தங்கள் உடல் ஆரோக்கியம், உடையலங்காரம், ஆடவர்களிடத்து மிகுந்த செல்வாக்கினைக் கொண்டிருத்தல் போன்றவற்றில் ஆர்வங் கொண்டவர்களாக இருந்தனர். ஸிமான்ட்ஸ் (Symonds) என்பார், பல்வேறுபட்ட ஆர்வங்களைக் கொண்ட பட்டியல் ஒன்றினை உயர்நிலைப்பள்ளி மாணவர்களுக்குத் தந்து, அவைகளைத் தங்கள் ஆர்வங்களின் தகுதியின் அடிப்படையில் வரிசைப்படுத்து மாறு கூறினார். இச்சோதனையின் வழி பணம், உடல் ஆரோக்கியம் கவர்ச்சிகரமான உடலமைப்பு, நடையுடை பாவனை, கவர்ச்சி போன்றவைகளில் இளையோர் அதிக ஆர்வத்தினைச் செலுத்து கின்றனர் என்றும், தினசரி நடவடிக்கைகளிலும், பொறுப்பினைக் கொண்ட செயல்களிலும், வெகுவாக ஆர்வங்கொள்வதில்லை என்றும் தெரியவருகின்றது.

ஆர்வங்களைப் பாதிக்கும் மாறிகள் (Variables Affecting Interests) :

ஆர்வங்கள் பல்வேறு காரணிகளின் அடிப்படையில் உருவாகி வளர்ச்சியடைகின்றன. இளையோரின் ஆர்வங்களைப் பாதிக்க வல்ல மாறிகள் பின் வருவனவாகும்.

**உடல் வளர்ச்சி :**

தனியன் வளர்ச்சியடையும்போது அவனுடைய ஆர்வங்களில் மாறுபாடு ஏற்படுகின்றது. இத்தகைய மாறுபாட்டினையே அவனைச் சார்ந்த சமூகமும், சூழ்நிலையும் அவனிடம் எதிர்பார்க்கின்றன. இளையோன் தன் வயதுக் குழுவினருடன் பழகும்போது அவனது சிறுபிள்ளைத்தனமான ஆர்வங்கள் விலக்கப்பட்டு, அவன் புதிதாகப் பெற்றிருக்கும் குழுத் தகுதி நிலைக்கேற்ப அவனது ஆர்வங்கள் வளர்கின்றன. நாட்டுப் பற்று, சமூகப்பணி போன்றவற்றின் பாலான ஆர்வங்கள் வயதின் அடிப்படையிலேயே இளையோனிடம் தோன்றுகின்றன.

உடல் வளர்ச்சியானது ஒரு சில செயல்களின் பாலான ஆர்வங்களைத் தோற்றுவிக்கின்றது. சக்தியும் வலிமையும் மிகுந்த உடல் வளர்ச்சியினைப் பெறும் இளையோர் தங்களின் திறமையினையும், வலிமையினையும் பிறருக்கு எடுத்துக்காட்ட விரும்புவதால் அவர்கள் தங்கள் திறமைக்கும், வலிமைக்கும் ஏற்ற விளையாட்டுப் போட்டிகளில் ஈடுபட்டு அவைகளின்பால் ஆர்வத்தினை வளர்த்துக்கொள்கின்றனர். எனவே, உடல் வலிமையும் தசை வலிமையும், எத்தகைய விஷயங்களில், நடவடிக்கைகளில் இளையோர் ஆர்வம் செலுத்துகின்றனர் என்பதனையும், அவற்றில் எந்த அளவிற்கு அவர்கள் பங்குகொள்ள முடிகின்றது என்பதனையும் விளக்கும் காரணிகளாகக் காணப்படுகின்றன.

ஆர்வங்களின் மாற்றம் வயதின் அடிப்படையில் ஏற்படுகின்றதா அல்லது பாலின முதிர்ச்சியினால் உண்டாகிறதா என்பதைக் கண்டறிய ஸ்டோனும், பார்கரும் (Stone and Barker) ஒரே சமூகப் பொருளாதார நிலையின்பாற்பட்ட சமவயதுடைய பூப்பெய்திய பெண்பிள்ளைகளையும், பூப்பு எய்தாத பெண்பிள்ளைகளையும் ஆய்ந்தனர். இதில், ஒரு குறிப்பிட்ட வயதில் பூப்பெய்திய பெண்பிள்ளைகள், அதே வயதினைச் சார்ந்த பூப்பெய்தாத பெண்பிள்ளைகளைவிட அதிக அளவில் எதிர்ப்பாலினரின் பால் ஆர்வம் காட்டினர் எனக் கண்டறியப்பட்டது. இங்ஙனமே பூப்பெய்திய பெண்பிள்ளைகள் பூப்பெய்தாத பெண்பிள்ளைகளைவிட உடை, நகையலங்காரங்களிலும், கற்பனை சம்பந்தமான செயல்களிலும் அதிக ஆர்வங்களைக் காட்டினர் என அவர்கள் கண்டறிந்தனர். இதனைப்போன்றே, ஒரு குறிப்பிட்ட வயதில் பூப்பெய்திய ஆண்பிள்ளைகளையும், அதே வயதினைச்சார்ந்த பூப்பெய்தாத ஆண்பிள்ளைகளையும் ஒப்பிட்டுப் பார்த்ததில் அவர்கள் பூப்பெய்தியதினால் ஒருசில ஆர்வங்களை வளர்த்துக் கொண்டுள்ளனர் என ஸாலன் பெர்ஜர் (Sollen Berger) என்பார்

கண்டுள்ளார். எனவே, எதிர்ப்பாலினரின் பாலான ஆர்வம் வயது அதிகரிப்பதனுல் அன்றி பாலின முதிர்ச்சியினுலும் தோன்றுவதாகக் காணப்படுகிறது.

நுண்ணறிவு :

ஒருவனுடைய நுண்ணறிவுத் தரம் அவனது ஆர்வத்தினைப் பாதிக்கவல்லது எனப் பல ஆராய்ச்சியாளர்கள் கண்டுள்ளனர். உயர்ந்த நுண்ணறிவினைக் கொண்ட இளையோர் குறைந்த நுண்ணறிவினை உடையவர்களைவிட பொழுதுபோக்குச் செயல்களில் அதிகமாக ஆர்வங்களைக் காட்டுகின்றனர். பள்ளிப் படிப்பில் உயர்ந்த தரத்தினை வகிப்பவர்கள், அறிவு சம்பந்தமான செயல்களில் மிகுதியான ஆர்வங்களைக் காட்டுகையில், பள்ளிப் படிப்பில் குறைந்த தரத்தினைப் பெற்றிருப்போர் இதிலிருந்து மாறுபடுகின்றனர். இங்ஙனமே, நுண்ணறிவு மிக்கவர்கள் வாஞெலி கேட்டல், செய்தித்தாள்கள் படித்தல் போன்றவற்றில் மிகுந்த ஆர்வங்களைச் செலுத்தும்போது நுண்ணறிவில் குறைந்தவர்கள் அவற்றின்பால் தங்கள் ஆர்வங்களை வெகுவாகச் செலுத்துவதில்லை.

சூழ்நிலை :

உடல், உளக் காரணிகளைத் தவிர ஒருவனின் ஆர்வங்கள், அவன் வாழும் சூழ்நிலையினையும் பொறுத்து மாறுகின்றன. மேலும், அவனது சமூகக் கட்டுப்பாட்டுத் தன்மையினையும் பொறுத்து ஆர்வங்கள் அமைகின்றன. இளையோன் எந்தச் சூழ்நிலையில் வாழ்கின்ருனே அந்தச் சூழ்நிலையில் குடியிருக்கும் மக்களின் தன்மை, வானிலை, அங்குள்ள வாய்ப்பு வசதிகள் போன்றவை அவனிடம் குறிப்பிட்ட ஆர்வங்களைத் தோற்றுவிக்கின்றன. கிராமப்புறத்தில் வாழும் இளையோர், மல்யுத்தம், சடுகுடு விளையாட்டுகள், மரமேறுதல், மலையேறுதல், நீச்சல் விளையாட்டு போன்றவற்றில் அதிக ஆர்வங்களைக் கொண்டிருக்கையில், நகரத்திலுள்ளோர் திரைப்படம் செல்லுதல், சைக்கிள் ஓட்டுதல், ஊர் சுற்றுதல், விளையாட்டுப் போட்டிகளுக்குச் செல்லுதல் போன்றவற்றில் ஆர்வங் காட்டுகின்றனர். ஸிமாண்ட்ஸ் என்பார் (Symonds) நகரத்து இளையோர், பாலினக் கவர்ச்சி, தோற்றம், உடல் அழகு, பொருளாதார விஷயங்கள் ஆகியவற்றில் அதிக அக்கறை செலுத்துகையில், கிராமப்புற இளையோர் இவைகளில் வெகுவாக அக்கறை காட்டுவதில்லை என்று கூறியுள்ளார்.

ஒரு சமூகத்தின் பண்பாட்டுத் தன்மைகளைப் பொறுத்தும், அச் சமூகத்து இளையோரின் ஆர்வங்கள் வளர்கின்றன. ஒரு சமூகத்

தில் மேற்கொள்ளப்படும் தொழிலிற்கேற்பப் பெரும்பாலும் அச் சமூகத்தினைச் சார்ந்த இளைஞர்கள் ஆர்வங்களையுடையவர்களாயிருக்கின்றனர். இங்ஙனம், விவசாயத்தினைத் தொழிலாகக் கொண்ட ஒரு சமூக அமைப்பில் வாழும் தனியன், விவசாயம் சார்ந்த செயல்களில் ஆர்வங்களைக் காட்டுவதும், மீன் பிடிக்கும் சமூகத்தின் இளையோன் அத்தொழிலில் ஆர்வத்தினைக் காட்டவும் செய்கின்றான்.

சமூகப் பொருளாதாரத் தரம் :

ஒரு குடும்பத்தின் சமூகப் பொருளாதாரத் தகுதிகள், அக் குடும்பத்து இளையோன் எந்தெந்த நடவடிக்கைகளில் ஆர்வங்களை வளர்த்துக்கொள்ள இயலும் என்பதனைத் தீர்மானிக்கின்றன. உயர்ந்த சமூகப் பொருளாதாரக் குடும்பத்து இளையோர், தங்கள் குடும்பத்தின் தரத்தினையும் செல்வாக்கினையும் பிரதிபலிக்கும் செயல்களில் ஆர்வங்களை வளர்த்துக்கொள்கின்றனர்.

உயர்ந்த சமூகப் பொருளாதாரக் குடும்பத்து இளையோர்கள் போதிய பணவசதியினையும், வாழ்க்கை வசதியினையும் பெற்றிருப்பதால் பணச் செலவினைக்கொண்ட விஷயங்களிலும் தங்கள் ஆர்வங்களைச் செலுத்த முடிகின்றது. எனவே, அவர்கள் அதிக விலை மதிப்புள்ள பத்திரிகைகள், நூல்கள் போன்றவற்றை வாங்கிப் படிக்கவும், பொழுதுபோக்கு மன்றங்களில் (Clubs) உறுப்பினராகிச் செயல்படுவதற்கும் இயலுகின்றது. பொருளாதார வசதியற்ற தாழ்ந்த சமூகத்து இளையோர்களால் இந்த வகைகளில் செயல்பட முடிவதில்லை. எனவே, அவர்கள் இத்தகைய செயல்களில் ஆர்வங்களையுடையவர்களாய் இருப்பினும் தங்கள் பொருளாதார நிலையின் காரணமாக அவைகளை வளர்த்துக் கொள்ள இயலாதவர்களாய் இருக்கின்றனர். இங்ஙனம், சமூகப் பொருளாதார நிலையும் இளையோர்களின் ஆர்வங்களைப் பாதிக்கும் ஒரு முக்கியமான காரணியாகச் செயல்படுகின்றது.

இளையோரின் ஆர்வங்களின் தன்மைகள் : (Characteristics of Adolescent Interests) :

பெரியவர்கள் விரும்புகின்ற பயன் மதிப்புகளை இளையோர் பெரும்பாலும் பொருட்படுத்துவதில்லை. இவர்கள் பொதுவாக, தங்கள் சிந்தனைகளிலும், உணர்ச்சிகளிலும் கட்டுமீறித் தீவிரமாக நடந்துகொள்கின்றனர். இந்த நிலையற்ற தன்மை அவர்களின் ஆர்வங்களிலும் பிரதிபலிக்கின்றது. ஏதாவதொன்றில் அவர்களுக்கு ஆர்வம் ஏற்படும்பொழுது, அவற்றில் தங்களை முற்றிலும் இழந்துவிடுகின்றனர். சான்றாக, புதிய வகையில் சிகையலங்-

காரம் செய்தல், புதுவகை உடைகளையணிதல், புதிய வகையான காலணிகளை அணிதல், ஆகியவற்றில் அவர்கள் கட்டுக்கு மீறி ஆழ்ந்து விடுகின்றனர். இளையோரின் ஆர்வங்கள் மிக விரைவில் மறைந்து, பின்னர் புதிய ஆர்வங்கள் அவற்றுக்குப் பதிலாகத் தோன்றுகின்றன. இத்தகைய தன்மைகள் அவர்களின் சொந்த விஷயங்களைப் பற்றிய ஆர்வங்களில் காணப்படுகின்றன. சான்றாக, இளையோன் உடையலங்காரத்தை அடிக்கடி மாற்றிக்கொள்ளும் தன்மை உடையவனாகக் காணப்படுகின்றான்.

இளையோர் பருவத்தில் ஆர்வங்கள் பெருகுகின்றன. குழந்தைப் பருவத்து ஆர்வங்கள் பல இப்பொழுது மறைந்து இளையோர் பருவத்திற்கு ஏற்ற, புதிய ஆர்வங்கள் தோன்றுகின்றன. இந்நிலையில், சமூக நடவடிக்கைகள், எதிர்ப்பாலினர், தன் தோற்றம், எதிர்காலத்தைப் பற்றித் திட்டமிடல் போன்றவைகளின்பாலான ஆர்வங்கள் படிப்படியாகத் தோன்றுகின்றன. இளையோரின் வளர்ச்சியில், ஆர்வங்களின் முக்கியத்துவம் மாற்றமடைகின்றது. முன்னிளையோர் பருவத்தில் முக்கியத்துவம் மிகுந்து காணப்பட்ட ஆர்வங்கள், பிறகு நாளடைவில் முக்கியத்துவத்தை இழந்தும், முன்னர் முக்கியத்துவமற்றுக் காணப்பட்ட ஆர்வங்கள், இப்போது முக்கியத்துவம் பெற்றும் காணப்படுகின்றன. இந்த மாற்றத்தின் விளைவாக முக்கியத்துவம் பெறும் ஆர்வங்கள், இளையோர் குழுவினரின் ஆர்வங்களுடன் ஒத்திருக்காவிடில், அவன் தன் குழுவினருடன் பொருந்தி நடப்பதில் சிரமத்தைக் காண நேரிடும். பின்னிளையோர் பருவத்தில், ஆர்வங்களின் இந்த நிலையற்ற தன்மை மறைந்து, நிலைத்த தன்மை ஏற்படுகின்றது. ஆர்வங்களில் ஏற்படும் இந்த நிலைத்த தன்மை, பொதுவாக 16, 17 வயதுகளில் ஏற்படுகின்றது. கூடரின் விருப்பத் தேர்வுப் பதிவினைப் (Kuder Preference Record) பயன்படுத்தி நடத்தப்பட்ட ஆய்வொன்றில், உயர்நிலைப் பள்ளியின் தொடக்கத்தில் காணப்பட்ட ஆர்வங்களில் 80 சதவீதம் உயர்நிலை பள்ளியின் இறுதியிலும் காணப்பட்டன எனக் கண்டறியப் பட்டது.

**ஆர்வங்களின் வளர்ச்சி :**

தனியன் வெவ்வேறு வயதில் ஈடுபடும் விளையாட்டு நடத்தைகள், அவ்வயதுகளில் காணப்படும் ஆர்வங்களைப் பிரதிபலிக்கின்றன. குழந்தையிடத்து முதன் முதலில் காணப்படும் ஆர்வமானது அதன் உடலின் பாகங்களையறிந்துகொள்ளும் பொருட்டு ஏற்படுகின்றது. முதல் மூன்று மாதங்களில், குழந்தை கை, கால், விரல்கள் ஆகியவற்றுடன் விளையாடுவதில் மன நிறைவு காண்

கின்றது. நாளடைவில் இயக்க இணக்கம் (Motor Co-Ordination) ஏற்பட்டுவிடுவதால், பொருள்களை எட்டிப்பிடிக்கவும், பற்றிக் கொள்ளவும் அது முயற்சிக்கின்றது. இப்போது அது எல்லாப் பொருள்களையும் அறிந்து கொள்ளும் பொருட்டு அவைகளில் ஆர்வம் கொள்கின்றது. இந்நிலையில், குழந்தையிடத்து இடம்பெயரும் தன்மை (Locomotion) ஏற்பட்டுவிடுவதால், அது எங்கும் சென்று, எல்லாவிடத்தையும் பொருள்களையும் துருவி ஆராய்வதில் (Exploration) ஆர்வம் கொள்கின்றது. இதைத்தான், "அறிவியற் சார்ந்த ஆர்வ உதயம்" (Dawn of Scientific Interests) என காரிஸன் குறிப்பிட்டுள்ளார். சான்றாக, முதலாண்டிற்குப் பின்னர், குழந்தை விளையாட்டுப் பொருள்களில் ஆர்வங்கொண்டு, அவற்றை அசைத்தல், இழுத்தல், பிய்த்தெறிதல், தொட்டுணர்தல், கடித்தல் போன்ற செயல்களின் மூலம் அவை எவ்வாறு இருக்கின்றன என்பதனையும், எவ்வாறு இயங்குகின்றன என்பதனையும் அறிய முயல்கின்றது. இதையடுத்து ஆக்கபூர்வமான விளையாட்டுகளான, கட்டைகளை அடுக்குதல், மணல் வீடு கட்டுதல், சமையல் செய்தல் போன்றவைகளில் அது ஈடுபடுகின்றது.

குழந்தைப் பருவத்தில் காணப்படும் ஆர்வங்களில் பாலின வேறுபாடுகள் பெரும்பாலும் காணப்படுவதில்லை. இருபாலினரும் பெரும்பாலும் ஒரேவகையான ஆர்வங்களையே உடையவர்களாகக் காணப்படுகின்றனர். தாய், தந்தையர் எனக் கற்பனை செய்து கொண்டு விளையாடும் விளையாட்டில் மட்டுமே பெண்பிள்ளைகள் தாயின் பாத்திரத்திலும், ஆண்பிள்ளைகள் தந்தையின் பாத்திரத்திலும் நடிக்க விழைகின்றனர். இதைத் தவிர ஏனையவற்றில், இருபாலினரும் பெரும்பாலும் ஒரே வகையான விளையாட்டில் ஈடுபடுகின்றனர்.

இளையோர் விளையாடும் விளையாட்டுகள் அவர்கள் பாலின வேறுபாட்டினைச் சார்ந்தே இருக்கின்றன. பெண்பிள்ளைகள் ஆர்வத்துடன் விளையாடும் விளையாட்டுகளை, ஆண்பிள்ளைகள் விளையாடுவதில்லை. இதனைப்போன்றே ஆண்பிள்ளைகளின் விளையாட்டுகளில் பெண்பிள்ளைகள் ஈடுபடுவதில்லை. விளையாட்டில் மட்டுமன்றி, ஏனைய வாழ்க்கைமுறை சார்ந்த ஆர்வங்களிலும் இங்ஙனமே இளையோர் பருவத்தில் பாலின வேறுபாடுகள் காணப்படுகின்றன. பெண்பிள்ளைகள் தங்கள் உடலமைப்பிற்கும், பாலினத்திற்கும் ஏற்ற வகையில், சமூகம் அங்கீகரிக்கும் செயல்களில் ஆர்வம் காட்டும்போது, ஆண்பிள்ளைகளும் தங்கள் பாலினத்திற்கு ஏற்ப ஆர்வங்களைக் கொள்கின்றனர். ஸிமாண்ட்ஸ் என்பார் (Symonds), இதைப்பற்றி நடத்திய ஆய்வொன்றில்,

ஆண்பிள்ளைகள் தங்களின் உடல்நலம், பாதுகாப்பு, பணம் பாலின உந்துக்கள் போன்றவற்றில் பெண்பிள்ளைகளைவிட மிகுந்த ஆர்வத்தினைக் கொண்டிருந்தனர் எனக் கண்டறிந்தார். பெண் பிள்ளைகள் தங்கள் உடற்கவர்ச்சி, அதன் தூய்மையில் அக்கறை, தினசரி நடவடிக்கைகளைச் சரிவரச் செய்வதில் அக்கறை, வீட்டிலும் வெளியிலும் உறவுகளைச் சுமுகமான முறையில் வைத்துக் கொள்வதில் அக்கறை போன்றவற்றைப் பெற்றுக் காணப்பட்டனர். இங்ஙனம் சூழ்நிலைக் காரணிகளும், அறிவு வளர்ச்சி, பாலின வேறுபாடுகள், முதிர்ச்சி, பயிற்சி போன்ற எண்ணற்ற காரணிகளும், ஆர்வங்களின் வளர்ச்சியினையும் பெருக்கத்தினையும் ஊக்குவிக்கின்றன.

எனவே, இளையோர் பருவத்தில், குழந்தைப் பருவத்திலிருந்த தன்மைய (Self-Centered) ஆர்வங்கள் மறைந்து, சமூக வளர்ச்சியினைச் சார்ந்த ஆர்வங்கள் தோன்றி வளர்ச்சியடைகின்றன. ஆர்வங்களில் ஏற்படும் இந்த மாற்றம், தனியனின் சமூக வாழ்க்கை பெருகுவதன் காரணமாகவும், அவனுள் தோன்றியிருக்கும் புதிய உந்துக்களின் விளைவினாலும் உண்டாகின்றது.

**ஆர்வங்களின் வகைகள் :**

இளையோரிடம் காணப்படும் ஆர்வங்களை நான்கு வகைகளாகப் பிரிக்கலாம். அவை 1. தன்னைப் பற்றிய ஆர்வங்கள், 2. கல்வி சார்ந்த ஆர்வங்கள், 3. விளையாட்டு ஆர்வங்கள், 4. பொழுது போக்கு ஆர்வங்கள் ஆகியவையாகும்.

**1. தன்னைப்பற்றிய ஆர்வங்கள் :**

இளையோர் பருவத்திற்கு முன்னர் சிறுவர்களும், சிறுமியர்களும், தங்கள் தோற்றத்தின்பால் மிகுந்த ஆர்வத்தினைக் கொண்டிருப்பதில்லை. எனினும், சிறுமியர், சிறுவர்களைவிட தங்கள் தோற்றத்தில் ஓரளவு அக்கறை கொண்டவர்களாகவே உள்ளனர். சிறுவர்கள் தங்கள் தோற்றத்தைப் பற்றிக் கவலைப்படுவதேயில்லை. ஏனெனில், மற்ற சிறுவர்களுடன் அவர்கள் சேர்ந்து விளையாடுவது அவர்களுக்கு மிகவும் மகிழ்ச்சியினையூட்டுவதாகவும், துணிச்சல் மிக்கதாகவும் இருப்பதால், துப்புரவாகவும், நல்ல தோற்றத்துடனும் தங்களை வைத்துக்கொள்வதைப் பற்றி அவர்கள் சிறிதும் கவலைகொள்வதில்லை. இதனால், பெற்றோர்கள் அடிக்கடி இவர்களுக்கு இவர்களின் தோற்றத்தினைப் பற்றியும், துப்புரவாக இருக்க வேண்டியதைப் பற்றியும் நினைவுறுத்த வேண்டியவர்களாயிருக்கின்றனர்.

ஆனால், இளையோர் பருவத்தின் தொடக்கத்தில், எதிர்ப்பாலின ஆர்வங்கள் தோன்றுவதால், இளையோர் தங்கள் தோற்றத்தின் பால் மிகவும் அக்கறை கொள்கின்றனர். அழுக்கடைந்த உடைகளை அணிந்திருந்த சிறுவன், இப்பொழுது சுத்தமான, சலவை மடிப்புப் கலையாத உடைகளைச் சமூகமும் எதிர்ப்பாலினரும் அங்கீகரிக்கும் வகையில் அணியத் தொடங்குகின்றான். மேலும், அவன் தன் சிகையினை அலங்கரிப்பதிலும், பற்களையும், முகத்தினையும் நன்கு சுத்தப்படுத்திக் கொள்வதிலும் ஆர்வங்கொள்கின்றான். பெண் பிள்ளைகளும் இவ்வாறே பல்வகைப்பட்ட சிகை அலங்கரிப்பிலும், ஒப்பனைப் பொருள்களிலும் நாகரீக மோகங்களிலும் ஆர்வங் கொண்டு காணப்படுகின்றனர்.

இவ்வாறு உடையலங்காரங்கள் இப்பருவத்தில் அதிக முக்கியத்துவம் பெறுகின்றன. இப்பருவத்தில் ஒருவனது மகிழ்ச்சியும், திறமையும், தன்னம்பிக்கையும், பிறர் அவனது உடற் தோற்றத்தினையும், உடையினையும் எந்த அளவிற்கு அங்கீகரிக்கின்றனர் என்பதனைப் பொறுத்துள்ளன. குழு வாழ்க்கையில், தங்கள் குழுவினரைப்போன்றே தாங்களும் உடை அணிந்திருப்பின், தாங்களும் அந்தக் குழுவினரைச் சார்ந்தவர்கள் என்ற உணர்வினை இவர்கள் மீதூறப் பெறுகின்றனர். இதுவே அக்குழுவில் அவர்களுக்கு ஒரு தகுதியினையும், பாதுகாப்பு உணர்வினையும் தர வல்லது. எனவே, அக்குழுவினரால் அங்கீகரிக்கப்பட்ட உடைகள், பெற்றோர்களாலும், மற்றவர்களாலும் புறக்கணிக்கப்பட்டாலும், இளையோர் அவற்றைத் தொடர்ந்து விரும்பி அணியவே செய்கின்றனர். சான்றாக, பெற்றோர்கள், ஆசிரியர்கள் போன்றோரின் மறுப்பிற்கு மீறியும், இன்றைய இளையோர் ஹிப்பிகளின் (Hippie) முடி வளர்த்தலையும், அகன்ற அடிப்பகுதியுள்ள முழுக்கால் சட்டைகளை அணிவதையும் (Bell-bots), அகன்ற மூக்குக்கண்ணாடிகளை (Go-Go-Glasses) அணிவதையும் விரும்புகின்றனர்.

2. கல்விசார்ந்த ஆர்வங்கள் :

இவ்வகை ஆர்வங்களைச் சார்ந்தவை; பொதுவான புத்தகங்களைப் படிப்பதில் உள்ள ஆர்வமும், பாடப் புத்தகங்களைப் படிக்கும் ஆர்வமும் ஆகும். படிப்பதினால் இளையோனுக்கு இரண்டு விதமான பயன்கள் ஏற்படுகின்றன. முதலில் அவன் தன் அறிவினை வளர்த்துக்கொள்ள அது உதவுகின்றது. மேலும் ஓய்வு நேரத்தை மகிழ்ச்சிகரமாகக் கழிக்கவும் அது உதவியாக இருக்கின்றது. குழந்தை, பள்ளியில் சேர்வதற்கு முன்னரே, தேவதைக் கதைகளையும், மிருகங்களைப் பற்றிய சிறு சிறு கதைகளையும்

கேட்பதில் ஆர்வம் காட்டுகின்றது. குழந்தை, வயதினை அடையும் போதுதான் வாக்கியங்களைத் தொடர்ந்து கவனமாகப் படித்தறியும் ஆற்றலைப் பெறுகின்றது. 9, 10 வயதுகளில் குழந்தைகளுக்குத் தேவதைகளின் கற்பனைக் கதைகளில் ஆர்வம் குறையத் தொடங்குகின்றது. இக்காலத்தில் பாலின வேறுபாடுகளும் தோன்றத் தொடங்குகின்றன. சிறுவர்கள் துணிச்சல்களைக் கொண்ட கதைகளையும், மர்மக் கதைகளையும் படிப்பதில் ஆர்வம் கொள்கின்றனர். சிறுமியர் தொடர்ந்து தேவதைக் கதைகளிலும், விலங்குகளின் கதைகளிலும் ஆர்வத்தினைக் கொண்டிருக்கின்றனர். எனினும், சிறுமியர் காதல் கதைகள், குடும்பக் கதைகளைப் படிப்பதிலும் ஆர்வம் காட்டுகின்றனர். 12, 13 வயதுகளின் இடையில் தான் படிக்கும் செயல்களில் அதிகமான ஆர்வம் காணப்படுகின்றது. இதனால்தான் இக் காலத்தைப் "படிப்பின் மீதான ஆர்வ வெறிக்காலம்" (Reading Crazy Period) எனக் குறிப்பிடுகின்றோம்.

இந்தக் காலத்தில், தலைவன் வழிபாடு (Hero-worship) ஏற்படுவதால், வரலாற்றில் புகழ்பெற்றவர்களின் வாழ்க்கை வரலாறுகளையும், வீரர்களின் கதைகளையும் படிப்பதில் மிகுந்த ஆர்வம் ஏற்படுகின்றது. துணிச்சல்களைக் கொண்ட கதைகள், பயணக் கட்டுரைகள், மர்மக் கதைகள் ஆகியவற்றில் தொடர்ந்து ஆர்வம் காணப்படுகின்றது. இத்தகையவற்றைப் படிப்பதில் இருக்கும் மிகையான ஆர்வத்தின் நோக்கம், படிப்பதில் கிட்டும் களிப்பினை அனுபவிப்பதேயாகும். ஆதலால், இக்கால ஆர்வங்கள் உள்ளார்ந்த ஆர்வங்களைச் சாரும். ஆனால் முன்னிளையோர் பருவத்திற்குப் பின்னர், படிப்பதின் இந்த நோக்கம், அறிவினை வளர்த்துக் கொள்ளும் நோக்கத்தின்பாற் செயல்படுகின்றது. இத்துறையில் நடத்திய ஆய்வு ஒன்றில், படித்தலில் ஆர்வ வெறிகொண்டவர்கள் இந்த ஒரு வருடத்தில் சராசரியாக 31 புனைக்கதைகளைப் படித்தனர் என்றும், 7 வயது மாணவர்கள் சராசரி 7 புத்தகங்களையே படித்தனர் என்றும் கண்டறியப்பட்டது.. படித்தலில் ஏற்படும் இன்னுமொரு வளர்ச்சித் தன்மை, தேர்ந்தெடுத்துப் படிப்பதில் காணப்படுகின்றது. பின் குழந்தைப் பருவத்தில் கிடைத்ததையெல்லாம் படித்தவன், இப்போது தன் ஆர்வங்களைச் சில துறைகளின்பால் குறுக்கிக்கொண்டு, அத்துறையில் உள்ள புத்தகங்களையே எடுத்துப் படிக்கின்றான். எனவே, தனியாள் வேறுபாடுகள் இக்காலத்தில் மிகுந்து காணப்படுவது இயல்பே. இளையோரில் சிலர் துணிச்சல் சார்ந்த கதைகளை விரும்பும்போது, சிலர் அறிவியல் சார்ந்த கதைகளையும், இன்னும் சிலர் காதல் கதைகளையும் படிப்பதில் ஆர்வம் மிகுந்து காணப்படுகின்றனர்.

இவ்வாறு அவர்களின் படித்தலின் ஆர்வங்கள் ஒரு துறையின் பால் குறுகுவது 16 வயதில் நிகழ்கின்றது.

இளையோர் தங்களுக்கு விருப்பமுள்ள துறைகளில் உள்ள புத்தகங்களை எடுத்துப் படிப்பது வயதின் அடிப்படையிலும், பாலினத்தின் அடிப்படையிலும் மாறுகின்றது. வேடிக்கைப் புத்தகங்களைப் படிப்பதில் இவர்களுக்கு இருக்கும் ஆர்வம் நாளடைவில் குறையத் தொடங்குகின்றது. பிரிங்க் என்பார் (Brink) படிக்கும் ஆர்வம் பற்றிய ஆய்வு ஒன்றில், இரு பாலினரிலும் துணிச்சல் செயல்களைப் பற்றிய புத்தகங்களைப் படிக்கும் ஆசையே முதன்மையாகக் காணப்பட்டதாகக் கண்டார். இந்தத் துணிச்சல் கதைகளிலும் மர்மக் கதைகளிலும் உள்ள ஆர்வங்கள் பிறகு குறைந்து, அவை, காதல் கதைகளிலும், வாழ்க்கை வரலாறுகளிலும் மாறிக் காணப்பட்டன.

இளையோர் தேர்ந்தெடுக்கும் புத்தகங்களைப் பற்றிய ஆய்வு ஒன்றில், ஆண்கள் பெண்களைவிட எண்ணற்ற பல்வகையான புத்தகங்களைத் தேர்ந்தெடுப்பதில் அதிக ஆர்வத்தினைக் காட்டினர் எனத் தெரியவந்தது. ஆண்பிள்ளைகளில், துணிச்சல் செயல் பற்றிய கதைகள் முதலாவது இடத்தினையும், புனைகதைகள் இரண்டாவது இடத்தினையும், மிருகங்களைப் பற்றிய கதைகள் மூன்ருவது இடத்தினையும் பெற்றபோது, பெண்பிள்ளைகளில் பாதிக்கு மேற்பட்டோர் புனைகதைகளைப் படிப்பதில் ஆர்வம் மிக்கவர்களாகக் காணப்பட்டனர். டெர்மனும், லிமாவும் (Terman and Lima), பெண்பிள்ளைகள் ஆண்பிள்ளைகளைவிட நாடகப் புத்தகங்களை அதிகமாக விரும்புகின்றனர் என்று கண்டறிந்துள்ளனர். செய்தித் தாள்களையும், பத்திரிக்கைகளையும் படிப்பது வயதின் அடிப்படையில் அதிகரிக்கின்றது. பிரவ்ன் என்பார் (Brown) தன் ஆய்வில் ஐந்தாவது வகுப்புப் பிள்ளைகளில் 12 சதவீதத்தினர்தான் பத்திரிக்கைகளைப் படிக்கின்றனர் என்றும் உயர்நிலைப்பள்ளி இறுதி வகுப்புகளில் உள்ள மாணவர்களில் 75 சதவீதத்தினர் இவைகளைப் படிக்கின்றனர் என்றும் கண்டறிந்தார்.

ஜெர்ஸில்டும், டாஷ்ஷும் (Jersild and Tasch) பாடப் பகுதிகளின் ஆர்வங்களைப் பற்றிச் செய்த ஆய்வு ஒன்றில், பள்ளியின் எல்லா வகுப்பு மாணவர்களும் பள்ளிப் பாடங்களை விரும்புகின்றனர் என்று கண்டறிந்தனர். கீழ் வகுப்புகளில், உயிரியல் (Biology) அதிகமாக விரும்பப்படாதிருந்தது என்றும், மேல்வகுப்புகளில் அது வெகுவாக விரும்பப்பட்டதென்றும் கூறுகிருர். எனினும், மேல் வகுப்புகளில் பள்ளிப் பாடங்களைவிட, விளையாட்டிலும்,

போட்டிப் பந்தயங்களிலும், மாணவர் இயக்கங்களிலும் ஆர்வங்கள் மிகுந்து காணப்பட்டன. கபாட் (Kabat), தன் ஆய்வில், பள்ளியில் போட்டிப் பந்தயங்களேயும், பள்ளிச் சமூக நடவடிக்கைகளேயும் தவிர, வேறொன்றும் பயன் தரக்கூடியதாகக் காணப்படவில்லை என்று ⅞ பங்கு உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் கூறியதை அறியப் பெற்றார். இதிலிருந்து உயர்நிலைப்பள்ளியில் கற்றுத் தரப்படும் பாடங்களில் மாணவர்கள் பெரும்பாலும் ஆர்வமற்று இருக்கின்றனர் எனத் தெரியவருகின்றது. இப்பாடங்கள் நடைமுறை வாழ்க்கையுடன் தொடர்பற்று இருப்பதன் காரணமாக மாணவர்கள் இத்தகைய மனப்பாங்கினைக் கொண்டிருக்கலாம். எனவே, இந்த உண்மை பள்ளிப் பாடத்திட்டத்தினை நாம் மறுபரிசீலனை செய்யவேண்டிய அவசியத்தினை வலியுறுத்துகின்றது.

ஒரு தனியனுக்கு ஒரு துறையில் நல்ல அறிவும் திறமையும் இருந்தால், அவன் அத்துறையின்பால் ஆர்வம் கொள்ளமுடிகின்றது. சான்ருக, எண்திறமையுள்ள ஒரு தனியன், கணிதத்தில் ஆர்வங் கொள்ள வாய்ப்பு உள்ளது. இதனைப் போன்றே, ஒரு தனியன் இசையின்பால் இயற்கையான உள நாட்டம் (Aptitude) பெற்றிருந்தால், அவன் அதன்பால் ஆர்வங்கொள்ள முடியும். தார்ண்டைக் (Thorndike) தன் ஆய்வு ஒன்றில், திறமைக்கும் ஆர்வத்திற்கும் இடையே உள்ள தொடர்பாடு எண் ·89 ஆக உள்ளதாகக் கண்டறிந்தார். எனவே ஆர்வங்களுக்கும், இயற்கை உளநாட்டங்கள், திறமைகளுக்கும் இடையே குறிப்பிடத்தக்க தொடர்பாடுகள் உள்ளன என்பதனை நாம் அறியலாம். மேலும் ஆர்வங்களுக்கும் கல்விச் சாதனைகளுக்கும் இடையே வெகுவான தொடர்பு உண்டு என்பதனையும் சில ஆய்வுகள் காட்டியுள்ளன. ஆதலால், ஒரு வேலைக்கு ஆர்வத்தினடிப்படையில் ஊக்குவிக்கப்பட்டால், அதில் மாணவர்கள் நல்ல தேர்ச்சியினைப் பெறுகின்றனர். எனவே, ஆர்வம் தேர்ச்சியினை வளர்க்கின்றது, தேர்ச்சி ஆர்வத்தினை வளர்க்கின்றது என்று நாம் கருதலாம்.

### 3. விளையாட்டு ஆர்வங்கள் :

இளையோர் பருவத்திற்குச் சற்று முன்னர் இரு பாலினரும் வேறுபட்ட விளையாட்டு ஆர்வங்களைப் பெறத் தொடங்குகின்றனர். ஆண் பிள்ளைகள் கோலி விளையாடுதல், வண்டி ஓட்டுதல், திருடன் காவலர் விளையாட்டு, பட்டத்தினைப் பறக்கவிடுதல், பம்பரம் ஆடுதல் போன்றவற்றில் ஈடுபடும்போது, பெண்பிள்ளைகள் கட்டங்கள் தாண்டுதல், கல் விளையாடுதல், விடுகதைகளை விடுத்தல், சமைத்து விளையாடுதல், பொம்மைகளுக்குத் திருமணம் நடத்துதல் போன்றவற்றை அதிகமாக விளையாடு

கின்றனர். இளையோர் பருவத்தின் தொடக்கத்தில், தனியன் விளையாட்டில் உள்ளார்ந்த ஆர்வத்தினைக் கொள்கின்ருன். இதில், அவனுக்குக் கிட்டும் களிப்பிற்காகவே ஈடுபடுகின்ருன். ஆதலால் அவன் தன் கவனத்தைப் படிப்பிலிருந்து இதன் பக்கம் செலுத்த விழைகின்ருன். இத்தகைய கவன மாற்றம் இளையோனின் செயல் திறத்திற்கும் அவசியமானது. ஏனெனில், கல்வி சார்ந்த செயல்கள் வெளிச்சார்ந்த பயன் மதிப்புகளையே பெரும்பாலும் நல்குகின்றன. எனவே கல்விச் செயல்களில் ஈடுபடுவதனுல் ஏற் படும் விறைப்பினைத் தளர்த்த அவன் விளையாட்டில் தானுகவே ஈடுபடவேண்டும். இதனுல் பாடம் படிப்பதற்குத் தேவையான ஆற்றல் மீண்டும் புதுப்பிக்கப்பட்டு, மேற்கொண்டு படிப்பில் ஈடுபடுவதற்குத் தனியன் சக்தியினைப் பெறுகின்ருன். மேலும், விளையாட்டுகள் அவனது உடல் வலிமையினைப் பெருக்கி, அவன் ஆரோக்கியத்தை வளர்த்துப் பாதுகாக்கவும் பயன்படுகின்றன. எனவே விளையாட்டுகள் வெளிச்சார்ந்த பயனையும் கொண்டவை யாகும்.

முற்காலத்தில், விளையாட்டும் படிப்பும் பிரிக்கப்பட்டு, அவை ஒன்றுக்கொன்று எதிரானவையாகக் கருதப்பட்டன. படிப்பு, மிகுந்த பலனை உடையதாகவும், விளையாட்டு பயனற்றதாகவும் கருதப்பட்டது. இதனடிப்படையில், விளையாட்டு, நேரத்தினை வீணுக்கும் என்று கருதப்பட்டது. ஆனுல் இக்காலத்தில், விளை யாட்டு மிகுந்த பயனை உடையது எனவும், விளையாட்டின் போக்கு ஆக்கத்திறத்தினை வளர்க்கின்றது எனவும், கல்வியும் விளையாட்டான முறையில் கற்பிக்கப்பட்டால், நல்ல பயனை விளைவிக்கின்றது எனவும் பல ஆராய்ச்சிகள் எடுத்துக்காட்டியுள் ளன. எனவே, விளையாட்டு பயனற்றது என்பதனையும் நேரத்தை வீணுக்குவது என்ற கருத்தினையும் நாம் மறுக்கலாம். ஆதலால், கல்வியில் விளையாட்டான போக்குடைய மாணவர்களை, ஆசிரி யர்கள் விரும்பத்தகாதவர்கள் என்று கருதக்கூடாது.

இளையோர் பருவத்தில் ஆண்பிள்ளைகள் எல்லாவிதமான உடற்பயிற்சி சார்ந்த விளையாட்டுகளிலும் அதிக ஆர்வம் காட்டு கின்றனர். இப்போது இவர்கள் தனிப்பட்ட வகையில் விளை யாட்டுப் போட்டிகளில் ஈடுபடுவதைவிட, ஒரு கூட்டணியின் (Team) உறுப்பினர்களாய் மாறி, தங்கள் திறமைகளை ஒருங் கிணைத்து, அணியினர் எல்லோரின் ஒத்துழைப்போடு, தங்கள் கூட்டணி வெற்றி பெறவும் புகழ் அடையவும் பாடுபடுகின்றனர். இவ்வாறு ஒரு குழுவின்பால் பற்றுறுதி (Loyalty) வளரவும் விளையாட்டுகளின் ஆர்வங்கள் காரணமாய் விளங்குகின்றன.

இத்தகைய சிறு குழுவின்பாலான பற்றுறுதிதான், தன் மாநிலம், தன் நாடு போன்ற பெருங்குழுக்களின் பால் பற்றுறுதி வளர அடிப்படையாயுள்ளன.

இப் பருவத்துப் பெண்பிள்ளைகள் தங்கள் உடல் மென்மைக் கேற்ப வலிய, கடினமான விளையாட்டுகளைத் தவிர்த்து, சிரமம் குறைந்த, மென்மையான விளையாட்டுகளில் ஈடுபடுகின்றனர். மேலும், உடற்பயிற்சி விளையாட்டுகளில் அவர்கள் பங்கு கொண்டால், அவர்கள் விரும்பும், பெண்களுக்குகந்த தோற்றத்தினையும், உடலினையும் அவர்கள் பெற இயலாது. எனினும், விளையாட்டில் காணப்படும் பாலின வேறுபாடுகள், வெவ்வேறு சமுதாயத்தில் வெவ்வேறு விதமாகக் காணப்படுகின்றன. ஆதலால், பாலினத்தினைத் தவிர, ஒரு சமுதாயத்தில் காணப்படும் பழக்கவழக்கங்கள் சூழ்நிலைத் தன்மைகள், கல்வித்தரம் ஆகியவை அச் சமுதாயத்தின் விளையாட்டு நடவடிக்கைகளில் செல்வாக்குக் கொண்டிருக்கின்றன.

பின்னிளையோர் பருவத்தில், தசை வலிமையும், சிரமமும் மிகுந்த விளையாட்டுகளில் தனியனுக்கு ஆர்வம் குன்றி, அறிவின் அடிப்படையில், விதிமுறைகளுக்கு உட்பட்டு விளையாடப்படும் விளையாட்டுகளில் ஆர்வம் வளர்கின்றது. இத்தகைய விளையாட்டுகளின்மூலம், இளையோனுக்குக் களிப்பும், உணர்ச்சியூக்கமும் தன் சக்திகளை வீணுக்காமலேயே கிட்டுகின்றன. நுண்ணறிவில் மேம்பட்டிருக்கும் இளையோர், குறிப்பாக இத்தகைய அறிவின் அடிப்படையில் விளையாடப்படும் விளையாட்டுகளில் ஆர்வம் மிகுந்து காணப்படுகின்றனர். அவர்கள் தசை வன்மையும் சிரமமும் மிகுந்த விளையாட்டுகளில் மிகக் குறைந்த ஆர்வத்தினையுடையவர்களாக இருக்கின்றனர்.

4. பொழுதுபோக்கு ஆர்வங்கள் (Recreational Interests) :

இளையோர் தங்களின் ஒய்வு நேரத்தில் பல்வேறுபட்ட நடவடிக்கைகளில் ஈடுபட்டு, மகிழ்ச்சியையும் உணர்ச்சியூக்கத்தினையும் அடைகின்றனர். இந்த ஓய்வு நேர நடவடிக்கைகள் பெரும்பாலும், பொழுது போக்கிற்காக உள்ளன என்றாலும், இதைத்தவிர அவை இளையோரின் பொது அறிவினையும், அனுபவத்தினையும் வளர்க்கின்றன. இளையோர் வெகுவாக ஈடுபடும் முக்கியமான பொழுது போக்கு நடவடிக்கைகள், உரையாடல், பகற் கனவு, திரைப்படம், வானொலி போன்றவைகளாகும்.

உரையாடல் (Conversation :

பிறருடன் எண்ணங்களையும் கருத்துகளையும் பகிர்ந்துகொள்ளும் ஆர்வம், இளையோர் பருவத்தில் மிகுந்து காணப்படுகின்றது.

இளையோர் பலர் தங்களின் எண்ணங்களையும், கருத்துகளையும் உரையாடல் வழி வெளிப்படுத்துகின்றனர். இளையோர், தங்களின் நண்பர்களிடமிருந்து விலகியிருக்கும்போது, மன அமைதியின்றிக் காணப்படுகின்றனர். எனவே, நண்பர்கள் தங்களை விட்டுத் தொலைவிடங்களுக்குச் செல்லும்போது, தொலைபேசியின் மூலமும், கடிதங்களின் மூலமும் அவர்களோடு தொடர்புகொள்ள விழைகின்றனர்.

ஒரு பொருளைப்பற்றி விவாதித்தலின் மூலம், பல புதிய கருத்துகளும், எண்ணங்களும், வழி முறைகளும் தோன்றுகின்றன, இளையோரின் விவாதங்கள் தங்களின் சொந்த நடவடிக்கைகள் பற்றியோ, அறநெறி, சமூக, சமயப் பிரச்சினைகளைப் பற்றியோ இருக்கும். இத்தகைய விவாதங்களில் இளையோர் வெகுவாக ஈடுபடுகின்றனர்.

வாதாடுதல், பொதுவாக, ஒரு பொருளைப்பற்றி விவாதிப்பதில் தோன்றுகின்றது. இளையோர் தங்கள் கருத்துகள் பிறரின் கருத்துகளிலிருந்து மாறுபடுவதை உணரும் சமயத்தில், விவாதித்தல், வாதாடுதலாக மாறுகின்றது. வாதாடுதலில் ஒவ்வொருவரும், தங்களுடைய கருத்துகளையே நிலைநிறுத்தவும், நிரூபிக்கவும் முயற்சிக்கின்றனர். இத்தகைய வாதாடுதல், முன்னிளையோர் பருவத்தினை விடப்பின்னிளையோர் பருவத்தில்தான் மிகுந்து காணப்படுகின்றது. வாதாடுதலில், இளையோர் அடிக்கடி உணர்ச்சி வயப்பட்டுச் சினங்கொள்கின்றனர். ஆண் பிள்ளைகளிடை ஏற்படும் இத்தகைய வாதாடுதல், சில வேளைகளில் கைச்சண்டையாகவும் மாறுகின்றது. எனினும், விவாதமும், வாதாடுதலும் சில பயன்களைக் கொண்டுள்ளன. இவை இளையோருக்குத் தங்கள் கருத்துகளைப் பிறருடன் பகிர்ந்து கொள்ளும் வாய்ப்பினை யளிக்கின்றன. இதன் மூலம், இளையோன் தன்னுடைய கருத்துகளை, மற்றவர்களின் கருத்துக்களோடு ஒப்பிட்டுத் தெளிவுபடுத்திக் கொள்ளமுடிகின்றது. மேலும், விவாதத்திலும், வாதாடுதலிலும், இளையோர் உரக்கப் பேசுவதால், அவர்கள் தங்களின் கருத்துகளைத் தங்கள் பேச்சின் மூலமே கேட்க வாய்ப்புக் கிடைக்கப்பெற்று, அந்தக் கருத்துகளைப் புதிய நோக்கில் பார்க்க இயலுகின்றது. அவர்களுடைய இந்தக் கருத்துகளில், பிறர் குறை காணும்போது, அவற்றை மாற்றி, சரி செய்து கொள்ளவும் இதில் வாய்ப்புக் கிடைக்கின்றது. இவைகளைத் தவிர, உரையாடுதலில், முயன்று தவறும்

வழியின் மூலம் (Trial and Error) எந்தெந்தத் தலைப்புகள் மகிழ்ச்சி யூட்டுபவையாகவும், சமூக அங்கீகரிப்புள்ளவையாகவும் இருக் கின்றன என்பதனை இளையோர் அறிந்து கொள்ளும் வாய்ப்பினைப் பெறுகின்றனர். இவ்வாறு அவர்கள் முக்கியத்துவம் மிக்க, சமூகத் திறமையான உரையாடுதலில் தேர்ச்சி பெறுகின்றனர்.

பள்ளிப் பருவத்திற்கு முந்திய சிறுவர்களை ஆராய்ந்ததில், அவர்களின் உரையாடல்கள் தங்களைப்பற்றியும், தங்கள் நட வடிக்கைகளைப் பற்றியுமே இருந்ததாகக் கண்டறியப்பட்டது. வயது அதிகரிக்க, அதிகரிக்க, தங்களைப் பற்றியே பேசுகின்ற ஆர்வம் குறையத் தொடங்குகின்றது. மூன்றாவது வகுப்பிலிருந்து ஆறாவது வகுப்பு வரையுள்ள பிள்ளைகளின் உரையாடல்களைப்பற்றி நடத்தப்பட்ட ஆய்வினின்று, இக்குழந்தைகள் முறையே, விளை யாட்டு, தங்களின் சொந்த அனுபவங்கள், பயணங்கள், தங்களின் செல்லப் பிராணிகள், அவற்றின் குறும்புச் செயல்கள், தங்கள் குடும்பத்தில் உள்ளவர்கள், நண்பர்களைப் பற்றிப் பேசினர் என அறிகிறோம். பிளீஜ் என்பார் (Fleege), 9வது வகுப்பிலிருந்து பள்ளி இறுதி வகுப்பு வரையுள்ள உயர்நிலைப்பள்ளி மாணவர் கள் வெகுவாகப் பேசும் தலைப்புகளைப் பற்றிக் கேட்ட ஆய்வு ஒன்றில், அவர்கள் அளித்த பதில்களிலிருந்து, இப்பருவத்து இளையோர், விளையாட்டுகள், பெண்பிள்ளைகள், சமூக நடவடிக் கைகள், பாலின விஷயங்கள், இழிவான கேலிப் பேச்சுகள் (Dirty Jokes) ஆகியவற்றைப் பற்றிப் பேசியது தெரியவருகின்றது. மேலும், இப்பருவத்துப் பிள்ளைகள் தொழில் சார்ந்த விஷயங் களைப் பற்றியும் பேசுவதாகக் கண்டறிந்தனர்.

கல்லூரி மாணவர்களின் உரையாடல்களை அறிந்துகொள்ளும் நோக்கில் நடத்தப்பட்ட ஆய்வு ஒன்றில், ஒரு குறிப்பிட்ட கால அளவில் ஆண்பிள்ளைகள் பேசிய தலைப்புகளின் சராசரி 3·4 ஆகவும் பெண்பிள்ளைகள் பேசிய தலைப்புகளின் சராசரி 5·7 ஆகவும் காணப்பட்டது. இந்தப் பாலின வேறுபாடு, ஆண்பிள்ளைகள் ஒரு தலைப்பில் நீண்ட நேரத்தினைச் செலவிட்டதால் ஏற்பட் டிருக்கவேண்டும். ஆண்பிள்ளைகள் விவாதித்த தலைப்புகள், பாலினம் சார்ந்தவைகள், விளையாட்டுகள், குழுக்கள், உடைகள், குடித்தல் ஆகியவையாகவும், பெண்பிள்ளைகள் பேசியவைகள் பாலினம் சார்ந்தவை, ஆடைகள், குழுக்கள், உணவுப்பண்டங்கள் ஆகியவையாகவும் இருந்தன.

புகை வண்டி நிலையங்களிலும், உணவு விடுதிகளிலும், கொட்டகைகளிலும், இன்னும் மக்கள் கூடும் இடங்களிலும் பேசப்

பட்டவைகளை ஆய்ந்ததில், இவை பெரும்பாலும் விளையாட்டு, மற்ற பொழுதுபோக்கு நடவடிக்கைகள், எதிர்பாலினர், ஆடைகள் ஆகியவற்றைப் பற்றி இருந்தது என அறியப்பட்டது. இதிலும், பாலின வேறுபாடுகள் மிகுந்து காணப்பட்டன. ஆண்கள், வாணிபம், மற்றும் பொழுதுபோக்குகளைப் பற்றி வெகுவாகப் பேசியபோது, பெண்கள் உடைகளைப் பற்றியும், மற்ற பெண்களைப் பற்றியும் அதிகமாகப் பேசினர்.

பகற் கனவு (Day Dream) :

பகற்கனவு இளையோர் விரும்பும் ஒரு முக்கிய பொழுதுபோக்கு நடவடிக்கையாகும். இதன் பயன்களில், பொதுவாக இரு நோக்குகளைக் காணலாம். இது துணிந்து ஈடுபடும் நோக்கத்தினையும், பின்வாங்கும் நோக்கத்தினையும் கொண்டுள்ளது. வாழ்க்கையின் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதற்கு ஏற்ற முறைகளையும், அத்தகைய பிரச்சினைகளிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள ஏற்ற முறைகளையும் இது கொண்டுள்ளது.

இளையோன் தன் திறமைகளுக்கு அப்பால் நின்று, காலம், இடைவெளி ஆகியவற்றின் தடைகளை வெல்லக்கூடிய ஆராய்ச்சியினைத் தன் கற்பனையின்மூலம்தான் செய்ய முடியும். நடைமுறை வாழ்க்கையில் அவன் செய்ய முடியாதவைகளைத் தன் கற்பனை வாழ்க்கையில் சாதிக்க இயலும். சான்றாக, அவன் தன் பகற் கனவில் ஒரு சிறந்த தலைவனாகவோ, செல்வந்தனாகவோ, சிறந்த பாடகனாகவோ, நடிகனாகவோ ஆக இயலும். அவன் தன் நடைமுறைச் சூழ்நிலையில் மிகவும் வறிய நிலையில் இருந்தாலும், தன் பகற்கனவில் செழிப்பாக வாழ இயலும். உண்மை வாழ்க்கையில் அவனால் அடையமுடியாத மிக அழகிய பெண்ணையும், அவன் தன் பகற்கனவில் காதலித்து அடைய முடியும். இதனைப்போன்றே, பெண்களும், உண்மை வாழ்க்கையில் அடைய முடியாத இலட்சிய ஆண்மகனைக் கற்பனை உலகத்தில் அடைய முடியும்.

உண்மை வாழ்க்கையில் நிறைவேற்றப்படாத ஆசைகளை மட்டும் நிறைவேற்றிக்கொள்ளப் பகற்கனவுகள் பயன்படுவதில்லை. இளையோன் தன் வாழ்க்கையின் பல்வேறு துறைகளில் ஏற்படும் கடினமான பிரச்சினைகளை, வெவ்வேறு நோக்கில் ஆய்ந்து அவற்றிற்கான தீர்வுகளை ஓரளவிற்கு அடைவதற்கும் இவை உதவுகின்றன. மேலும் இளையோன் தன் எதிர்காலத்தினைப் பற்றிக் கொண்டுள்ள நம்பிக்கைகளையும், எதிர் பார்ப்பவைகளையும் இவை பிரதிபலிக்கின்றன. இளையோன் தன் எதிர்காலத்தினைப் பற்றிய நம்பிக்கைகளையும், எதிர் பார்ப்பவைகளையும் ஒத்திகை செய்து பார்ப்பதற்கு

இது துணையாக இருக்கின்றது. இதன்மூலம் அவன் தன் நோக்கில் ஏற்படக்கூடும் இடர்ப் பாடுகளை நன்கு அறியப்பெற்று, அவற்றை வென்று, தன் நோக்கத்தின்பால் முன்னேறவும் பகற்கனவு உதவுகின்றது. பகற்கனவு காணல் ஒரு இயல்புத் தன்மையாகும். இது இளையோர் பருவத்தில் வெகுவாகக் காணப்படுகின்றது. இளையோன் பகற்கனவு காணுதலைத் தொடர்ந்து பழக்கமாகக் கொண்டு வாழ்க்கையின் உண்மை நிலையிலிருந்து வெகுவாக விலகிச் சென்றால்தான், அது பிறழ் நிலைத் தன்மைக்கு வழிகோலும்.

இளையோர் காணும் பகற் கனவுகளைப் பற்றி எண்ணற்ற ஆய்வுகள் நடத்தப்பட்டுள்ளன. ஸ்டோனும், பார்க்கரும் (Stone and Barker), பூப்படையாத பெண்பிள்ளைகளையும், பூப்படைந்த பெண்பிள்ளைகளையும் அவர்கள் காணும் பகற்கனவின் அடிப்படையில் ஒப்பிட்டுப் பார்த்ததில், பூப்படைந்த பெண்கள் பூப்படையாத பெண்களைவிட பகற்கனவில் அதிகமாக ஈடுபட்டு, அதிக மகிழ்ச்சியினை அடைந்தனர் என்று கண்டறிந்தனர். இளையோரின் வயதிற்கேற்ப அவர்கள் இப் பருவத்தில் காணும் பகற்கனவுகளின் பொருள்கள் மாறுபடுகின்றன. உயர்நிலைப்பள்ளி மாணவர்களின் பகற்கனவுகள், பெரும்பாலும் பாசம், சாதனை, பாதுகாப்புணர்வு ஆகியவற்றைச் சார்ந்துள்ளன. இளையோரின் பகற்கனவுகளைப் பற்றி நடத்தப்பட்ட ஆய்வுகளில் மிக முக்கியமானதும், விரிவானதுமான ஆராய்ச்சி சிமான்ட்ஸ் என்பாரின் (Symonds) ஆய்வாகும். இவர் 12 ஆண்பிள்ளைகளையும், 12 பெண்பிள்ளைகளையும் 42 படங்களைக் கொண்ட புறத்தேற்று செய்முறை (Projective Technique) மூலம் ஆராய்ந்தார். அவர் தன் சோதனைக் குறிப்புகளை இரண்டு பிரிவுகளாகப் பிரித்துப் பகுத்தாய்ந்தார். இந்த இரு பிரிவினை, உளவியல் கருத்துப் பொருள் (Psychological Themes) என்றும், சூழ்நிலைக் கருத்துப் பொருள் (Environmental Themes) என்றும் அவர் குறிப்பிட்டார். உளவியல் கருத்துப் பொருளானது இளையோன் தன் பகற்கனவில் மற்றவர்களுக்கு என்ன செய்கின்றான் என்பதனைக் குறிக்கின்றது. இதைப்போன்றே சூழ்நிலைக் கருத்துப் பொருளானது இவன் பகற்கனவில் மற்றவர்கள் இவனுக்கு என்ன செய்கின்றனர் என்பதைக் குறிக்கின்றது.

இந்த ஆய்வில், உளவியல் கருத்துப் பொருள்களில் அன்பும், வெறுப்பும் வெகுவாகக் காணப்பட்டன. கல்லூரி மாணவர்களின் பகற்கனவுகளில் தொழிலில் வெற்றி, பாலினம் சார்ந்தவைகள், பணம் ஆகியவை வெகுவாகக் காணப்பட்டன. பெண்களில் 75 சதவீதத்தினரும், ஆண்களில் 25 சதவீதத்தினரும் தங்களின் உடற் கவர்ச்சியினைப் பற்றிப் பகற்கனவு கண்டனர். ஆண்களில் 33

சதவீதத்தினரும், பெண்களில் 10 சதவீதத்தினரும் உடல் வலிமை சார்ந்தவற்றைப் பற்றிப் பகற்கனவு கண்டனர்.

**திரைப்படத்தில் ஆர்வம் (Interest in Movies):**

திரைப்படத்திற்குச் செல்லுதல் ஓர் ஆர்வம் மிகுந்த பொழுது போக்கு நடவடிக்கையாகும். பெரும்பாலான இளையோர் விளையாட்டு, படித்தல் போன்றவைகளைவிட திரைப்படத்திற்குச் செல்வதையே அதிகமாக விரும்புகின்றனர். திரைப்படம் பார்ப்பதில் அதிக ஆர்வம் இருபாலினருக்கும் இளையோர் பருவத்தில்தான் எழுகின்றது. குழந்தைப் பருவத்தில் ஒரு தனியன் மாதத்திற்கு ஒன்று அல்லது இரண்டு திரைப்படங்களை மட்டுமே பார்க்கின்றான். முதிர்ந்தோருக்கு ஒரு மாதத்திற்கு ஒன்றிரண்டு படங்களைப் பார்ப்பதற்கும் கூட விருப்பம் இருப்பதில்லை. ஆனால் இளையோர் வாரத்தில் ஒன்று அல்லது இரண்டு திரைப்படங்களை யாவது பார்க்கவேண்டும் என ஆர்வங் கொண்டிருக்கின்றனர். பிளீஜ் என்பார் (Fleege) 2000 ஆண்பிள்ளைகளைப் பற்றி ஆய்ந்ததில், அவர்களில் 75 சதவீதத்தினர் வாரத்திற்கு ஒரு முறையோ அதற்கு மேலோ திரைப்படத்திற்குச் சென்றனர் என்று கண்டறிந்தார். மேலும், இவ்வாய்வில் ஆண்பிள்ளைகள் பெண்பிள்ளைகளைவிட அதிகமாகத் திரைப்படத்திற்குச் சென்றனர் என்றும், விளையாட்டு நடவடிக்கைகள் மட்டுமே இவர்களைத் திரைப்படம் செல்வதி லிருந்து தடுத்தன என்றும் கண்டறியப்பட்டது. இவ்வாறு, குழந்தைப் பருவத்திலிருந்து இளையோர் பருவத்தின் இறுதிவரை திரைப்படத்திற்குச் செல்லும் ஆர்வம் வயதினடிப்படையில் அதிகரித்துக்கொண்டே வந்து, பின்னர் தனியன் முதிர்ச்சியினை எய்தியவுடன், குறையத் தொடங்குகின்றது.

கதைகள், பத்திரிகைகளைப் படிப்பதைப்போன்றே, திரைப் படத்திற்குச் செல்வதிலும் ஒரு சில பாலின வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஆண்பிள்ளைகள் வீர, தீரச் செயல்கள் நிறைந்த படங்கள், துணிச்சலான செயல்களைச் சித்தரிக்கும் படங்கள், துப்பறியும் படங்கள், பாலினக் கவர்ச்சியினைக் கொண்ட படங்கள், காதல் படங்கள், நகைச்சுவைப் படங்கள், மிருகங்களை வேட்டையாடுவது பற்றிய படங்களை விரும்பிப் பார்க்கின்றனர். எனினும் திரைப்படங்கள் பார்ப்பதில் தனியாள் வேறுபாடுகள் காணப்படுகின்றன. கல்விசார்ந்த படங்களிலும், போர்ப் படங் களிலும் பொதுவாக இருபாலினரும் ஆர்வமற்று இருக்கின்றனர்.

குழந்தைப் பருவத்தில் இருபாலினருமே தாய், தந்தையர், குடும்பத்தினருடன் திரைப்படங்களுக்குச் செல்கின்றனர். ஆனால்

இளையோர் பருவத்தில், இரு பாலினருமே தங்களின் குடும்பத்தினர் சுற்றத்தினரோடு செல்வதை விரும்பாது, தங்கள் நண்பர்களுடன் திரைப்படம் செல்வதில் மிகுந்த ஆர்வம் உடையவர்களாய் இருக்கின்றனர். எனினும் பின்னிளையோர் பருவத்தில், ஆண்பிள்ளைகள் தங்கள் சம வயதுப் பெண் நண்பர்களுடன் திரைப் படங்களைப் பார்ப்பதில் அதிக விருப்பம் கொண்டுள்ளனர். பெண்பிள்ளைகள் தங்களுக்கு மிகவும் நெருங்கிய தோழிகளுடன் திரைப்படத்திற்குச் செல்வதில் மிகுந்த ஆர்வம் உடையவர்களாய் இருக்கின்றனர்.

திரைப் படங்கள் எவ்வாறு தனியனின் நடத்தைகளைப் பாதிக்கின்றன என்பதனைக் கண்டறிய, எண்ணற்ற ஆய்வுகள் செய்யப்பட்டுள்ளன. இவற்றின் மூலம் இளைய குழந்தைகள் சில விதத் திரைப்படங்களைப் பார்த்த பின்னர், தூக்கத்தில் அமைதியற்று இருக்கின்றனர் என்றும், அவர்களுடைய நாடித் துடிப்பிலும், உயிர்த்தல் அளவுகளிலும் மாறுதல்கள் ஏற்படுகின்றன என்றும் தெரிகின்றது. இளையோர் நடத்தையில் படங்கள் கொண்டிருக்கின்ற செல்வாக்கு, இளையோரின் மனப்பாங்கிலும் கருத்துகளிலும் பிரதிபலிக்கின்றது. பெண்பிள்ளைகள் உடையலங்காரம், சிங்காரிப்பு, சிகையலங்காரம், நடப்பு வழக்கு ஆகியவற்றைப் பற்றியும் வெவ்வேறு சமூகச் சூழ்நிலைக்கு ஏற்ற நடத்தை முறைகளைப் பற்றியும் அறிவதற்குப் படங்கள் பயன்படுவனவாகவுள்ளன எனக் கருதுகின்றனர்.

திரைப்படங்களே, இளம் குற்ற நடத்தை (Juvenile Delinquency) அதிகமாகிக்கொண்டு வருவதற்குக் காரணமாயிருக்கின்றன என்று பெரும்பாலும் கருதப்படுகின்றது. இத்துறையில் கருத்துவேறுபாடுகள் மிகுந்திருப்பதினாலும், சோதனைச் சான்றுகள் வெகுவாக இல்லாததினாலும், இதைப் பற்றித் திட்டவட்டமான முடிவுக்கு நாம் வர இயலாது. எனினும் திரைப் படங்கள் சிலவேளைகளில் ஒருவனின் மனப்பாங்கிலும், நடத்தையிலும் தீய விளைவினை ஏற்படுத்துகின்றன என்பதில் ஐயமில்லை. குறிப்பாக நடத்தைப் பொருத்தப்பாடுகளில் பிரச்சினைகளையுடையோர் திரைப் படங்களினால் மிகுதியான கெட்ட வழிகளில் செல்லத் தலைப்படுகின்றனர்.

வானொலியில் ஆர்வம் (Radio interests):

இளையோர் பெரும்பாலும் தங்கள் இல்லத்தையடைந்தவுடன் வானொலியினைத் திருப்பிக்கொள்கின்றனர். இவர்கள் படிக்கும் போதும், சாப்பிடும்போதும், ஆடையணியும்போதும், பேசும் போதும் வானொலியினையும் பாடவைத்துக் கொள்கின்றனர்.

இளையோர் வானொலியினை வைத்துக்கொண்டு படித்தால், நன்கு படிக்க முடிகின்றது எனக் கூறுகின்றனர். ஆனால், நம் கவனத்தை ஒரே நேரத்தில் இரு பொருள்களின்பால் ஈடுபடுத்த முடியாது எனச் சோதனைகள் திட்டவட்டமாகக் கூறுகின்றன. ஆதலால் வானொலியினை வைத்துக்கொண்டால், நன்கு படிக்க முடிகின்றது என்ற கருத்து தவறானதாகும். மனையகப் (Indoor) பொழுது போக்கு நடத்தைகளில், எல்லா வயதினரும் வெகுவாக விரும்புவது வானொலியேயாகும்.

இளையோரின் வாழ்க்கையில் வானொலி எந்த அளவிற்கு முக்கியத்துவம் வாய்ந்திருக்கின்றது என்பதனைப் பின்வரும் சோதனையிலிருந்து அறியலாம். உயர்நிலைப்பள்ளிக் குழுவினரை திரைப்படங்கள், பத்திரிகைகள், செய்தித்தாள்கள், வானொலி போன்றவற்றில், ஒன்றைத் தவிர, மற்றெல்லாவற்றையும் விட்டு விட வேண்டியிருந்தால், எதனை அவர்கள் வைத்துக்கொள்ள விரும்புவர் என்று கேட்டபோது, பெரும்பாலோர் வானொலியினைத் தான் குறிப்பிட்டனர். இளையோர் வானொலியினை திரைப் படத்தைவிட அதிகமாக விரும்புகின்றனர். ஏனெனில், வானொலி வீட்டிலேயே இருப்பதால், எந்த நேரத்திலும், அதைத் திருப்பிக் கொள்ளலாம். ஆனால் திரைப்படத்திற்கு, சில குறிப்பிட்ட வேளைகளில் தான் போகமுடியும். மேலும், அதற்கான பணமும் அப்போது கையில் இருக்கவேண்டும்.

ஒன்பதாவது வயதிலிருந்து பன்னிரண்டாவது வயது வரையுள்ள பிள்ளைகள் ஒரு நாளில் 2 மணி நேரமும், 12-வது வயதிலிருந்து 15-வது வரையுள்ள பிள்ளைகள் ஒரே நாளில் $2\frac{1}{2}$ மணி நேரமும் வானொலியினைக் கேட்கின்றனர் என்று ஆராய்ச்சிகள் பகர்கின்றன. இவற்றில், பாலின வேறுபாடுகள் காணப்படவில்லை. இளையோர் தங்களுக்கு விருப்பமிருக்கும் நேரத்தில், வானொலியில் ஒலி பரப்பப்படும் எதனையும் கேட்கத் தயங்குவதில்லை. என்னினும், அவர்கள் சில நிகழ்ச்சிகளை மற்றவர்களைவிட அதிகமாக விரும்பிக் கேட்கின்றனர். இவர்கள் வானொலி நிகழ்ச்சிகளில் மிகவும் விரும்பிக் கேட்பவை, நகைச்சுவைத் துணுக்குகள், துப்பறியும் கதைகள், கொலை, கொள்ளை, மர்மம் சார்ந்த கதைகள், திரைப்படப் பாடல்கள், போன்றவைகளாகும். இவற்றிலும், பாலின வேறுபாடுகள் மிகுந்து காணப்படவில்லை. கிளார்க் என்பார் (Clark) தன் ஆய்வில் மிகவும் குறைந்த பாலின வேறுபாடுகளை இந்த விஷயத்தில் கண்டார். இதைப் போன்றே, ராபின்சன் என்பாரும் (Robinson), ஹியுவெஸ் என்பாரும் (Hewes) தங்கள் ஆராய்ச்சிகளில், பாலின வேறுபாடுகள் காணப்

படவில்லை என்று தெரிவித்துள்ளனர். எங்கு பாலின வேறுபாடுகள் காணப்பட்டனவோ, அவற்றைப் பொறுத்தவரை ஆண்பிள்ளைகள் துணிச்சல் சார்ந்த நடவடிக்கைகளைச் சித்தரிக்கும் நிகழ்ச்சிகளையும், பெண்பிள்ளைகள் காதல் சார்ந்த நிகழ்ச்சிகளையும் விரும்புவதாகக் கண்டறியப்பட்டது. நுண்ணறிவு, சமூகப் பொருளாதாரத் தரம், இனம் ஆகியவற்றிலுள்ள வேறுபாடுகள், இளையோரின் வானொலி கேட்கும் பழக்கத்தில் செல்வாக்கு அற்று இருக்கின்றன என டைலர் (Tyler), ரீட் (Reid), மற்றும் பலர் செய்த ஆராய்ச்சி களிலிருந்து தெரிய வருகின்றது.

1940-ஆம் ஆண்டிற்கு முன்னர் நடத்தப்பட்ட ஆய்வுகள், ஆண்பிள்ளைகளும் பெண்பிள்ளைகளும் செய்தி நிகழ்ச்சிகளைப் பெரும்பாலும் விரும்புவதில்லை எனக் காட்டியுள்ளன. ஆனால் 1940-ஆம் ஆண்டில் நடத்தப்பட்ட ஆய்வுகளினின்று செய்தி நிகழ்ச்சிகளை இளையோர் மிகவும் விரும்புவதாகத் தெரிகிறது. 1940-ஆம் ஆண்டிற்குப் பின்னர் மீண்டும் செய்தி நிகழ்ச்சிகளில் விருப்பம் குறையத் தொடங்கியது. 1940-ஆம் ஆண்டில், செய்தி களின்பால் காணப்பட்ட அதிகமான ஆர்வம், இரண்டாம் உலகப் போரின் காரணமாக, இளையோரிடத்து அதன் போக்கினைப்பற்றி அறிந்துகொள்வதில் இருந்த ஆர்வத்தினைக் காட்டுகின்றது. இந்த முடிவு, இளையோரின் ஆர்வம், துணிச்சல் சார்ந்த நடவடிக்கை களின் பால் மிகுந்திருக்கின்றது என்பதனை உறுதிப்படுத்துகின்றது.

வானொலி கேட்பதனால் சிறுவர்களில் சிலருக்கு உடல் சார்ந்த மாறுதல்கள் ஏற்படுகின்றன என ஆராய்ச்சிகள் காட்டி யுள்ளன. ஆனால் சிறியோரிடம், வானொலி கொண்டிருக்கும் செல்வாக்கு அவர்களின் மனப்பாங்குகளைப் பாதிப்பதில்லை எனத் தெரிகின்றது. இளையோன் வானொலியில் கேட்பவைகளைப் பெரும்பாலும் நம்புவதால், அவனுடைய மனப்பாங்குகளில் அவை குறிப்பிடத்தக்க மாற்றங்களை ஏற்படுத்த இயலும். எனவே, கல்வியை முன்னேற்றுவதற்கும், இளையோரின் பிற்கால வாழ்க்கை சிறந்து விளங்குவதற்குத் தேவைப்படும் பயன் மதிப்பு களைக் கற்பிப்பதற்கும், பயனுள்ள முறையில் வானொலியினை உபயோகிக்கலாம். சீரிய வகையில் பயன்படுத்தப்பட்டால், இளையோரின் நடத்தையும், ஆளுமைத் தன்மையும் நன்கு அமைய, வானொலி துணையாக இருக்கும்.

அதிகாரச் சுருக்கம் :

ஒரு மனிதனது ஆர்வங்கள் அவன் தன் வாழ்க்கையில் கொண்டுள்ள விருப்பங்களையும் ஆசைகளையும் நமக்கு எடுத்துக்

காட்டுகின்றன. ஆர்வங்களை உள்ளார்ந்த ஆர்வங்கள், வெளிச் சார்ந்த ஆர்வங்கள் என இருவகையாகப் பிரிக்கலாம். இளையோரின் ஆர்வங்களை அளவிட்டறிய உளவியலார் பல முறைகளைக் கையாளுகின்றனர். ஒரு இளையோன் ஒரு குறிப்பிட்ட செயலின்பால் அளவிற்கதிகமான ஆர்வம் மீதூறப் பெற்றிருந்தாலும், அவனது சூழ்நிலை, குடும்பநிலை, பொருளாதார நிலை போன்ற காரணிகளால் அவன் அச்செயலில் ஈடுபடமுடியாது இருக்கலாம். இளையோரின் உரையாடல்களை ஆய்வது, அவர்களின் ஆர்வங்களைப்பற்றி அறிந்து கொள்ளப் பயன்படும் ஒரு முறையாகும். இளையோரின் எழுத்துப் படைப்புகள், நாட் குறிப்பேடுகள், கடிதங்கள், அவர்களிடம் ஏற்படும் உடலியக்க மாற்றங்கள், முகபாவனைகள் போன்றவைகளை ஆராய்வதன் மூலமும், அவர்களின் விருப்பங்களை எடுத்துக் கூறக் கேட்டு அறிவதன் மூலமும், அவர்களின் ஆர்வங்களை அறியலாம்.

இளையோரின் ஆர்வங்களை பாதிக்கவல்ல காரணிகளாக பல உள்ளன. தனியனின் உடல் வளர்ச்சியடையும்போது அவனுடைய ஆர்வங்களிலும் மாறுபாடு ஏற்படுகின்றது. நுண்ணறிவின் தன்மையும் ஒருவனுடைய ஆர்வத்தினைப் பாதிக்க வல்லதாகும். உயர்ந்த நுண்ணறிவினைக் கொண்ட இளையோர், குறைந்த நுண்ணறிவினை, உடையவர்களைவிட பொழுது போக்குச் செயல்களில் அதிகமான ஆர்வங் கொண்டுள்ளனர். சூழ்நிலையும் ஆர்வங்களை ஊக்குவிக்கின்ற காரணியாக உளது. மேலும் சமூகப் பொருளாதார நிலையைப் பொறுத்தும் ஆர்வங்கள் தோன்றுகின்றன.

இளையோர் பருவத்தில் ஆர்வங்கள் பெருகுவதோடு முக்கியத்துவமும் அடைகின்றன. குழந்தைப் பருவத்து ஆர்வங்கள் பல இப்பொழுது மறைந்து, இளையோர் பருவத்திற்கு ஏற்ற, புதிய ஆர்வங்கள் தோன்றுகின்றன. இந்நிலையில், சமூக நடவடிக்கைகள், எதிர்பாலினர், தன் தோற்றம் எதிர் காலத்தைப் பற்றித் திட்டமிடல் போன்றவைகளின் பாலான ஆர்வங்கள் படிப்படியாகத் தோன்றுகின்றன. இளையோர் பருவத்தில், குழந்தைப் பருவத்திலிருந்த தன்னைச் சுற்றிய ஆர்வங்கள் மறைந்து, சமூக வளர்ச்சியினைச் சார்ந்த ஆர்வங்கள் தோன்றி வளர்ச்சியடைகின்றன. இளையோர் விளையாடும் விளையாட்டுகள் அவர்களின் பாலின வேறுபாட்டினைச் சார்ந்தே இருக்கின்றன. இளையோரிடம் காணப்படும் ஆர்வங்களை நான்கு வகைகளாகப் பிரிக்கலாம். அவை (1) தன்னைப்பற்றிய ஆர்வங்கள் (2) கல்வி சார்ந்த ஆர்வங்கள்

(3) விளையாட்டு ஆர்வங்கள். (4) பொழுதுபோக்கு ஆர்வங்கள் ஆகியவையாகும்.

தன்னைப்பற்றிய ஆர்வத்தில் உடை அலங்காரங்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. பொதுவான புத்தகங்களைப் படிப்பதில் உள்ள ஆர்வமும், பாடப் புத்தகங்களைப் படிக்கும் ஆர்வமும் கல்வி சார்ந்த ஆர்வங்களாகும். இளையோர் பருவத்தின் தொடக்கத்தில் தனியன் உள்ளார்ந்த ஆர்வத்தினைக் கொள்கிறான். விளையாட்டு மிகுந்த பயனை உடையது எனவும், விளையாட்டின் போக்கு ஆக்கத்திறனை வளர்க்கின்றது எனவும், கல்வியும் விளையாட்டான முறையில் கற்பிக்கப்பட்டால் நல்ல பயனை விளைவிக்கின்றது. இளையோர் தங்களின் ஓய்வு நேரத்தை உரையாடல், பகற்கனவு காணுதல், திரைப்படங்களைப் பார்த்தல், வானொலி கேட்க விரும்புதல், போன்றவைகளில் கழிக்கின்றனர்.

# 9. மனப்பாங்குகளும் பயன்மதிப்புகளும்

## (Attitudes and Values)

பொதுவாக எல்லா மனிதர்களிடமும் மனப்பாங்குகள், பயன் மதிப்புகள், ஆர்வங்கள், குறிக்கோள்கள் காணப்படுகின்றன. மனிதர்களின் நடத்தைகளை ஒரு குறிப்பிட்ட வழியில் ஊக்கு விக்கும் இவைகளே, அவர்களிடம் ஏற்படும் மற்றவர்களைப் பற்றிய தப்பபிப்பிராயங்கள், ஓரவஞ்சனைகள், பாரபட்சங்கள் முதலியவற் றிற்கு ஓரடிப்படையாகவும் உள்ளன. இவைகளே, அவர்களைச் சூழ்நிலைப் பொருட்களுக்கும், மற்ற மனிதர்களுக்கும், நேரிடை யாகவோ எதிரிடையாகவோ செயல்படத் தூண்டுகின்றன. இவ் வாறு, நடத்தைகளைப் பெரும்பாலும் மனப்பாங்குகள், பயன் மதிப்புகள், ஆர்வங்கள், குறிக்கோள்கள் பாதிக்கின்றன. எனவே, ஒருவனுடைய எதிர்வினைகள், அவனுடைய மனப்பாங்குகள், பயன் மதிப்புகள், ஆர்வங்களைச் சார்ந்தே எழுகின்றன எனலாம்.

ஒருவனின் மனப்பாங்கு ஒரு நபர், ஒரு பொருள், அல்லது ஒரு சூழ்நிலையின் பால் சொல் அல்லது செயல்வழி, தன் எதிர்வினையை அல்லது உணர்வினை வெளிப்படுத்துகிறது. மனப்பாங்கினைப் பின் வருமாறு பொருள் வரையறை செய்யலாம். மனப்பாங்கு என்பது "ஒரு தனியன் தன் சூழ்நிலையிலுள்ள பொருட்கள், மக்கள், இடங்கள் ஆகியவற்றின் பால் நேரிடையாகவோ, எதிரிடை யாகவோ செயல்புரிய வைக்கின்ற ஊக்கிகள், புலன் காட்சிகள், சிந்தனைகள், மனவெழுச்சிகள் ஆகியவை ஒருங்கேயமைந்த உளம் அல்லது நரம்பு சார்ந்த ஆயத்த நிலையாகும்." இத்தகைய உளம் அல்லது நரம்பு சார்ந்த ஆயத்த நிலை, இளையோரிடம் பண்பாடு சமயம், ஆளுமை ஆகிய காரணிகளைப் பொறுத்து வேறுபட்டுக் காணப்படுகின்றது. ஒருவன் தான் வெளிப்படுத்தும் மனப்பாங்கு கள் வழியே அறியப்படுகின்றான். அவை அவனுக்கே உரிய தனிப் பட்ட விதத்தில் காணப்படுகின்றன. மேலும், இவை தனியன்

ஒரு சூழ்நிலையில் எவ்வாறு சிந்திக்கவோ, செயல்படவோ செய்கின்றான் என்பதைத் தீர்மானிக்கின்றன.

தனியனானவன் ஒவ்வொரு பொருளைப்பற்றி அறியும்பொழுது, கூடவே உணர்ச்சிப் பாங்குகளும் அவனிடம் எழுகின்றன. இவ்வாறு எழும் உணர்ச்சிப் பாங்குகள் இன்பகரமானதாக இருப்பின், அவை பெரும்பாலும் தனியனில் அப்பொருள்களின் பால் நேரிடை எதிர் வினைகளை ஊக்குவிக்கின்றன. இவ்வாறின்றி அவை துன்பகரமானதாக இருப்பின், அவை தனியனை எதிரிடையான எதிர்வினைகளைப் புரிய ஊக்குவிக்கின்றன. எனவே ஒருவன் தன் சூழ்நிலையிலுள்ள தூண்டல்களின் பால் ஏற்புடன் அல்லது மறுப்புடன் செயல்படுவது, அவனுடைய முற்கால அனுபவங்களால் தீர்மானிக்கப்படுகின்றது.

**மனப்பாங்கின் தன்மையும் சக்தியும் (The Nature and Power of Attitude) :**

மனப்பாங்குகள் ஒருவனுடைய சொந்த விஷயத்தோடு தொடர்புகொண்ட பயன்மதிப்புகளைக் குறிப்பதால், அவை அக உணர்வு நிலையினைச் (Subjective) சார்ந்தவையாகும். எனவே ஒவ்வொரு தனியனும் ஒரு சூழ்நிலையின் பொருள் அல்லது பிரச்சினையின் பால் கொண்டுள்ள ஆர்வத்தின், மனப்பாங்கின் அடிப்படையில்தான் அவற்றை மதிப்பிடவும், கணிக்கவும், போற்றவும் செய்கின்றான்.

ஒருவனின் மனப்பாங்குகள், அவனுடைய எண்ணங்களிலும், ஆர்வங்களிலும் மொத்தத்தில் அவனுடைய பெரும்பாலான நடத்தைகளிலும் செல்வாக்குடையதாயிருக்கின்றன. ஒரு தனியனின் நடத்தையானது, அவனது மனப்பாங்குகளினால் தீர்மானிக்கப்படுகின்றது. இவ்வாறு, மனப்பாங்குகள் மனிதனின் நடத்தைகளை இயக்கும், ஊக்குவிக்கும் உளச்சக்திகளாக உள்ளன. அவை அனுபவங்களுக்கு ஓர் ஆட்சி பீடமாகவும், முரண்பட்ட சூழ்நிலைகளில் அரசனாகவும் விளங்குகின்றன.

உளப்போராட்டத்தினை ஏற்படுத்தும் சூழ்நிலையில், விருப்பம் எவ்வளவு தீவிரமானதாக உள்ளதோ, அந்த அளவிற்கு அதைத் தொடரும் மனப்பாங்குகளும் தீவிரமாக அமையும். ஒரு சூழ்நிலையின்பாலும், ஒரு நபரின்பாலும், தனியன் கொண்டிருக்கும் மனப்பாங்குகள் மாற்றம் அடையாது நிலைத்திருக்கவேண்டிய அவசியமில்லை. எனவே, மனப்பாங்குகள் தருணத்திற்குத் தருணம் வளர்ந்து கொண்டிருக்கின்றன. அவற்றுள் சில சரியான வழி நெறியின்றி அமைகின்றன; மற்றவை தனியனாலும், அவனைப் பேணிக்

பட்டவைகளை ஆய்ந்ததில், இவை பெரும்பாலும் விளையாட்டு, மற்ற பொழுதுபோக்கு நடவடிக்கைகள், எதிர்பாலினர், ஆடைகள் ஆகியவற்றைப் பற்றி இருந்தது என அறியப்பட்டது. இதிலும், பாலின வேறுபாடுகள் மிகுந்து காணப்பட்டன. ஆண்கள், வாணிபம், மற்றும் பொழுதுபோக்குகளைப் பற்றி வெகுவாகப் பேசியபோது, பெண்கள் உடைகளைப் பற்றியும், மற்ற பெண்களைப் பற்றியும் அதிகமாகப் பேசினர்.

பகற் கனவு (Day Dream) :

பகற்கனவு இளையோர் விரும்பும் ஒரு முக்கிய பொழுதுபோக்கு நடவடிக்கையாகும். இதன் பயன்களில், பொதுவாக இரு நோக்கு களைக் காணலாம். இது துணிந்து ஈடுபடும் நோக்கத்தினையும், பின்வாங்கும் நோக்கத்தினையும் கொண்டுள்ளது. வாழ்க்கையின் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதற்கு ஏற்ற முறைகளையும், அத்தகைய பிரச்சினைகளிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள ஏற்ற முறைகளையும் இது கொண்டுள்ளது.

இளையோன் தன் திறமைகளுக்கு அப்பால் நின்று, காலம், இடைவெளி ஆகியவற்றின் தடைகளை வெல்லக்கூடிய ஆராய்ச்சி யினைத் தன் கற்பனையின்மூலம்தான் செய்ய முடியும். நடைமுறை வாழ்க்கையில் அவன் செய்ய முடியாதவைகளைத் தன் கற்பனை வாழ்க்கையில் சாதிக்க இயலும். சான்றாக, அவன் தன் பகற் கனவில் ஒரு சிறந்த தலைவனாகவோ, செல்வந்தனாகவோ, சிறந்த பாடகனாகவோ, நடிகனாகவோ ஆக இயலும். அவன் தன் நடை முறைச் சூழ்நிலையில் மிகவும் வறிய நிலையில் இருந்தாலும், தன் பகற்கனவில் செழிப்பாக வாழ இயலும். உண்மை வாழ்க்கையில் அவனால் அடையமுடியாத மிக அழகிய பெண்ணையும், அவன் தன் பகற்கனவில் காதலித்து அடைய முடியும். இதனைப்போன்றே, பெண்களும், உண்மை வாழ்க்கையில் அடைய முடியாத இலட்சிய ஆண்மகனைக் கற்பனை உலகத்தில் அடைய முடியும்.

உண்மை வாழ்க்கையில் நிறைவேற்றப்படாத ஆசைகளை மட்டும் நிறைவேற்றிக்கொள்ளப் பகற்கனவுகள் பயன்படுவதில்லை. இளையோன் தன் வாழ்க்கையின் பல்வேறு துறைகளில் ஏற்படும் கடினமான பிரச்சினைகளை, வெவ்வேறு நோக்கில் ஆய்ந்து அவற்றிற் கான தீர்வுகளை ஓரளவிற்கு அடைவதற்கும் இவை உதவுகின்றன. மேலும் இளையோன் தன் எதிர்காலத்தினைப் பற்றிக் கொண்டுள்ள நம்பிக்கைகளையும், எதிர் பார்ப்பவைகளையும் இவை பிரதிபலிக் கின்றன. இளையோன் தன் எதிர்காலத்தினைப் பற்றிய நம்பிக்கை களையும், எதிர் பார்ப்பவைகளையும் ஒத்திகை செய்து பார்ப்பதற்கு

கொண்டுள்ள எதிர்வினையினையும், கருத்துரைகளையும் நம்பகமாக மதிப்பிடுவதற்குப் பயனுள்ளவையாய் இருக்கும். பேச்சுவழி சொல்லப்பட்டவை, ஒருவனின் ஆழ்ந்த மனப்பாங்குகளை வெகுவாகப் பாதிப்பதில்லை. ஆனால் மெய்யான சூழ்நிலையில் ஒருவனிடம் ஏற்படும் நடத்தையானது, அவனுடைய ஆழ்ந்த மனப்பாங்குகளை வெகுவாகப் பாதிப்பனவாய் இருக்கின்றன.

இளையோர் தங்கள் மனப்பாங்குகள் எல்லாவற்றினையும் தெரிந்துகொள்ளாது இருப்பதால் தங்கள் மனப்பாங்குகளுக்கும், கருத்துரைகளுக்கும் இடையேயுள்ள வேறுபாட்டினையறிய முடியாது. நம்பிக்கைகள் பெரும்பாலும் தெளிவுடன் விளக்கப்படுவதால், வெளியிடப்பட்ட கருத்துரைகள் ஒருவனின் ஆழ்ந்த மனப்பாங்குகளிலிருந்து மாறுபட்டிருக்கக் கூடும். ஆதலால், ஓர் இளையோன் மற்றவர்களின் நடவடிக்கைகள் தனக்குப் பிடித்தமாக இல்லாதிருப்பினும், அவை தன்னைப் பாதிக்காதிருக்கும் வரை, அவற்றைச் சகித்துக் கொள்வதைப் போன்று பாசாங்கு செய்யக் கூடும். ஆனால் ஒரு சூழ்நிலை, அவனுடைய நோக்கங்களுக்கும், விருப்பங்களுக்கும் தீங்கு இழைப்பதாய் இருக்கையில், அவனுடைய உண்மையான மனப்பாங்குகள் வெளிப்படுகின்றன.

**மனப்பாங்குகளின் வளர்ச்சி :**

நாம் ஒரு சூழ்நிலையின் பால் பல்வேறு பழக்க வழக்கங்களையும் கருத்துகளையும் அமைத்துக்கொள்ளும் பொருட்டு மனப்பாங்குகள் இயங்குகின்றன. ஒருவனது சமூகத் தொடர்புகள், அவனது எதிர்வினைச் சார்புகளிலும் பொருத்தப்பாட்டிலும் மாறுதல்களை ஏற்படுத்துகின்றன. ஒரு சமூகத்தில் பிறந்து வளர்க்கப்பட்ட குழந்தையானது, பல்வகைப்பட்ட சமூகத் தூண்டல்களின்வழி சமூகப்படுத்தப்பட்டு, தன் சமூக, சமுதாயச் சூழ்நிலைக்கேற்றவாறு வாழ்க்கையில் விளங்குகின்றது. மீட் என்பார் (Mead) இதனைப் பற்றிக் கூறுமிடத்து, பிறர் நமக்குச் செய்யும் எதிர் வினைகளிலிருந்தும், நம்முடன் அவர்கள் நடந்துகொள்ளும் விதத்திலிருந்தும் நாம் யார், எத்தகையோர் என்பனபோன்ற நம்மைப்பற்றிய அறிவினை நாம் அடையப் பெறுகின்றோம் எனக் குறிப்பிடுகின்றார். இத்தகைய தன்னைப் பற்றிய அறிவினைப் பெறுதல் குழந்தைப் பருவத்திலேயே துவங்கிவிடுவதால், இளையோர் பருவத்தில் ஒருவன் தன்னைப்பற்றியும், பிறரைப்பற்றியும் நன்கு அறிந்து கொண்டிருக்கின்றான். இவ்வாறு, தன்னைப்பற்றிய மனப்பாங்குகளின் வளர்ச்சியினூடே இனம், சமயம், சாதி சார்ந்த மனப்பாங்குகளும் வளர்ச்சியுறுகின்றன. பிறர் நம்பால் கொண்டிருக்கும் மனப்பாங்குகளும், புரியும் எதிர்வினைகளும், நம் எதிர்கால

நடத்தைகளுக்கு வழிகாட்டியாக இருப்பதால், அவை நம் ஆளுமையின் ஒரு கூறாக விளங்குகின்றன.

குழந்தையின் மனப்பாங்குகளும் நம்பிக்கைகளும் அது வளரும் சூழ்நிலைகளிலிருந்து பெறப்படுகின்றன. இளையோர் முதிர்ச்சியினைப் பெறும்போது, அவர்களின் மனப்பாங்குகளும், நம்பிக்கைகளும் அவர்களின் குடும்பம், சமூக வழக்கங்கள், சமயம், சமவயதினர், பண்பாடு ஆகியவற்றால் பாதிக்கப்பட்டு வளர்ச்சியும் மாற்றமும் அடைகின்றன.

இளையோர் பருவத்தில் தனியனின் செயல்களில் சமநிலையற்ற தன்மை நிலவுவதால், அவனுடைய 'அகம்' சார்ந்த மனப்பாங்கும், எதிர்ப்பாலினரைப்பற்றிய மனப்பாங்கும் மாறுதலையடைகின்றன. இப்பருவத்தில் காணப்படும் தீவிரமான பாலின உந்தின் விளைவினால், இளையோரிடம் எதிர்ப்பாலினரின் பால் ஆர்வங்கள் மிகுந்து காணப்படுகின்றன. முதிர்ச்சிபெறும் இளையோன் எதிர்ப்பாலினருடன் தொடர்புகொள்வதன்பாலுள்ள இன்பத்தினை அறியப் பெறுகின்றான். பூப்பின் விளைவாக பாலின ஹார்மோன் அதிகமாக சுரப்பதால் இத்தகைய தொடர்புகள் இளையோனின் பாலினம் சார்ந்த விரைப்புகளை உண்டாக்கியும், அவற்றைத் தளர்த்தியும் அவனுக்குப் புதிய இன்பகரமான அனுபவத்தினைத் தருகின்றன.

இளையோர், தங்கள் குழுத் தலைவர்கள், ஆசிரியர்களின் பால் எத்தகைய மனப்பாங்குகளைக் கொண்டிருக்கின்றனரோ, அவற்றை முன்மாதிரியாகக் கொண்டு மற்ற இளையோர் பின்பற்றுகின்றனர். எனினும் இளையோரின் மனப்பாங்குகள், பெற்றோர்களின் மனப்பாங்குகளைவிட நேர்மை வாய்ந்தனவாகவும், மெய்நிலைக்குப் பொருந்தியவையாகவும் உள்ளன.

இளையோர், தங்களிடம் நியாயமான முறையில் நடந்து கொள்பவர்களிடம் தாங்களும் நியாயமான முறையில் நடந்து கொள்கின்றனர். இளையோர் பருவத்து ஆண், பெண் அனைவரும், ஆசிரியர்கள் தங்களிடம் நியாயமற்ற முறையில் நடந்து கொள்வதனை மிகவும் வெறுப்பவர்களாக இருக்கின்றனர் என ஆய்வுகள் காட்டியுள்ளன. இவர்களில் பலர், பள்ளி வாழ்க்கையினை விரும்பவில்லை என்பதற்குச் சான்றுகள் இருப்பினும், பெரும்பான்மையான இளையோர், இக்காலத்துப் பள்ளிகள் அளிக்கும் நடவடிக்கைகளுக்கான மிகுந்த வாய்ப்புகளின் மூலம், வெற்றி மனப்பான்மையினையும் மன நிறைவினையும் அடையப்பெறுகின்றனர் எனவும் ஆய்வுகள் காட்டியுள்ளன. ஆசிரியர்கள்

இளையோரின் இயல்புகளையும் தன்மைகளையும் புரிந்துகொள்ளாது அவர்களின் பால் ஆதிக்க மனப்பாங்குடன் நடந்துகொள்வதன் விளைவாக இளையோரின் தன்மானம் புண்படுத்தப்படுவதும், பாடத் திட்டம் இளையோரின் இலக்குகளுக்கும் ஆர்வங்களுக்கும் பொருந்தாதிருப்பதும், இளையோர் கொண்டிருக்கும் சாதகமற்ற மனப்பாங்குகளுக்குக் காரணமாயுள்ளன என்று இவ்வாய்வுகள் காட்டியுள்ளன. எனவே, பாடத் திட்டம் இளையோரின் விருப்பங் களுக்கும், தேவைகளுக்கும் பொருந்தும் வகையில் அமைந்து, ஆசிரியர்கள் இவர்களிடம் நல்ல முறையில் நடந்துகொண்டால், இளையோர் பள்ளியினைப் பற்றிச் சாதகமற்ற மனப்பாங்குகளைக் கொண்டிருப்பதற்கு இடமில்லை.

தனியன் முதிர்ச்சியடைவதில் அவனிடம் தோன்றும், புதிய அனுபவங்கள், அவன் கொண்டிருக்கும் பழைமையான கருத்துகளை விரிவுபடுத்தி, மாற்றியமைக்கின்றன. இதனால், இறைவனைப் பற்றிய அவனது கருத்துக் கோட்பாடுகள் விரிவடைந்து ஓரளவிற்கு மாற்றமும் பெறுகின்றன. இதன் விளைவாக குழந்தையானது, தான் இறைவனுடன் கொண்டிருக்கும் உறவினைப் பல்வேறு சூழ்நிலைகளில் அறியப்பெற்று அது பெற்றிருக்கும் இறைவன் கோட்பாடு, கருத்தியல் சார்ந்ததாக மாறுகின்றது. குழந்தையின் முதிர்ச்சியுடன் அதன் மனித சகோதரத்துவக் கோட்பாடும் பரந்து, விரிவடையப் பெறுகின்றது. இதன் விளைவாக, தனியன் சாதி, சமயம், இனம் போன்றவற்றின் அடிப்படையில் மாறுபட் டிருப்பவர்களின் பால், சகிப்பு மனப்பாங்கினையுடையவனாகவும், சமத்துவ உணர்வினைக் கொண்டவனாகவும், அவர்களின் தேவை களையும், உரிமைகளையும் அங்கீகரிப்பவனாகவும் மாறுகின்றான். இவ்வாறு, இளையோனின் கருத்துக் கோட்பாட்டிலும், கருத்தியல் சிந்தனையிலும் ஏற்படும் மாற்றங்கள் அவனுடைய ஆளுமை வளர்ச்சியில் முக்கியமான பங்கினைக் கொண்டுள்ளன. மேலும், இவை இளையோனின் சொந்த, மனவெழுச்சி, சமூக நடத்தைகளில் பெருஞ் செல்வாக்கினைக் கொண்டிருப்பதோடு, அவனில் வாழ்க்கைக் கோட்பாடு உருவாவதிலும் பிறர் நடத்தைகளைக் கண்காணிப்ப தற்கான நியதிகளைத் தோற்றுவிப்பதிலும் பெரும் பங்கு கொண்டி ருக்கின்றன.

இளையோர் சமய உணர்வற்றவர்கள் எனப் பொதுவாகக் கருதப்படுகின்றது. தினமும் அவர்கள் இறை வழிபாட்டிற்காகச் செல்வதில்லை என்பதன் காரணமாக அவர்களைச் சமய உணர்வற்ற வர்கள் எனக் கருதுவது தவறானதாகும். இதனைப்போன்றே, அவர்கள் தாங்கள் பின்பற்றும் சமயக் கோட்பாடுகளைப் பற்றிச் சில

வேளைகளில் ஐயமுற்று, கேள்விகளை எழுப்புவதனாலும், தங்கள் முற்காலத்து நம்பிக்கைகளைச் சிலவேளைகளில் மாற்றிக்கொள்வதனாலும் இவர்களைச் சமய உணர்வற்றவர்கள் எனக் கருதுவது தவறானதாகும். இளையோர் தங்கள் அனுபவம் முதிர்ந்த நோக்கின் காரணமாக தங்கள் சமய நம்பிக்கைகளிலும் மாற்றங்களைப் பெறுவது இயற்கை. மிகத் தீவிரமான சமய நம்பிக்கைகளையும், சமயங்களிடை நிலவும் சகிப்பற்ற தன்மைகளையும், சமய வழிபாட்டில் ஏற்றத்தாழ்வுகள் இருப்பதனையும் இவர்கள் வெறுக்கின்றனர். சமயப் பிரிவுகளினிடை சமூகத்தில் நிலவும் வேறுபாடுகளுக்கு மிகவும் முக்கியத்துவம் தந்து அவற்றை வலியுறுத்துவதனையும், சமயங்களின் சமூக, அறநெறிக் கருத்துகளுக்கும், வழிமுறைகளுக்கும் முக்கியத்துவம் தராது, அவற்றை வலியுறுத்தாதிருப்பதனையும் இளையோர் வெறுக்கின்றனர். இளையோரின் இத்தகைய சமய மனப்பாங்குகளுக்குக் காரணம், அவர்கள் கல்வியின் மூலம் அடையப்பெறும் அறிவியல் சார்ந்த சிந்தனைதான் எனப் பலர் கருதுகின்றனர்.

இளையோரின் சமய மனப்பாங்குகளைப் பற்றிய ஆய்வுகள் அவர்கள் சமய உணர்வற்றவர்கள் என்ற கருத்தினைப் பொய்யாக்கி விட்டன. இவ்வகையில் நடத்தப்பட்ட ஆய்வொன்றில் 6·6 சதவீதத்தினரே இறப்பிற்குப் பின்னுள்ள வாழ்க்கை, தண்டனை ஆகியவற்றின் பால் நம்பிக்கையற்று இருந்தனர் என்று காணப்பட்டது. இவ்வாறு, கல்லூரி மாணவர்கள் சமய வாழ்க்கையின் அவசியத்தினை உணர்ந்திருந்ததனையும், இறை வழிபாட்டில் வெகுவாகக் கலந்துகொண்டிருந்ததனையும் பல ஆய்வுகள் எடுத்துக் காட்டியுள்ளன. எனவே, இளையோரைச் சமய உணர்வற்றவர்கள் எனக் கருதுவதற்கு இடமில்லை.

பூப்பிற்குப்பின் இளையோரின் மனப்பாங்குகள் மாறுதல்களை அடைந்து, பின் இளையோர் பருவத்தில் நிலைத்த தன்மையினைப் பெறுகின்றன. எனினும், தெளிவாகவும், தீவிரமான மனவெழுச்சியினைக் கிளறிவிடுவதாகவும் இருக்கும் எந்த அனுபவமும், இளையோரின் மனப்பாங்குகளையும், பயன் மதிப்புக்களையும், எதிர்கால நடத்தைகளையும் பெரிதும் பாதிப்பனவாக உள்ளன.

இளையோரின் மனப்பாங்குகளை உருவாக்குவதில் கல்வியும், அறிவுறுத்தலும் கொண்டுள்ள செல்வாக்கு, அவை எத்தகைய மனவெழுச்சிச் சூழ்நிலையில் செய்யப்படுகின்றன என்பதனைப் பொறுத்தேயுள்ளது. சான்றாக, உயர்நிலைப்பள்ளி மாணவர்களின் மனப்பாங்குகளில், அவர்கள் வெறுக்கும் ஆசிரியர்களைவிட,

அவர்களால் போற்றப்படும் ஆசிரியர்கள் மிகுந்த செல்வாக்கினைக் கொண்டிருக்கின்றனர். ஒரு பிரச்சினையைப் பற்றிய உண்மைகளை வெறுமனே எடுத்துக்கூறி, இளையோரின் கவனத்தை ஈர்க்கும் ஆசிரியர்களைவிட, ஒரு பிரச்சினையைப் பற்றி அவர்களே திறனாய்வுடன் சிந்திக்கும் வண்ணம் ஊக்குவிக்கும் ஆசிரியர்களே, இளையோரின் மனப்பாங்குகளில் மிகுந்த செல்வாக்கினைக் கொண்டிருக்கின்றனர். எனவே மனப்பாங்குகளை உருவாக்குவதில் பள்ளிகள் கொண்டிருக்கும் செல்வாக்கு, ஆசிரியர்களின் ஆளுமைத் தன்மைகளையும், அவர்கள் மாணவர்களுடன் கொண்டிருக்கும் உறவுகளையும் பொறுத்துள்ளது.

இளையோரின் மனப்பாங்கு சார்ந்த பிரச்சினைகள் :

இளையோர் பெரும்பாலும் தங்கள் உடல் அமைப்பினைப் பற்றி வெகுவாகக் கவலைப்படுகின்றனர். அவர்களின் நடத்தை, அவர்களுடைய உடலமைப்பு, உயரம், பருமன், மனவெழுச்சிச் சமநிலை, உடல் நலநிலை ஆகியவற்றினால் பாதிக்கப்படுகின்றது. இவை, இளையோரைப் பற்றி மற்றவர்கள் கொண்டிருக்கும் மனப்பாங்குகளின்மேல் மிகுந்த செல்வாக்கினைக் கொண்டிருப்பதால், மிகவும் முக்கியமானவையாகும். இதனால் இளையோர், இவற்றின் பால் தங்கள் கவனத்தினை மிகையாகச் செலுத்துகின்றனர்.

இளையோர் தங்கள் செயல் சுதந்திரத்தில் குறுக்கீட்டினை ஏற்படுத்துபவர்களிடம் முரட்டுத்தனமாகவும், முன்யோசனையின்றியும் நடந்துகொள்கின்றனர். மேலும், அவர்களின் பால் வெறுப்பினையும், பகையினையும் வளர்த்துக் கொள்கின்றனர். இதனால், இளையோர் பலர், தங்கள் விருப்பங்கள், ஆர்வங்கள், நடத்தைகள் சிலவற்றினைப் பெற்றோர்கள் சகித்துக்கொள்வதில்லை என நம்புகின்றனர். ஆதலால், இளையோர் பலர் தாங்கள் பரந்த நோக்குடையவர்கள் எனத் தங்களைப் பற்றிக் கருதினாலும், தீவிரமான தப்பெண்ணங்கள், சார்பெண்ணங்கள் பல அவர்களிடம் காணப்படுகின்றன.

இளையோரின் மனப்பாங்குகள், தங்களையும், உலகத்தினையும் சார்ந்தவையாக இருக்கின்றன. இதனால், உலகத்தினைச் சீர்திருத்தியமைக்கவேண்டும் என்ற நிராசையால் இளையோர் உந்தப்படுகின்றனர். அவர்கள், ஒரு குழந்தை, ஒரு வயது முதிர்ந்தோரின் பால் பொறுமையற்ற மனப்பாங்கினைக் கொண்டிருப்பினும், பொதுவாக, குழந்தைகள், பெரியவர்களிடம், அன்பினையும், இரக்கத்தினையும், பரிவுணர்ச்சியினையும் கொண்டிருக்கின்றனர். எனினும், தம் சம வயதினர்களைப் பற்றி அவர்கள் கொண்டிருக்கும்

மனப்பாங்குகள், இளையோர் அவர்களின் பால் கொண்டுள்ள உறவினைப் பொறுத்துள்ளது. தங்களைவிட மிகுந்த சலுகைகளையும் கவனத்தினையும் பெற்றிருப்பவர்களிடம், இவர்கள் வெறுப்புடன் நடந்துகொள்வர். இதனைப்போன்றே தங்களைவிடக் குறைந்த திறமைகளையும், சாதனைகளையும் உடையவர்களின் பால் இவர்கள் பெருமித மனப்பான்மையினைக் கொண்டிருப்பர்.

பயன் மதிப்புகள் (Values) :

பயன் மதிப்புகள் சாதாரணமாக ஒருவன் சூழ்நிலைப் பொருள்களின்பால், தான் கொண்டிருக்கும் தொடர்பின் பொருளினையும் கருத்தினையும் அறிவதாகும். குழந்தை ஒரு பொருள் தனக்கு நல்லதென்றும், தன் வாழ்க்கையில் பயனுள்ளதாக அமையும் என்றும் அறியும்போது, அப்பொருளின் பயன் மதிப்பினை உணர்கின்றது. எனவே, பயன்மதிப்புகள் சமூக அடிப்படையில் எழும் மனவெழுச்சி வயப்பட்ட, எண்ணங்களின் தொகுப்பாகும். இவைகளே, தனியனைக் குறிப்பிட்ட ஒருவனிடம் பழகவும், குறிப்பிட்ட சூழ்நிலையில் தன்னை ஊக்குவித்துக் கொள்ளவும் துணைபுரிகின்ற காரணிகளாகும். மேலும், இவைகளே அவனுடைய நடத்தையினைப் பெருமளவில் பாதிக்கச் செய்யும் காரணிகளாகவும் விளங்குகின்றன. பயன் மதிப்புகள் மெய்யின் பாற்பட்ட விஷயங்களைச் சார்ந்தெழாது, தனியனுக்கு முக்கியத்துவம் வாய்ந்த விஷயங்களைச் சார்ந்தே எழுகின்றன என்று ஓயிட் ஹெட் (White Head) கருதுகின்றார். பயன் மதிப்புகள் ஒருவனது நடத்தையில் வழிகாட்டியாகவும், அவனுடைய விருப்பங்கள், தேவைகள், விருப்பத் தேர்வுகள் ஆகியவற்றைப் பிரதிபலிப்பனவாகவும் உள்ளன. பயன் மதிப்புகளின் இத்தகைய இரட்டை இயல்புகளின் காரணமாக அவை தன்னைச் சார்ந்தனவையாகவும் சமூகத்தினைச் சார்ந்தனவையாகவும் உள்ளன. தன்னைச் சார்ந்த பயன் மதிப்புகள், சமூகம் சார்ந்த பயன் மதிப்புகள் ஆகிய இவ்விரண்டும் ஒன்றையொன்று சார்ந்து உள்ளன. இவை ஒருவனின் ஆளுமைக் கூறுகளை ஒருமுகப்படுத்தும் காரணிகளாக விளங்குகின்றன. ஒருவனுடைய குணப் பண்புகள் உருவாவதில் பயன் மதிப்புகள் வகிக்கும் பங்கினை ஆராய்ச்சியாளர் பலர் வலியுறுத்தியுள்ளனர். பயன் மதிப்புகள் ஆளுமைத் தன்மைகளுடன் ஒருமுகப்படுத்தப்பட்டு ஒன்றிணைக்கப்பட்ட பிறகு, அவ்வாறு இணைக்கப்பட்ட பயன் மதிப்புகள் அவைகளுக்கு எதிர்மாறான புதிய பயன் மதிப்புகளைப் பெறுவதிலிருந்து ஒருவனைத் தடை செய்யும் காரணிகளாகச் செயல்படுகின்றன. பயன் மதிப்புகள் இவ்வாறு இயங்குவது

ஒருவனுடைய ஆளுமை, நிலைத்த தன்மையினை உடையதாக விளங்குவதற்கு இன்றியமையாததாக உள்ளது.

ஓர் இளையோனிடம் எண்ணற்ற மனப்பாங்குகள் காணப்படுகின்றன. அவை மிகவும் நிலைத்த தன்மையினை உடையனவாய் உள்ளன. ஆனால் பயன்மதிப்புகள் ஒருவனுடைய நடத்தையினை வழி நடத்தும் பொதுவான கோட்பாடுகளாக விளங்குவதால், மிகவும் குறைந்த எண்ணிக்கையில் காணப்படுகின்றன. அவை நடத்தையினைப் பாதிக்கும் கோட்பாடுகளாகச் செயல்படுவதால் ஒருவனுடைய வாழ்க்கைக்கு நிலைத்த தன்மையினை அளிக்கின்றன. பயன் மதிப்புகள் உருவாவது முதிர்ச்சியினையும் அனுபவத்தினையும் சார்ந்துள்ளது. அவை குறுகிய தன்மையுடையனவாகவோ பரந்த நோக்குடையனவாகவோ இருக்கலாம். மனப்பாங்குகளைப் போலவே அவைகளையும் குழந்தை தான் வளரும் சூழ்நிலையிலிருந்து பெறுகின்றது. ஆண், பெண் பிள்ளைகளில் விரும்பத்தக்க பயன் மதிப்புகளை உருவாக்குவதில், இல்லம், பள்ளி, சமய நிறுவனங்கள் ஆகியவை மிகுந்த பொறுப்பினைக் கொண்டுள்ளன. இளையோனது அறிவு வளர்ச்சியே அவனுடைய பயன் மதிப்புகளுக்கும் நம்பிக்கைகளுக்கும் வேராக அமைகின்றது. ஒருவன் பெறும், சமூகம், அறிவு சார்ந்த அனுபவங்கள், அவனை அடிக்கடி தன்னுடைய பயன் மதிப்புகளை மறுபரிசீலனை செய்ய வேண்டிய நிலைக்கு உள்ளாக்குகின்றன. இத்தகைய மறுபரிசீலனைகளின் விளைவாகச் சில வேளைகளில் இளையோன் தன்னுடைய பயன் மதிப்புகளில் புதியவைகளைப் புகுத்தி, மாற்றங்களை ஏற்படுத்த வேண்டிய அவசியம் நேரிடலாம். எனவே அறிவு வளர்ச்சியானது ஒருவனுடைய பயன் மதிப்புகளில் மிகுந்த செல்வாக்கினைக் கொண்டிருக்கின்றது.

தற்கால மக்கள் ஆன்மீக வளர்ச்சியில் கவலையற்று, பொருளாதார வளர்ச்சியில் தங்களை மேம்படுத்திக் கொள்வதில் அதிக கவனமும் அக்கறையும் கொண்டு வாழ்கின்றனர். எனவே ஆன்மீக வளர்ச்சி குன்றிக் காணப்படுகின்றது. இவ்வகையில் நடத்தப்பட்ட ஆய்வு ஒன்றில் 52 கல்லூரி மாணவ மாணவிகளிடம், நீங்கள் எவ்வித வேலையிலும் ஈடுபடாது 15 நிமிடங்களாவது முழுமையாக ஓய்வு கொள்ள முடிகிறதா என வினவப்பட்டது. அதற்கு, ஐந்து பேர்களைத் தவிர மற்றெல்லோரும் அவ்வாறு தாங்கள் ஓய்வு கொள்ள முடிவதில்லை என்ற பதிலினைத் தந்தனர். பொதுவாக இதற்குக் காரணம், தங்களுக்குக் காலப்பற்றாக் குறையே என்றும், அவர்களின் பெரும்பாலான நேரம் கல்லூரி செல்வதிலும், பாடங்கள் கற்பதிலும், வீட்டு வேலைகள் கவனிப்பதிலும் செலவிடப்படுவதால் அவர்களால் ஓய்வு பெற முடிவதில்லை என்றும் தெரிவித்

தனர். மேலும் அவர்களில் சிலர், இரவில் தாமதமாகப் படுக்கைக்குச் சென்று அதிகாலையில் எழுந்துவிடுவதாகவும் உரைத்தனர். மற்றும் சிலர், அவ்வாறு ஓய்வு கொள்வது தங்களில் குற்ற உணர்வினைத் தோற்றுவிப்பதாகவும் கூறினர்.

இதற்கு மாறாக ஓய்வெடுக்க முடிகிறது என உரைத்த ஐந்து பேர்களில் ஒரு மாணவி, தான் அப்பழக்கத்தைப் பல சிரமங்களுக்குட்பட்டு உணர்ந்ததாக அறிவித்தாள். அவள் சிறுவயதிலிருந்தே பொருளாதார உயர்ச்சியின்பால் பேராவல் கொண்டு, அதன் பொருட்டு மிகவும் சிரமப்பட்டு படித்தும், மற்றும் சமூக நடவடிக்கைகளிலும் அதிகமாக ஈடுபட்டும் வந்தாள். அதன் காரணமாக அவள் நரம்புப் பிணிக்கு ஆளாகி ஆறுமாத காலம் வீட்டில் ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டிய கட்டாய நிலைக்குள்ளானாள். அவளுக்கு வெளியே சென்று உலவுவதற்கு வாய்ப்புக் கிட்டியது. இதன் மூலம் அவள் பசுமைக் காட்சிகள், பறவையின் கானங்கள், கதிரவனின் உதயம், மறைவு ஆகியவற்றை அனுபவிப்பதிலும், இயற்கையுடன் தொடர்பு கொண்டு வாழ்வதிலும் உள்ள மகிழ்ச்சியினையும் பயன்மதிப்பினையும் அறியப் பெற்றாள்.

அதனால்தான் அவள் இப்போது அவ்வாறு ஓய்வு கொள்ள முடிகிறது என்றும், அதன் மூலம் மனநலமும், உடல் நலமும் நன்கு கிடைக்கப்பெற்று வாழ்வதாகவும் தெரிவித்தாள். மற்றவர்களும் பொருளாதார உயர்ச்சி பெறுவதற்கு வெகுவாக முயற்சி செய்யாமல், ஆன்மீக வளர்ச்சியின்பால் தங்கள் கவனத்தினைச் செலவிடுவார்களேயானால் தன்னைப் போலவே மகிழ்ச்சியுடனும், மனநிறைவுடனும் வாழமுடியும் என அவள் நம்பினாள்.

மனிதர்களிடத்துக் காணப்படும் பயன் மதிப்புகளை ஸ்பிராங்கர் (Spranger) என்பார் ஆறு முக்கிய பிரிவுகளாகப் பகுத்துள்ளார். அவை சமூகம் (Social), கொள்கை (Theoretical), அழகியல் (Aesthetic), அரசியல் (Political), பொருளாதாரம் (Economic), சமயம் (Religious) ஆகியவைகளாகும். கொள்கை சார்ந்த பயன் மதிப்பு உடையவன், தன் வாழ்க்கையில் அறிவு சார்ந்த கொள்கைகளுக்கும் கோட்பாடுகளுக்கும் முக்கியத்துவம் அளிப்பவனாக இருப்பான். இவனுள் உண்மையினைக் கண்டறியும் ஆர்வம் மிகுந்திருக்கும். அழகியல் சார்ந்த பயன் மதிப்புடையவன் தன் அனுபவங்களில் அழகிற்கும், நேர்த்தியான தன்மைக்கும் மிகுந்த முக்கியத்துவம் அளிப்பவனாகக் காணப்படுவான். பொருளாதாரப் பயன் மதிப்புடையவன் எதனையும் நடைமுறை வாழ்க்கையின் உபயோகத்தின் அடிப்படையில் கணிப்பான். சமூகம் சார்ந்த

பயன் மதிப்புடையவன் சமூகம் சார்ந்த காரணிகளுக்குத் தன் வாழ்க்கையில் மிகுந்த முக்கியத்துவத்தை அளிப்பவனாக இருப்பான். அரசியல் பயன் மதிப்புடையவன் மற்றவர்களைக் கட்டுப் படுத்தும் அதிகாரத்தின்பால் மிகுந்த நாட்டம் கொண்டிருப்பான். சமய பயன் மதிப்புடையவன், வாழ்க்கையின் அனுபவங்களையும், குறிக்கோள்களையும் பற்றிச் சிந்திப்பதிலும், அவற்றை நடைமுறை யில் பின்பற்றுவதிலும் மனநிறைவு அடைபவனாக இருப்பான். இத்தகைய பயன் மதிப்புகளைச் சோதித்து அளவிடும் பொருட்டு, ஆல்போர்ட், வெர்னன், லின்ட்ஸே ஆகியோர் (Alport, Vernon and Lindzey) பயன் மதிப்புச் சோதனை ஒன்றினை உருவாக்கி யுள்ளனர். இந்த பயன் மதிப்புச் சோதனையினை உபயோகித்து எண்ணற்ற ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டுள்ளன.

சமூகப் பொருளாதாரத்தரம், பாலின வேறுபாடு ஆகியவை இளையோரின் பயன் மதிப்புகளில் கொண்டிருக்கும் செல்வாக்கினை நிர்ணயிக்க சாத்தப்பன் என்பார் (Sathappan) 15 வயதிலிருந்து 18 வயதிற்குட்பட்ட சென்னை மாநகரத்து இளையோரை ஆய்ந்தார். இதில், ஆண்பிள்ளைகள் பெண்பிள்ளைகளைவிட அறிவியல், சமயக் கோட்பாடுகளிடை அதிக அளவு முரண்பாட்டி னைக் கொண்டிருந்தனர். இது நம் இந்தியப் பெண்கள் தாங்கள் சமயத்தின் பெயரினால் தீங்கு விளைவிக்கப்பட்டிருப்பதனை உணர்ந்திருக்கும் உண்மையினைக் காட்டுகின்றது. சமூகப் பொருளாதாரத் தரத்தினைப் பொறுத்தவரை, தாழ்ந்த தரத்தினர், உயர்ந்த நடுநிலைத் தரத்தினரைவிட குறைந்த அளவில் அறிவிய லின்பால் மறுப்புவாதத்தினைக் (Negativism) கொண்டிருந்தனர். சமயம் சார்ந்த பயன் மதிப்புகளில் சமூகப் பொருளாதாரத் தரங்களிடை குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் ஒன்றும் காணப்பட வில்லை. இவ்வாராய்ச்சியின் முடிவுகள் பொதுவாக நம் இந்திய சமூகத்தின் மரபார்ந்த, மெதுவாக மாறுகின்ற தன்மையினைக் காட்டுகின்றன.

இவ்வாறாகப் பயன் மதிப்புகள் ஒரு தனியன் சமூகத்தில் வகிக்கும் இடம், சூழ்நிலைப் பொருட்களிடையே கொண்டிருக்கும் மனப்பாங்கு ஆகியவற்றை நிர்மாணிக்கும் காரணிகளாக அமை கின்றன. ஆகவே, அவை ஒரு தனியனின் ஆளுமையின் முக்கியப் பண்புக்கூறாகவும், அவனது ஆளுமை நிலைத்த தன்மையினைப் பெற ஓர் ஊன்றுகோலாகவும் பயன்படுகின்றன. இத்தகைய பயன் மதிப்புகளை உருவாக்குவதில் இல்லம், பள்ளி, சமய நிறுவனங்கள் பெரும் பங்கினை வகிக்கின்றன.

**அதிகாரச் சுருக்கம் :**

மனப்பாங்கு என்பது ஒரு தனியன் தன்னைச் சூழ்ந்துள்ள பொருட்கள், மக்கள், இடங்கள் ஆகியவற்றின்பால் நேரிடையாகவோ, எதிரிடையாகவோ செயல்புரிய வைக்கின்ற ஊக்கிகள், புலன் காட்சிகள், சிந்தனைகள், மனவெழுச்சிகள் ஆகியவை ஒருங்கே அமைந்த உளம் அல்லது நரம்பு சார்ந்த ஆயத்த நிலையாகும். மனப்பாங்குகள் இளையோரிடம் பண்பாடு, சமயம், ஆளுமை ஆகியவற்றைப் பொறுத்து வேறுபட்டுக் காணப்படுகின்றன.

இளையோரும் மற்றவர்களைப் போன்றே நனவு மனப்பாங்குகளைத் தவிர நனவிலி மனப்பாங்குகளாலும் உந்தப்படுகின்றனர். மனப்பாங்குகள் நடத்தைகளை வெகுவாகப் பாதிப்பதால் சீரிய, அரிய மனப்பாங்குகள் சிலவற்றை இளையோரில் தோற்றுவிப்பது கல்வியின் ஒரு முக்கிய குறிக்கோளாக விளங்கவேண்டும்.

குழந்தையின் மனப்பாங்குகளும், நம்பிக்கைகளும் அது வளரும் சூழ்நிலைகளிலிருந்து பெறப்படுகின்றன. குடும்பம், சமூகப் பழக்க வழக்கங்கள், சமயம், சமவயதினர், பண்பாடு ஆகிய காரணிகள் மனப்பாங்குகளின் வளர்ச்சியில் மிகுந்த செல்வாக்கினைக் கொண்டிருக்கின்றன. இளையோரின் சமநிலையற்ற தன்மையின் காரணமாக, அவர்களின் அகம் சார்ந்த மனப்பாங்கும், எதிர் பாலினரைப் பற்றிய மனப்பாங்கும் மாறுதலடைகின்றன.

பூப்பிற்குப் பின் இளையோரின் மனப்பாங்குகள் விரிவுபெற்று மாறுதல்களை அடைந்து பின் இளையோர் பருவத்தில் நிலைத்த தன்மையினைப் பெறுகின்றன. மனப்பாங்குகளை உருவாக்குவதில் பள்ளிகள் கொண்டிருக்கும் செல்வாக்கு, ஆசிரியர்களின் ஆளுமைத் தன்மைகளையும், அவர்கள் மாணவர்களுடன் கொண்டிருக்கும் உறவுகளையும், பாடத் திட்டம் இளையோரின் இலக்குகளுக்கும், ஆர்வங்களுக்கும் ஏற்றதாய் அமைந்திருப்பதனையும் பொறுத்துள்ளது.

இளையோர் பெரும்பாலும் தங்கள் உடலமைப்பினைப் பற்றிக் கவலைப்படுகின்றனர். தங்கள் செயல் சுதந்திரத்தில் குறுக்கீட்டினை ஏற்படுத்துபவர்களை இவர்கள் வெறுக்கின்றனர். தங்கள் சமவயதினரிடம் இவர்கள் கொண்டிருக்கும் மனப்பாங்கு அவர்களின்பால் கொண்டிருக்கும் உறவினைப் பொறுத்துள்ளது.

குழந்தை ஒரு பொருள் தனக்கு நல்லதென்றும், தன் வாழ்க்கையில் பயனுள்ளதாக அமையும் என்றும், அறியும்போது அப்பொருளின் பயன் மதிப்பினை உணர்கின்றது. பயன் மதிப்புகள் ஒருவனின் ஆளுமைக் கூறுகளை ஒருமுகப்படுத்தும் காரணிகளாக விளங்குகின்றன. மனப்பாங்குகளைப் போலவே இவைகளையும் குழந்தை தான் வளரும் சூழ்நிலையிலிருந்து பெறுகின்றது. தனியனிடம் விரும்பத்தக்க பயன் மதிப்புகளை உருவாக்குவதில் இல்லம், பள்ளி, சமய நிறுவனங்கள் ஆகியவை மிகுந்த பொறுப்பினைக் கொண்டுள்ளன.

பயன் மதிப்புகளை ஸ்பிராங்கர் என்பவர் சமூகம், கொள்கை, அழகியல், அரசியல், பொருளாதாரம், சமயம் ஆகிய ஆறு பிரிவுகளாகப் பகுத்துள்ளார். இவற்றைச் சோதித்து அளவிடும் பொருட்டு ஆல்பர்ட் வெர்னன், லின்ட்ஸே ஆகியோர் பயன் மதிப்புச் சோதனை ஒன்றினை உருவாக்கியுள்ளனர்.

# 10. இல்லப் பொருத்தப்பாடுகள்

## (Home Adjustments)

இளையோர் பருவத்தில் காணப்படும் பிரச்சினைகள் பெரும் பாலும் மற்ற பருவங்களிலும் காணப்படுகின்றன. எனினும், இப்பருவத்துக்கே உரிய ஒரு தனித்த பிரச்சினையானது, தனியன் தன் பெற்றோரிடமும், ஏனைய முதிர்ந்தோரிடமும் கொள்ளும் உறவினைச் சார்ந்ததாகும். இப்பருவத்தில், தனியன் முதிர்ந்த தகுதியினையும், செயல் சுதந்திரத்தினையும் பெறுவதற்கு, முதிர்ந் தோரின் கட்டுப்பாட்டிலிருந்து மீளவேண்டியது அவசியமாகும். அவன் முதிர்ந்தோரிடம் கொள்ளும் உறவில் இரண்டு பண்புக் கூறுகள் உள்ளன. முதலாவதாக, தன் தேவைகளிலும், விருப்பங் களிலும் முதிர்ந்தோர் ஏற்படுத்தும் தடைகளைத் தனியன் அங்கீ கரித்து, அவர்கள் தரும் அறிவுரைகளையும், தீர்மானங்களையும், நல்லவையெனக் கருதாவிடினும், அவற்றை ஏற்று நடக்க வேண் டியவனாயிருக்கின்றான். இச்சூழ்நிலையில், இளையோரின் நிலை மிகவும் சிரமமானதாகி விடுகின்றது. இரண்டாவதாக, வளர்கின்ற தங்கள் ஆளுமையின் காரணமாக, முதிர்ந்தோரிடம் காணப்படும் சுதந்திரத்திற்கான உணர்வு இவர்களிடத்து ஓரளவு தோன்றியிருக் கின்றது. இந்தச் சுதந்திர வேட்கை இளையோனைக் குடும்பத்தி லிருந்து பிரித்து விடுவதில்லை. ஆனால், அது அவனிடம் மனவெழுச்சி சார்ந்த சுதந்திர உணர்வினை ஏற்படுத்திப் பெற்றோர்களின் அதி காரத்திலிருந்து. விடுபடுவதற்கான உந்துதலை அவனிடம் ஏற்படுத்துகின்றது. எனினும், முதிர்ந்தோர் இன்னும் இவனைப் பெரும்பாலும் ஒரு குழந்தையாகவே கருதித் தங்கள் கட்டுப் பாட்டிற்குட்படுத்துகின்றனர்.

மனவெழுச்சிச் சுதந்திரத்தினைப் பெறல் :

இளையோர், தாங்கள் நாடும் சுய உரிமைகளை யடைவதற்கு, முதிர்ந்தோரின் கட்டுப்பாட்டிலிருந்து நீங்கி, சுதந்திரமாகச்

சிந்திக்கவும், செயல்படவும் விரும்புகின்றனர். இவ்வாறு பெற்றோர், முதிர்ந்தோர் ஆகியோரின் கட்டுப்பாடுகளிலிருந்து நீங்கி, தாங்களே தங்களின் கடமைகளைக் கவனித்துக் கொள்வதற்கான சுதந்திரத் தன்மையினைப் பெறுவதனை உளவியல் சார்ந்த விடுதலை (Psychological Weaning) என்று குறிப்பிடுகின்றனர். இத்தகைய விடுதலையினைப் பெறுதல், இப்பருவத்திற்கான ஒரு சிறப்புத் தன்மையாகவும், அதுவே ஒரு பிரச்சினையாகவும் விளங்குகின்றது.

உளவியல் சார்ந்த விடுதலையினைப் பெறுவதில் ஏற்படும் சிரமங்கள், இளையோரிடமும், பெற்றோரிடமும் காணப்படும் நிலையற்ற தன்மையின் காரணமாக உண்டாகின்றது. இளையோன், தான் வளர்ந்துவிட்டவன் என்று உணர்ந்து, அவ்வாறே முதிர்ந்தோர் தன்னை நடத்த வேண்டுமென எதிர்பார்க்கும்போது, அவன் ஒரு சில பழக்க வழக்கங்களில் இன்னும் குழந்தைத் தன்மையினையே பெற்றிருக்கின்றான் என்று கூடெனோ (Good Enough) என்பார் கூறுகின்றார். மேலும், அவனது பெற்றோர்கள் அவன் வளர்ந்து விட்டவனென உணர்ந்து, அவன் அவ்வாறே செயல்பட வேண்டுமென எதிர்பார்த்தாலும், தங்கள் பழக்கத்தின் காரணமாக அவர்கள் அவனைத் தொடர்ந்து ஒரு குழந்தையாகவே எண்ணி நடத்துகின்றனர் என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

இளையோனுக்கும் அவனது பெற்றோர்களுக்கும் இடையில் ஏற்படும் இடையூறுகள், அவர்கள் பெரிய விஷயங்களின் மீது கொண்டிருக்கும் வேறுபட்ட கருத்தின் அடிப்படையில் எழுவதன்று. ஆனால், அடிக்கடி முக்கியமற்ற சிறு விஷயங்களின்மீது இவர்களிடம் இணக்கமின்மை ஏற்படுகின்றது. இவ்விஷயங்கள், பெற்றோர்களுக்கும், மற்ற பெரியவர்களுக்கும் மிகச் சிறியதாகவும், முக்கியமற்றதாகவும் காணப்படினும், இளையோனின் உள்ளத்தில் மிகுந்த கொந்தளிப்பினை உண்டாக்குகின்றன. இளையோனுக்கும் அவன் பெற்றோர்களுக்கும் இடையே ஏற்படும் போராட்டங்கள், அவர்கள் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை அற்று இருக்கையில் மிகவும் கடுமையாகி விடலாம்.

அனுபவமிக்க பெற்றோர்களுக்கும், அனுபவமற்ற இளையோனுக்கும் இடையே ஏற்படும் கருத்து வேறுபாடு, இளையோனிடத்து உளப் போராட்டங்களைத் தோற்றுவிக்கலாம். இத்தகைய உளப் போராட்டங்களைப் பற்றிப் பெற்றோர்கள் அறியாமலே இருக்கலாம். இளையோன் காணும் ஏனைய பிரச்சினைகள், சகோதர சகோதரி உறவு, மற்ற உறவினர்களோடு கொண்டுள்ள தொடர்பு,

பெற்ருேர்களுக்கிடையே நிலவும் உறவு, நிதி சார்ந்த விஷயங்கள், இல்லப் பொறுப்புகள், சமூக நடவடிக்கைகள் போன்றவற்றின் பால் எழுகின்றன. இல்லத்துப் பணிகள், பணத்தினைச் செலவிடுதல், பெற்ருேர் வெளிப்படையாகவே ஒருவர் மீது தனித்துக் காட்டும் அன்பு, இளையோரிடை நட்புரிமை, இளையோர் தம் வாழ்க்கைக் கான தொழிலைத் தேர்ந்தெடுத்தல், பெற்ருேர்கள் தம் பிள்ளை களில் சிலரை வெறுத்து ஒதுக்குதல் அல்லது மட்டு மீறிய செல்லம் கொடுத்தல், பெற்ருேர்களின் கருத்தின்பால் இளையோரின் பொறுமையின்மை ஆகியவை, பெற்ருேர்-இளையோர் உறவுகளில் சச்சரவுகளை ஏற்படுத்துகின்றன.

இளையோன், தன் சுதந்திரத்திற்காகப் போராடுகையில், தன் குடும்பத்தின் குறுக்கீட்டினையோ மற்ற பெரியவர்கள், உறவினர் களின் ஆதிக்கத்தினையோ சகித்துக் கொள்வதில்லை. அவர்களது சொல்லோ, பார்வையோ, செய்கையோ வெகுவிரைவில் இளையோனை அவர்களின்மீது எதிர்ப்பு கொள்ளக் காரணமாய் அமைந்துவிடும். இத்தகையப் பிரச்சினைகளைப் பெற்ருேர்கள் நன்கு புரிந்துகொண்டு செயல்பட்டால், இவற்றை அவர்கள் பெருமளவு தவிர்த்து, இளையோருடன் நல்லுறவினைக் கொண்டிருக் கலாம்.

குழந்தையின் அனுபவம் பெரும்பாலும் தன் குடும்ப உறவு களுக்குட்பட்டே இருக்கின்றது. பின்னர், அவன் பள்ளியிலும் சமுதாயத்திலும் ஏற்படுத்திக்கொள்ளும் தொடர்புகள், அவன் குடும்பத்தில் கொண்டுள்ள உறவின் அடிப்படையாகக் கொண்டே எழுகின்றன. இதைப்பற்றிக் கூற வந்தவிடத்து, பாஸ்ஸர்ட் என் பார் (Bossard) மனிதனின் இயற்கைத் தன்மையினைச் சமூகப்படுத் தப்பட்ட ஆளுமையாக மாற்றும் சக்தியினை இல்லமே கொண்டிருக் கின்றது எனக் குறிப்பிடுகின்ருர். எனவே, இளையோனின் குடும்ப உறவானது அவனது வளர்ச்சியில் பெரும் செல்வாக்கினைக் கொண்டிருக்கின்றது என்று உளவியலாரும், சமூகவியலாரும் கருதுகின்றனர்.

**வாழ்க்கையின் துவக்கத்தில் செல்வாக்குள்ள இல்லக் காரணிகள் (Early Home Influences):**

வாழ்க்கையின் துவக்கத்தில், மனிதனின் உள்ளத்தேவைகளான அன்பு, பாதுகாப்புணர்வு, சார்புடைமை போன்றவை எந்த அளவிற்கு நிறைவேற்றப்படுகின்றனவோ, அந்த அளவிற்கே ஒரு வன் பிற்காலத்தில் தன் இல்லப் பொறுத்தப்பாடுகளிலும், சமூக உறவுகளிலும் சிறந்து விளங்குவான். இளையோனின் தேவைக்

கேற்ப, அவனுக்குப் போதிய பாதுகாப்புணர்வினையும், ஆதர வினையும் இல்லம் நல்குதல் அவசியமாகும். இதுதான் இல்லத்தின் முக்கியமான உளவியல் சார்ந்த பணியாகும். பெற்றோர்களின் கல்வித்தரம், அவர்களின் தொழில், குடும்பத்தில் உள்ள உறுப் பினர்களின் எண்ணிக்கை, சமூகப் பொருளாதார நிலை போன்ற மாறிகள் இதற்கடுத்தே முக்கியத்துவம் வாய்ந்தவையாகக் காணப் படுகின்றன. இல்லத்தில் பிள்ளைகளை இளம் வயதில் அளவிற் கதிகமான கட்டுப்பாட்டுடன் வளர்ப்பதும், கட்டுப்பாடு சிறிதும் அற்று, மட்டுக்கு மீறிச் செல்லமாக வளர்ப்பதும் அப் பிள்ளை களின் பிற்கால வாழ்க்கையினைப் பெரிதும் பாதிக்கின்றன. லோரண்ட் என்பார் (Lorand) அளவிற்கு மீறிய செல்லமும், அர்த்தமற்ற கண்டிப்பும் குழந்தையின் ஆளுமை வளர்ச்சியினைப் பெரிதும் பாதிக்கின்றது என்று குறிப்பிட்டுள்ளார். குழந்தை யினைப் புறக்கணிக்கும் அளவிற்குப் பொருட்படுத்தாது இருத்தல், அதன் மனவெழுச்சி வளர்ச்சியினைப் பாதிக்கின்றதெனினும், குழந்தைக்கு அளவிற்கு மீறிய செல்லத்தினைத் தருவதைப் போன் றும் குழந்தையினை வெளிப்படையாக வேறுபடுத்தி, வெறுப்பதைப் போன்றும் அவ்வளவு தீங்கினைப் பயப்பதன்று. இவ்வாறின்றிச் சிறிய குடும்பமாயினும் குழந்தைகள் அக்கறையுடன் வளர்க்கப் பட்டால், அவர்களின் அன்பு, பாதுகாப்புணர்வு, சார்புடைமை போன்ற பல்வேறு தேவைகள் பூர்த்தி செய்யப்பட்டு வளர்க்கப் பட்டால், அக்குழந்தைகள் இளையோர் பருவத்தில் இல்லத்திலும், பள்ளியிலும், இதர சமூக நடவடிக்கைகளிலும் சிறந்த வகையில் பொருந்தி நடப்பவர்களாகத் திகழ்வர்.

ஸ்டாட் என்பார் (Stott) தன் ஆய்வில், இல்லத்து சமூக வாழ்வில் செயல்படும் இரு முக்கியக் காரணிகளைக் கண்டறிந்தார். அவை, தன்னம்பிக்கை, அன்பு, நட்புரிமை போன்றவற்றுடன் தொடர்புள்ள காரணிகளும், குடும்பப்பூசல், பெற்றோர்களின் தவறான நடத்தை போன்றவைகளுடன் தொடர்புள்ள காரணி களும் ஆகும். சிறந்த பொருத்தப்பாடுகளையுடைய குடும்பத்துப் பிள்ளைகள், பொருத்தப்பாட்டுச் சிக்கல்கள் உடைய குடும்பத்துப் பிள்ளைகளைவிட நன்கு பொருந்தி நடப்பவர்களாகவும், குடும்ப வாழ்க்கையினை விரும்பிப் பாராட்டுபவர்களாகவும், பொதுவாக ஆளுமைப் பொருத்தப்பாடுகளில் மேம்பட்டவர்களாகவும் இருந் தனர். இளையோரின் குடும்ப வாழ்க்கையினைப் பற்றி நடத்தப் பட்ட ஆய்வு ஒன்றில், குழந்தையின் ஆளுமை வளர்ச்சியில் இல்லம் ஒரு முக்கிய பங்கினை வகிக்கின்றது என்று கண்டறியப் பட்டது. மேலும், குடும்ப வாழ்க்கையில் பிள்ளை பெற்றோரிடம் கொண்டுள்ள அன்பு, நம்பிக்கையான உறவு, பற்றுறுதி ஆகியவை

களும் பெற்றோர்கள் பிள்ளைகளைக் கட்டுப்படுத்துவதில், தண்டிக்கும் முறையினைத் தவிர்த்து, மற்ற வழிகளில் பிள்ளைகளைக் கட்டுப்படுத்தும் வழக்கமும், குழந்தையின் ஆளுமை வளர்ச்சியில் முக்கிய செல்வாக்கினைப் பெற்றிருக்கின்றன என்றும், இதில் தெரிய வந்தது. பாஸ்ஸர்ட் என்பார் (Bossard) குடும்பம் இரு முக்கியப் பணிகளைக் கொண்டிருப்பதாகக் குறிப்பிடுகின்றார். அவை: 1. குழந்தை தன் இல்லத்தினின்று வெளிச்சென்று, பரந்த சமூக வாழ்க்கையில் பங்கேற்பதனால், அதன் சமூக வாழ்க்கைக்குக் குடும்பமே அடிப்படையாக அமைதல். 2. சமூக வாழ்க்கையினின்று இல்லத்திற்கே அது திரும்புவதால், இல்லமே அவனுக்குத் தஞ்சமாகவும் அமைதல் என்பனவாகும்.

மேலும் இளையோனின் இல்லப் பொருத்தப்பாடுகள், அவனது பிற்கால மண வாழ்க்கையினைப் பாதிப்பதாகவும், எத்தகைய தந்தையாக அவன் விளங்குவான் என்பதைத் தீர்மானிப்பதாகவும் உள்ளன. இதைப்பற்றிக் கூறுமிடத்து, பெற்றோர்களுடன் சாதகமான உறவு கொண்டு, அன்பிணைப்புக் கொண்டவர்களின் மண வாழ்க்கை அவ்வாறே மகிழ்ச்சிகரமானதாக இருக்கும் என்று டெர்மன் (Terman) குறிப்பிடுகின்றார். மணவாழ்க்கை மகிழ்ச்சியினை உண்டாக்கும் முக்கியத்துவம் வாய்ந்த காரணிகளில், தனியன், பெற்றோர்களுடன் கொண்டிருக்கும் உறவில் சிக்கல்களற்று இருப்பதே முதல் தகுதியினைப் பெறுகின்றது என்றும், மணமக்கள் தங்கள் பெற்றோர்களுடன் அன்பிணைப்பு கொண்டிருந்தால், அவர்களின் இல்லற வாழ்க்கை மகிழ்ச்சிகரமானதாக இருக்கும் என்றும், பர்ஜஸும், காட்ரெலும் (Burges and Cottrell) குறிப்பிடுகின்றனர். ஆனால், ஹாமில்டனும், மெக்கோவனும் (Hamilton and Macgowan), அளவிற்கு மீறிய அன்பிணைப்பு தீய விளைவுகளையே உண்டாக்குமெனக் கருதுகின்றனர். அவர்கள் தங்கள் ஆய்வில் பெற்றோர்களுடன் அதிகப் பாசத்தினைக் கொண்டிருந்தவர்கள், ஓரளவிற்கு பாசத்தினைக் கொண்டிருந்தவர்களை விட மணவாழ்க்கையில் மகிழ்ச்சி குறைந்தே காணப்பட்டனர் எனக் கண்டுள்ளனர். இதைத் தவிர, பாலின விஷயங்களின் மீது சாதகமற்ற மனப்பாங்கினைப் பெற்றிருந்த பெற்றோர்களின் பிள்ளைகள் பிற்காலத்தில், தங்கள் மணவாழ்க்கைப் பொருத்தப்பாட்டில் சிரமத்தைக் கண்டனர் என்றும் ஆராய்ச்சிகள் கூறுகின்றன.

மெயர்ஸ் என்பார் (Meyers) ஒரு தனியனின் பிற்கால மண வாழ்க்கை மகிழ்ச்சியினை வெகுவாகப் பாதிக்கும் நான்கு காரணிகளைத் தொகுத்துள்ளார். அவையாவன: (1) தனியனின்

தேவைகளைத் தாயார் சிர்குலைப்பதனல், அவனுள் பெண்களின் பால் ஏற்படும் நம்பிக்கையில்லா உணர்வும், சந்தேக மனப்பான்மையும். (2) தாயிடம் உள்ள மிகுந்த அன்பின் காரணமாக, தாயை ஒத்திருக்கும் ஒருவளை மணந்து கொள்ளல் அல்லது தாயிடம் உள்ள மிகுந்த அன்பின் நனவிலி எதிர்வினையாக தாயைப்போன் றல்லாத ஒருவளை மணந்துகொள்ளல். (3) பாலின விஷயங் களின் பால் அச்சமும், குற்ற உணர்வும் உண்டாகும்படியான பெற்ருேர்களின் பயிற்சி. (4) தகப்பன், தாயைத் தொடர்ந்து இகழ்ச்சியாக நடத்துவதனல், தனியனிடத்து, பெண்கள் மீது ஏற் படும் இகழ்ச்சியுணர்வு, இவைகளில் நான்காவது காரணி இரு பாலினருக்கும் பொருந்தும். இதைப்பற்றிக் கூறுமிடத்துத் தன் கணவனை விரும்பாத மனைவி தன் மகளின் எதிரில் கணவனைப் பற்றி இகழ்ச்சியாகப் பேசினல், அவள் தன் மகளின் பிற்கால மணவாழ்க்கையினை வெகுவாகப் பாதிக்கும் வழியில் நடந்து கொள்கின்ருள் என்று மெயர்ஸ் குறிப்பிடுகின்ருர்.

இந்நிலையில் இல்லமானது தனியனின் வாழ்க்கையை வரை யறுக்கும் காரணியாகவும், கண்காணிக்கும் காரணியாகவும் விளங்குகின்றது. இவ்வாறு இல்லம் தனியனின் வாழ்க்கையினை வரையறுக்கும் காரணியாக விளங்குவது அவனது நன்மைக்காகவே ஆகும். ஏனெனில், இளையோனுக்குப் பெரியவர்களின் உதவியும் ஆலோசனையும் தேவையாய் உள்ளது. இல்லம் அவனுக்கு ஆலோசனையையும் உதவியையும் தருவதோடு, பாதுகாப்பு உணர் வினையும் தருகின்றது, இல்லத்தின் இந்தப் பணியானது எந்த வகையில், எந்த வழியில், எதற்காகச் செயல்படுகின்றது என்பது மிக முக்கியமானது. ஒரு சிறந்த இல்லம் இளையோனுக்குத் தேவைப்படும் செயல் சுதந்திரத்தினையும், அதன்பால் அவன் செய்யும் முயற்சியினையும் நன்குணர்ந்து, அதற்கான வாய்ப்புகளை யும், வழிமுறைகளையும் அவனுக்கு வகுத்துத் தரும். மேலும், அவன் தன் பொறுப்புகளை ஏற்கவும், அவன் தன் எதிர்காலத்திற் கான திட்டங்களையும் முடிவுகளையும் வகுத்துக்கொண்டு, தன்னல் இயன்ற வகையில் விரைவில் முதிர்ந்தோரின் தகுதியினை அடைய வும் அது ஊக்குவிக்கும்.

முதிர்ந்தோரின் தகுதியினைப் பெறுவது என்பது ஒரே தருணத்தில் நிகழ்ந்துவிடும் செயலல்ல. மாருக அது பல ஆண்டு களில், படிப்படியாக இளையோனுக்கு அளிக்கப்படும் சுதந்திரத் திற்கான வாய்ப்புகளின் மூலம் அவன் அடையப்பெறும் தற்சார்புட மையினல் ஏற்படுகின்றது. இளையோன் எவ்வளவு விரைவில் பொறுப்புகளை ஏற்றுச் சுதந்திரமாகச் செயல்பட இயலுமோ

அவ்வளவு விரைவில் சுதந்திரமாகச் செயல்படுவதற்கான முழு வாய்ப்பினையும் அளிக்கும் குடும்பமே, இளையோன் தன் வாழ்க்கையினைப்பற்றி முதிர்ந்த நோக்கினைப் பெறுவதற்குக் காரணமாக அமைகின்றது. இவ்வாறு இளையோருக்குப் பொறுப்பினையளிப்பது என்பதனைத் தற்செயலாக நடக்கும் வகையில் விட்டுவிடுவது கூடாது. மாறாக அது பெற்றோர்கள் மிகத் தீவிரமாகச் சிந்தித்து, திட்டமிட்டுச் செய்யவேண்டிய பொறுப்பாகும்.

ஆனால், பெரும்பாலான பெற்றோர் தங்கள் இளையோரின் வளர்ச்சி நிலையினைக் குறைவாகவே கணித்து அவர்களின் சுதந்திரமாகச் செயல்படுவதற்கான ஆசையினையும், திறமையினையும் பொருட்படுத்தாது, அளவுக்குமீறி அவர்களைக் கட்டுப்படுத்தவும், பாதுகாக்கவும் விழைகின்றனர். அனுபவமும், முதிர்ச்சியும் பெறாத இளையோன் பெற்றோர்களின் பாதுகாப்பினையும் போதனையினையும் ஓரளவிற்கு ஏற்கவேண்டியவனாகவே இருக்கின்றான். எனினும், சுதந்திரத்திற்கான வாய்ப்புகள் இளையோருக்கு நிரந்தரமாகவே அளிக்கப்படாவிடில், அவனிடம் அனுபவ முதிர்ச்சி தோன்றுவதற்கு வழியில்லை. போர்க்காலங்களில் இளையோருக்குக் கொடுக்கப்பட்ட பொறுப்புகள், இளையோரின் முயற்சியினை எவ்வாறு துரிதப்படுத்தலாம் என்பதற்கு ஏற்ற சான்றுகளாக உள்ளன.

இளையோர் தங்களிடம் உதவியை நாடும்போது மட்டுமே பெற்றோர்கள் அவர்களுக்கு உதவவேண்டுமேயன்றி, உதவி தேவையில்லாதபோதும் அதனை அவர்களின் மீது திணிப்பது சிறந்ததன்று. ஆதலால், பெற்றோரின் கடமை. இளையோருக்கு அவர்களின் உதவி தேவைப்படும் தருணத்தில் அதனை நல்குவதே யாகும். இத்தகைய பெற்றோர்களுடைய இளையோர், தன்னம்பிக்கையோடு பொறுப்பினை ஏற்றுச் செயல்பட விரும்புவர். ஏனெனில் இந்நிலையில், தங்களுக்குத் தேவையானபோது தங்கள் பெற்றோரின் உதவி தங்களுக்குக் கிட்டுவது உறுதி என்ற உணர்வு அவர்களில் உள்ளது. ஆதலால் இளையோனின் இல்லத்தைப் பற்றிய அறிவானது, அவன் முதிர்ந்த நோக்கின்பால் பெற்றுள்ள வளர்ச்சியினை அறிவதற்குத் துணையாக இருக்கும்.

ஹாட்விக் என்பார் (Hattwick) தன்னுடைய ஆய்வில் அமைதியும் மகிழ்ச்சியும் நிறைந்த இல்லமானது குழந்தையிடத்து ஒத்துழைக்கின்ற நடத்தையினையும், சிறந்த மனவெழுச்சிப் பொருத்தப்பாடுகளையும் ஏற்படுத்துகின்றது எனவும், அடிக்கடி நோய்வாய்ப்படும் தன்மை, நரம்புத் தளர்ச்சி ஆகியவற்றால்

பாதிக்கப்பட்ட இல்லத்துக் குழந்தைகள் ஒத்துழைக்காத நடத்தையினுடைய மனவெழுச்சிப் பொருத்தப்பாடுகளைப் பெறுகின்றன எனவும் கண்டறிந்தார்.

எனினும், பெற்றோர்கள் அளவிற்கு அதிகமான சுதந்திரத்தினை இளையோருக்குத் தருதல் ஆபத்தானது. இளையோரின் சுதந்திர உணர்வினை மேம்படுத்துவது அவசியமெனினும் அந்தச் சுதந்திரத்தினை மிக விரைவிலேயே அளித்துவிடுவதும் அவனுக்கு நன்மை பயக்காது. இதைப்போன்றே அவர்கள் சுதந்திரமாகச் செயல்படுவதற்கு வேண்டிய வாய்ப்புகளை மிகத் தாமதமாக அளிப்பதும் கூடாது. எனவே, நல்ல அனுபவமிக்க பெற்றோர்கள் மிக விரைவில் இளையோருக்கு உரிமையினை அளித்துவிடாது, சிறிது சிறிதாக அவர்கள் அதை உணரும் வண்ணமும் அதே நேரத்தில் தங்களின் எண்ணத்தைத் தவறுகப் புரிந்துகொள்ளாது தொடர்ந்து தங்களிடமிருந்து பாதுகாப்புணர்வினை நாடும் வண்ணமும் சுதந்திர உரிமையைத் தருவர்.

சிறுவர்களைப் பற்றி உளவியலார் நடத்திய ஆய்வு ஒன்றின் மூலம், தங்கள் பெற்றோர்களை நம்பி அவர்களிடம் ரகசியங்களைச் சொல்லும் குழந்தைகள், பெற்றோர்களிடத்து நம்பிக்கை கொண்டிராத குழந்தைகளைவிடச் சிறந்த சமூக மனவெழுச்சிப் பொருத்தப்பாடுகளைக் கொண்டிருந்தனர் என்று தெரிய வந்துள்ளது, எனவே பெற்றோர் தம் பிள்ளைகளை அளவுக்குமீறிப் பாதுகாத்துத் தடைகளை ஏற்படுத்தாமலும், அதே நேரத்தில் முழுச் சுதந்திரத்தினைத் தந்துவிடாமலும் அவர்களின் தேவைக்கேற்ப உரிமையினையும் சுதந்திரத்தினையும் படிப்படியாக நல்குபவர்களாக இருக்கவேண்டும்.

இளையோருக்குச் செயல் சுதந்திரத்தினைத் தருவதில் பெற்றோர்கள் தங்களின் ஆதிக்கப் போக்கினை வெகுவாகத் தியாகம் செய்ய வேண்டியது அவசியம். அவர்கள் தங்கள் ஆதிக்கத் தன்மையினைக் கைவிட்டு, இளையோரைத் தங்கள் போக்கில் வளர அனுமதிக்க வேண்டும். இதன் பால் அவர்கள் தங்களுக்குள் கட்டுப்பாடுகளை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். பெற்றோர்கள், இளையோரிடத்துப் புதிதாகத் தோன்றும் பயன் மதிப்புகளையும், வழக்கங்களையும் அங்கீகரித்து நடக்க வேண்டும். இவைகளெல்லாம் பெற்றோர்களுக்கு மிகவும் கடினமான செயல்களாகக் காணப்படினும் தங்கள் பிள்ளைகளின் எதிர்கால நலத்தினை முன்னிட்டு அவர்கள் இவற்றை அனுசரித்து நடப்பது அவசியமாகும்.

சுருங்கக்கூறின், இளையோனை நன்கு புரிந்துகொண்டு, அவனுக்கு ஒரு தனி மனிதனின் தகுதியினை அளித்தல் வேண்டும். அவன் தனக்குத் தீங்கினை ஏற்படுத்திக் கொள்ளாமல் எந்த அளவிற்குச் சுதந்திரமாகச் செயல்பட முடியுமோ அந்த அளவிற்கு அவனுக்கு சுதந்திரம் அளித்தல் வேண்டும். மேலும் அவனது இல்லத்தினர் எல்லா வகையிலும் அவனை ஏற்றுக்கொள்பவர் களாகவும், சமநிலையான மனவெழுச்சி நடத்தைகளை உடையவர் களாகவும் இருத்தல் வேண்டும்.

**பிள்ளைகளின்பாலான பெற்றோர்களின் மனப்பாங்கு (ParentalAttitude):**

இளையோனின் பொருத்தப்பாடும் ஆளுமை வளர்ச்சியும் பெற்றோர்களின் மனப்பாங்கினையும், இல்லத்தில் நிலவும் சமூக, உளவியல் சூழ்நிலையையும் பொறுத்துள்ளது. இளையோரிடம் தனியாள் வேறுபாடுகள் காணப்படுவதைப் போன்றே, இல்லத் திலும் பெற்றோர்களிடமும் அத்தகைய தனியாள் வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஆதலால், இளையோர்களைப் பற்றிப் பெற்றோர் கள் கொண்டுள்ள மனப்பாங்குகளில் உள்ள வேறுபாடுகளைப் பகுத்தாய்ந்தால், அவை இளையோரின் ஆளுமை வளர்ச்சியிலும், நடத்தைப் பொருத்தப்பாடுகளிலும் கொண்டுள்ள செல்வாக்கினை நிர்ணயிக்கமுடியும். பாஸ்ஸர்ட் (Bossard) இதைப்பற்றிக் கூறு மிடத்து, பிள்ளைகளின் பிரச்சினை நிலையினை வலியுறுத்தாது, இல்லங்களின் பிரச்சினை நிலையினை வலியுறுத்துகின்றார். இதைத் தான் அவர் பிரச்சினைகளைக் கொண்ட பிள்ளைகளையுடைய இல்லங் கள் (Homes with Problem Children) என்று குறிப்பிடாது பிரச்சினைகளைக் கொண்ட இல்லத்துப் பிள்ளைகள் (Problem Homes with Children) என்று குறிப்பிடுகின்றார்.

இல்லத்தில் நிலவும் சூழ்நிலைக் காரணிகளில், பிள்ளைகளின் வாழ்க்கையினை வெகுவாகப் பாதிக்கும் முக்கியமான காரணி பெற்றோர்களின் மனப்பாங்கே ஆகும். ஆதலால் பெற்றோர் களின் பலவிதப்பட்ட மனப்பாங்குகளையும், அவற்றின் தன்மை களையும், விளைவுகளையும் ஆராய்ந்தறிவது இளையோரின் இல்லத்துப் பொருத்தப்பாடுகளை நன்கு புரிந்து கொள்ள உதவும். இல்லங் களிடையே குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் காணப்படுவதால், இளையோரைப்பற்றி நன்கு அறிவதற்கு, அவர்களுடைய இல்லத்து உறவுகளையும், பொருத்தப்பாடுகளையும் தெரிந்து கொள்வது பயனுள்ளதாகும். இல்லங்களிடை காணப்படும் வேறுபாடுகள், முக்கியமாக பெற்றோர்களின் மனப்பாங்குகளில் காணப்படும் வேறுபாடுகளின் அடிப்படையில் ஏற்படுகின்றன. பெற்றோர்களின்

மனப்பாங்குகளில் முக்கியத்துவம் மிக்கவை ஆதிக்கம், பணிவு, ஏற்பு-மறுப்பு ஆகியவைகளாகும். பால்ட்வின் என்பார் (Baldwin) பெற்றோர்களின் மனப்பாங்கின் நடத்தை முறைகளை மூன்று பிரிவு களாகப் பிரித்துள்ளார். அவை மறுப்பது, ஏற்றுக் கொள்வது, தற்செயலானது என்பனவாகும். மறுக்கும் மனப்பாங்குடைய பெற்றோர்கள் பிள்ளைகளை விரும்பாது தங்கள் வெறுப்பினை வெளிப்படையாகவே காட்டுவர். இவர்களின் மனப்பாங்கு பிள்ளைகளை வெளிப்படையாக வெறுப்பது அல்லது பிள்ளைகளின் பால் அக்கறை கொள்ளாது அவர்களைப் புறக்கணிப்பது ஆகும். பெற்றோர்கள் பிள்ளைகள் மீது தங்கள் வெறுப்பினைப் புலப்படும் படியாக காட்டும்போது, பிள்ளைகள் அவர்களின் கடினமான கட்டுப்பாடுகளினால் துன்பம் அடைவர். பிள்ளைகளைப் பற்றி அக் கறை கொள்ளாத பெற்றோர், பிள்ளைகளுக்கு அளவிற்கு மீறிய சுதந்திரம் தந்துவிடுவர். இவ்விருவகைப் பெற்றோர்களும் தங்கள் விஷயங்களில் பிள்ளைகள் தலையிட்டால், அவர்களை வன்மையாகத் தண்டிப்பர்.

பிள்ளைகளை ஏற்றுக்கொள்ளும் தன்மையுள்ள பெற்றோர்கள் மூன்று வகையினராகக் காணப்படுகின்றனர். முதல் வகையினர், பிள்ளைகளின் விஷயங்களில் அதிகமாக ஈடுபடுபவர்களாகவும், பிள்ளைகளை அளவிற்கு மீறிப் பாதுகாப்பவர்களாகவும் இருப்பர். இரண்டாம் வகையினர், குடியரசு முறை சார்ந்த பெற்றோர் நடத்தையினை உடையவர்கள். இவர்கள் பிள்ளைகளுக்குத் தேவை யான அளவே செல்லமும் உரிமையும் தந்து, தேவைப்படும்போதே அவர்களின் விஷயங்களைக் கண்காணிப்பவர்களாக இருப்பர். அவர்களைத் திருத்தவோ கண்டிக்கவோ முற்படும்போது, தவறு களின் விளைவினை மட்டுமே அவர்களுக்கு விளக்குபவர்களாகவும், கட்டளையிடும் இயல்பற்றவர்களாகவும் இருப்பர். மூன்றும் வகை யினர், குடியரசு முறையினையும், பிள்ளைகளின் பால் அதிக ஈடுபாடு கொள்ளும் முறையினையும் கொண்டிருப்பர். இவர்கள் மேற்கூறிய மனப்பாங்குகளுக்கு இடையான நடுத்தரமான மனப்பாங்கினைக் கொண்டு விளங்குவர்.

தற்செயல் மனப்பாங்குடைய பெற்றோர்கள் தம் பிள்ளைகளின் விஷயங்களில் மென்மையாகவும் தற்செயலாகவும் ஈடுபடுவர். இவ் வகையிலும், இரு விதமானவர்கள் உளர். முதல் வகையினர், அதிகாரத்துவ — தற்செயலான போக்குடையோர். இவர்கள் பிள்ளைகளை அதிகாரத்துடன் அடக்கியாளுவர். ஆனால் இவர்கள் பிள்ளைகளோடு வெறுப்பும், புறக்கணிப்பும் கொண்டிருப்பதில்லை. இரண்டாம் வகையினர், ஈடுபாடு கொண்ட—தற்செயலான

போக்கினர். இவர்கள் எப்போதும் மென்மையாக நடந்து கொள்வர். எனினும், அடிக்கடி தங்களின் நடத்தையில் மாறுபடுவர். அவர்கள் பிள்ளைகளுக்காகத் தியாகங்களைச் செய்யவோ அளவிற்கு மீறிச் செல்லம் கொடுக்கவோ மாட்டார்கள். ஆனால், அதே நேரத்தில் பிள்ளைகளுக்குத் தேவையானவற்றை உரிய காலத்தில் செய்து தருவர்.

பெற்றோர்கள் பிள்ளைகளிடம் ஏன் ஒரு குறிப்பிட்ட விதத்தில் நடந்து கொள்கின்றனர் என்பதை அறிய, அவர்கள் ஏன் பிள்ளைகளிடம் பலதரப்பட்ட மனப்பாங்குகளைக் கொண்டுள்ளனர் என்பதை அறிந்து கொள்ள வேண்டியது அவசியம். பெற்றோர்களிடம் பிள்ளைகளின்மீது ஒரு குறிப்பிட்ட மனப்பாங்கு அமைவதற்குப் பல காரணங்கள் உள்ளன. பெற்றோர்களுக்கிடையில் உள்ள உறவு சாதகமற்று இருக்கும்போது, இவர்கள் பிள்ளைகளோடு நல்லுறவு கொள்வதில் தங்களுக்குத் தேவையான அன்பினையும் பாதுகாப்பினையும் அடைவர். சில பெற்றோர்கள் மிகுதியான நேர்மையுணர்வு கொண்டிருப்பதினால், தம் பிள்ளைகளிடம் சிறு விஷயங்களிலும் கடுமையாக நடந்து கொள்வர். பிள்ளைகளோடு பெற்றோர்கள் செலவிடும் கால அளவினைப் பொறுத்தும், பிள்ளைகளுக்காக அவர்கள் செலவிடும் பணத்தைப் பொறுத்தும் மனப்பான்மை வேறுபடுகிறது. பிள்ளைகளின் உடல் ஆரோக்கியத்தினையும் நோய்வாய்ப்படும் இயல்பினையும் பொறுத்தும் அவர்களுடன் குறிப்பிட்ட மனப்பாங்கினைக் கொள்ளலாம். மேலும், குடும்பத்தில் பிள்ளைப்பேற்றின் வரிசை முறையினைப் பொறுத்தும் பெற்றோர்கள் ஒரு குறிப்பிட்ட மனப்பாங்கினைக் கொள்ளலாம். சான்றாக, முதல் பிள்ளையின் மீதும், கடைசிப் பிள்ளையின் மீதும், அதிக பாசம் உடைய மனப்பாங்கினைப் பெற்றோர்கள் கொண்டிருக்கலாம்.

பெற்றோர்களுடைய எல்லாவிதமான மனப்பாங்குகளிலும், புறக்கணிக்கும் அதிகாரப் போக்கு மனப்பாங்குதான் பிள்ளைகளின் ஆளுமை வளர்ச்சியினைப் பெரிதும் பாதிக்கின்றது. புறக்கணிக்கப்பட்ட பிள்ளை தாழ்வு மனப்பான்மை கொள்ள நேரிடுகின்றது. அந்தப் பிள்ளை எந்நேரமும் அன்பினையும், பாதுகாப்பினையும் நாடவேண்டிய நிலையில் இருக்கின்றது. பெற்றோர்களிடம் இவற்றைப் பெறமுடியாத நிலையில் அப்பிள்ளை மற்றவர்களின் மூலமாவது இவற்றைப் பெற முயற்சிக்கின்றது. மேலும், அப்பிள்ளை, தனிமை உணர்வினை வளர்த்துக் கொள்வதினால், அத்தனிமை உணர்வினை அதிகமாக்கும் வாழ்க்கையின் எந்த நிகழ்ச்சியும் அப்பிள்ளையின் நிலையினைப் பெரிதும் பாதிக்கும். பெற்றோர்கள்

இளையோர்கள் இடையே உள்ள பொருத்தப்பாடுகளைப் பற்றிய பிரச்சினைகளை அறிய உயர்நிலைப்பள்ளி மாணவ மாணவிகளைக் கொண்டு நடத்தப்பட்ட ஆய்வு ஒன்றில் அதிகாரத்துவ முறையினைக் கையாளும் இல்லங்களின் இளையோர்களிடை தான் பிரச்சினைகள் அதிக அளவில் இருப்பதாகக் கண்டனர். இதில் பாலின வேறுபாடுகள் சிறிதும் காணப்படவில்லை. பெற்றோர்களுடன் ஒத்துச் செயல்பட்ட இளையோரைவிட, அவ்வாறு ஒத்துச் செயல்பட இயலாத இளையோரின் எண்ணிக்கை அதிகமாகக் காணப்பட்டது. இல்லத்தைவிட்டு விலகிச் சென்றுவிட விரும்பும் இளையோர் அதிகாரத்துவ பாணியின்பாற்பட்ட இல்லங்களில் தான் அதிகமாகக் காணப்பட்டனர். மேலும், அதிகாரத்துவ பாணியின் பாற்பட்ட நகரத்திலுள்ள இல்லங்களின் இளையோர்களே கிராமத்திலுள்ள இல்லங்களின் இளையோர்களைக் காட்டிலும் அதிக எண்ணிக்கையில் பிரச்சினைகளையுடையவர்களாய் இருந்தனர். நகரத்தில் உள்ள அதிகாரத்துவ பாணி இல்லத்தின்பாற்பட்ட பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளைக் கண்காணிப்பதில் அளவிற்கு அதிகமான அக்கறை எடுத்துக்கொள்ளுவதனால், நகரத்து அதிகாரத்துவ பாணியின் பாற்பட்ட இல்லங்களின் பிள்ளைகளே அதிகமான பொருத்தப்பாட்டுப் பிரச்சினைகளைக் கொண்டிருந்தனர்.

இந்த ஆய்வின் முடிவும், இது போன்ற ஏனைய ஆய்வுகளின் முடிவும், குடியரசு முறையில் வளர்க்கப்பட்ட இளையோர் அதிகாரத்துவ பாணி சார்ந்த இளையோரை விட குறைந்த அளவிலே பிரச்சினைகளையுடையவர்களாக இருப்பர் என்று அறியப்படுகின்றது. குடியரசு முறை சார்ந்த குடும்பங்களில், இளையோர் தங்கள் பெற்றோர்களுடன் ஒத்துப்போகும் தன்மையில், குறைந்த அளவே மனமுறிவுகளை அடைகின்றனர். மேலும், குடியரசு முறை சார்ந்த குடும்பங்களில் இளையோர் சமூக நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்கு அனுமதிக்கப்படுவதால், அவர்கள் நல்ல சமூகப் பொருத்தப்பாடுகளுடன் கூடி வளர்ந்தவர்களாய்க் காணப்படுகின்றனர். எல்லாவற்றையும் விடக் குடியரசு முறைக் குடும்பங்களில் பெற்றோர்களின் நடத்தை கட்டளை இடுவதை அடிப்படையாகக் கொண்டிராது, ஒத்துழைப்பின் அடிப்படையில் செயல்படுவதால், இக் குடும்பங்களில் இளையோரின் தன்னம்பிக்கையும் சுதந்திரமாகச் செயல்படும் தன்மையும் வளர்க்கப்படுகின்றன.

இளையோனும் அவனது குடும்ப மனப்பாங்கும் :

கீழே காணப்படும் வினாக்கள், இளையோன் உள்ளத்தில் அவனது இல்லத்தினைப் பற்றி அடிக்கடி எழும் பிரச்சினைகளாக உள்ளன.

1. பெற்ருேர்கள் நம்மை இன்னும் குழந்தைகளாகவே கருதி நடத்த வேண்டுமா ?

2. பெற்ருேர் நமக்கு வந்துள்ள கடிதங்களைப் பிரிக்கலாமா?

3. பெற்ருேர்கள் கூறுவது எப்போதும் சரியாகவே இருக்க முடியுமா ?

4. வயதுவந்த பெண், வாழ்க்கையினைப் பற்றிய கேள்விகளைத் தன் தாயிடம் கேட்கும்போது, அவள் ஏன் சரியான பதிலினைத் தர மறுக்கின்ருள் ?

5. இளையோரைத் தண்டிக்க நேரிடுகையில், அதைப் பெற்ருேர்கள் எப்போது, எவ்வாறு செய்யவேண்டும் ?

6. என்னைப்பற்றிய எல்லா விஷயங்களையும் என் பெற்ருேர்கள்தான் தீர்மானிக்க வேண்டுமா ?

7. சகோதரர்–சகோதரிகளிடையே சச்சரவுகள் எங்ஙனம் தவிர்க்கப்படலாம் ?

8. என் சகோதரன் என்னை விட இளையவனுக இருப்பினும் என் பெற்ருேர்கள் ஏன் அவனிடம் அதிக அன்பு காட்டுகின்றனர் ?

8. என் இளைய சகோதர, சகோதரிகள் என் அறிவுரைகளை ஏன் மதிப்பதில்லை ?

10. இளையோனிடம் தன் சிறிய சகோதர சகோதரிகளைப் பராமரிக்கும் பணியினைத் திணிக்கலாமா ?

11. தனது பிள்ளைகளைப் பற்றிப் பெற்ருேர்கள் எடுக்கும் முடிவுகளில் உறவினர்களின் தலையீடு பொருத்தமானதா ?

12. ஒரு ஆணே, பெண்ணே தன் குடும்பத்தின் பொருளாதார நிலையினை எந்த அளவிற்குத் தெரிந்திருக்கலாம் ?

13. இளையோன் வேலை செய்து கொண்டிருக்கையில் அவன் ஊதியத்தில் பெற்ருேர்களுக்குரிய பங்கு என்ன ?

14. தங்கள் நண்பர்களை அவர்களே தேர்ந்தெடுக்கப் பெற்ருேர்கள் இளையோர்களை அனுமதிக்கலாமா ?

15. ஒரு மூத்த சகோதரியை விட அவளது இளைய சகோதரனை இரவில் தாமதித்து வீட்டிற்கு வர அனுமதிக்கலாமா ?

முதிர்ந்தோருக்கு இப் பிரச்சினைகள் எல்லாம் மிகவும் சிறிய தாக இருக்கும்போது, இளையோர் இவற்றின் மேல் வெகுவான கவனத்தைச் செலுத்துவது சிரிப்பிற்குரியதாகத் தோன்றும். ஆனால் இளையோனுக்கோ தான் முதிர்ந்தோரின் தரத்தை எய்துவதில் தோன்றும் எந்த இடர்ப்பாடும், தலையீடும் மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

இளையோர் தங்கள் உரிமைகளை வெகுவாக நிலைநாட்ட முயற்சிப்பது முதிர்ந்தோரிடத்து எரிச்சலை உண்டாக்குகின்றது. இதற்கேற்பச் சில இளையோர் தங்கள் பொறுப்புகளை மறந்து விட்டு, தங்கள் உரிமைகளையே நிலைநாட்ட முற்படுகின்றனர். எனினும், இவ்வாறு தங்கள் உரிமைகளையும், கோரிக்கைகளையும் புலப்படும்படியாக வெளிப்படுத்துவது, அவற்றைத் தன்னுள் அடக்கி வைப்பதைவிடச் சிறந்ததாகும். ஏனெனில், இவற்றை ஒடுக்கி அடக்கி வைத்தல், இவர்களின் பிற்கால ஆளுமைத் தன்மையினை வெகுவாகப் பாதிக்கும். குரோவும், குரோவும் (Crow and Crow) தங்கள் ஆய்வில், 4000 இளையோர் பருவத்து ஆண்பிள்ளைகளையும், பெண்பிள்ளைகளையும் அவர்கள் தங்கள் பெற்றோர்களின் மனப்பாங்குகளின் பால் கொண்டுள்ள கருத்து களைக் கூறும்படி கேட்டனர். அவ்விளையோர் இதன் பால் எண்ணற்ற கருத்துகளைத் தெரிவித்தனர். ஆண்பிள்ளைகளும் பெண் பிள்ளைகளும் தெரிவித்த கருத்துகள் சிலவற்றை இங்கு வரிசைப் படுத்தியுள்ளோம்.

1. மற்ற மாணவர்களைப் போல் நல்ல மதிப்பெண்களைப் பெறாதபோது பெற்றோர்கள் திட்டுதல்.

2. விருப்பமில்லாத உணவு வகைகளை உட்கொள்ளும்படிப் பெற்றோர்கள் வற்புறுத்துதல்.

3. சகோதரர்களையும் சகோதரிகளையும் வெளியில் அழைத்துச் செல்லுமாறு வற்புறுத்துதல்.

4. பணத்தைச் செலவு செய்ததைப்பற்றி முழு விளக்கம் கேட்டல்.

5. சகோதர சகோதரிகளை முன் மாதிரியாகக் காட்டி, ஏசுதல்.

6. தங்கள் பழக்க வழக்கங்களைப் பற்றித் தொடர்ந்து அறிவுரைகளைத் தந்து, தொல்லை கொடுத்தல்.

7. தங்கள் உடல் ஆரோக்கியத்தின் மீது பெற்றோர்கள் மிகுந்த அக்கறை கொள்ளல்.

8. பெற்றோர்கள் தங்களை மிகையான கண்காணிப்பில் திருத்தல்.

9, பள்ளியில் தங்களுக்கு விருப்பமுள்ள பாடங்களைத் தேர்ந்தெடுப்பதற்கு அனுமதி மறுத்தல்.

10. தங்களுக்குத் தேவையான உடைகளைத் தேர்ந்தெடுக்க அனுமதி மறுத்தல்.

11. தினசரி செலவிற்குப் பணம் கொடுக்க மறுத்தல்.

12. தங்கள் தொழிலைத் தேர்ந்தெடுப்பதில் தங்களுடைய விருப்பத்தினைப் பொருட்படுத்தாதிருத்தல்.

13. மற்றச் சிறுவர்களோடு போக்கிரித்தனமான முறையில் நடந்து கொள்வதைக் கண்டித்தல்.

14. தங்களைப்பற்றி மற்றவர்களிடம் பெற்றோர்கள் பெருமையடித்துக் கொள்ளல்.

புளாக் என்பாரும் (Block) இத்துறையில் நடத்திய ஆய்வின் மூலம், மேற்கண்டவைகளை உறுதிப்படுத்தியுள்ளார்.

இளையோரை நன்கு புரிந்துகொண்டு செயல்படுவது என்பது அவர்களின் மனக்குறைகளை யெல்லாம் அவர்கள் விரும்பும் வண்ணமே நிறைவேற்ற வேண்டுமென்பதன்று. ஆனல், பெற்றோர்களும் தங்களுடைய மனப்பாங்குகளைப் பரிசீலித்து, இளையோரின் உரிமைகளுக்கும் பொறுப்புகளுக்கும் ஏற்றவகையில் அவற்றை மாற்றியமைத்துக் கொள்ளவேண்டும்.

குடும்பத்தில் எழும் பிரச்சினைகளும், கொந்தளிப்புகளும் இளையோரின் பிற்கால வாழ்க்கையினைப் பெரிதும் பாதிக்கின்றதால், இவ்விஷயத்தினைப் பெற்றோர்கள் முக்கியமற்றதாகவும் சாதாரணமானதாகவும் கருதுதல் கூடாது. ஆதலால், குழந்தைகளை நன்கு வளர்ப்பதற்கான முறையினைப் பற்றிப் பெற்றோர்கள் தற்காலத்தில் அறிவுறுத்தப்படுகின்றனர். இத்தகைய வளர்ப்பு

முறையினை நன்கு பின்பற்றிச் சிறு குழந்தைகளைச் செவ்வனே வளர்த்தால் அவர்கள் பிற்காலத்தில் பொறுப்பு மிகுந்த இளை யோர்களாக உருவாவதற்கு இடமுண்டு. ஏனெனில், இளையோரின் பழக்க வழக்கங்களும், மனப்பாங்குகளும், குழந்தைப் பருவ நிகழ்ச்சி களை அடிப்படையாகக் கொண்டே வளர்கின்றன. சான்றாக, மிகுந்த செல்லம் கொடுக்கப்பட்ட பிள்ளையானது, பிற்காலத்தில் பொறுப்பற்ற இளைஞனாக மாற இடமுண்டு. குழந்தைகளிடத்துக் காணப்படும் பிடிவாதம், அளவிற்கதிகமான கோழைத்தனம், அசட்டைத் தன்மை, சோம்பல் போன்ற குணத்தன்மைகளானது திடீரென இளையோர் பருவத்தில் ஒத்துழைப்பு, உழைக்கும் தன்மை, மரியாதையுடன் நடந்து கொள்ளும் தன்மை, பொறுப் புடைமை ஆகியவையாக மாறுவதில்லை. மாறாக, குழந்தைப் பருவத்தில் காணப்படும் முக்கியமான குணத்தன்மைகள் பெரும் பாலும், இளையோர் பருவத்தில் தீவிரமாக வளர்ந்தே காணப் படுகின்றன. இளையோர் பருவமானது, குழந்தைகளும், பெற்றோர் களும் பயிற்சி பெறுவதற்கான வாய்ப்பினையளிக்கும் பருவமாத லால், பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளின் தேவைகளுக்கேற்பத் தங்கள் மனப்பாங்குகளையும், நடத்தைகளையும் பொருத்தியமைத் துக் கொண்டால், இளையோரின் வாழ்க்கைப் பிரச்சினைகள் வெகு வாகத் தவிர்க்கப்பட்டு, அவர்களின் வளர்ச்சிப் பருவம் சிறப்பாக அமையும். இதனை முன்னிட்டு இங்கு சில யோசனைகள் தரப்பட் டுள்ளன.

**இளையோர்களின் இல்லப் பொறுப்புகளும், உரிமைகளும் :**

இளையோர் பருவத்தில் தங்கள் பிள்ளைகள் முதிர்ந்தோர் நிலை யினையடைகின்றனர் என்பதைப் பெற்றோர்கள் உணர்தல் நன்று. பெற்றோர்கள் இடும் கட்டளைகள் எதனையும் இளம் வயதில் பிள்ளை கள் ஏற்றுப் பணிந்து செய்வதால் இப்பருவத்திலும் அவ்வாறே இளையோர் நடந்து கொள்ள வேண்டும் எனப் பெற்றோர்கள் எதிர் பார்க்கக் கூடாது. ஏனெனில், இளம் வயதினைப் போலன்றி, இப்போது இளையோர் பருவத்தில் பிள்ளைகள் தங்கள் பெற்றோர் கள் தங்களுக்குக் கட்டளை இடுவதை விரும்புவதில்லை. தங்கள் பெற்றோர்கள் இடும் வேலைகளைச் செய்ய மறுப்பதுடன், அவ்வேலை களைப் பெற்றோர்களே செய்து கொள்ள இயலுமே என இவர்கள் பதிலளிக்கின்றனர். இங்கே இளையோர்கள் தாங்கள் பிறரால் ஆணையிடப் படக்கூடாது என்று கருதுகின்றனர். இந்த எதிர் பார்ப்பே ஓர் உரிமைப் பிரச்சினையாக மாற்றமடைந்து, இளையோர்-பெற்றோர் உறவினைப் பெரிதும் பாதிக்கின்றது. இந் நிலையில் அவர்கள் தங்கள் கடமைகளை மறந்தவர்களாய், உரிமை

களைப்பற்றி மட்டுமே பேசுபவர்களாயும், சிந்திப்பவர்களாயும் காணப்படுகின்றனர்.

பள்ளியில் குழந்தைகள் காரண காரியங்களைப் பற்றி அறிந்து எதிலும் சிந்தித்துத் செயல்படக் கற்பிக்கப்படுகின்றனர். பள்ளியில் அவர்கள் "நீங்கள் இன்னும் சிறு பிள்ளைகளல்லர். வளர்ந்துவிட்ட வர்கள். ஆதலால் நீங்கள் முதிர்ந்தோரைப் போன்று நடந்து கொள்ள வேண்டும்" என்று தொடர்ந்து போதிக்கப்படுவதால், இளையோர் தாங்களும் முழு மனிதர்கள்; பிறருக்கு உள்ள எல்லா உரிமைகளும், சலுகைகளும் தங்களுக்கும் உண்டு என்ற உணர்வினை அடைகின்றனர். தங்களை வளர்ந்து விட்டவர்களாகப் பெற்றோர் கள் கருதாமலிருப்பதைத் தான் இளையோரால் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை. இந்நிலையில், பெற்றோர்கள், இளையோரின் பேச்சுகளைக் கேட்டுச் சிரிப்பதும் "உனக்கென்ன அதைப்பற்றித் தெரியும்" எனக் கேட்பதும், "நீ அவைகளைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை உன் வேலையைப் பார்" என்று கூறுவதும், அவர் களின் உணர்வுகளையும் அவமதித்து அவர்களிடையே எரிச்சல் தன்மையினையும் பொறுமையற்ற தன்மையினையும் உண்டாக்கு வதும் நன்றன்று.

இளையோர், தங்கள் இல்லப் பிரச்சினைகளில் ஆர்வத்தினைக் காட்டினால் பெற்றோர்கள் அதை உணர்ந்து அவர்களின் ஆர்வத் தினைப் பாராட்டவேண்டும். அதோடு மட்டுமன்றி, அவர்களின் முதிர்ச்சிக்கேற்ப ஒரு சில பிரச்சினைகளை அவர்களின் பால் ஒப்படைத்து, அவர்களே அதனை நிருவாகித்து, அதற்கான தீர்வினைக் காண்பதற்கும் பெற்றோர்கள், வழிவகை செய்வது சிறந்ததாகும். அங்ஙனம் சில பணிகளைப் பெற்றோர்கள், இளை யோரின் கையில் ஒப்படைத்துவிட்டு, அவர்கள் அதை நிருவாகிப் பதில் சிரமம் காணும்போதும், துயரம் அடையும்போதும், அவர் களுக்கு யோசனைகளைக் கூறித் துணைபுரிபவர்களாகவும் விளங்க வேண்டும். "இதனைச் செய்ய நீ முழுநாள் எடுக்கின்றாய்; நானே இதனைச் செய்து விடுகின்றேன்" என்று கூறி, இளையோரிடமிருந்து ஒரு வேலையைப் பெற்றோர்கள் எடுத்துக் கொள்வது மிகச் சுலப மானது. உண்மையில், பெற்றோர்கள் அவ்வேலையை மிக விரை வாகவும் சிறந்த வகையிலும் செய்து முடிப்பர். இப்படிச் செய்வதால் இளையோன் தனக்குத் தேவையாயுள்ள பயிற்சியினை யும் அனுபவத்தினையும் பெறுவதை இவர்கள் தடுத்து விடுகின்றனர். ஆனால், இதே நேரத்தில் இளையோரினால் திறம்பட நிருவாகிக்க முடியாத பணிகளை அவர்களின் கையில் ஒப்படைப்பதும் சிறந்த தன்று. ஏனெனில், இவ்வாறு தங்கள் சக்திக்கு மீறிய பொறுப்பு

களை நிறைவேற்ற இவர்கள் முயலும்பொழுது அடுத்தடுத்து தோல்விகளைச் சந்திக்க நேரிடுகின்றது. அதன் காரணமாக இவர்கள் தாழ்வு மனப்பான்மையினால் பாதிக்கப்பட்டு, பின்னர் எதையும் துணிவுடன் ஏற்றுச் சாதிக்கும் மனோ திடத்தினையும் தன்னம்பிக்கையினையும் இழந்துவிடுவர். எனவே இளையோரிடம் பொறுப்பினை ஒப்படைக்கும் பெற்றோர்கள் அவர்களின் தன்னம்பிக்கை குன்றுவண்ணமும் அதனை வளரச் செய்யும் பொருட்டும் பொறுப்புகளை அளிப்பது சாலச் சிறந்தது.

இளையோரின் தனிப்பட்ட நடவடிக்கைகளில் பெற்றோர்கள் அதிகமாகத் தலையிடாதிருத்தல் நன்று. அவர்களின் தனிப்பட்ட நடவடிக்கைகளில் அவர்கள் விரும்பினாலன்றி தாங்களே அவற்றில் தலையிட்டு அறிந்துகொள்ள பெற்றோர்கள் முயற்சிப்பது விரும்பத்தகாததாகும். பொதுவாக, எந்த இளையோனும் தனது தனிப்பட்ட விஷயங்களைத் தன் பெற்றோர்களிடமிருந்து மறைத்து வைத்துக்கொள்ள விரும்புவதில்லை. அவ்வாறு செய்ய ஒருவன் முயற்சிப்பானேயானால் அங்கு அவனுக்கும் அவனது பெற்றோருக்குமிடையே சாதகமான உறவு, புரிந்துகொண்டு செயல்படும் மனப்பாங்கு, சுமுகமான பொருத்தப்பாடு ஆகியவைகள் இல்லை எனலாம். இவ்வாறு ஒருவரையொருவர் நன்கு அறிந்துகொண்டு பழகும் இளையோர் தங்களுக்கெனத் தனிப்பட்ட விஷயமாக எதனையும் வைத்துக்கொள்ள விரும்புவதில்லை.

**இளையோரின் கடிதங்களும், பெற்றோர்களும் :**

இளையோனுக்கும் அவனது பெற்றோர்களுக்கும் இடையே சுமுகமான நல்லுறவு நிலவுமாயின், அவன் தனக்கென்று வரும் தனிப்பட்ட கடிதங்களைத் தன் பெற்றோர்களுக்குக் காட்டி, அதன் பொருளடக்கத்தை அறிவிப்பதில் ஆவல் உளளவனாக இருப்பான். பொதுவாக, இளையோர் தங்களுக்கு வரும் கடிதங்களைத் தாங்களே அவற்றை முதலில் பிரித்துப் படிக்கவேண்டும் என்று விரும்புவர். எனினும் குடும்ப உறவானது நல்லநிலையில் இருந்தால், இளையோர் தம் கடிதங்களைத் தாங்கள் முதலில் பிரித்துப் படித்து, பின்னர் அதனைத் தம் பெற்றோர்களுக்கும் படித்துக் காட்டுவர். மேலும், அவர்களே அதனைப் படித்துக் கொள்ளுமாறும் அவர்கள் கையில் தந்துவிடுவர். மாறாகத் தனக்குவரும் கடிதங்களைப் பெற்றோர்களிடமிருந்து மறைக்க விரும்பினால், அந்தக் கடிதத்தின் பொருளடக்கம் அவனது பெற்றோர்கள் அறிவதற்கு ஏற்றதாக இருக்காது அல்லது தன் கடிதத்தைப் பெற்றோர்களுக்குக் காட்ட அவன் விரும்பவில்லை என்பவை அதன் காரணமாக இருக்க வேண்டும். இந்நிலையில் பெற்றோர்கள் இளையோர்களுக்கு வரும்

கடிதங்களை அவனுக்கு முன்னர் தாங்களே பிரித்துப் படிக்கக் கூடாது. இளையோர் தங்கள் கடிதங்களை, பெற்றோர்கள் படிக்கக் கூடாது என நினைக்கும்போதும், பெற்றோர்களும் அந்தக் கடிதங்களின் உள்ளடக்கத்தினை அறியும்பொருட்டு தம் குழந்தைகளுக்கு முன்னரே அதனைப் படித்துப் பார்க்க முயற்சிக்கும்போதும், பெற்றோர்-இளையோர் உறவில் பிரச்சினை நிலவுகிறதென்றும், இது அதற்கு ஓர் அறிகுறியென்றும் நாம் அறியலாம்.

தங்கள் பிள்ளைகளின் சமூக உறவுகள் எந்த அளவிற்கு முன்னேறி யிருக்கின்றது என்பதனையும், யார் யார் தங்கள் பிள்ளைகளுக்குக் கடிதங்கள் எழுதுகின்றனர் என்பதனையும் பெற்றோர்கள் அறிந்துகொள்ள விரும்புவது, அவர்கள் தங்கள் பிள்ளைகளிடத்துக் கொண்டிருக்கும் ஆர்வத்தினையும், அக்கறையினையும் எடுத்துக் காட்டுகின்றது. எனினும், இளையோர்களுக்குரிய உரிமைகளைப் பெற்றோர்கள் நினைவில்கொண்டு தங்கள் ஆர்வங்களைக் கட்டுப் படுத்திக்கொள்வது நன்று. இவ்வாறன்றித் தங்கள் பிள்ளைகளுக்கு வரும் கடிதங்களின் பொருள்களைப் பற்றிப் பெற்றோர்கள் சந்தேகப் படுவது, அவர்கள் தங்கள் பிள்ளைகளை, நல்ல சமூகப் பழக்க வழக்கங்களுடனும், உறவுகளுடனும் வளர்ப்பதில் தவறிவிட்டனர் என்பதையே காட்டுகின்றது, இத்தகைய விஷயங்களில் பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளின் நன்மதிப்பினையும், நம்பிக்கையினையும் பெறும் வகையில் மிகவும் கவனமாக நடந்துகொள்ள வேண்டும். தாங்கள் பெற்றோர்கள் என்ற நினைவில், இளையோரின் சொந்த விஷயங்களில், தங்கள் உரிமையினை நிலைநாட்ட முயற்சிப்பதும், தங்களுக்குரிய ஆதிக்கத்தினை இளையோரின்மீது உபயோகிப்பதும், இளையோரின் உரிமையுணர்வினை மேலும் தூண்டிவிடுவதாக அமைந்துவிடும். அவர்கள் பரிவுடன் விட்டுக்கொடுக்கும் மனப்பாங்குடன், இளையோரை அன்பான முறையில் அணுகி, அவர்களைத் திருத்தி நல்வழிக்குக் கொண்டுவர முயற்சிக்க வேண்டும். ஏனெனில், தங்கள் உரிமையினை நிலைநாட்டி, இளையோருக்கு வரும் கடிதங்களைத் தாங்கள் முதலில் பிரித்துப் பார்க்க முயற்சித்தால், இளையோர் தங்கள் சொந்தக் கடிதங்களை வேறு முகவரிக்கு வரவழைத்துப் பெற்றுக்கொள்ளவும் முயற்சிப்பர். இந்நிலையில் பெற்றோர்களுக்குத் தங்கள் பிள்ளைகளைத் திருத்துவதற்கான வாய்ப்பை இழக்க நேரிடும்.

மனிதர்கள் பொதுவாக ஒருவரையொருவர் புரிந்துகொண்டு நல்லமுறையில் பழகவேண்டுமெனில், ஒருவர் மற்றவருக்கு ஒன்றுமே தெரியாது என்று எண்ணுதல் கூடாது. அடுத்தவர் வயதில் சிறியவராயினும், பெரியவராயினும், அனுபவமிக்கவ

ராயினும் அவருக்கும் ஒருசில விஷயங்கள் தெரிந்திருக்கக்கூடு மென்றே நாம் நினைக்கவேண்டும். பெற்றோர்-இளையோர் உறவி லும், இத்தகைய ஓர் அடிப்படை மனப்பான்மை மிகவும் முக்கிய மானதாகும். பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளுக்கு ஒன்றுமே தெரியாது என்றோ, தங்களைவிட அதிகமாக அறிந்திருக்க வாய்ப் பில்லை என்றோ எண்ணுதல் கூடாது. ஏனெனில், வளர்கின்ற இளையோர், தங்களுக்கு அதிகம் தெரிந்திருக்கின்றது என்ற நினைவி லேயே வளர்கின்றனர். தாங்கள் எதையும் தனிப்பட்ட நிலையில் செய்ய இயலும் என்ற தன்னம்பிக்கையும், தங்களுக்கு எல்லாமே தெரியும் என்ற உணர்வும் அவர்களிடம் காணப்படுவது மிகவும் நலம் பயப்பதாகும். அவ்வாறு அவர்கள் தங்கள் பெற்றோர்களை விடத் தங்களுக்கே அதிகம் தெரியும் என நினைப்பதும் இயல்பே. இந்நிலையில், அவர்கள் தங்கள் பெற்றோர்களை மீறி, எதையும் செய்ய முற்பட்டால், பெற்றோர்கள் பொறுமையுடன் அவர்கள் நடத்தையினைக் கவனித்து, அவர்களின் முயற்சிகள் தோல்வியுறும் போது, அதன் காரணங்களை அவர்கள் புரிந்துகொள்ளும் வண்ணம் எடுத்துக்கூறி, நல்வழிப்படுத்த முயற்சிக்க வேண்டும். இவ்வாறு பெற்றோர்கள் தங்கள் முடிவுகளை இளையோரே விரும்பி ஏற்கும் வண்ணம் கூறினால், குழந்தைப் பருவத்திலிருந்தே தங்கள் பெற்றோர் களின் முடிவுகள் பயனுள்ளவை, காரண காரிய அடிப்படையில் அமைந்துள்ளவை என்ற நம்பிக்கை இளையோருக்கு உண்டாகும். எனவே இளையோரின் உள்ளத்தில் பெற்றோர்களுக்குக் கீழ்ப்படிய வேண்டிய விஷயங்களில், மனப்போராட்டமும் கருத்து வேறுபாடும் நிகழ இடமில்லை.

இளையோரின் சொந்த விஷயங்களும் பெற்றோர்களும் :

இளையோர்கள் பெரும்பாலும் தங்கள் பெற்றோர்கள், தங்கள் குடும்பத்தார் அல்லாத பிறரின் முன் தங்களைப் பற்றிக் குறை கூறுவதை விரும்புவதில்லை. ஏனெனில், அவர்கள் தங்கள் பெற்றோ ருக்குரிய அதே மதிப்பினையும், மரியாதையினையும் தாங்களும் பெற வேண்டும் என எதிர்பார்க்கின்றனர். சில வேளைகளில் தங்கள் உறவினர்கள் வீட்டிற்கு வரும்போது பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளின் நடத்தைகளைப் பற்றி அவர்களிடம் எடுத்துரைப்ப துண்டு. மேலும் மற்ற வீட்டுப் பிள்ளைகளுடன் தம் பிள்ளைகளை ஒப்பிட்டுப் பேசி அவர்கள் முன்னிலையிலேயே அவர்களின் குறை பாடுகளையும் கூற முற்படுவர். பெற்றோர்களின் இப்பழக்கம் இளையோரை எரிச்சல் அடையச் செய்கின்றது. எனவே பிறர்முன் தங்கள் தன்மானம் தாழ்த்தப்படுவதை இவர்களால் பொறுத்துக் கொண்டிருக்க முடிவதில்லை. இத்தகைய இளையோர் பிறர்முன் தங்கள் பெற்றோர்களின் நடத்தைகளைப் பற்றிக் குறை கூறவும்

இடமுண்டு. எனவே, பெற்றோர்கள், தங்கள் குடும்பத்தைச் சார்ந்தோரிடமோ பிறரிடமோ, தங்கள் இளையோரைப் பற்றிக் குறை கூறுவதை அறவே விட்டுவிடவேண்டும். ஏனெனில் உடன் பிறந்தோர்கூட தங்களைப் பற்றித் தாழ்வாகவும், மதிப்புக் குறைவாகவும் கருதுவதை அவர்கள் விரும்புவதில்லை.

மேலும் பெற்றோரும், உடன்பிறந்தோரும் தங்களைப் புரிந்து கொண்டு மதித்து நடத்தவேண்டுமென எதிர்பார்க்கின்றனர். பெற்றோர்கள் இதனை உணர்ந்து நடப்பின், பெற்றோர்கள்—இளையோர் இடையே சாதகமான உறவு நிலவிக்கொண்டிருக்கும். தனிப்பட்ட முறையில் கண்டிக்கின்ற எதையும் இளையோர் ஏற்றுக் கொண்டு, பணிந்துபோக விழைகின்றனர். ஆனால் தங்கள் உடன் பிறந்தோர் முன்னிலையில் பெற்றோர்கள் தங்களைக் கண்டிப்பதை அவர்கள் வெறுக்கின்றனர். இந்நிலையில் தான் தங்கள் பெற்றோர்கள் நியாயமான முறையில் தங்களைக் கண்டித்தாலும், அதனை ஏற்றுக் கொள்ள விரும்பாது தங்கள் எதிர்ப்பினைத் தெரிவிக்கின்றனர். எனவே, இளையோரின் நடத்தைகளைக் கண்டிக்க விரும்பும் பெற்றோர்கள், அவர்களைத் தனியாக அழைத்து, தனிப்பட்ட முறையில் கண்டிப்பதே விரும்பத்தக்கதாகும். தங்கள் பிள்ளை களின் நடவடிக்கைகளைப் பற்றி விவாதிப்பதையும், பெற்றோர்கள் அவர்கள் இல்லாதபோதே செய்வதே நன்று.

ஒரு விஷயத்தைப் பற்றி முடிவெடுக்கும்போது பெற்றோர் களுக்கும், இளையோர்களுக்கும் இடையே பிரச்சினைகள் தோன்றலாம். பெற்றோர்கள் பொதுவாக இளையோரின் தனிப் பட்ட தேவைகளைத் தாங்களே தீர்மானம் செய்பவர்களாகவும், தங்கள் இளையோரை இன்னும் ஒரு குழந்தையாகக் கருதி நடத்து பவர்களாகவும் இருக்கின்றனர். மேலும் தங்கள் காலத்து நாகரீகக் கலாச்சார, பண்பாட்டு முறையினடிப்படையிலேயே தங்கள் பிள்ளைகளின் ஆடை, அணிகலன்கள் போன்றவற்றையும் தேர்ந்தெடுக்கின்றனர். மாறுபட்ட நாகரீகப் போக்கில் வளர்ந்து வரும் இளையோர் இவற்றை ஏற்றுக்கொள்வதில்லை. எனவே, அவர்கள் தங்களுடைய ஆடை, அணிகலன் போன்ற தனிப்பட்ட விஷயங்களில் தங்கள் முடிவே மேற்கொள்ளப்பட வேண்டும் எனப் பெற்றோர்களுடன் வாதாடுகின்றனர். அவர்களின் முடிவுகளைப் பெற்றோர்கள் புறக்கணித்துச் செயல்படுவதை இவர்கள் ஏற்றுக் கொள்வதில்லை.

குழந்தைகள் சிறுவயதில் தங்களுக்குத் தேவையான ஆடை, ஆபரணங்களைத் தாங்களே தேர்ந்தெடுத்துக்கொள்ளும் நிலையில்

இலர். இதனால் அப்போது, பொருள்களின் தரத்தினையும், விலையினையும் அறிந்து பெற்றோர்களே அவைகளைத் தேர்ந்தெடுக்க வேண்டியதாகின்றது. ஆனால் பிள்ளைகள் வளர்ந்துவிட்ட பிறகு, அவர்களுக்கு வேண்டியவற்றை அவர்களே தேர்ந்தெடுக்கும் உரிமையினை அளித்து விடுவதே சிறந்தது. வாங்கவேண்டிய பொருளின் தரம், விலை, குடும்பத்தின் பொருளாதார நிலை ஆகியவற்றின் அடிப்படையில் பெற்றோர்கள் தம் பிள்ளைகளுக்குத் தேவையானால் யோசனைகள் கூறலாம். ஆனால், இதில் வன்மையினையும், பிடிவாதத்தினையும் பெற்றோர்கள் கைக்கொள்ளக் கூடாது. சிறுவயதில், தம் பிள்ளைகளைக் கடைகளுக்கு அழைத்துச் சென்று, பொருள்களின் தரத்தினைப் பற்றியும், அவைகளை வாங்குவதற்குத் தேவையான அறிவினையும், பயிற்சியினையும், பெற்றோர்கள் தம் பிள்ளைகளுக்குத் தந்து, அவர்களே தனித்து கடைகளுக்குச் சென்று, பொருள்களை வாங்கும் திறமையையும், தன்னம்பிக்கையையும் வளர்த்து, அவர்களைத் தனித்துச் செயல்பட விடலாம். இப்படிச் செய்த பிறகும், தனித்துச் சென்று பொருள்களை வாங்கி வரும் இளையோர், தகுதியற்ற, பயனற்ற பொருள்களை வாங்கி வர நேர்ந்தால், அவர்களின் மனம் புண்படாதபடி, சிறிது சிறிதாக எடுத்துக் கூறி உணர்த்த வேண்டும். இளையோர் எந்த நினைவில் ஒரு பொருளை வாங்கினர் என்று உணர்ந்துகொண்டு, அவர்களின் முடிவு சரியா, தவறு என்று அவர்களே உணரும்போது, இப்படிச் செய்யாதிருக்கலாம். அல்லது இந்தக் கடையில் இந்த வகையான பொருளை வாங்கி இருக்கலாம் என்று பெற்றோர்கள் எடுத்துக்கூறி, தங்கள் கருத்துக்களைப் பிள்ளைகள் ஏற்குமாறு செய்யலாம். இளையோர் பெரும்பாலும் தங்கள் நண்பர், குழுவினருடன் கலந்து பழகும்போதும், பள்ளியில், கல்லூரியில், பிற இடங்களில் பலரைச் சந்தித்து அவர்கள் அணிந்திருக்கும் ஆடை அணிகலன்களைப் பற்றி அறிய வரும்போதும், அவற்றின் தரம், விலை மதிப்பு பற்றிய அறிவினை வளர்த்துக்கொள்கின்றனர். பிறகு தாங்களும் அவைகளை அவ்வாறு வாங்க முயற்சிக்கின்றனர்.

பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளுக்குப் பணத்தை எவ்வாறு கையாளவேண்டும் என்பதனையும், எந்தவிதத்தில் செலவு செய்யக் கூடாது என்பதனையும் அறிவுறுத்திச் செலவு செய்யும் விஷயங்களில் அவர்களுக்குப் பயிற்சி அளித்தல் வேண்டும். மேலும் குடும்பத் தேவைகள், செலவுகள் ஆகியவை சார்ந்த விஷயங்களை இவர்களுக்கும் தெரிவித்து, இவற்றைப் பற்றிய பேச்சுகளில் இவர்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். இஸ்தர் பிரீவி (Esther Prevey) என்பார் இவ்வகையில் நடத்திய ஆய்வு ஒன்றில் குழந்தைப் பருவத்தில் பணத்தைக் கையாளும் பயிற்சியினைப் பெற்றவர்கள்,

பிற்காலத்தில் பணத்தினைக் கையாளுவதில் முதிர்ந்தவர்களாகத் திகழ்ந்தனர் எனக் கண்டறிந்தார்; தாகூருக்கு அவர் தந்தை யளித்த பயிற்சி ஈண்டு நோக்கற்குரியது.

**பெற்றோர்களிடையே உள்ள தொடர்பு :**

கணவன், மனைவிக்கு இடையில் எவ்வளவுதான் நல்ல உறவு இருப்பினும், ஏதாவதொரு தருணத்தில் அவர்களுக்கு இடையில் பூசல்கள் தோன்றலாம். அப்படிப்பட்ட நேரங்களில் கணவன் தன் மனைவியின் மீதுள்ள குறைகளை எடுத்துரைப்பது இயல்பே. இவ்வாறு வெளிப்படையாக எதனையும் எடுத்துக் கூறி அதற்கான தொரு தீர்ப்பினையும் முடிவினையும் அடைய முயற்சிப்பது விரும்பத் தக்கதே. ஏனெனில், ஒருவர் அடுத்தவர்மீது கொண்டுள்ள மனக் குறையினை, உடன்பாடின்மையை வளர்த்துக்கொள்வது சிறந்த தல்ல. எனவே, பெற்றோர்கள் ஒருவர்பால் கொண்டுள்ள மனக் குறையினைத் தனக்குள்ளேயே வைத்துக்கொண்டு மறைவாகப் பகையினை வளர்த்துக்கொள்வது சிறந்ததல்ல. எனவே, பெற்றோர் கள் ஒருவர் மற்றவர் பால் கொண்டுள்ள மனக்குறையினை வெளிப் படையாக எடுத்துரைப்பது நல்லதெனினும், பிள்ளைகளை இந்த விஷயங்களில் ஈடுபடுத்துவதும், அவர்களுக்கு முன்பே விவாதிப்ப தும் கூடாது. அதாவது கணவன்—மனைவியிடையே இவ்வாறு கருத்து வேற்றுமை காரணமாக ஒருவர் குறையினை மற்றவர் எடுத்துக் கூறிச் சர்ச்சை செய்யும்போது, அது தங்கள் பிள்ளைகளின் காதிற்கு எட்டாத வண்ணமும், அவர்கள் அதைப் பற்றி அறிந்து கொள்ளாத வண்ணமும் பெற்றோர்கள் கவனித்துக்கொள்ள வேண்டும்.

இவ்வாறு பெற்றோர்களிடையே ஏற்படும் சச்சரவுகளை இளையோர் அறிய நேரிட்டால், அவர்கள் தம் பெற்றோரில் யார் தவறிழைத்திருக்க முடியும் என்பதனை எண்ணிப் பார்க்கின்றனர். இருவரில் ஒருவர் மட்டுமே தவறிழைத்திருப்பார் என்று இளை யோர் எண்ணிப் பார்ப்பதில்லை. மாறாக, அவர்கள் இதுவரை பெற்றுவிட்ட அனுபவத்தின் அடிப்படையில் இருவர்பாலும் தவறு இருக்கவேண்டும் என்று ஊகித்து, இப்போது யாருக்கு அவர்கள் உதவ முடியும் என யோசிப்பர். பெற்றோர்களின் இத்தகைய பிரச்சினைகளில், இளையோர் தாங்கள் தலையிட்டுத் தீர்த்து வைக்கலாமா, அப்படித் தலையிட நேரிட்டால், எவருடன் சேர்ந்து கொள்வது, ஒருவருக்குப் பரிந்து பேசினல் மற்றவரின் வெறுப் பிற்கு உள்ளாக நேரிடுமே என்ற பலவித பிரச்சினைகளுக்குட் பட்டுச் செய்வதறியாது திகைப்பர். இளையோர் இங்ஙனம் தம் பெற்றோர்களுக்கிடையேயுள்ள பிரச்சினைகளால் துன்பப்படுவது

அவர்களின் பிற்கால மண வாழ்க்கையினைப் பெரிதும் பாதிப்பதாக அமைகின்றது. இதனால், தம் பிள்ளைகளாவது இத்தகைய அனுபவங்களை அடையாது இருக்கட்டும் என்ற எண்ணத்தின் அடிப்படையில் தாங்கள் திருமணமே செய்துகொள்ளக்கூடாது எனும் முடிவிற்கு வரவும் இடமுண்டு. காலப்போக்கில் அவர்களது இந்த நினைவு மாறி, தாங்கள் மணந்துகொள்வதில் தவறில்லை என்று கருதி மணம் புரிந்து கொள்வர். எனினும் அவர்களின் மண வாழ்க்கை இதனால் பாதிப்படையவே செய்கின்றது.

சிதைந்த இல்லம் (Broken Home) :

இல்லத்தின் அமைப்பு, பெற்றோரில் ஒருவர் இறந்துவிடுவதனாலோ, சச்சரவின் காரணமாக பெற்றோர்களிடை தோன்றும் பிரிவினாலோ, சிதைவடைய நேரிடுகிறது. இளம் குற்ற நடத்தைக்குக் காரணங்களுள் இத்தகைய சிதைந்த இல்லம், மிகவும் முக்கியமானது. இளையோர் இத்தகைய சிதைந்த இல்லத்தினால் பாதிக்கப்படும்போது இதற்குக் காரணமாயிருந்த, பெற்றோரின் சச்சரவுகள் இளையோரிடம் மனப்போராட்டங்களைத் தோற்றுவிக்கின்றன. பெற்றோர்கள் தங்கள் மண முறிவினால் பிரிந்து விடுகையில், இளையோர் அவர்களில் ஒருவருடன் தங்கியிருக்க நேரிடுகின்றது. இந்நிலையில், பிரிந்து சென்றவரின் மீது இளையோர் அளவற்ற பாசத்தினைக் கொண்டிருப்பார்களேயானால் இது அவர்களின் அமைதியான வாழ்க்கையினைப் பெரிதும் பாதிக்கும்.

மண முறிவினால் பெற்றோர்கள் பிரிந்துவிட்ட பின்னரும், இளையோர் தொடர்ந்து பல சிக்கலான சூழ்நிலைகளுக்கும் அனுபவங்களுக்கும் உள்ளாக நேரிடுகின்றனர். பிரிந்து சென்ற தந்தையைச் சந்தித்து வந்த இளையோனை, அவன் தாய் அதுபற்றிக் கேட்கின்றாள். இளையோன் என்ன கூறுவதென்று தெரியாது விழிப்பான். தன் தந்தை முன்னைவிட நல்ல நிலையில் இருப்பதைக் கண்டு வந்த இளையோன், அதை அப்படியே தன் தாயிடம் எடுத்துக் கூறுவானேயாகில், அவன் தந்தையின் மீதுதான் அதிகமான அன்பினைச் செலுத்துகின்றான் என அவன் தாய் எண்ண இடமுண்டு. மாறாக, தன் தாயை மகிழ்விக்க விரும்பி, தான் பார்த்து வந்த நிலைமைக்கு எதிராகக் கற்பனை செய்து கூறுவானேயாகில், அவன் தாயை ஏமாற்றுகிறான் என்று அவன் மனசாட்சி உறுத்தும். சில இளையோர் இந்த மனசாட்சியின் உறுத்தலை மதிக்காது, தன் தாயை மகிழ்விக்க விரும்பி, பொய் சொல்லத் தொடங்கிவிடுவர். இதன் விளைவாக எதிர்காலத்தில் அவர்கள் தங்கள் சொந்த விஷயங்களையே மறைத்துக்கொள்ளக் கற்றுக் கொள்கின்றனர்.

இவ்வாறு அடுத்தடுத்து பெற்றோர்களின் மனமுறிவுப் பிரச்சினைகள் இளையோருக்குத் தொந்தரவுகளைத் தரும்போது இளையோர் பெற்றோரிடம் கொண்டிருக்கும் மதிப்பினை இழக்க நேரிடலாம். அவர்களுக்கு இல்லத்தில் இருப்பது சோகத்தினையும் துன்பத்தினையும் தருவதாக மாறிவிடுவதால், இல்லத்து வாழ்க்கையில் ஆர்வமிழந்து இல்லத்திற்கு வெளிப்பட்ட நடவடிக்கைகளில் ஆர்வங்கொள்ளத் துவங்குகின்றனர். இளையோரின் தாயைவிட்டுப் பிரிந்து தந்தை மறுமணம் செய்துகொள்ளும்போதும், இளையோர் பிரச்சினைகளுக்கு உள்ளாகின்றனர். அங்ஙனம், மறுமணம் செய்துகொள்கையில், தன் தாயின் இடத்தில் வேறொருவர் அமர்ந்து இல்லத்தினைக் கண்காணிப்பதை இவர்களால் சகித்துக்கொள்ள முடிவதில்லை. மாற்றாந்தாயினர் பெரும்பாலும் இவர்களின்பால் அன்பு செலுத்துபவர்களாக இரார். இந்நிலையில் தந்தை இளையோரின் மன நிலையை உணர்ந்து அவர்கள் விஷயத்தில் அவ்வப்பொழுது தலையிட்டுக் கண்காணிப்பாரேயானால் இளையோரின் பிரச்சினைகள் ஓரளவிற்கு குறைய இடமுண்டு. மாறாக தந்தையைப் பிரிந்த தாய் வேறொருவரை மணந்துகொள்ளும் போதும், தாயுடன் வாழும் இளையோரின் மனநிலை வெகுவாகப் பாதிக்கப்படுகின்றது. ஓரளவிற்கு மாற்றாந்தாயின் அதிகாரத்தினைப் பொறுத்துக்கொள்வது இயலுமெனினும், மாற்றாந் தந்தையரின் அடக்குமுறையினையும் அதிகாரத்தினையும் இளையோரால் ஏற்றுக்கொள்ள முடிவதில்லை. இதனைத் தவிர்க்க மாற்றாந் தந்தையினர் முதன்முதலில் இளையோரின் நம்பிக்கைக்கும் அன்பிற்கும் தங்களைப் பாத்திரமாக்கிக் கொண்டு, பின்னர் அவர்களைக் கட்டுப்படுத்த முயற்சித்தால் அப்போது அவர்களுக்கு அவ்வளவு பிரச்சினைகள் தோன்றுவதில்லை. ஆனால், அவர்கள் எடுத்த எடுப்பில் அதிகாரம் செலுத்தத் துவங்குவதனால் தான் இளையோர் அவற்றை எதிர்க்கின்றனர். அவர்கள் குழந்தைகளாக இருப்பின், ஓரளவிற்கு அப்புதியவருடன் பொருந்தி நடந்து கொள்ள முடியும். ஆனால், இளையோரிடம் பழக்க வழக்கங்கள் நிலைத்த தன்மையினை அடைந்து விடுவதால், தங்கள் குடும்பத்து உறவின் பாலான நடத்தையில் ஏற்படும் மாற்றங்களை அவர்களால் ஏற்றுக்கொள்ள முடிவதில்லை. இந்நிலையில், இளையோர் அவர்களுடன் ஒத்துப்போவதில் சிரமப்படுகின்றனர்.[8] எனவே அவர்கள் பெற்றோர்களுடன் எந்தச் செயலிலும் ஒத்துழைக்க மறுக்கின்றனர். மாற்றாந்தந்தையும் இளையோரும் இவ்வாறு மனத் தாங்கல்களுக்கு உள்ளாகும்போது தாயின் நிலை மோசமாகி விடுகின்றது. தாய் தன் பிள்ளையினையும் வெறுக்க முடியாது. இருவர் மீதும் பற்றுறுதி கொண்டிருப்பதனால், இருவருக்கும் பொருந்தி நடக்க முயற்சிக்கின்றாள், மாற்றாந்தந்தை இளையோர்

ஆகிய இருவரும் ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்து, சரி செய்து கொண்டு, ஒத்துப்போவதை வெறுக்கின்றனர். தன் தாய் தன்னைத் தவிர புதிதாக வந்த நபருடனும் பொருந்தி நடக்க முயற்சிக் கின்றாளே என இளையோனும், தனக்குத் தரவேண்டிய தகுதி யினைத் தன் பிள்ளைக்குத் தருகின்றாளே எனப் புதிய கணவனும் நினைப்பர். இதனால் தாய் மிகுந்த மனவெழுச்சி விரைப்புகளுக்கு உள்ளாகின்றாள். சில வேளைகளில் இந்தக் கொந்தளிப்புகளினால் இளையோர் வீட்டை விட்டு வெளியேற வேண்டிய நிலையும் ஏற்படு கின்றது.

**உடன்பிறந்தோர் தொடர்பு :**

ஓர் இல்லத்துப் பிள்ளைகள், ஒரே பெற்றோரின் பிள்ளைகள், ஒரே சூழ்நிலையில் இருக்கின்றவர்கள் என்பதன் அடிப்படையில் தங்களுக்குள் ஒத்துப்போக வேண்டுமென்பது அவசியமல்ல. ஏனெனில், அவர்கள் ஒவ்வொருவரும் வேறுபட்ட மனப்பாங்குகளை யும், ஆர்வங்களையும் எண்ணங்களையும் கொண்டிருக்கக்கூடும் என்பதால் அவர்களிடையே பூசல்கள் தோன்ற இடமுண்டு. எனி னும் உடன்பிறந்தோருடன் உள்ள உறவில் ஒத்துப்போகும் தன்மையினை இளையோன் வளர்த்துக்கொள்வது, இல்லத்திற்கு வெளியே தன் சம வயதினருடன் ஒத்துப் போவதற்கான அனுப வத்தினையும், சமூகப் பயிற்சியினையும் அளிக்கும். ஆனால், ஒரே பிள்ளையாக வாழும் தனியனுக்கு சமூகப் பயிற்சிக்கான இந்த அடிப்படை அனுபவம் கிடைக்காததனால் அத்தகையோன் வெளி யில் சம வயதினருடன் ஒத்துப்போவதில் சிரமம் காண நேரிடலாம்.

உடன் பிறந்தோரிடையில் நல்லுறவு நிலவுவதற்குப் பெற்றோர்களின் மனப்பாங்கு மிகவும் முக்கியமாகும். பெற்றோர், தங்கள் பிள்ளைகள் ஒவ்வொருவருக்கும் உகந்த வகையில் உரிமை களையும், சலுகைகளையும், பொறுப்புகளையும் கொடுப்பார்களே யானால், அவர்களின் இத்தகைய மனப்பாங்கு உடன்பிறந்தோ ரிடை நல்லுறவு நிலவுவதற்கு துணையாக அமையும். பெற்றோர் தம் பிள்ளைகளில் சிலருக்குத் தனிப்பட்ட சலுகைகளைத் தருவ தற்கோ, மறுப்பதற்கோ அக்குடும்பத்துப் பிள்ளைகள் நன்கு புரிந்துகொள்ளும் வண்ணம் தக்க காரணங்களைப் பெற்றிருக்க வேண்டும். ஆதலால், பெற்றோர்கள் தம் பிள்ளைகளின் பால் கொண்டுள்ள மனப்பாங்கு, அவர்களிடை ஒற்றுமையினை வளர்ப்ப தற்குச் சாதகமாக அமைதல் வேண்டும்.

**அதிகாரச் சுருக்கம் :**

இளையோர் பருவத்தில் காணப்படும் முக்கிய பிரச்சினை தனியன் தன் பெற்றோரிடமும், ஏனைய முதிர்ந்தோரிடமும்

கொள்ளும் உறவினைச் சார்ந்ததாகும். இளையோர், தாங்கள் நாடும் சுய உரிமைகளை அடைவதற்கு, முதிர்ந்தோரின் கட்டுப் பாட்டிலிருந்து நீங்கி, சுதந்திரமாகச் சிந்திக்கவும், செயல்படவும் விரும்புகின்றனர். உளவியல் சார்ந்த விடுதலையினைப் பெறுவதில் ஏற்படும் சிரமங்கள், இளையோரிடமும், பெற்றோரிடமும் காணப் படும் நிலையற்ற தன்மையின் காரணமாக உண்டாகின்றது. இளையோன், தான் வளர்ந்துவிட்டவன் என்று உணர்ந்து, அவ் வாறே முதிர்ந்தோர் தன்னை நடத்தவேண்டுமென விரும்புகிறான். இளையோன், தன் சுதந்திரத்திற்காகப் போராடுகையில், தன் குடும்பத்தின் குறுக்கீட்டினையோ மற்ற பெரியவர்கள், உறவினர் களின் ஆதிக்கத்தினையோ சகித்துக் கொள்வதில்லை. இத்தகைய பிரச்சினைகளைப் பெற்றோர்கள் நன்கு புரிந்துகொண்டு செயல் பட்டால், இவற்றை அவர்கள் பெருமளவு தவிர்த்து, இளையோ ருடன் நல்லுறவினைக் கொண்டிருக்கலாம். இளையோனின் குடும்ப உறவானது அவனது வளர்ச்சியில் பெரும் செல்வாக்கினைக் கொண்டிருக்கின்றது என்று உளவியலாரும், சமூகவியலாரும் கருதுகின்றனர். இளம் வயதில் அளவிற்கதிகமான கட்டுப்பாட்டு டன் வளர்ப்பதும், கட்டுப்பாடு சிறிதும் அற்று, மட்டுக்கு மீறிச் செல்லமாக வளர்ப்பதும், அப்பிள்ளைகளின் பிற்கால வாழ்க்கை யினைப் பெரிதும் பாதிக்கின்றன. இளையோரின் இல்லப் பொருத்தப் பாடுகள், அவனது பிற்கால மண வாழ்க்கையினைப் பாதிப்பதாகவும், எத்தகைய தந்தையாக அவன் விளங்குவான் என்பதைத் தீர்மா னிப்பதாகவும் உள்ளன.

இளையோன் எவ்வளவு விரைவில் பொறுப்புகளை ஏற்றுச் சுதந்திரமாகச் செயல்பட இயலுமோ அவ்வளவு விரைவில் சுதந் திரமாகச் செயல்படுவதற்கான முழு வாய்ப்பினையும் அளிக்கும் குடும்பமே இளையோனுக்கு முதிர்ந்த நோக்கினைத் தரும். நல்ல அனுபவமிக்க பெற்றோர்கள் மிக விரைவில் இளையோருக்கு உரிமையினை அளித்துவிடாது, சிறிது சிறிதாக அவர்கள் அதை உணரும் வண்ணமும், அதே நேரத்தில் தங்களின் எண்ணத்தைத் தவறாகப் புரிந்துகொள்ளாது தொடர்ந்து தங்களிடமிருந்து பாது காப்புணர்வினை நாடும் வண்ணமும் சுதந்திர உரிமையைத் தருவர்.

இளையோரிடத்துப் பெற்றோர் கொண்டிருக்கும் மனப்பான்மை களுள் முக்கியத்துவம் வாய்ந்தவை ஆதிக்கம், பணிவு, ஏற்பு-மறுப்பு ஆகியவைகளாகும். பிள்ளைகளோடு பெற்றோர்கள் செலவிடும் கால அளவினைப் பொறுத்தும், பிள்ளைகளுக்காக அவர் கள் செலவிடும் பணத்தைப் பொறுத்தும் மனப்பான்மை வேறு

படுகிறது. பெற்றோரின் மற்ற மனப்பாங்கினைவிட, புறக்கணிக்கும் அதிகாரப் போக்கு வெகுவாக ஆளுமை வளர்ச்சியினைப் பாதிக் கின்றது. குடியரசு முறை சார்ந்த வளர்ப்பு முறையில், நல்ல சமூகப் பொருத்தப்பாடுகள் ஏற்பட வாய்ப்புள்ளன.

இளையோர் தங்கள் இல்லப் பிரச்சினைகளில் ஆர்வத்தினைக் காட்டினால் பெற்றோர்கள் அதை உணர்ந்து அவர்களின் ஆர்வத் தினைப் பாராட்ட வேண்டும். இளையோரின் தனிப்பட்ட நடவடிக்கைகளில் பெற்றோர்கள் அதிகமாகத் தலையிடா திருத்தல் நன்று. இளையோருக்கு வரும் கடிதங்களைப் பெற்றோர் பிரித்துப் படிப்பதை அவர்கள் விரும்புவதில்லை. இளையோனுக்கு ஏற்ற வகையில் இவ்விஷயத்தில் பெற்றோர் நடந்துகொள்வது சாலச்சிறந்தது. வளர்கின்ற இளையோர் தங்களுக்கு அதிகம் தெரியும் என்ற எண்ணத்தைக் கொண்டிருக்கிறார்கள். எனவே, பெற்றோர்கள் வேண்டும் இடத்து அறிவுரை கூறவேண்டும். இளையோர் தங்கள் சொந்த விஷயங்களில் பெற்றோர் தலையிடு வதையும், பிறர் முன் குறைகூறுவதையும் விரும்புவதில்லை என்பதை உணர்ந்து பெற்றோர் அதற்குத் தக நடக்கவேண்டும்.

பெற்றோருடைய உடன்பாடின்மை, சிதைந்த இல்லம், உடன் பிறந்தோர் தொடர்பு ஆகியவை இளையோரின் பொருத்தப் பாடுகளை பாதிக்கின்றவைகளாகும்.

# 11. கல்வி நிலையப் பொருத்தப்பாடுகள்

## (Educational Adjustments)

இளையோரின் பிற்கால வாழ்க்கையினை உருவாக்குவதில், பள்ளியானது மிகுந்த செல்வாக்கினைக் கொண்டுள்ளது. இளையோன் தன் ஆற்றலைச் சோதித்தறியவும், தன் திறமை, குறைபாடு ஆகியவற்றை உணர்ந்தறிவதற்கும், வேண்டிய வாய்ப்புகளைப் பள்ளி நல்குகின்றது. வெற்றி பெறுவதும், தோல்வியடைவதும் எத்தகைய அனுபவங்கள் என்பதனை உணர்ந்தறியப் பள்ளியில் அவனுக்கு மிகுந்த வாய்ப்புகள் உள்ளன. மேலும், அவன் தன் ஆற்றல்களையும் திறமைகளையும், மற்றவர்களின் ஆற்றல்கள், திறமைகளுக்கிடையில் நன்கு அறிந்து, அதற்கு ஏற்றவகையில் தன் திறமைகளின் பால் பெருமை கொள்வதற்கு வேண்டிய வாய்ப்புகளைப் பள்ளி அளிக்கின்றது. ஜெர்ஸில்ட் என்பார் (Jersild) தன் ஆய்வு ஒன்றில், இளையோரைத் தங்களுடைய நல்ல அனுபவங்களையும் கெட்ட அனுபவங்களையும் பற்றிக் கூறும்படி கேட்டபோது, துவக்கப் பள்ளி முதல், கல்லூரி வரையுள்ள மாணவர்கள் அனைவரும், தங்கள் பள்ளி சார்ந்த பணிகளையும், தாங்கள் பள்ளியில் அடைந்த வெற்றியினையும் தோல்வியினையும், தாங்கள் விரும்பிய அனுபவங்களாகவும், விரும்பாத அனுபவங்களாகவும் குறிப்பிட்டனர்.

பெரும்பாலான இளையோர், பள்ளியானது தங்கள் திறமைக் குறைப்பாட்டினை நினைவூட்டும் விரும்பத்தகாத இடம் என்று கருதுகின்றனர். பள்ளியில் வெற்றியடைவதென்பது எல்லோராலும் இயலக்கூடியதல்ல. ஏனெனில், இக்கால பள்ளிப்பாட முறையில் போட்டிகள் காணப்படுகின்றன. இதில் சிலர் வெற்றி காணும்போது சிலர் தோல்வியடையவே செய்வர். எனவே, தோல்வியுற்றவர்கள், தங்கள் திறமைக் குறைவினால் அத்தகைய விரும்பத் தகாத அனுபவங்களைப் பள்ளியுடன் இணைத்தெண்ணுவது இயல்பே.

இளையோருக்குப் பள்ளி வாழ்க்கை எண்ணற்ற வகைகளில் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். பள்ளியில் இளையோர் கல்வியினைக் கற்பதோடு, வாழ்க்கையினைப் பற்றிய பல உண்மைகளையும், வாழ்க்கையின் முன்னேற்றத்திற்குத் தேவையான பயிற்சிகளையும், நல்ல பழக்க வழக்கங்கள், பண்பாடு கலாச்சாரங்கள் ஏனைய சமூகத் திறமைகள், நடத்தைகள், வாழ்க்கை முறைகள், போன்ற வற்றையும் கற்றுத் தேறுகின்றனர். மேலைநாடுகளின் வளர்ச்சி யுடன் நம் நாட்டின் சமூகப் பொருளாதார வளர்ச்சியினை ஒப் பிட்டுப் பார்க்கையில் நாம் சுதந்திரம் அடைவதற்கு முன் மிகவும் பின்தங்கிய நிலையில் இருந்ததையும், பின்னர் சிறிது, சிறிதாக முன்னேறியிருப்பதையும் மேலைநாட்டினர்களுக்குச் சம மாக ஓரளவிற்கு வளர்ந்து கொண்டிருப்பதையும் அறியலாம். இந்த முன்னேற்றத்திற்கான காரணம், நமது இந்திய அரசு, பெரும்பாலோர் கல்வி பயில்வதற்கு வேண்டிய வாய்ப்பினை யுடைய கல்வித்திட்டத்தினை அமுல் படுத்தியுள்ளதுதான்.

ஒரு நாடு சிறந்த குடிமக்களைப் பெற்று, எல்லாத்துறைகளி லும் முன்னேற்றம் அடையவேண்டுமானால், அந்நாட்டினரின் கல்வித்தரம் உயர்வது மிகவும் அவசியமாகும். எனவே, நம் நாட்டில் கிராமப்புறங்களிலும், ஏனைய நாகரீகம் அடையாத பகுதிகளிலும், எண்ணற்ற பள்ளிகளைத் திறந்து, கல்லூரியில் புகுமுக வகுப்பு வரையிலும் கூட இலவசக் கல்வித்திட்டத்தினை நமது அரசினர் அமுலாக்கி வருகின்றனர்.

கல்விப் பாடத்திட்டங்களிலும் தற்போது மாறுதல்கள் நிகழ்ந்துகொண்டிருக்கின்றன. இளையோர்களின் ஆர்வத்தினையும், தேவையினையும் நன்கு உணர்ந்து, அதற்கேற்றவாறு பாடத்திட்டங் களை வகுக்க முயற்சிகள் எடுக்கப்படுகின்றன. உயர்ந்த சமூகப் பொருளாதார தரத்தினைச் சார்ந்தவர்கள் மட்டுமேயன்றி, ஏனைய தாழ்த்தப்பட்ட மக்களும் கல்வியில் பிற்பட்டிருக்கும் வகுப்பினரும், கல்வியினைப் பெறுவதற்கும், அதன் மூலம் வாழ்க்கையில் முன் னேறுவதற்கும் வேண்டிய வாய்ப்புகளும், வசதிகளும் அவர்களுக் குத் தரப்படுகின்றன. பகலில் கல்வியினைப் பெற வசதியற்றவர் களுக்காக மாலைநேரப் பள்ளிகளும், கல்லூரிகளும் சிறந்த வகையில் செயல்பட்டு வருகின்றன. இந்நிலை தொடர்ந்து நீடிக்குமேயானால், நம் நாட்டின் கல்வித்துறை வளர்ச்சி மேலைநாடுகளின் அளவிற்கு வளர்ச்சியுற இடமுண்டு.

**வயதின் அடிப்படையில் குறையும் ஆர்வம் :**

மாணவர்கள் துவக்கப் பள்ளியிலிருந்து உயர்நிலைப் பள்ளிக்குச் செல்லும்போது, அவர்களின் கல்வி ஆர்வங்களும், ஒழுக்கங்களும்

குறைகின்றன என்று பல ஆராய்ச்சிகள் காட்டியுள்ளன. ஜெர்ஸில்டும், டாஷும் (Jersild and Tach) தங்களுடைய ஆய்வு ஒன்றில், சராசரியான மாணவர்கள் துவக்கப் பள்ளியிலிருந்து உயர்நிலைப்பள்ளியில் சேர்ந்து பயிலும் காலங்களில், அவர்களின் பள்ளிப் பாடங்களின் பாலான அக்கறை குறைகின்றது என்றும், அவர்கள் பள்ளி வேலைகளைவிட, விளையாட்டுகளிலும், விளையாட்டுப் போட்டிகளிலும், ஓய்வுநேர நடவடிக்கைகளிலும் அதிக ஆர்வத்தினைக் கொள்கின்றனர் என்றும் கண்டறிந்தனர். ஆனால் மற்றவர்களைப் பற்றிக் குறை கூறுவதில், அவர்கள் நாட்டங்கொண்டிருந்தனர். துவக்கப் பள்ளியில் ஓரிரண்டு ஆண்டுகள் பயின்றதும், ஆசிரியர்கள்மீதும், குறிப்பாகப் பள்ளி நடைமுறைகள், கட்டுப்பாடுகள், விதிமுறைகள்மீதும், இவர்கள் வெறுப்பினைத் தெரிவிக்கின்றனர். மேலும், பள்ளியோடு தொடர்பில்லாத விஷயங்களில் கூட, அது பள்ளிப் படிப்பின் கோளாறே என்று குறைகூறி, தனது பள்ளிப் படிப்பில் ஆர்வமின்மையினை உணர்த்துகின்றனர். சான்றாக, துவக்கப் பள்ளி, உயர்நிலைப்பள்ளி மாணவர்களை, "உங்கள் வாழ்க்கையின் மகிழ்ச்சிகரமான நாட்களைப் பற்றிக் குறிப்பிடுங்கள்" என்று கேட்டபோது, உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் தங்கள் பள்ளி ஆண்டின் இறுதிநாளில் பேசியவைகளையும், நடந்தவைகளையும் குறிப்பிட்டனர்.

இளையோர் பருவத்தில் பள்ளியின் பாலான ஆர்வம் குறைவதற்குச் சில காரணங்கள் உள்ளன. பள்ளியில் நிறைவேற்றப்பட முடியாத ஆர்வங்கள் பலவற்றை இளைஞர்கள் இப்போது கொண்டிருக்கின்றனர். இவர்கள் மற்ற பருவங்களை விட இப்பருவத்தில் தான் தங்களின் வாழ்க்கைச் சூழ்நிலைகளையும், பள்ளிக்கு அப்பாற்பட்ட சூழ்நிலைகளையும் பற்றித் தீவிரமாகச் சிந்தித்து, குறை கூறுபவர்களாகக் காணப்படுகின்றனர். எனவே, பெரும்பாலான மாணவர்கள் இளையோர் பருவத்தில் பள்ளியினைப் பற்றிய விஷயங்களில் மனக்குறையுடையவர்களாகக் காணப்படுகின்றனர்.

**பள்ளி அனுபவங்களின்பால் இளையோரின் மனப்பாங்குகள் :**

இளையோர் தங்கள் பிரச்சினைகளைப் பற்றி பள்ளியில் நன்கு அறிந்து சிந்திப்பதோடு, அடிக்கடி ஆசிரியர்களின் உதவியினையும் நாடுகின்றனர். அவ்வாறு இவர்கள் ஆசிரியரின் ஆலோசனையினை நாடும்போது, கீழ்க்கண்ட கேள்விகளைப் பொதுவாக எழுப்புகின்றனர். இக்கேள்விகளை ஆராய்வதன்மூலம், இளையோர் தங்கள் பள்ளி வாழ்க்கையில் காணும் பிரச்சினைகளைப் பற்றி நாம் அறிந்துகொள்ளலாம்.

1. நான் சேர விரும்பும் பள்ளி அல்லது கல்லூரியினை நானே தேர்ந்தெடுத்துக்கொள்ள எனக்கு உரிமையில்லையா ?

2. நான் வேலைக்குச் செல்ல விரும்புகையில் என்னைக் கல்லூரிப் படிப்பிற்காகப் பெற்றோர்கள் கட்டாயப்படுத்துவது சரிதானா ?

3. நான் என் இல்லத்தில் சிறந்த வகையில் படிப்பதற்கு எத்தகைய சூழ்நிலை நிலவ வேண்டும் ?

4. இல்லத்தில் நான் படித்துக் கொண்டிருக்கும்போது, பிறர் சப்தமிட்டுப் பேசுவதோ, வானொலியைத் திருப்பிவைத் திருப்பதோ சரிதானா ?

5. எனக்கு ஓய்விற்கோ பொழுதுபோக்கிற்கோ நேரம் இல்லாத வகையில் ஆசிரியர் எனக்கு வீட்டுப் பாடங்களைத் தருதல் சரிதானா ?

6. படிப்பதற்கான நல்ல முறையினை ஆசிரியர்கள் எனக்குக் கற்றுத்தர வேண்டாமா ?

7. ஓர் உயர்நிலைப்பள்ளி மாணவன் வீட்டுப் பாடத்தில் எவ்வளவு நேரத்தினைச் செலவிடலாம் ?

8. ஒருவன் தனக்குப் புரியாத பாடங்களை நெட்டுருச் செய்வது சிறந்த பழக்கமா ?

9. ஆசிரியர் கேள்வி கேட்கையில் எழுந்து நின்று பதிலளிப் பது மாணவனுக்கு ஏன் சிரமமாகத் தோன்றுகின்றது ?

10. ஓர் ஆண்பிள்ளைக்கோ, பெண்பிள்ளைக்கோ கல்லூரிப் படிப்பிற்கான பொருத்தமான பாடங்கள் யாவை ?

11. நான் விரும்பும் பாடத்தினைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள எனக்கு அனுமதி இல்லையா ?

12. உயர்நிலைப்பள்ளியின் ஆண், பெண் பிள்ளைகள் நண்பர் களைப் பெறுவதற்கான சிறந்த முறை யாது ?

13. கல்வி நிலையங்களில் ஒரு சில மாணவர்கள் புகழ்பெற்று, ஏனையோர் புகழ் பெறுமலோ புறக்கணிக்கப்பட்டோ இருப்பதற் கான காரணங்கள் யாவை ?

14. ஒரு குழுவினைச் சார்ந்து, எவ்வாறு சிறந்த முறையில் பணியாற்றுவது ?

15. உயர்நிலைப்பள்ளி, கல்லூரியின் மன்றங்களில் ஏன் நாம் சேரவேண்டும் ?

16. ஒருவன் தன் பள்ளி நடவடிக்கைகளில் எந்த அளவிற்குப் பங்கேற்கலாம் ?

17. ஒருவன் தன் சமூக நடவடிக்கைகளில் எந்த அளவிற்குப் பங்கேற்கலாம் ?

18. நாம் ஆசிரியர்களுடன் நன்முறையில் எந்த அளவிற்குக் கலந்து பழக முடியும் ?

19. ஏன் ஆசிரியர்கள் தங்கள் மாணவர்களில் அதிக நம்பிக்கை வைக்காது, ஒரு நிகழ்ச்சியின் இருபுற வாதத்தினையும் கேட்கின்றனர் ?

20. ஆசிரியர்களும் மாணவர்களும் எந்த அளவிற்கு ஒருவருக்கொருவர் நண்பர்களாயிருக்க முடியும் ?

21. பள்ளிக் கடமைகளின் பாலான ஆர்வத்தினை ஒருவன் இழக்க நேர்ந்தால், அவன் மீண்டும் அதனை எவ்வாறு பெற வைக்கலாம் ?

தனியன் உயர்நிலைப்பள்ளியில் பயில நேரும்போது, எண்ணற்ற விஷயங்களில் பொருந்தி நடந்துகொள்ள வேண்டியவனாக இருக்கின்றான். புதிய ஆசிரியர்களுக்குத் தக்கபடி தன்னை மாற்றிக் கொள்ளவும், பள்ளிச் சூழ்நிலை, பள்ளி மாணவர்கள் போன்றவற்றிற்கேற்பப் பொருந்தி நடக்கவும், தான் பயிலவேண்டிய சிறப்புப் பாடத்தினைத் தேர்ந்தெடுக்கவும், தனது வெற்றிக்காகத் தானே பொறுப்பேற்கும் பழக்கத்தினைப் பெறவும், இன்னும் இவைபோன்ற விஷயங்களில் பள்ளியில் தனியன் பிரச்சினைகளைக் காண்கின்றான். இந்தப் பிரச்சினைகளையெல்லாம் வென்று முன்னேறுவதற்கு, பரிவுணர்ச்சியுடன் ஆலோசனை கூறி உதவும் நண்பர்களை அவன் பெறாவிட்டால், அவைகளனைத்தும் அவனுக்குக் கலக்கத்தினையும் சமயத்தில் தன்னம்பிக்கையில்லா உளநிலையினையும் தோற்றுவிக்கலாம். மேலும், உயர்நிலைப்பள்ளிப் படிப்பு முடிந்ததும், அடுத்து அவன் என்ன செய்யவேண்டுமென்ற கட்டத்திலும் பெற்றோர், நண்பர், வழிகாட்டுநர் ஆகியோரின் ஆலோசனையும் உதவியும் அவனுக்குத் தேவையாய் இருக்கின்றன.

உயர்நிலைப் பள்ளிக்குப் பின்னர் கல்லூரியில் சேரும் இளையோனுக்கும் இங்ஙனமே பிரச்சினைகள் தோன்றுகின்றன. ஆசிரியர்களுடனும் ஏனைய மாணவர்களுடனும் எங்ஙனம் நன்முறையில் நடந்து நல்லுறவினை வளர்த்துக் கொள்ள முடியும், கல்லூரிப் பாடங்களில் எங்ஙனம் சிறந்து உயர்ந்த மதிப்பெண்களைப் பெற முடியும், கல்லூரியில் பாடம் நீங்கிய புற நடவடிக்கைகளிலும் சமூக நடவடிக்கைகளிலும், எங்ஙனம், எந்த அளவிற்குப் பங்கேற்கலாம், ஓய்வு நேரத்தினை எவ்வாறு பயனுள்ள வழியில் கழிக்கலாம் என்பன போன்ற பிரச்சினைகள் இப்பொழுது இவனிடம் தலைதூக்குகின்றன.

குடும்பத்து மனப்பாங்கிற்கும், இளையோரின் நடத்தைகளுக்குமிடையே ஒரு குறிப்பிட்ட தெளிவான தொடர்பாடு நிலவுகின்றது. இல்லத்தில் சிறுவயதிலிருந்தே ஒருவன் எத்தகைய பழக்க வழக்கங்களையும், நடத்தை முறைகளையும், ஆர்வங்களையும் பெற்று வளர்கின்றானோ, அவைகளோடு தான் அவன் பள்ளிக்கும் செல்கின்றான். இங்கு அவனது பழக்க வழக்கங்கள், மனப்பாங்குகள், தன்னைப் பற்றிய, பிறரைப் பற்றிய கருத்துகள் போன்றவை அவனுக்குப் பிரச்சினைகளைத் தோற்றுவிக்கின்றன. இல்லத்தில் பாதுகாப்பற்ற உணர்வுடன் வளர்க்கப்பட்ட இளையோர், பள்ளிச் சூழ்நிலையில் பயம் கொண்டவர்களாகவும், பிறரை எளிதில் நம்பாதவர்களாகவும் இருக்கின்றனர். இத்தகைய இளையோர், போதுமான அளவிற்கு ஆலோசனை தரப்பட்டு, வழிகாட்டப்படாவிட்டால், இவர்களின் நிலை மிகவும் மோசமாகிவிடும்.

பள்ளி சார்ந்த நடவடிக்கைகள் :

பெரும்பாலானவர்களுக்கு இளையோர் பருவத்தின் துவக்கமும், அவர்கள் உயர்நிலைப் பள்ளியில் புகுவதும் ஒன்றியே நிகழ்கின்றன. புதிய பள்ளிச் சூழ்நிலையும், புதியவர்களைச் சந்திப்பதும், புதிய பாடத்தைப் படிப்பதும் புதிய சமூக, பொழுதுபோக்கு நடவடிக்கைகளும் இளையோரிடம் புது வகையான நடத்தை முறைகளைத் தூண்டிவிடுகின்றன. எனினும், தனியன் தன் புதிய அனுபவத்தில் செயல்பட, தனது சிறுவயது நடத்தை முறைகளை மாற்றிக்கொள்ள முயற்சிக்கும்போது உளப் போராட்டங்களும் அதைத் தொடர்ந்து மனவெழுச்சிச் சிக்கல்களும் தோன்றலாம்.

பெரும்பாலான இளையோரின் பள்ளி வாழ்க்கையினைச் சார்ந்த நடவடிக்கைகள் பெரிதும் முக்கியத்துவம் வாய்ந்தவைகளாக உள்ளன. எனவே இப்பருவத்தில், தனியன் தனது முதிர்ச்சிப் பருவத்தில் செயல்பட வேண்டியதற்கான திறமைகளையும், அறிவு

களையும், மனப்பாங்குகளையும் வளர்த்துக் கொள்ள முயற்சி செய்ய வேண்டும். உடல்நலம், பொருளாதாரத் தேவை, பள்ளியின் வழி கிடைக்கும் நன்மைகளைப் பயன்படுத்திக்கொள்ள முடியாமை, தனிப்பட்ட மனவெழுச்சித் தடைகள் போன்றவைகளால் இளையோர் பருவத்தில் ஒருவன் முழுமையான கல்வியினைப் பெற முடியாது போகலாம்.

பள்ளி வாழ்க்கை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததெனினும், இல்ல, சமுதாய வாழ்க்கையும் இளையோருக்கு உண்டு என்பதனைக் கல்வி அதிகாரிகள் மனதிற்கொள்ளவேண்டும். இளையோர் பள்ளி வாழ்க்கையில் வெற்றி பெறுவதற்குக் கல்வி நிபுணர்கள் உதவ வேண்டுமெனினும், இல்ல, சமுதாய வாழ்க்கையிலும் அவர்களுக்கு வேண்டிய ஆலோசனையினையும் அறிவினையும் அவர்கள் பெற கல்வி நிறுவனத்தினர் உதவிபுரிய வேண்டும். இந்த நிலையினை உணராததனால்தான், இளையோர் தங்கள் பல்வேறு ஆர்வங்களை ஒருங்கிணைத்து, வளர்த்துக்கொள்ள இயலாது துன்பப்படுகின்றனர். ஒரு வாழ்க்கையின் அல்லது துறையின் ஆர்வங்கள் ஒரு பக்கத்திலும், ஏனைய வாழ்க்கையின் அல்லது துறைகளின் ஆர்வங்கள் தனியனை வெவ்வேறு பக்கங்களிலும் ஈர்ப்பதால், தனியனின் நிலைத்த ஆளுமை சீர்குலைந்து பிரச்சினைகளையும், சிக்கல்களையும் இப்பருவத்தில் அவன் காண நேர்கின்றது.

**பள்ளி, கல்லூரி தேர்ந்தெடுப்பு :**

ஒரு சிறிய ஊரில் உள்ள ஒரே ஒரு உயர்நிலைப் பள்ளியில் தான் அவ்வூர் இளையோர் சேர்ந்து படிக்க இயலும். பெரிய நகரங்களில் எண்ணற்ற பள்ளிகள் இருப்பதால் இளையோர் தங்கள் இல்லங்களுக்கு அருகிலிருக்கும் பள்ளிகளிலேயே சேர்ந்து படிப்பர். எனினும், அவர்கள் தங்களுக்கு விருப்பமான பள்ளியினைத் தேர்ந்தெடுத்துப் பயில இங்கு வாய்ப்புள்ளது. பெரிய நகரங்களில், கல்வி, வணிகம், இயந்திரம் தொழில் போன்ற வெவ்வேறு துறைகளுக்கான பள்ளிகளும் கல்லூரிகளும் ஆண்-பெண் பள்ளிகளும், கல்லூரிகளும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித் தனியே உள்ள பள்ளிகளும், கல்லூரிகளும், இருப்பதால், அந் நகரத்து இளையோர்கள் தங்கள் விருப்பத்திற்கேற்ற பள்ளி, கல்லூரியினைத் தேர்ந்தெடுத்து, தாங்கள் விரும்பும் துறையில் முன்னேற்றம் காண வாய்ப்புள்ளது.

இத்தகைய பெரும் நகரங்களில் பெற்றோர் தம் பிள்ளைகளை எப்பள்ளியில் சேர்ப்பது என்று இறுதியாக முடிவெடுக்கும்போது, இளையோரைக் கலந்தாலோசிக்க வேண்டும். பல சமயங்களில்

இளையோரின் திறமைகளையும் ஆர்வங்களையும் சிந்தித்துப் பாராது, பெற்றோர் தாங்கள் விரும்பும் வண்ணம் பள்ளியினைத் தேர்ந்தெடுக்க முனைகின்றனர். ஒரு தனியன் தன் திறமைகளுக்கும், உள நாட்டங்களுக்கும் ஏற்ப, ஒரு குறிப்பிட்ட பள்ளியில் சேர்ந்து, கல்வி, வணிகம் அல்லது தொழில் சார்ந்த பயிற்சியினை அடைய விரும்பினால், பெற்றோர்கள் அதனை அனுமதிக்க வேண்டும். இப்போது, அவர்கள் கல்வி ஆலோசகர்களின் உதவியினை நாடி, இளையோரின் திறமைகளையும் உள நாட்டங்களையும் சோதித்து அறியவேண்டும். இளையோரின் எதிர்காலம் பற்றி, பெற்றோர்களின் விருப்பமும் அவ்விளையோரின் விருப்பமும் ஒன்றுக்கொன்று மாறுபடாமல் அவர்களின் திறமைகளுக்கும் உளநாட்டங்களுக்கும் ஏற்பப் பொருந்தியிருக்குமாயின், அத்துறையிலேயே அவர்கள் முன்னேறுவதற்கு அவர்களை அனுமதித்து விடுவது நன்று. எனவே இளையோரின் எதிர்காலத் தொழிலைத் தேர்ந்தெடுப்பதில், இரு தரப்பினரின் விருப்பங்களையும் விட இளையோரின் திறமைகளும் உளநாட்டமும் அத்தொழிலுக்கேற்ப உள்ளதா என்பதுதான் முக்கியமானது.

பெற்றோர் சில நேரங்களில் தாங்கள் பயின்ற பள்ளியிலோ, தங்களின் குடும்பத்தினரோ சுற்றத்தினரோ பயின்ற பள்ளியிலோ தம் பிள்ளைகள் பயிலவேண்டுமென ஆசைப்படுவர். ஆனால் இளையோர் தங்கள் துவக்கப் பள்ளிக்கு அருகிலுள்ள உயர்நிலைப் பள்ளியிலோ, தனது சக மாணவர்கள் சேர்ந்து பயிலும் பள்ளியிலோ, தங்கள் நண்பர்கள், உறவினர்கள், சுற்றுப்புறத்துப் பிள்ளைகள் பயிலும் பள்ளியிலோ சேர்ந்து பயில விரும்பும்போது, பெற்றோர்கள் இவர்களின் ஆசை, இவர்களுக்குப் பிறரிடமிருந்து கிடைக்கும் ஒத்துழைப்பு, உதவி, நட்பு ஆகியவற்றைப் புறக்கணித்து, தாங்கள் பெரிதாக மதிக்கும் பள்ளியில் அவர்களைச் சேர்த்துவிட்டால் அவர்களின் பள்ளி வாழ்க்கை ஆர்வமற்றும், பிரச்சினைகளைக் கொண்டும் காணப்படும். எவ்வாறெனில், தன் விருப்பத்திற்கு மாறான பள்ளியில் சேர்ந்த இளையோன், முற்றிலும் புதிய சூழ்நிலை, கட்டுப்பாடு, நபர்கள் ஆகியவற்றோடு பொருந்தி நடக்க முற்படும் போது, சில பிரச்சினைகள் தோன்றலாம். இதனால் இளையோன், பள்ளியில் ஒருசில நண்பர்களையே பெற்று, தொலைவில் படிக்கும் இளையோன் சுற்றத்தார் தொடர்பும் அற்று, தனிமையாக நாட்களைக் கழிக்க நேரிடும்போது, அவனுக்குப் படிப்பின் மீதுள்ள ஆர்வங்கள் குன்றவும் வழியுண்டு.

கல்லூரிப் படிப்பினைத் தொடரவிருக்கும் இளையோரிலும் இத்தகைய பிரச்சினைகள் எழலாம். ஒருசில இளையோர் பள்ளிப்

படிப்பின்போதே தங்களது சிறப்புப் பாடத்தினைப் பற்றி முடிவு செய்திருப்பர். இவ் விளையோர், எந்தக் கல்லூரி தாங்கள் விரும்பும் துறையில் பயிற்சியளிக்கின்றது, அத்தகைய கல்லூரி களில் நுழைவு பெறுவதற்குத் தங்களுக்குத் தகுதியுள்ளதா, தங்கள் இல்லத்திற்கு அருகிலிருக்கும் கல்லூரியில் சேருவதா, தொலைவில் உள்ளதில் சேருவதா, தாங்கள் சேரவிரும்பும் கல்லூரி யில் தங்களைப் பயிலவைக்கத் தம் பெற்றோருக்குத் தகுதியுண்டா என்பன போன்ற பிரச்னைகளின் பால் தங்கள் சிந்தனையினைச் செலுத்துகின்றனர். இவ்வாறின்றி எவ்விதக் குறிக்கோளுமற்று, பள்ளிப் படிப்பினை முடித்துவிட்ட இளையோர், தாங்கள் என்ன செய்வது என்று தெரியாது விழிக்கும்போது, அவர்களுக்கு ஆலோசனை கூறவும், வழிகாட்டவும், கல்வி ஆலோசனைக் கூடங்கள் (Educational Counselling Centres) ஏற்படுத்தப்படவேண்டும். இவை இளையோரின் திறமைகளையும் தகுதிகளையும் ஆர்வங்களையும் சோதித்து அறிந்து அவைகளுக்கேற்ற வகையில் கல்லூரியினைத் தேர்ந்தெடுக்க உதவும்.

இல்லத்திலிருந்து கல்லூரி இருக்கும் தொலைவும், கல்லூரிக்குச் செலவிட வேண்டிய பணமும், இளையோர்களின் கல்லூரிப் படிப்பினை வெகுவாகப் பாதிக்கும் காரணிகளாக உள்ளன. ஒரு கல்லூரி தங்கள் இல்லத்தருகில் இருந்து, அதில் தம் இளையோர் பயில விரும்பும் பாடம் கற்பிக்கப்பட்டு, அதன் சூழ்நிலை தம் பிள்ளை களுக்கு ஏற்ற வகையில் அமைந்து, தங்கள் பொருளாதார நிலையும் அதற்கு ஏற்றதாக இருக்குமேயானல், பெற்றோர்கள் தம் பிள்ளை களை அக்கல்லூரியிலே சேர்த்துப் படிக்க வைப்பது சாலச்சிறந்தது. ஆனல் தங்கள் பிள்ளைகளை வெகு தூரத்திலுள்ள கல்லூரிக்கு அனுப்ப எண்ணற்ற பொருள் செலவு ஏற்படும்போதும், இதன் விளைவாகப் பெற்றோர்கள் தங்கள் வாழ்க்கை வசதிகளைத் தேவை யின்றித் தியாகம் செய்ய நேரிடும் போதும் தொலைதூர கல்லூரிக்குச் சென்று வருகையில் படிக்கவும், ஏனைய நிகழச்சிகளில் ஈடுபடவும் பிள்ளைகளுக்குப் போதிய நேரம் இல்லாதபோதும், பெற்றோர்கள் தம் பிள்ளைகளை அருகிலுள்ள கல்லூரியிலேயே சேர்த்துவிடுவது நன்று.

எனினும் பொருளாதாரப் பிரச்சினைகளற்று, தொலைவிலுள்ள கல்லூரி தங்கள் பிள்ளைகளுக்கு வேண்டிய துறையில் பயிற்சிகளைக் கொண்டிருக்கும் நிலையில், தொலைவிலுள்ள கல்லூரியில் சென்று தங்கிப் பயில்வதால் தங்கள் பிள்ளைகளுக்குப் போதிய உலக அனு பவமும் பிறருடன் கலந்து பழகும் வாய்ப்பும் கிட்டும் என்ற கருத் தில், தொலைவிலுள்ள கல்லூரியினைத் தேர்ந்தெடுப்பதில் தவறில்லை.

இவ்வாறு இளையோர் சேரவேண்டிய கல்லூரி, அதன் பொருத்தம், சூழ்நிலை, இடவசதி, செலவு, தேவையுள்ள படிப்புத்துறை போன்ற காரணிகளின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

பாடத்திட்டம் (Curriculam) :

இளையோர்களுக்குக் கற்பிக்கப்படும் கல்விப் பாடங்கள், வாழ்க்கையில் அவர்கள் பெறப்போகும் அனுபவங்களுக்கு ஏற்ற பயிற்சியாகவும், அவர்கள் முன்னேற்றத்திற்கு உறுதுணையாகவும் இருத்தல் அவசியம். ஒரு தனியனின் தகுதியும், திறமையும் தனிப்பட்ட முறையில் எப்படி இருப்பினும், அவனுக்குக் கற்பிக் கப்படும் கல்வி அவனுடைய உடல், உள்ளம், மனவெழுச்சி, அற நெறி வாழ்க்கை முறையில், சமூக வாழ்வினை ஊக்குவிக்கின்ற, எல்லாப் பண்புகளையும் வளர்ப்பனவாய் இருத்தல் வேண்டும். எனவே, ஒவ்வொரு குடிமகனும் தன் திறமை, சக்திகளுக்கேற்ப, தான் விரும்பும் கல்வியினைப் பெறும் வகையில் பாடத்திட்டங் கள் அமைதல் வேண்டும்.

குடியரசு அமைப்பினைக் கொண்ட ஒரு நாட்டின் வெற்றி, அந் நாட்டுக் குடிமகனின் சிறப்பான சிந்தனை, செயலாக்கம் ஆகிய வற்றினைப் பொறுத்துள்ளது. எனவே ஆண்களும் பெண்களும் பிற்காலத்தில் சிறந்த குடிமக்களாய் உருவாவதற்கு வேண்டிய எல்லா வாய்ப்புகளையும் அவர்கள் பெறும்வண்ணம் பாடத்திட்டம் அமைந்திருத்தல் வேண்டும். சமூகம், நாடு இல்லம் ஆகியவற்றால் ஒருவனுக்குக் கிட்டும் வாய்ப்பு வசதிகள் அவனது ஆர்வங்களுக் கும் திறமைகளுக்கும் ஏற்றவகையில் அமைவதோடு அவனது வாழ்வின் பல்வேறு நிலைகள், துறைகள் ஆகியவைகளின் மூலம் பெற்ற அறிவு, பயிற்சி, அனுபவங்களை வளர்க்கும் விதத்திலும், பாடத்திட்டம் அமைவது அவசியம். இளையோன் ஒரு பாடத் தினைத் தேர்ந்தெடுத்துப் பயிலுதல், கற்றுக்கொடுக்கும் ஆசிரியரின் திறமையின் அடிப்படையிலோ, அப்பாடத்தில் உள்ள தற்காலிக ஆர்வத்தின் அடிப்படையிலோ, அத்துறைப் படிப்பு மிகவும் சுலப மானது என்பதன் அடிப்படையிலோ தேர்ந்தெடுப்பது விரும்பத் தக்கதன்று. எனவே இளையோரது பாடத்துறைகளின் தேர்வு, பிறரால் தூண்டப்பட்டும் மற்றவர்கள் புகழ்ச்சியின் அடிப்படை யிலும் அமையாமல், தனது ஆர்வம், திறமை, ஆகியவற்றின் அடிப்படையில் அமைதல் வேண்டும். ஆசிரியர்களும் பெற்றோர் களும் இவ்விஷயத்தில், இளையோர்களுக்கு உறுதுணையாயிருத்தல் நன்று.

இது போன்றே, பெற்றோர்களும் ஆசிரியர்களும், ஒரு சில சிறப்புமிக்க துறைகளுக்கான தகுதியினையும், அனுபவத்தினையும், அறிவினையும் இளையோன் பெற்றிருப்பதைக் காண நேரிட்டால், அவனை அத்துறையில் ஈடுபடுமாறு செய்யவேண்டும். அங்ஙனம் ஈடுபட்டவன் பாதியில் அப்படிப்பினை விட்டுவிட எண்ணுங்கால், பெற்றோர்களும், ஆசிரியர்களும் அவனது அந்நிலைக்கான காரணங்களைக் களைந்து அவன் அத்துறையில் தேர்ச்சி பெறுவதற்கு உதவ வேண்டும், மேலும் ஒரு சில பாடத்துறைகளில் முற்றிலும் தகுதியற்றோர் சேர முயலும்போது, அதன் பால் தேவையுள்ள திறமைகளையும், அவர்களின் குறைபாடுகளையும் அவர்களுக்கு நினைவுறுத்தித் தடுத்தல் நன்று.

**இளையோரின் பாடத்திட்டம் பற்றிய விருப்பம் :**

டோனல்ட் டோன் என்பார் (Donald Dane) எந்தப் பாடத்தில் இளையோர் பருவத்து ஆண், பெண்பிள்ளைகள் மிகுந்த விருப்பத்தினைக் கொண்டிருந்தனர் என்றும், எந்தப் பாடத்தினை அவர்கள் வெறுத்தனர் என்றும் ஆய்ந்தபோது, தொழிலின் பாற்பட்ட பாடங்களில் அவர்கள் அதிக விருப்பம் கொண்டிருந்ததை அறிந்தார். பாலினம், நுண்ணறிவின் பாற்பட்ட வேறுபாடுகள் எதனையும் அவர் இதில் காணவில்லை. வாஷிங்டன் நகரத்து ஆய்வு ஒன்றின் முடிவுகளும் இக்கருத்தினையே வலியுறுத்தின. அதிலிருந்து தொழில் வழிகாட்டல், தொழில் அனுபவங்கள், உலகப் பிரச்சினைகளை நன்கு அறிதல் போன்றவற்றில் இளையோர் மிகுந்த அக்கறையினைக் காட்டினர் என்பது தெரியவந்தது.

உயர்நிலைப்பள்ளி மேல் வகுப்பு மாணவர்கள் மீது நடத்திய ஆய்வு ஒன்றில், இம் மாணவர்கள் மண வாழ்க்கை, குடும்ப வாழ்க்கை, பெற்றோர்—பிள்ளைகள் இடையே நல்ல தொடர்பினை வளர்க்க உதவும் அறிவு, தனிப்பட்ட சொந்தப் பிரச்சினைகளைத் தீர்க்க உதவும் அறிவு ஆகிய விஷயங்களில் தங்கள் பள்ளிப் படிப்பானது பயன்படுவதில்லை என்று கருதியதாகக் கண்டறியப் பட்டது. இதிலிருந்து தங்கள் பிற்கால வாழ்க்கையில் பயன்படும் தொழில் அறிவினையும், இதன் மூலம் கிட்டும் அனுபவத்தினையும் தங்கள் குடும்ப வாழ்க்கைக்கான நடைமுறை அறிவினையும் பெற இளையோர் விழைகின்றனர் என்பதனை நாம் அறியலாம்.

**பாடத்திட்ட முறையினை மாற்றியமைக்க வேண்டியதன் அவசியம் :**

தற்போது, கல்வி நிபுணர்கள் அனைவரும் பள்ளி, கல்லூரிகளின் பாடத்திட்டத்தினைப் பற்றித் திருப்தியற்று இருக்கின்றனர். பள்ளியில் கற்பிக்கப்படும் பாடத்திட்டங்கள் இளையோரின் உண்மை

வாழ்க்கையில் பயனற்று, அதற்குப் புறம்பாக இருக்கின்றன என்ற கருத்தினை அவர்கள் தெரிவிக்கின்றனர். இந்நிலையில் பிற்கால வாழ்க்கையில் பயன் படக்கூடிய கல்வியினைப் பற்றியும், பாடத் திட்டத்தினைப் பற்றியும், குறிப்பாக இளையோர்களுக்கு இப்பாடத் திட்டங்கள் எவ்வகையில் அவர்களது தேவைகளைப் பூர்த்தி செய்ய இயலும் என்பதனையும் நாம் ஆராயவேண்டியது அவசியம்.

பள்ளியில் கற்கப்படுவன அன்றாட வாழ்க்கைச் செயல்களி னின்று மிகவும் வேறுபட்டு இருப்பதால், பள்ளியில் இளையோர்கள் தங்கள் வாழ்க்கையினைப் பற்றிப் பெறும் அறிவு மிகச் சொற்பமே. எனவே, தாங்கள் பயிலும் பாடத்தில் நடைமுறை வாழ்க்கைக்குத் தேவையான எவ்வித பயனும் இல்லையென அடிக்கடி அவர்கள் குறை கூறுகின்றனர். பெரும்பாலான மாணவர்கள் இங்ஙனமே தங்கள் மனநிறைவின்மையினைத் தெரிவிக்கின்றனர், இதனடிப் படையில்தான், சீர்திருத்த வாதிகளும், சமூக அறிஞர்களும், உள வியலாரும் இளையோர் நன்கு திறமையுடன் செயல்படுவதற்கு ஏற்ற வகையில் பாடத்திட்டங்கள் அமையவேண்டும் என்று கருதுகின்றனர். இதைப்பற்றிக் கூறுமிடத்து, பாடத்திட்டத் தினைக் கீழ்க்கண்ட வகையில் அமைத்தால், அது பயனுள்ளதாய் இருக்கும் என காரிஸன் (Garrison) அறிவித்துள்ளார்.

1. குடும்ப வாழ்க்கைப் பயிற்சி (Family-Life Training) :

மண வாழ்க்கை, குடும்ப வாழ்க்கை. குழந்தைகளைப் பேணு தல் போன்றவற்றைப் பற்றிய பாடங்களும், தாய்மொழி, கணிதம் ஆகியவையும் இதில் அடங்கியுள்ளன.

2. நுகர்வோர் கல்வி (Consumer-Education) :

பொருள்களின் மதிப்பினையும், தரத்தினையும் நன்கறிந்து அவற்றை வாங்கவும், அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான முக்கியப் பொருள்களைப்பற்றிய அறிவினை இளையோர் பெற்றிருக் கவும் இத்தகைய பயிற்சி அவசியமாகின்றது. மேலும், பொரு ளாதார விஷயத்தில் எவ்வாறு சிக்கனத்தைக் கடைப்பிடிப்பது, குறைந்த வசதியுடன் மனநிறைவான வாழ்க்கையினை வாழும் முறை, போன்றவை இதில் கற்பிக்கப்படவேண்டும்.

3. செயலாற்றுவதற்கான சிறந்த பழக்கம் (Good Habits of Work):

குறைந்த நேரத்தில் சிறப்பாகப் படிக்கும் முறை, செயல் படும் முறை, நேரத்தை வீணாக்காது உழைக்கும் வழி, கூட்டுச் செயல்களில் ஒத்துழைக்கும் விதம் ஆகியவை இதில் அடங்கியுள் ளன, இதன் மூலம் இளையோர் பிற்கால வாழ்க்கையில் சிறந்த

செயல் வல்லுநர்களாய் விளங்க முடியும். எதிர்காலத்தில் அலுவலகத்திலும், இதர சமூகப் பணிகளிலும், தொழில் நிறுவனங்களிலும் இவர்கள் ஒருங்கிணைந்து செயலாற்ற இப்பயிற்சி போதிய அறிவினையும் பழக்கவழக்கங்களையும் தரும்.

4. ஓய்வு நேரத்தினை ஆக்க வழியில் பயன்படுத்துதல் (Creative Use of Leisure Time) :

தனக்குள்ள ஓய்வு நேரத்தினை எவ்வாறு ஆக்க வழிகளில் நன்கு பயன்படுத்த முடியும் என்பது மனிதனுக்கு இளையோர் பருவத்தில் கற்பிக்கப்படவேண்டிய முக்கியப் பாடமாகும். இளையோர், வளர்கின்ற தங்கள் அறிவினையும், உடலினையும் எப்போதும் சுறுசுறுப்பாக ஏதாவது ஒரு செயலில் ஈடுபடுத்தி வைத்திருக்க விரும்புகின்றனர். அமைதியற்று, எதையாவது செய்யவேண்டும் என்ற துடிப்பு அவர்களில் இருக்கையில், பயனுள்ள வகையில் அவர்கள் செயலாற்றுவதற்கு ஒன்றும் இல்லாதிருப்பின், அவர்கள் தவறான வழியில் செயல்பட முனைவர். எனவே, இளையோரை நல்வழியில் செலுத்த, அவர்களுக்குக் கிடைக்கும் ஓய்வு நேரத்தினைச் சிறந்த வகையில் பயன்படுத்தும் விதத்தினைப் பற்றிக் கற்பிக்க வேண்டியது அவசியமாகும். ஓய்வு நேரத்தினை அறிவுசார்ந்த நல்வழியில் பயன்படுத்தவும், பொழுதுபோக்கு விளையாட்டுகளில் ஆர்வங்களை வளர்த்துக் கொள்ளவும், ஆக்கத் திறன்களை வளர்த்துக்கொள்ளவும் வேண்டிய பயிற்சியினை அவர்களுக்கு அளிக்க வேண்டும். ஓய்வு நேரத்தினை எவ்வாறு சிறு சிறு தொழில்களில் செலவிடலாம்; அவ்வாறு செலவிட்டால், அதற்கான பலன் என்ன என்பது பற்றியும் கற்பிக்கவேண்டும். இதன் மூலம் நமது நாட்டின் வேலையில்லாத் திண்டாட்டத்திற்கும் ஓர் தீர்வு காண இடமுண்டு.

5. குடிமைப் பயிற்சி (Citizenship Training) :

ஒரு சமூகமும், நாடும் தானாகவே நன்மக்களைப் பெற்றுவிடுவதில்லை. ஆனால் அத்தகைய நன்மக்கள் அந்நாட்டின் கலாச்சாரம் பண்பாடு, நாகரிகம், கல்வித்தரம், பொறுப்புணர்ச்சி, வாழ்க்கை முறை, சமூகத்தின் நிலை போன்ற பல்வேறு காரணிகளால் உருவாக்கப்படுகின்றனர். எனவே, இக்காரணிகளைப் பற்றிய அறிவினை ஒவ்வொரு இளையோனும் அறிந்திருக்க வேண்டியது அவசியம். அதனுடன் தன் வீடு, சமுதாயம், சமூகம், நாடு ஆகியவற்றிற்கு அவன் ஆற்றவேண்டிய கடமைகளைப் பற்றிய அறிவும் குடிமைப் பயிற்சியாக அவனுக்குத் தரப்படல் வேண்டும்,

6. தொழில் திறமைகள் (Vocational Skills):

இதன்மூலம் ஒரு தொழிலை எவ்வாறு சிறப்பாகச் செய்ய இயலும் என்றும், ஈடுபட்ட ஒரு தொழிலில் எவ்வாறு சிறக்க முடியும் என்றும் கற்பிக்கலாம். ஒரு தொழிலை நுட்பமாக ஏற்று நடத்துவது என்பது மிகவும் சிக்கலானது. "ஆதாயம் இல்லாமல் வணிகன் ஆற்றோடு போகமாட்டான்," "ஆற்றில் போட்டாலும் அளந்துபோடு" என்பன போன்ற பழமொழிகள், ஒருவர் தான் ஈடுபட்டிருக்கும் தொழிலில் எவ்வாறு திறமை பெற்றிருக்க வேண்டும் என்பதனை எடுத்து விளக்குகின்றன. அலுவலகத்திலும் சரி, ஏனைய தொழில் நிறுவனங்களிலும் சரி, செய்யும் பணியினைச் செவ்வனே செய்ய, இத்தகைய பயிற்சி இளையோர்களுக்குத் தரப் படவேண்டியது அவசியமாகும். மற்றவர்களைப் புரிந்துகொண்டு அவர்களோடு நன்கு பொருந்தி நடப்பதற்கான அறிவினையும், ஒரு வேலையின் மீது சாதகமான மனப்பாங்கினை எவ்வாறு கொள்ளலாம் என்பதற்கான அறிவினையும் இந்தப் பயிற்சியில் கற்பிக்கப்பட வேண்டும்.

7. ஆரோக்கியத்திற்கான நல்ல பழக்கங்கள் (Good Health Habits):

மனித வாழ்க்கையின் வெற்றிக்கும், மகிழ்ச்சிக்கும், நல்ல ஆரோக்கியமான உடல் வளமும், அறிவு வளமும் மிகவும் அவசிய மாகும். ஆரோக்கியமான உடலினையும், சிறந்த அறிவினையும் பெற, ஒருவனுக்கு இளையோர் பருவத்தில் சிறந்த பயிற்சி அளிக்கப் படல் வேண்டும். நல்ல, ஆரோக்கியமான பழக்க வழக்கங்களைப் பற்றிய இப்பயிற்சி, நாம் உடலினை எவ்வாறு நன்கு பேண வேண்டும் என்பதனையும், சிறந்த உடல் வளர்ச்சிக்கு எவ்வகை உணவுப் பொருட்களை உட்கொள்ள வேண்டும் என்பதனையும், பொதுவாக நமக்கு வரும் நோய்கள், அவற்றைத் தடுப்பதற்கான முறைகள் ஆகியவற்றையும் பற்றிய அறிவினையையும் தருவதாக அமைய வேண்டும். விபத்துக்களைத் தடுப்பதற்கான முறையினை அறிய முனைந்த மேலைநாட்டு அதிகாரிகள், பள்ளிப் பாடத் திட்டத்தில் ஊர்தியினை ஓட்டுவதைப் பற்றியும் கற்பித்தனர். இவ்வாறு கற்பிக் கப்பட்டவர்கள் பிற்காலத்தில் சிறந்த ஊர்தி ஓட்டுநர்களாக விளங்கினர். இதன் விளைவில், சாலை விபத்துகள் பெருமளவிற்கு குறைந்துவிட்டிருந்தன.

8. அறநெறி பற்றிய போதனை (The Development of the Spiritual self):

அறநெறிப் போதனை, பாடத்திட்டத்தில் இடம்பெற்றால், எண்ணற்ற இளையோரின் நெறி பிறழ் நடத்தையினைத் தவிர்க்க

முடியும். இப்போதனைகள், வாழ்க்கைக்குத் தேவையான அற நெறி அறிவினைத் தரவல்லனவாக இருக்க வேண்டும். இதனால் இளையோரிடம் சிறந்த ஆளுமைத் தன்மையின் வளர்ச்சியினை பெற முடியும். நன்னெறியுடன் வளர்க்கப்படும் பிள்ளைகள், இளையோர் பருவத்தில் இல்லத்திலும், பள்ளியிலும், சமூகத்திலும் எவ்வாறு சிறந்த முறையில் நடந்து கொள்ளவேண்டும் என்பதனை அறிந்த வர்களாக விளங்குகின்றனர்.

படிப்பதற்கான சிறந்த பழக்கங்கள் (Good Study Habits):

படிப்பதற்கேற்ற விரும்பத்தக்க நிலைகள், வசதிகள் ஆகியவற்றைப் பெற்றவர்களால் தான் சிறப்பான கல்வியறிவைப் பெற முடிகின்றது. பொதுவாக, துவக்கப் பள்ளிக்குப் பின்னர், பள்ளிப் படிப்பு, கல்லூரிப் படிப்பு ஆகியவற்றில் பிள்ளைகள் சிறந்த தேர்ச்சி பெறுவது, இல்லத்தில் தாங்கள் ஏற்ற வசதிகளைப் பெற்றிருப்பதைப் பொருத்தும் உள்ளது. எனவே, பெற்றோர்கள் வீட்டில் தம் பிள்ளைகள் கல்வியில் கவனத்தினைச் செலுத்துவதற்கும், அவர்களின் கவனம் வேறு வழிகளில் சிதைவடையா வண்ணம் படிப்பில் ஆழ்ந்திருக்கவும் ஏற்றவற்றை அவர்களுக்குச் செய்து தரவேண்டும்.

உயர்நிலைப்பள்ளியில் பயிலும் மாணவன் வீட்டில் படிப்பதற்கென்று தனியறையினைப் பெற்றிருப்பானேயானால், அது அவன் தன் பள்ளிப் படிப்பினைச் சுலபமாக்கிக்கொள்ள உதவும். உயர் நிலைப்பள்ளியில் நல்ல தேர்ச்சிபெற்று, படிப்பில் ஆர்வம் மிகுந்திருக்கும் இளையோர், தாங்கள் தொந்தரவற்று, அமைதியாகப் படிப்பதற்கு ஏற்ற வசதிகளைத் தங்கள் வீட்டில் பெற்றிருப்பதனைப் பற்றி மனநிறைவினைத் தெரிவிக்கின்றனர். எனினும் இளையோர் தாங்கள் படிப்பதற்கு ஏற்ற இடத்தினைப் பெற்றிருப்பது போன்றே தங்கள் குடும்பத்துப் பிரச்சினைகளும், நடவடிக்கைகளும், தங்கள் படிப்பு நேரத்தில் தலையிடாது இருக்க வேண்டும் என விரும்புகின்றனர். எனவே பெற்றோர்கள் தம் பிள்ளைகளுக்குத் தனித்துப் படிக்க இடத்தை ஒதுக்குவது போன்றே, குடும்பத்தினர் அவர்களுக்குத் தொல்லை தராத வண்ணம் அவர்களின் படிப்பிற்கு ஊக்கம் ஊட்டுபவர்களாக இருத்தல் வேண்டும். குடும்பத்துப் பொறுப்புகள், இல்லக் கடமைகள் ஆகியவற்றில் இளையோர் பங்கேற்கவேண்டியதும் பொறுப்பேற்க வேண்டியதும் அவசியமெனினும், அவை அவர்களின் படிக்கும் நேரத்தினையும் கடமையினையும் பாதிக்காவண்ணம் இருத்தல் வேண்டும். அதே நேரத்தில் படிக்கும் நேரமும், இல்லப் பொறுப்பினைக் கவனிக்கும் காலமும், ஏனைய சமூக நடவடிக்கைகள்,

ஓய்வு நேரப் பொழுதுபோக்கு ஈடுபாடுகள், குடும்பத்தினர் களுடன் பேசி மகிழும் வாய்ப்புகள், ஆகியவற்றினை முற்றிலும் ஒதுக்கிவிடுவனவாக இருத்தல் கூடாது. எனவே ஒவ்வொரு பெற்றோரும் இவைகளை மனத்திற்கொண்டு தம் பிள்ளைகளுக்குரிய படிப்பு நேரத்தினையும், ஏனைய நடவடிக்கைகளுக்கான காலத்தினை யும் அமைத்துத் தரவேண்டும். ஆனால், தம் குடும்பத்தில் ஒரு தனிநபர் படிக்கின்றார் என்பதற்காக, குடும்பத்திலுள்ள பிறர் தங்களுடைய மற்ற நடவடிக்கைகளனைத்தையும் தியாகம் செய்ய வேண்டியது அவசியமில்லை. இதுபோன்றே, குடும்பத்திலுள்ள மற்ற பிள்ளைகள் வானொலி கேட்டல், உரக்கப் பேசுதல், மகிழ்ந்து விளையாடுதல் போன்ற தங்களுக்கே உரிய மகிழ்ச்சியான செயல் களைச் செய்யக்கூடாது என்று இளையோர் எதிர்பார்த்தலும் கூடாது. பள்ளியில் பயிலும் தனியனும், தன் படிப்பு நேரம் போக எஞ்சிய நேரத்தில் குடும்பத்திலுள்ள அமைதியினைக் குலைக்கும் வண்ணம் செயல்படுவதும் சிறந்ததல்ல. எனவே, பெற்றோர்கள் சூழ்நிலையினையும் குறைபாடுகளையும் நன்கறிந்து, இளையோரின் படிப்பிற்கான வாய்ப்புகளையும் வசதிகளையும் இல்லத்தில் அமைத்துத் தருதல் நன்மையாகும்.

ஒரு கல்லூரி மாணவரின் படிப்பின் வெற்றி, அம்மாணவரின் படிக்கும் பழக்கத்தினைப் பொறுத்தும் உள்ளது. இவ்வமயத்தில், இல்லத்தில் அவருக்கென்று தனியறையும், தனித்த கால நேரமும் படிப்பதற்கென்றிருத்தல் மிகவும் இன்றியமையாததாகும். மேலும், அவர்கள் நூல் நிலையங்கள், மற்றும் தங்கள் பாடம் சார்ந்த குறிப்புகளைச் சேகரிக்கும் இடங்களுக்குச் சென்றுவர, வாய்ப்பும், வசதியும், நேரமும் அளிக்கப்பட வேண்டும். இல்லத்தி லில்லாது, கல்லூரி விடுதிகளில் தங்கிப் பயிலும் இளையோர், தங்க ளுக்குக் கிடைக்கும் மிகுதியான ஓய்வு நேரத்தினை எவ்வாறு கழிப்ப தெனத் தெரியாது, விரும்பத்தகாத செயல்களில் சில வேளைகளில் ஈடுபடுகின்றனர். இதனைத் தவிர்க்க, கல்லூரி நிர்வாகத்தினரும், ஆலோசகர்களும், அவர்களுக்குள்ள நேரத்தினைப் படிப்பதற்காக வும், மற்ற நடவடிக்கைகளுக்காகவும் ஒதுக்கி, அவர்கள் எவ்வாறு தங்கள் காலத்தினைப் பயனுள்ள வழியில் செலவிடலாம் என்பதற் கான ஆலோசனைகளைத் தரவேண்டும். மாணவர்களுக்கு விடுதி யில் தனித்துப் பயில இடமும் காலமும் அளிக்கப்படுகின்ற தெனினும், உடனுறையும் அறைத் தோழர்கள் அனைவரும் ஒரே நேரத்தில் படிப்பதற்கான உணர்வினையும் ஆர்வத்தினையும் பெற்றி ருப்பதில்லை. எனவே, அவர்கள் படிக்கத் தொடங்கும் தனியனைத் தாங்கள் ஈடுபடும் வேலை, பொழுதுபோக்கு, சமூக நடவடிக்கையின் பால் ஈர்த்து அவன் கவனத்தினை மாற்றுபவர்களாக இருப்பர்.

இதுபோன்ற சூழ்நிலையில், உடனுறையும் அறை நண்பர்களுக்கிடையில் ஒரு கட்டுப்பாடும், குறிப்பிட்ட சமயங்களில், குறிப்பிட்ட காரியங்களைச் செய்யவேண்டுமென்ற வரையறையும் வகுக்கப்பட்டு, செயல்படுத்தப்படுவது விரும்பத்தக்கதாகும்.

விடுதியில் தங்கிப் பயிலும் மாணவர்கள் பெற்றோர்களின் கண்காணிப்பிலிருந்து தனித்து இருப்பதால், அவர்கள் படிப்பதை விட ஏனைய சமூக; பொழுதுபோக்கு நடவடிக்கைகளில் அதிகமாக ஈடுபடத் தூண்டப்படலாம். அதிலும், குறிப்பாக விடுதி வாழ்க்கையின் முதலாண்டில் இங்ஙனம் இளையோர் படிப்பு அல்லாத வேறு நடவடிக்கைகளின் பால் அதிகமாக ஈர்க்கப்படலாம். எனினும், இளையோர் உயர்நிலைப்பள்ளியிலிருந்தே, குறிப்பிட்ட நேரங்களில் படிக்கும் பழக்கத்தினையும், அன்றாட பாடங்களை அன்றன்றே முடிக்கும் பழக்கத்தினையும் வளர்த்துக்கொண்டிருப்பார்களேயானால், விடுதி வாழ்க்கையினால் அவர்கள் வெகுவாகப் பாதிக்கப்படுவதற்கு இடமில்லை.

இவ்வாறு பள்ளியிலும் கல்லூரியிலும் படிப்பதற்கான இடம் கால வசதிகளைப் பெற்றிருக்கும் ஒரு சிலர், படிப்பில் தேர்ச்சி அடையாதிருந்ததைக் கண்ணுற்ற உளவியலார், அவர்களை அணுகி ஆராய்ந்ததில், அவர்கள் படிப்பிற்குப் பொருத்தமான பழக்க வழக்கங்களை ஏற்படுத்திக்கொள்ளவில்லையென்று கண்டறிந்தனர். கீழ்க்கண்ட காரணிகளில் இளையோரின் கவனத்தினைச் செலுத்தும்படி செய்வதன் மூலம், ஆசிரியர்களும், பெற்றோர்களும், இளையோரின் படிப்பில் சிறந்த பழக்கத்தினைத் தோற்றுவிக்க முடியும் என்று உளவியலார் யோசனைகள் கூறியுள்ளனர். அவையாவன :

1. மாணவன் தனது படிப்பின் பால் சரியான மனப்பாங்கினைப் பெற்றிருக்க வேண்டும்.

2. மாணவன் தான் படிக்கும் பாடத்தில் தன் முழுக் கவனத்தினையும் செலுத்த வேண்டும்.

3. அவன் குறிப்பிட்ட வீட்டுப் பாடங்கள், பயிற்சிகள் ஏன் தரப்பட்டுள்ளன என்பதனை அறியவேண்டும்.

4. பாடங்களை மனதிற்கொள்ளும் நோக்கில் படிக்க வேண்டும்.

5. புத்தகத்தில் சொல்லப்பட்டிருக்கும் பொருளை அறிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும்,

6. அவன் படிக்கும்போதே கேள்விகள் எழுப்புதல் சிறந்தது.

7. படித்தவற்றைத் தனக்குள்ளாகவே வரிசைப்படுத்தி, அவற்றைப் பற்றிய ஒரு முழு அமைப்பினைப் பெற முயற்சிக்க வேண்டும், அல்லது படிக்கும்போதே முக்கியமானவற்றைக் குறிப் பெடுத்துக்கொள்ள வேண்டும்.

8. திரும்பத்திரும்பப் படிப்பதும், படித்தவற்றை மனதில் மீட்டாய்வு (Review) செய்வதும் சிறந்தது.

9. படித்தவற்றுள் சில சுலபமாகவும் வேகமாகவும் மனதில் படிகின்றன என்பதனையும், மற்றவை மனதில் படியத் தாமதம் ஆகின்றன என்பதனையும் அறிந்திருக்க வேண்டும்.

10. தனக்குத் திறமையுள்ள பாடங்களில் நல்ல பயிற்சியினைப் பெற முயற்சிக்க வேண்டும்.

11. ஆசிரியர் முக்கியமானவை என்று வலியுறுத்தியுள்ளவை களை நன்கு கவனிக்க வேண்டும்.

மேற்கண்ட முறைகளால் இளையோரில் படிப்பதற்கான நல்ல பழக்கத்தினைத் தோற்றுவிக்க முடியும்.

**ஆசிரியர்—மாணவர் உறவு :**

பள்ளியிலும் கல்லூரியிலும் பயிலும் ஒவ்வொரு ஆண்பிள்ளை யும், பெண்பிள்ளையும் தங்கள் ஆசிரியர்களுடன் எல்லா வகையிலும் ஒத்துப்போகவே விரும்புகின்றனர். ஆனால், அவ்விருப்பம் அவர்கள் ஆசிரியர்களின் பால் கொண்டிருக்கும் மனப்பாங்கினைப் பொறுத்துள்ளது. இந்த மனப்பாங்குகளை இளையோர் தங்கள் இல்ல வாழ்க்கையிலிருந்தே பெறுவதாகக் காணப்படுகின்றது. ஆகவே, தம் பிள்ளைகள் ஆசிரியர்களுடன் ஒருங்கிணைந்து செல்ல வேண்டுமென விரும்பும் பெற்றோர், அதற்கான முன்னேற்பாடுகளை இல்லத்தில் ஏற்படுத்த வேண்டும். மேலும், தம் பிள்ளைகளிடத்தே ஆசிரியர்களின் பால் மதிப்பினையும் பற்றுறுதியினையும், நம்பிக்கை யினையும் இவர்கள் வளர்த்துக் கொள்ள வேண்டும். ஆசிரியர்களின் நடவடிக்கைகளைப் பற்றியோ, குறைபாடுகளைப் பற்றியோ தாழ்ந்த எண்ணத்தினை வளர்த்துக் கொள்ளக்கூடாது. மாறாக, கல்வியில் நல்ல தேர்ச்சினையும் வெற்றியினையும் பெறுவதற்குத் தம் பிள்ளைகள் ஆசிரியர்களிடம் எத்தகைய குறைபாடுகள் காணப்

படினும் அவற்றை மனதிற் கொள்ளாது, அவர்களுடன் ஒத்துப் போகவும் நல்லுறவினைத் தோற்றுவித்துக் கொள்ளவும் அவர்களை ஊக்குவிக்க வேண்டும்.

இளையோர் தங்கள் பள்ளிப் படிப்பில் பின் தங்கி விட நேர்ந்தால், அந்த பின் தங்கிய நிலை, அவர்களின் திறமைக் குறைவு, பள்ளிப் படிப்பில் ஆர்வமின்மை ஆகியவற்றின் காரணமாக அல்லாது, ஆசிரியர்கள் தங்கள் பிள்ளைகளின் பால் கொண்டிருக்கும் மனப்பாங்குகளின் விளைவே என்று பெற்றோர்கள் சில வேளைகளில் எண்ணுபவர்களாக இருக்கின்றனர். இவர்களின் இத்தகைய எண்ணம் ஆசிரியர்—மாணவரிடையே நல்லுறவு ஏற்படுவதற்கு ஏற்றதாயில்லை.

முற்காலத்தில் ஆசிரியர்கள் தங்கள் மாணவர்களில் ஒருவித பயத்தினைத் தோற்றுவிப்பதன் மூலமும், தங்கள் ஆதிக்கத்தினை அவர்கள் ஏற்றுக்கொள்ளச் செய்வதன் மூலமும், அவர்களைத் தங்களுக்குக் கீழ்ப்படிந்தவர்களாக நடக்கச் செய்தனர். ஆனால், தற்காலத்தில் இந்த நிலை முற்றிலும் மாறிவிட்டது. இப்போது ஆசிரியர், மாணவர்களின்மேல் ஆதிக்கம் செலுத்துவதனைத் தவிர்த்து, மாணவர்களுக்கு ஆலோசனை கூறி வழிகாட்டுபவராகச் செயல்படுகின்றார். ஆசிரியர் தம் மாணவரிடையே மரியாதையினையும், போற்றுதலினையும், புகழினையும் பெறவேண்டுமெனில், அவர் மாணவர்களுடன் ஒத்துழைப்பவராகவும், அவர்களின் கடினங்களையும், துன்பங்களையும இயன்ற அளவு பகிர்ந்து கொண்டு, அவர்களுக்குத் தீர்வுகாண உதவுபவராகவும் இருக்கவேண்டும். அவ்வாறின்றி, ஆதிக்கம் செலுத்துபவராகவும், மாணவர்களின்மேல் அக்கறை, ஆர்வம் இல்லாதவராகவும் இருப்பின், மாணவர்களிடை செல்வாக்கினையும் புகழினையும் அவர் பெற இயலாது.

ஆசிரியர்கள் தங்கள் வகுப்பில் ஒரு சிலருக்கு அதிகச் சலுகைகளைத் தருவதாக அடிக்கடி குற்றம் சாட்டப்படுகின்றனர். இவ்வகையில், கலிபோர்னியாவில் நடத்தப்பட்ட ஆய்வு ஒன்றில், பெரும்பான்மையான ஆசிரியர்கள் மாணவர்களிடை பாரபட்சமாக நடந்து கொள்பவர்களாக இருக்கின்றனர் என்பதனை மாணவர்கள் சுட்டிக்காட்டி, ஒரு சில மாணவர்களுக்கு மட்டுமே அவர்கள் அதிக சலுகைகளைத் தந்து, மற்ற மாணவர்களிடம் எரிந்து விழுந்து நடந்து கொள்வதனை வன்மையாகக் கண்டித்தனர். ஆசிரியர்கள் இவ்வாறு குற்றம் சாட்டப்படுவது தவறெனினும், அவர்கள் தம் மாணவர்களில் சிலரிடம் மட்டும் தனித்த கவனம் செலுத்துவதனைத் தவிர்க்க வேண்டும். ஆசிரியர்கள் தங்களுக்குக் கீழ் பயிலும் எல்லா மாணவர்களின் ஒத்துழைப்பினையும்,

மரியாதையினேயும், நல்லெண்ணத்தினேயும் பெறவேண்டுமாஞல், அவர்கள் எல்லோரையும் சமமாகவே நடத்த வேண்டும். ஆசிரியர்—மாணவர் தொடர்பு, நண்பர்களிடை தோன்றும் நட்பின் தன்மையினைப் பெற்றிருத்தல் நன்று. ஏனெனில் படிப்பு முடிந்த பிறகும், மாணவர்கள் ஆசிரியரின் பால் மதிப்பினேயும், நல்லெண்ணத்தினேயும் தொடர்ந்து கொண்டிருப்பார்களேயாஞல், அது அவர்களின் பாட விஷயத்தில் ஆசிரியர்கள் உதவியதஞல் மட்டுமேயன்றி, அவர்களின் சொந்த விஷயங்களில் தலேயிட்டு, அவர்களேத் திருத்தி, நல்வழிப்படுத்த ஆசிரியர்கள் முயன்றதஞலேயாகும். எனவே, ஆசிரியர்கள், மாணவர்களிடை நல்வகையில் நட்பினே வளர்த்துக்கொள்வதே மிகவும் விரும்பத்தக்கதாகும்.

ஆசிரியர்—மாணவர் தொடர்பு நட்பிற்கு இலக்கணமாக அமைய வேண்டுமேயொழிய, தரக் குறைவாகவோ, தகுதியற்றோ, சமத்துவம் தந்து பழகும் செயலாகவோ ஆகிவிடக்கூடாது. ஆசிரியரும் மாணவரும் பள்ளிக்கு வெளியே நடைபெறும் சமூக நடவடிக்கைகளிலும், பொழுதுபோக்குச் செயல்களிலும் ஒன்றுகூடிக் கலந்துகொள்வது சிறந்ததல்ல. ஆசிரியர், ஒரு மாணவரை எவ்வளவு விரும்பிஞலும், எந்த விஷயத்திலும் ஆசிரியர்—மாணவர் என்ற வரம்பினே மீறி, மாணவர் நடந்துகொள்வதனே அனுமதிக்கக் கூடாது. அவ்வாறில்லேயேல், அவர்களில் ஒருவர் மற்றவரின் நன் மதிப்பினேயும், மரியாதையினேயும் மிகவிரைவில் இழந்து விடுவர். மாணவ, மாணவியர் தங்கள் ஆசிரியரிடமிருந்து மிகுந்த மதிப்பெண்கள் சலுகைகளேப் பெறுவதற்கு, அவர் விரும்பும் வகையில் நடந்துகொள்வது விரும்பத்தகாத பிரச்சினேகளேத் தோற்றுவிக்கும்.

**பாடப் புற நடவடிக்கைகள் (Extra-Curicular Activities) :**

ஓர் இளேயோன் தன் பள்ளியிலும், கல்லூரியிலும் தனக்கு அறிமுகமான வகுப்புத் தோழர்களேயோ நண்பர்களேயோ பெற்றிருக்காவிடில், கல்வி நிலேய வாழ்க்கையில் அவன் முன்னேற்றத்தினேயும், மன நிறைவினேயும் அடைய முடியாது; அந்நிலேயங்களிலிருந்து விலகவும் நேரிடலாம். ஆதலால் மாணவர்கள் பிறருடன் கலந்து பழகவும், நட்பினேயும் தொடர்பினேயும் ஏற்படுத்திக் கொள்ளவும் வேண்டிய வாய்ப்பினே அளிக்கும் வகையில், கல்வி நிலேயங்கள் பலவிதமான நிகழ்ச்சிகளேயும், சமூக நடவடிக்கைகளேயும் தோற்றுவிக்கின்றன.

இளேயோர் தங்கள் பள்ளி வாழ்க்கையில் அடைகின்ற எண்ணற்ற அனுபவங்களோடு, தங்களேப் போன்ற பிறரையும் சந்தித்து

அவர்களுடன் நட்பினையும் ஏனைய தொடர்புகளையும் வளர்த்துக் கொள்வதன் மூலம், தங்கள் சமூகத் தொடர்பினை விரிவுபடுத்திக் கொள்கின்றனர். இளையோர் இவ்வாறு பள்ளியில் ஏற்படுத்திக் கொள்ளும் தொடர்புகள், அவர்கள் முதிர்ச்சிப் பருவத்தில் பெறும் ஆளுமைத் தன்மைகளையும், குணச் சிறப்புகளையும் மேம்படச் செய்கின்றன. பள்ளியில் தோன்றுகின்ற நட்புகள் பெரும்பாலும் பொதுவான ஆர்வங்களினடிப்படையில் தோன்றுகின்றன. சான்றாக, ஒத்த தன்மையிலும், ஒத்த ஆர்வங்கள், அனுபவங்களி னடிப்படையிலும் தோன்றும் நட்புகள் தனியனின் பிற்கால வாழ்க்கையில் பெரிதும் பயன்படுவனவாய் அமைகின்றன.

எண்ணற்ற இளையோர் எவ்வாறு நண்பர்களைப் பெறுவது என்று கவலைப்படுகின்றனர். பெற்றோர்களும், ஆசிரியர்களும் இத்தகைய இளையோர் பிறருடன் நட்பினைக்கொண்டு, அதனை வளர்த்துக் கொள்வதற்குத் துணை புரியலாம். வகுப்புத் தோழர் களைத் தங்கள் இல்லத்திற்கு அழைத்து வரவும், அவர்களின் இல் லங்களுக்கு இவர்கள் சென்று வரவும் இவர்களை ஊக்குவிக்கலாம். இளையோர், தாங்கள் விளையாடும் தோழர்களுடன் ஒத்துழைப்பு, மனப்பாங்கு, நட்புரிமை, பொறுமைத் தன்மை ஆகியவற்றுடன் இணைந்து, தங்கள் நடத்தையினைச் சரிசெய்துகொண்டு, நட்பினை வளர்த்துக்கொண்டால், பின்னர் பள்ளியிலும் கல்லூரியிலும் இவர்கள் பிறருடன் நட்புக்கொண்டு, அவைகளை வளர்த்துக் கொள்வதில் சிரமத்தைக் காணமாட்டார்.

வீட்டில் பெரும்பாலும் செல்லமாக வளரும் பிள்ளைகள், சுய நலம் சார்ந்தவர்களாகவும், பிடிவாத குணமுள்ளவர்களாகவும், மற்றவர்களின்மேல் ஆதிக்கம் செலுத்துபவர்களாகவும், தங்கள் பேச்சே எடுபட வேண்டுமென்ற எண்ணமுடையவர்களாகவும் இருப்பர். இத்தகையோர் பள்ளியிலோ, கல்லூரியிலோ நண்பர் களைத் தேர்ந்தெடுத்துப் பழகவேண்டுமானல், இத்தகைய பண்பு களைத் தவிர்த்து நடப்பது மிகவும் அவசியம். பெரும்பாலான இளையோர், கல்லூரியில் நண்பர்களைப் பெறுவதில் சிரமம் காண் பது இத்தகைய காரணங்களினுல் தான்.

பெற்றோர்கள் தங்கள் சமூகத் தகுதியினைப் பற்றியும், பொரு ளாதாரத் தரத்தினைப் பற்றியும், குடும்பப் பெருமை, கௌரவம் பற்றியும் அதிகமாகத் தம் பிள்ளைகளுக்கு எடுத்துக் கூறி, அவர் களின் உள்ளத்தில் தாங்கள் மற்றப் பிள்ளைகளை விட மாறுபட்டவர் கள், உயர்ந்தவர்கள் என்ற எண்ணத்தினைத் தோற்றுவிப்பார்களே யானல், அப் பிள்ளைகள் வெளியில் பழகும்போது, அவர்கள் சந்திக்க

நேரிடும் அனைவரையும் தாழ்வாகக் கருதுவதால், அவர்களின் நட்பினைப் பெறமுடியாது. அவர்கள் உள்ளம் புண்படவும் நேரிடுகின்றது. இவர்களின் இத்தகைய குணங்களும், தன்மைகளும் மாணவர்களிடையே மிகவிரைவில் பரவி, எல்லோரும் இவர்களை அவமதிக்கவும், புறக்கணிக்கவும் நேரிடுகின்றது. எனவே, பெற்றோர்கள் தம் பிள்ளைகளிடையே அவர்கள் பிறரை விட உயர்ந்தவர்கள் என்ற எண்ணத்தினைத் தோற்றுவித்தல் சிறந்ததல்ல.

இளையோரின் நட்பு, அவர்கள் கொண்டுள்ள தகுதிகள், பொருள்கள், ஊர்திகள் ஆகிய உடைமைகளின் அடிப்படையில் தோன்றுகின்றன. கல்லூரி மாணவர்களில், இங்ஙனம் எண்ணற்ற பொருள் உடைமைகளையும், செல்வத்தினையும், விலையுயர்ந்த ஆடை அணிகலன்களையும் பெற்றவர்களே செல்வாக்கினையும் புகழினையும் பெறுகின்றனர். இத்தகைய செல்வாக்குள்ள பிள்ளைகள் பிறருடன் ஒருங்கிணைந்து, அவர்களைச் சமமாக மதித்து நடக்கத் தவறி விடுவார்களேயானால், இதற்கு நேர் எதிரான விளைவே உண்டாகும்.

பற்றுறுதியும் பள்ளி வாழ்க்கையில் தோன்றி வளர்கின்றது. துவக்கத்தில் இளையோர் தங்களின், நண்பர்களின் பாலும், வகுப்புத் தோழர்களின் பாலும், ஆசிரியர்களின் பாலும் பற்றுறுதியினை வளர்த்துக்கொள்கின்றனர். பின்னர், இந்தப் பற்றுறுதி பள்ளியளவிற்கு விரிவடைந்து, பள்ளி உணர்வாக (School Spirit) மாறி விடுகின்றது. இது தொடர்ந்து விரிவுபெற்று ஒரு சமுதாயத்தின் மீதான பற்றுறுதியாகவும், இறுதியில் நாட்டின் பாலான பற்றுறுதியாகவும் வளர்ச்சியடைகின்றது. இத்தகைய பற்றுறுதிகளை வளர்ப்பதில் பாடமற்ற புற நடவடிக்கைகள் பெரும் பங்கினை வகிக்கின்றன.

பாடமற்ற புற நடவடிக்கைகள் எண்ணற்ற வழிகளில் பகுக்கப்பட்டுள்ளன. ஹாஸல் என்பார் (Hausle) அவைகளை நான்கு வகையில் பகுத்துள்ளார். அவை 1. விளையாட்டு நடவடிக்கைகள், 2. மன்ற ஈடுபாடுகள், 3. பாடத்தோடு ஓரளவு தொடர்புடைய நடவடிக்கைகள், (Semi-Curicular Activities) 4. குடிமைப் பயிற்சி நடவடிச்கைகள், என்பனவாகும். விளையாட்டு நடவடிக்கைகள், பள்ளிகளிடையே நடைபெறும் விளையாட்டுப் போட்டிகளில் ஈடுபடுவது, பள்ளிக்குள் வகுப்புகளிடை நடைபெறும் போட்டிகளில் ஈடுபடுவது ஆகியவையாகும். மன்றங்கள் சிறந்த பேச்சு வன்மையினைப் பெறவும், பொது அறிவினை நன்முறையில் வளர்த்துக் கொள்ளவும், சிந்தனையினை மேம்படுத்திக் கொள்ளவும்

பயனுள்ளதாய் இருக்கின்றன. பாடத்தோடு ஓரளவு தொடர்புடைய நடவடிக்கைகள், பாடம் சார்ந்த மன்றங்களின் வாயிலாக எண்ணற்ற பாட ஆர்வங்களை வளர்க்கும் வகையில் அவர்களுக்குப் பயிற்சியினைத் தருகின்றன. குடிமைப் பயிற்சி நடவடிக்கைகள், சமூகப் பணி மன்றங்கள், தேசிய மாணவர் படை (N.C.C.), ஆகியவற்றின் மூலம் இளையோன் பிற்காலத்தில் நல்ல குடிமகனாகத் திகழுவதற்கு வேண்டிய பயிற்சிகளைத் தருகின்றன,

ஆசிரியர்களைக் கண்டு மாணவர்கள் அளவிற்கதிகமாகப் பயப்படுவதன் காரணம், அம்மாணவர்களை மேற்பார்வையிட்டு வளர்த்துவரும் பெற்றோர், உறவினர்களின் பயிற்சியேயாகும். பெற்றோர்களும், உறவினர்களும் தம் பிள்ளைகளில் காணும் குற்றங்களைக் கண்டிக்க முற்படும்போது, ஆசிரியரை நினைவூட்டி அவரைக் கொடூரமானவராக உருவகித்து, தவறிழைத்தால் அதை ஆசிரியரிடம் கூறி, அவர்களைத் தண்டனைக்குள்ளாக்கி விடுவதாகப் பயமுறுத்துகின்றனர். இவ்வாறாக ஆசிரியரைக் கண்டாலே பயப்படும் மாணவர்களை, ஆசிரியர் எவ்வளவு பரிவுணர்ச்சியுடன் நடத்தினாலும், அவர்களின் பயத்தினைப் போக்க இயலாது. மேலும், அவர்கள் ஆசிரியர்க்கு மட்டுமன்றி, அதிகாரத்தில் இருக்கும் எவரைக் கண்டாலும் பயப்படச் செய்கின்றனர்.

பொதுவாக, மாணவன் ஆசிரியரிடம் அன்புணர்ச்சியினையும், பாதுகாப்பினையும் பெற விரும்புகின்றான். இதன் பொருட்டு அவன் சிரமப்பட்டுப் படிக்க முயற்சிக்கின்றான். அவன் தேர்வில் கேள்விகளுக்குச் சரிவரப் பதிலளிக்க இயலாதபோது, மதிப்பெண்களைக் குறைவாகப் பெறுவோமே என்பதற்காக மட்டும் பயப்படுவதில்லை; மாறாக ஆசிரியர் தன் பால் கொண்டுள்ள அன்பும், பரிவும் இதனால் மாறிவிடுமோ என்பதற்காகவும் பயப்படுகின்றான்.

ஆசிரியரிடம் நல்ல தொடர்பினை ஏற்படுத்திக்கொண்டு எவ்வாறு நன்கு சிந்திக்கவும், செயல்படவும் இயலும் என்பதனை மாணவர்கள் ஆசிரியர்களின் வழிக் கற்றுக்கொள்ள பெற்றோர்கள் அவர்களை ஊக்குவிக்க வேண்டும். ஆசிரியர்-மாணவர்களிடையே சரியான மனப்பாங்கு நிலவி, ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொள்வார்களேயானால், அவர்களுக்குத் தேவையற்ற பயம் தோன்ற வழியில்லை. இவ்வாறின்றி, இருவரும் ஒருவரையொருவர் புரிந்துகொள்ளாத சூழ்நிலையில்தான், ஆசிரியரின் கேள்விக்கு மாணவன் சரியான பதிலை அறிந்திருந்தும், அதனை எடுத்துச் சொல்லத் தைரியமின்றி வகுப்பில் தவிக்கின்றான். இந்நிலையில் இத்தகைய மாணவர்களின் பயத்தினைப் போக்க, அவர்கள் அளிக்கும் விடை சரியானதாகவோ தவறானதாகவோ இருப்பினும் கூட

அவர்களின் பதிலளிக்க முற்பட்ட முயற்சியினைப் பாராட்டுபவ ராகவும், தவறு செய்த இடத்தில் மிக நுட்பமாகத் திருத்துபவ ராகவும் ஆசிரியர் நடந்து கொள்ளவேண்டும். இத்தகைய மாண வர்களை மிகச் சிறிய சுலபமான கேள்விகளுக்கு விடையளிக்கும் படிச் செய்து, அடிக்கடி எழுந்து விடையளிக்கின்ற தன்னம்பிக்கை உணர்ச்சியினை அவர்களில் தோற்றுவிக்க வேண்டும். இதனால், அவர்களின், பயவுணர்ச்சி மறைந்து, பதிலளிக்க வேண்டும் என்ற விருப்பத்தில் பேசத் தொடங்கும்போது, அவர்களையறியாது சரியான விடைகளும் எண்ணங்களும் கருத்துகளும் அவர்களுக்குக் கிட்டும்.

ஒரு சில மாணவர்கள் வகுப்பறையில் திறமை மிக்கவர்களாகக் காணப்படினும், தேர்வில் சிறப்பாக விடையளிக்க முடியாதவர் களாக இருக்கலாம். இதற்குக் காரணம், அவர்கள் தேர்வின் மீது கொண்டுள்ள பயமும், வீட்டில் படிப்பதற்கேற்ற சூழ்நிலை இல்லா திருப்பதும், நன்கு படிக்கும் முறையினைக் கற்றுக் கொள்ளாததுமே யாகும். இந்நேரங்களில் ஆசிரியர் அவர்களின் பயத்தினைப் போக்கும் முயற்சியில் வகுப்பறையில் விவாதிக்கப்பட்ட கேள்வி களையே தேர்விலும் கேட்கலாம். மேலும், இத்தகைய மாணவர் களுக்கு ஆசிரியர்கள் அடுத்தடுத்துத் தனிப்பட்ட முறையில் தேர்வுகளை நடத்தியும், தினமும் ஒரு சில பாடங்களுக்கு விடை யெழுதி வரும்படிச் செய்தும், அன்றாட படிப்பு சார்ந்த விஷயங் களை மேற் பார்வையிட்டும், அவர்களின் பயத்தினைப் போக்கலாம்.

பள்ளியில் இளையோர், ஆர்வங்களை வளர்த்துக் கொள்வது அவர்கள் பள்ளிப் பணிகளில் வெற்றியினைக் காணும்போது தான். பள்ளிப் பணிகளில் தொடர்ந்து அவர்கள் சிறப்புடன் திகழும்போது அவர்களில் அத்தகைய நடவடிக்கைகளின் பால் ஆர்வங்கள் வளர்கின்றன.

பெற்றோர்கள், தம் பிள்ளைகள் சிறந்த தேர்ச்சியினைப் பெற வேண்டுமென எதிர்பார்த்து, அவர்களது திறமைகளின் எல்லைகளை நன்கு உணராது, அதிகமான மதிப்பெண்களைப் பெறும்படி வற் புறுத்துவர். இங்ஙனம், தம் திறமைகளுக்கு அப்பால் செயல்படும் படி பிள்ளைகள் கட்டாயப்படுத்தப்படும்போது தான் படிப்பின் பால் வெறுப்பினைக் கொள்ளத் துவங்குகின்றனர். எனவே, இளையோர் தங்கள் திறமைக்கு அப்பால் மதிப்பெண்களைப் பெற வேண்டுமென்று பெற்றோர்கள் வற்புறுத்தல் கூடாது. இவ்வாறே, பள்ளியில் ஆசிரியரும், மாணவர்களுக்கு அளவிற்கதிகமான வீட்டுப் பாடங்களைத் தருவது, அவர்கள் படிப்பில் கொண்டுள்ள ஆர்வத் தினைக் குறைத்துவிடலாம்.

**படிப்பில் தேர்ச்சியும், திறமையும் :**

படிப்பின் தேர்ச்சிக்கும் திறமைக்கும் இடையே உள்ள தொடர்பாடு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. மாணவர்கள் தாங்கள் பெறும் பயிற்சியின் காரணத்தினுலும், இயற்கைத் திறமைகளின் வாயிலாகவும், உயர்நிலைப்பள்ளியிலும், கல்லூரி யிலும் படிப்பில் பெரும்பாலும் தேர்ச்சியடைகின்றனர். எனவே தான் முற்காலத்தில் இத்தகைய பயிற்சிகளேயும், பரம்பரை பரம்பரையாக வரும் பண்புச் சிறப்புகளேயும் கொண்டவர்கள் மட்டும் கல்வி நிறுவனங்களில் சேர்க்கப்பட்டனர். ஆனல், தற்போது மக்களாட்சி மலர்ந்து இருப்பதால் அனைவருக்கும், பொதுவான சமமான க்ல்வி வாய்ப்பினைத் தர வேண்டியது அவசியமாகும்.

இந்நிலையில், வேறுபட்ட நுண்ணறிவுத் திறனுள்ள மாணவர் கள் படிப்பில் நல்ல தேர்ச்சியினைப் பெற, அவர்களுக்கேற்ற எளி தான, பல்வேறு வகையான பாட முறைகள் தோற்றுவிக்கப்பட வேண்டும். பள்ளியிலும் கல்லூரியிலும் புதிய பாட முறைகளேப் புகுத்துவது, இளேயோரின் பல்வேறுபட்ட தேவைகளே நிறை வேற்றுவதன் பொருட்டேயாகும். 25 ஆண்டுகளுக்கு முன் கற்றுக் கொடுக்கப்படாத பாடங்கள், இப்போது பள்ளியிலும் கல்லூரி யிலும் அடிப்படைப் பாடங்களாகக் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. இங்ஙனம் புதிய பாடங்கள் தோற்றுவிக்கப்படுவதால், ஆர்வத் திலும் திறமையிலும் வேறுபட்ட இளேயோர், தங்கள் நுண்ணறி வுத் திறத்திற்கேற்ப எளிதில் வெற்றியடையும் பாடங்களே எடுத் துப் பயின்று முன்னேற வாய்ப்புண்டு.

**பள்ளி சார்ந்த பிரச்சினைகள் :**

பள்ளிப் பிரச்சினைகள்; படிப்பதில் பலன் மிக்க முறை, ஆசிரி யர்களுடன் மாணவர்கள் நன் முறையில் பழகும் விதம், சிறந்த கல்வித் தேர்ச்சியினைப் பெறும் வழி போன்ற விஷயங்களே மட்டும் சார்ந்திராது, பள்ளியில் தன்னுடைய சக மாணவர்களுடன், தான் விரும்பும் வகையில் உறவுகளேயும் தொடர்புகளேயும் ஏற்படுத்திக் கொள்ள இயலாமை, தன்னுடன் பயின்று வரும் எதிர் பாலின ரிடம் விரும்பத்தக்க முறையில் பழகி, ஏற்ற உறவுகளேத் தோற்றுவித்துக் கொள்ள இயலாமை ஆகியவற்றினேயும் சார்ந் திருக்கலாம். இந்நிலைகளில், பிரச்சினைகளின் தன்மைகளே நன்கு அறிந்து கொண்டு, அவைகளுக்கேற்ற முறையில் ஓர் இளேயோன் தன்னேயும் தன் நடவடிக்கைகளேயும் சரி செய்துகொண்டு, அதற் கான நடத்தைப் பொருத்தப்பாடுகளே ஏற்படுத்திக் கொள்வது மிகவும் அவசியமாகும்.

இளையோர் பருவத்தில் ஏற்படும் பள்ளியின் பாற்பட்ட ஏனைய பிரச்சினைகள், பள்ளியில் சாதகமற்ற சூழ்நிலைகள் தொந்தரவுகளை விளைவிப்பதனாலும், பிற்கால வாழ்க்கைக்கு, அப் பள்ளிப் படிப்பு பயனற்றதாகக் காணப்படுவதாலும் எழுகின்றன.

பள்ளிச் சூழ்நிலை எல்லா இடங்களிலும் ஒரே தன்மையின தாக அமைவதில்லை. எல்லாப் பள்ளியிலும், நன்கு தேர்ச்சி பெற்ற, மனமுதிர்ச்சியுள்ள ஆசிரியர்கள் பணியாற்றுவதில்லை. ஆசிரியர்களும் ஒரு வகையில் மாணவர்களே என்ற முறையில் மாணவர்களை வழி நடத்துகின்ற செயல்களிலும், அவர்களின் பிரச்சினைகளை அறிந்து அவர்களுக்கு உதவுகின்ற வகைகளிலும், இன்றும் அனுபவங்களைப் பெற வேண்டியவர்களாக இருக்கின்றனர். இந்நிலையில் ஒரு பள்ளியின் ஆசிரியர்களிடையே சுமூகமான உறவும், மாணவர்கள்—ஆசிரியர்களுக்கிடையே சாதகமான உறவும் தோன்றுவதில் சிக்கல்கள் ஏற்படலாம். இத்தகைய பள்ளிகளின் பாற்பட்ட இளையோர், இதனால் புதிய சிக்கல்களையும், பிரச்சினைகளையும் காண இடமுண்டு. ஆசிரியர்கள் தங்களுக்குள் ஒற்றுமையின்றி மாணவர்களிடையே தங்கள் செல்வாக்கினைப் பயன்படுத்தி, தங்களுக்கு வேண்டியவர்கள், வேண்டாதார் என்ற தன்மையில் பிரிவினைகளை ஏற்படுத்துவதும், அதன் விளைவில் நேர்மையற்ற முறையில் பாரபட்சத்துடன் மாணவர்களை நடத்துவதும், இளையோரிடம் பிரச்சினைகளைத் தோற்றுவிக்கின்றன. பள்ளி வாழ்க்கைக்குத் தேவையான திறமைகளைப் பெற்றிருப்பினும், புறச் சூழ்நிலைகளால் சிலர் பள்ளி வாழ்க்கையில் சிரமம் அடைகின்றனர். பள்ளிச் செலவிற்குப் போதிய பண வசதியற்ற குடும்பங்களின் மாணவர்கள், வகுப்பில் பிற மாணவர்கள் வாங்கும் புத்தகங்களைத் தாங்களும் வாங்கிப் பயின்று, அவர்களுடன் போட்டியிட்டு முன்னேற முடியாதவர்களாய் உள்ளனர். அங்ஙனமே பள்ளியில் தரப்படும் வீட்டுப் பாடங்களை, வீட்டில் படித்து அறிவதற்குத் தேவையான சூழ்நிலையினைப் பெற்றிராதவர்களும், தனிப்பட்ட முறையில் ஆசிரியர்களை அமர்த்திக் கற்பதற்குப் போதுமான பொருளாதார வசதியினைப் பெற்றிராதவர்களும், வகுப்பில் பின்தங்கி விடுகின்றனர். இவையன்றியும், குடும்பத்தில் அடிக்கடி ஏற்படும் சண்டை சச்சரவுகள், குழப்பங்கள் போன்றவை அவர்களின் அமைதியான, மனநிறைவான பள்ளிப் படிப்பினைக் குலைத்து விடுவனவாக அமைகின்றன. இங்ஙனம், பள்ளிச் சார்பற்ற புறச் சூழ்நிலைகளால் பாதிக்கப்படும் இளையோர், படிப்பில் பின்தங்கி விடுவதால் அவர்கள் ஆசிரியர்களின் வெறுப்பிற்கும், மற்ற மாணவர்களின் கேலிக்கும், புறக்

கணிப்பிற்கும், இறுதியில் தங்கள் பெற்றோரின் சினத்திற்கும் ஆளாக நேரிடுகின்றது.

மேலும், ஒரு பள்ளியிலோ கல்லூரியிலோ பயிலும் இளையோன், அவனது விருப்பத்திற்கும், திறமைக்கும் ஏற்ற பாடத்தினைப் பயில இயலாதபோது, அந்தப் பாடத்தின் பால் விருப்பமற்றவனாகவும், தன் அறிவினை வளர்த்துக் கொள்வதில் ஆர்வமும், அக்கறையும் அற்றவனாகவும் காணப்படுகின்றான். ஒரு சில நேரங்களில் அவன் படிக்க நேர்ந்த பாடம் அதிகமான வேலை வாய்ப்பு களற்றது; எதிர்காலத்தில் அவனுக்குப் பயன் தராதது என்ற நினைவும், அவன் அப்பாடத்தில் சிறந்த தேர்ச்சியினைப் பெறுவதில் தடை ஏற்படுத்தலாம். இவ்வாறு, இளையோரின் விருப்பத்திற்குப் பொருந்தாத பாடத்திட்ட அமைப்பில், அவர்கள் பிரச்சினைகளைக் காண்பவர்களாக இருக்கின்றனர்.

மேலும், பாடங்களை எப்படிப் படிப்பது என்ற விஷயத்திலும், பள்ளியில் ஏற்படும் தோல்விகளை ஏற்று அவற்றுடன் பொருந்தி நடக்கின்ற விஷயங்களிலும் இளையோர் பிரச்சினைகளை அடையப் பெறுகின்றனர். பள்ளியில் மாணவர்களுக்கு ஏற்படும் தோல்வி அவர்களின் தனிப்பட்ட விஷயங்களிலும், சமூக உறவிலும் பெரும் விளைவுகளை ஏற்படுத்தும். தேர்வுபெறாத மாணவர்கள் தங்கள் வகுப்புத் தோழர்களின் நன் மதிப்பினையும், நட்பினையும் விரைவில் இழந்து விட நேரிடலாம். அவர்களுடன், அவர்களை ஒத்த ஓரிரு நபர்களே தொடர்ந்து நண்பர்களாக இருப்பர். அவர்களுடன் பயின்று, மேல் வகுப்புகளுக்குத் தேர்வு பெற்றுச் செல்லும் மாணவர்கள், இவர்களின் பால் கொண்டிருந்த நட்பினையும், நன் மதிப்பினையும் மாற்றிக் கொள்வதோடு, அவர்களை இகழ்ந்தும், அவமதித்தும் நடக்கத் தலைப்படுவர். இவ்வாறு தன் வகுப்பு மாணவர்களாலும், மற்ற வகுப்பு மாணவர்களாலும் ஒதுக்கி வைக்கப்பட்டுக் கண்டனத்துக்கும், அவமரியாதைக்கும் இலக்காகும் தோல்வியுற்ற மாணவர்கள், ஆசிரியர்களின் கண்டனத்துக்கும் ஆளாவர். ஆசிரியர்கள் தேர்வு பெறாத மாணவர்கள் மீது எரிந்து விழும் நடத்தையினைக் காண்பிக்கலாம். அவர்கள் செய்கின்ற வேலைகளை ஆசிரியர்கள் பெரும்பாலும் அங்கீகரிப்பதில்லை. இத்தகைய பல்வேறு செயல்கள், தேர்வு பெறாத இளையோர்களின் நடத்தையில் எண்ணற்ற மாற்றங்களையும், மாறுதல்களையும் நிகழ்த்துகின்றன. இதன் விளைவாக, இளையோரின் பள்ளிப் பொருத்தப்பாடு பெரிதும் பாதிக்கப்படுகின்றது.

இளையோரின் கல்வித் திறமைகளையும், அவர்களின் சாதனைகளையும் மேம்படச் செய்ய தனிப்பட்ட ஒவ்வொரு மாணவன் பாலும்

அக்கறை செலுத்த வேண்டுமென கல்வித்துறையினர் வலியுறுத்தி வருகின்றனர். சிறந்த கல்விப் பயிற்சியினையளிக்க, ஆசிரியர்கள் மாணவர்கள் ஒன்றிணைந்து பழகி, அவர்களிடம் உள்ள தனிப்பட்ட குறைகளை நிவர்த்திசெய்ய முயற்சிக்க வேண்டும்: ஸெரீன் என்பார் (Serene) கல்வியில் பின்தங்கி இருப்பதற்கான காரணங்களை அறிய, உயர்நிலைப்பள்ளி மாணவர்களைப் பேட்டி கண்டு, அவர்களின் பள்ளிக் குறிப்பேடுகளையும் ஆராய்ந்தார். பெரும் பாலான மாணவர்களின் பின்தங்கிய நிலை சரிவரப் படிக்காததனால் தான் ஏற்பட்டிருந்தது. இதையடுத்து, அவர்களின் முறையற்ற படிப்பு, விரும்பாத பாடங்களைப் பயிலவேண்டிய நிலை, மிகுந்த கவனத் தடைகள் போன்றவைகளும் பின்தங்கிய நிலைக்குக் காரணமாய் இருந்தன.

பிறரைப்போல் பள்ளியில் தாங்களும் முதன்மையானவர்களாக வர முடியவில்லையே என்பது பெரும் பாலான இளையோரின் பிரச்சினையாகக் காணப்படுகின்றது. ஒரு சிலர் இங்ஙனம் போதிய அறிவுத் திறமையினையும், குடும்பத்தில் அவர்களைப் பேணிக் காக்கின்ற பெற்றோர், உடன் பிறந்தோரின் உதவியினையும் பெற்று, கல்வியில் சிறக்கும் போது, அத்தகைய வசதிகள், வாய்ப்புகளற்ற மாணவர்களும் அவ்வாறே பள்ளிப் படிப்பில் தேர்ந்து முதன்மையானவர்களாக வர வேண்டுமென்று, விரும்புகின்றனர். இவர்களின் முயற்சி வெற்றி தராதபோது, மீண்டும் மீண்டும் இவர்கள் தங்கள் திறமைக்கு அப்பாற்பட்ட செயல்களில் வெற்றியினை எதிர்பார்த்து தொடர்ந்து தோல்வியடைந்து, மனம்குன்றி, தன்னம்பிக்கையினை இழந்து விடுகின்றனர். இந்நிலையில், ஒருசிலர் படிப்புத் துறையில் தங்களால் சிறப்படைய முடியாது என்றெண்ணி, படிப்பின் மீது வெறுப்புற்று, பள்ளிப் படிப்பினை நிறுத்திவிட்டு, தொழில்களின் பாற்படும் பயிற்சிகளை ஏற்கச் சென்று விடுகின்றனர். ஆனால், அங்கும் சில வேளைகளில் மன நிறைவினைப் பெற முடியாது தவிக்கின்றனர்.

பள்ளியில் படிப்பு நடவடிக்கைகளின் பால் அல்லாது பாடப்புற நிகழ்ச்சிகளான விளையாட்டுப் போட்டிகள், இலக்கிய மன்றப் போட்டிகள் போன்றவற்றிலும் இங்ஙனமே பல இளையோர் பிரச்சினைகளை அடைகின்றனர்.

நார்டன் என்பார் (Norton) தன் ஆய்வில் மாணவர்களிடையே காணப்பட்ட பிரச்சினைகளைக் கீழ்க்கண்ட மூன்று பகுப்புகளாகப் பிரித்து ஆராய்ந்தார். அவை 1. பள்ளி சார்ந்த பிரச்சினைகள், 2. பள்ளிசார்பற்ற பிரச்சினைகள், 3. பள்ளிக்குப் பின் எழும் பிரச்

சினைகள் என்பனவாகும். பள்ளிசார்ந்த பிரச்சினைகள், பள்ளிச் சூழ்நிலை, விருப்பமுள்ள பாடம், குறைந்த மதிப்பெண்களைப் பெறுதல், கற்றலில் ஆர்வமின்மை, பாடப் புற நடவடிக்கைகள் போன்ற துறைகளின்பாற்பட்டவையாகும். பள்ளிச் சார்பற்ற பிரச்சினைகள், மாணவர்களின் பள்ளிக்கு அப்பாற்பட்ட வாழ்க்கைத் துறைகளான இல்லம், குடும்பம், நண்பர்கள், பொருளாதார நிலை, உடல் ஆரோக்கியம் ஆகியவற்றின் பாற் பட்டவை ஆகும். பள்ளிக்குப் பின் எழும் பிரச்சினைகள், மாணவர்களின் தொழில் விருப்பங்கள், வேலைவாய்ப்புகள், உயர்நிலைப் பள்ளிக்கு மேற்பட்ட கல்வி நிறுவனங்கள் போன்றவற்றின் பாற் பட்டவையாகும். இவ்வாய்வில் பள்ளிசார்ந்த பிரச்சினைகள் 35·8 சதவீதமும், பள்ளிச் சார்பற்ற பிரச்சினைகள் 38·9 சதவீதமும், பள்ளிக்குப் பின் எழும் பிரச்சினைகள் 25·3 சதவீதமும் பங்குகொண்டு இருந்தன. இதிலிருந்து, பள்ளிச் சார்பற்ற பிரச்சினைகளே மாணவர்களின் உள்ளங்களில் மிகுதியாகக் குடிகொண்டு, அவர்கள் பள்ளி வாழ்க்கையினை வெகுவாகப் பாதிக்கின்றன என்பது தெளிவாகின்றது. எனவே வீட்டிலும், குடும்பத்திலும் மாணவர்களுக்குள்ள சிரமங்களையும், இடையூறுகளையும் ஆசிரியர்கள் நன்கு உணர்ந்திருந்தால், மாணவர்கள் பள்ளியில் காணும் சிரமங்களையும், பிரச்சினைகளையும் சரிவர உணர்ந்து, அதற்கேற்ப அவர்களுக்கு இயன்றவரையில் உதவ முடியும்.

மான்டேக் என்பாரின் (Montague) ஆய்வு, இவ்விஷயத்தில் தாழ்ந்த சமூகத் தரத்தின் பாற் பட்ட இல்லங்களிலிருந்து வரும் பிள்ளைகள், பள்ளி நிகழ்ச்சிகளில் அளவிற்கு அதிகமான மன நிறைவின்மையைக் கொண்டிருக்கின்றனர் என்றும், இதனால் தான் தாழ்ந்த குடும்பத்தில் இருந்து வரும் பிள்ளைகளில் பெரும் சதவீதத்தினர் மிக விரைவில் பள்ளியினை விட்டு நின்று விடுகின்றனர் என்றும் எடுத்துக்காட்டியுள்ளது. இந்த முடிவு பள்ளியில் நல்ல சூழ்நிலை நிலவ வேண்டியதன் அவசியத்தினை வலியுறுத்துகிறது.

**மாணவர் செயற் துடிப்பு (Student Activism) :**

வரலாற்றுப் போக்குகள் இளையோரின் வாழ்க்கையில் ஊடுறுப்பதன் விளைவாக அவர்கள் வாழ்க்கையில் ஏற்படும் குறுக்கீட்டுச் சந்திப்பே மாணவர் செயற்துடிப்பாகவும், எதிர்ப்பாகவும் வெளிப்படுகின்றது என எரிக்ஸன் என்பார் (Erikson) கருதுகின்றார். வளர்ச்சியின் காரணமாக தனியனின் உடலியல், சமூக, மன வெழுச்சி நிலைகளில் தோன்றும் மாற்றங்கள், இளையோர் பருவத்தில் துரிதப்படுத்தப்படுகின்றன. எனவே, இளையோரிடம் நிகழும் இம் மாற்றங்கள் சமூகத்தில் ஏற்படும் துரித மாற்றங்களுடன்

ஒன்றுபட்டு நிகழுங்கால், இவ்விரு மாற்றங்களும் ஒன்றையொன்று மிளிரச் செய்கின்றன.

இக்காலத்து, இளைஞர் இயக்கத்தின் தன்மைகள் சிலவற்றை ஆராய்ந்தால், இத்தன்மைகள் இளையோர் பருவத்தின் பொது வான தன்மைகளோடு மிகவும் ஒத்திருப்பதனை நாம் அறியக் கூடும்.

**இளையோர் பருவத்திற்கும், மாணவர் செயற் துடிப்பிற்கும் இடையே யுள்ள ஒத்த பண்புகள் :**

இளையோர் பருவத்திற்கும் மாணவர் செயற் துடிப்பிற்கும் இடையேயுள்ள ஒத்த தன்மைகள், தனித்துவம் (Identity) கருத்தியற்பாங்கு (Idealism), சுதந்திரத் துடிப்பு (Need for Independence), அங்கீகாரத்தினைப் பெற விழைவு (Need for Recognition), நிலைத்த பயன் மதிப்புக்களின்மீதான நாட்டம் (Search for Stable Values) ஆகிய தலைப்புகளின் கீழ் இங்கு விளக்கப்பட்டுள்ளன.

**தனித்துவம் :**

இளையோர் தங்கள் தனித்துவத்தினை அறியும் பொருட்டு வெகுவாக முயற்சி செய்கின்றனர். மாற்றங்களைக்கொண்ட இளையோர் பருவம், கடந்த காலத்தின் பயன் மதிப்புகள், நம்பிக்கைகள், மனப்பாங்குகள் ஆகியவற்றினை மதிப்பீடு செய்ய வேண்டியதன் அவசியத்தினை உண்டாக்குகின்றது. இந்த உண்மை தனியனுக்கு மட்டுமேயன்றி, மாறும் நிலையிலிருக்கும் சமூகங்களுக்கும் பொருந்தும். உறுதிமிக்க, நிலைத்த தன்மையினைச் சமூகத்தில் உண்டாக்கும்பொருட்டுத் திட்டங்கள் தீட்டப்படுகின்றன. குறிக்கோள்கள் வகுக்கப்படுகின்றன; அவைகளை அடைவதற்கு முயற்சிகளும் மேற் கொள்ளப்படுகின்றன. மாணவர்கள் சமூகப் பணியினைச் செய்வதன் மூலமும், பெரியோர்கள் உருவாக்கிய அமைப்பில் மாற்றம் விளைவிப்பதன் வாயிலாகவும் தங்களின் தனித்துவத்தினைப் பெறுகின்றனர். ஒரு குறிப்பிட்ட கொள்கையினை அடையத் தங்களை அர்ப்பணம் செய்துகொள்வதன் மூலமும், மாணவர்களின் தனித்துவம் ஓரளவிற்கு வளர்கின்றது. மேலும், நவீன இயந்திர மயமாக்கப்பட்ட சமூகத்தில், தங்களிடம் ஏறபடும் தகுதியற்ற உணர்வுகளினைப் போக்கிக்கொள்ளவும், மாணவர்களுக்குத் தனித்துவ உணர்வு ஏதுவாகின்றது.

**கருத்தியற்பாங்கு :**

இளையோர், பல்வேறு விஷயங்களில் உறுதிமிக்க குறிக்கோள்களினையும், பிறர்க்கென வாழும் பண்பினையும் பெற்று விளங்கு

கின்றனர். இதன் அடிப்படையில்தான், சமூகப் பணி மன்றங்கள் போன்ற இளையோர் இயக்கங்கள் செயல்படுகின்றன. சமுதாயத்தில் நேர்மையின்மையும், சமத்துவமின்மையும், அநீதியும் மேலோங்கி இருப்பதனை இளையோர் கண்டிக்கின்றனர். முதிர்ந்தோரின் சமூகம், பாசாங்கு மிகுந்ததென அவர்கள் குற்றம் சாட்டுகின்றனர். முதிர்ந்தோரின் பாசாங்கு மிகுந்த, போலி நடவடிக்கைகளைக் கண்ணுறும் இளையோர், தாங்கள் அவர்களைக் காட்டிலும் உயர்ந்த அறநெறியுடையவர்கள் என்ற உணர்வினை அடையப் பெறுகின்றனர். இளையோர் பலர், தாங்கள் பெரியோர்களால் ஏமாற்றப்படுகின்றனர் எனவும், சிறுவயதில் தங்களுக்குக் கற்றுக் கொடுக்கப்பட்ட பயன் மதிப்புகள் முதிர்ந்தோரினால் பின்பற்றப்படுவதில்லையெனவும், சமத்துவம் பேச்சளவிலேயே நின்றுவிடுகிறதெனவும், குடியரசு அமைப்பினைக் கொண்ட நம் நாட்டிலும் அது செயல் படுத்தப் படவில்லையெனவும் குறைகூறுகின்றனர். இதனால் சமூக அமைப்புகளில் அவர்கள் நம்பிக்கையிழக்கின்றனர். உண்மையில், நவீன சமூகம் இளையோர் பல்வேறான பயன்மதிப்புகளைப் பெற வாய்ப்பினை யளித்து ஊக்குவிக்கின்றது. எனவே முதிர்ந்தோர் தாங்கள் கொண்டிருக்கும் பயன் மதிப்புகள் இளையோர் பெற்றிருக்கும் பயன் மதிப்புகளை விடச் சிறந்தவையென நிரூபிக்க இடமில்லை. ஏனெனில், இனச்சார்பெண்ணம், சாதியில் சமத்துவமின்மை, பொருளாதார ஏற்றத்தாழ்வுகள், ஏழ்மைத் தன்மை, கொடூரமான குழப்பம் நிறைந்த கலகங்கள் ஆகியவை ஏற்படவேண்டியதன் அடிப்படை நியாயங்களை முதிர்ந்தோரில் சாதகமான வகையில் நிரூபிக்க முடியாது. எனவே, மாணவர்களின் கொந்தளிப்பினைத் தணிப்பதற்குச் சாத்தியமில்லாமல் போய்விடுகின்றது. ஆதலால், மாணவர்கள் பரபரப்பான, விறுவிறுப்பான, துடிப்பு மிக்க செயல்களின் பால் தூண்டப்படுகின்றனர்.

சுதந்திரத்தினைப் பெறத் துடிப்பு :

இன்றைய இளையோர் போராட்டங்களின் ஒரு கோரிக்கை, தங்கள் செயலிலும், சிந்தனையிலும் தங்களுக்குச் சுதந்திரம் தரப் படவேண்டும் என்பதாகும். ஏனெனில், இவர்களைப் பாதிக்கும் முடிவுகள், தீர்மானங்கள் பற்றிய விஷயங்களில் பெற்றோர்களும், பெரியவர்களும் இவர்களைக் கலந்தாலோசிப்பதில்லை. சான்றாக, அமெரிக்க நாட்டில், 18 வயதினை அடைந்தோர் அனைவரும் கட்டாய இராணுவ சேவைக்குள்ளாக்கப் படுவதற்கான சட்டம் நிறைவேற்றப்பட்டிருக்கின்றது. இளையோரை வெகுவாகப் பாதிக்கும் இந்தச் சட்டத்தினை இயற்றும்போது இளையோரின் ஒப்புதல் கேட்கப்படவில்லை. 18 வயதினை அடைந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கப்பட வேண்டுமெனும் இளையோரின்

கோரிக்கை மறுக்கப்பட்டு, அவர்களைப் பாதிக்கும் கட்டாய இராணுவச் சேவையின் சட்டம் இயற்றப்பட்டுள்ளது. 18 வயதினை அடைந்தோருக்கு வாக்குரிமை அளிக்கப்பட்டிருந்தால், அவர்கள் இவ்விஷயத்தில் தங்கள் கருத்தினைத் தெரிவிக்க வாய்ப்புக் கிடைத்திருக்கும். இவ்வாறு செய்யப் படாததனால், அவர்கள் தங்கள் எதிர்ப்பின் மூலம் முதிர்ந்தோரின் தீர்மானங்களையும், முடிவுகளையும் மாற்ற முயற்சிக்கின்றனர். மாணவர்களின் இத்தகைய செயல் தன்மை, அவர்கள் கூட்டத்தினரது முழு ஒத்துழைப்பினையும் பெறுகின்றது. முதிர்ந்தோரின் கட்டுப்பாடுகளிலிருந்து சுதந்திரம் அடைவதன் பொருட்டு செயல்படும் மாணவர் இயக்கங்கள் இளையோர் பருவத்துத் தனிச் சிறப்புகளில் ஒன்றான, பெரியோர்களின் கருத்துகளையும், சமூகத்தின் கோட்பாடுகளையும் எதிர்க்கும் தன்மையினைப் பிரதிபலிக்கின்றன.

**அங்கீகாரத்தினைப் பெற விழைவு :**

இளையோர் தங்கள் எதிர்ப்பினை வெளிப்படையாகப் பொது இடங்களில் வெளிப்படுத்துவதன் மூலம் பெரியவர்களின் கவனத்தினை ஈர்க்கின்றனர். இத்தகைய துடிப்பினை இளமை எழுச்சி என்று எண்ணி, அதற்கு முக்கியத்துவம் அளிக்காவிட்டாலும், இத்தகைய நிலைகளுக்கு ஏதாவதொரு தீர்வினைக் காணுதல் அவசியமானது. "எங்களது கோரிக்கைகளைத் தயவு செய்து கேளுங்கள்" என்று குரல் எழுப்பும் இளையோர்களின் குரலினைப் பெரியவர்கள் மதிக்காது, அதனைச் சர்வாதிகார நோக்குடன் புறக்கணித்தால், அது 'முதிர்ந்தோரின் சமூகம் இசைவிணக்கமற்றது' எனும் இளையோரது குற்றச்சாட்டினை நிரூபிப்பது போலாகும். ஆகவே, இளையோரின் எழுச்சியினையும், எதிர்ப்பினையும் ஓரளவிற்காவது அங்கீகரித்தல் அவசியமாகும்.

**நிலைத்த பயன் மதிப்புகளின் மீதான நாட்டம் :**

மாற்றங்களைக் கொண்ட இளையோர் பருவமும் துரிதமாக மாறும் சமூகமும், தெளிவும் திட்டவட்டமுமற்ற பிரச்சினைகள் பலவற்றினைத் தோற்றுவிக்கின்றன. இவற்றினை இயன்ற அளவில் குறைக்க வேண்டியது அவசியம். இவ்வகையில்தான் இளையோரின் இயக்கங்கள், எளிய வாழ்வினை நாடுகின்றன. மிக எளிய, சிக்கனமான, நியாயமான வாழ்க்கையினைப் பற்றிய கட்டுரைகள், நவீனங்களை இப்போது இவர்கள் விரும்பிப் படிக்கின்றனர். பழைய காலத்திய வாழ்க்கையினை இவர்கள் எளிமையானதாகவும், நியாயமானதாகவும், குற்றமற்றதாகவும் கருதுகின்றனர். பழைய கால சமூகத்து மக்கள், தங்கள் நம்பிக்கைகளுக்கு உண்மையானவர்களாகவும், தங்கள் தேவைகளுக்கேற்ப உழைத்து, உண்பவர்க

ளாகவும், பிறரை ஏமாற்றும் தன்மையற்றவர்களாகவும் வாழ்ந்த னர் என இவர்கள் நம்புகின்றனர். ஆகவே, பழைமையும் புதுமை யும் சரிவரக் கலந்த ஒரு சமுதாயம் நிறுவப்படுமாயின், இந்நாளைய சமுதாயத்தின் முரண்பாடுகளினைப் போக்க அது ஏதுவாக இருக்கும்.

**செயற்துடிப்பினையுடைய மாணவர்களின் ஆளுமைத் தன்மைகள் :**

மாணவர் சமுதாயத்திடம், அமைதியின்மையும், கிளர்ச்சியும், பரவலாகக் காணப்படினும், உண்மை நிலையினை நோக்குகையில், மாணவர்களில் குறைந்த சதவீதத்தினரே இத்தகைய நடவடிக்கை களில் ஈடுபடுகின்றனர்.

டிரெண்டும், கிரெய்ஸும் (Trent and Craise), உயர்நிலைப் பள்ளி இறுதித் தேர்வில் வெற்றியடைந்த 10,000 மாணவர்களைத் தொடர்ந்து உற்று நோக்கி ஆய்ந்ததில், கல்லூரிக்குச் சென்றவர் களில் 40 சதவீதத்தினரே அரசியலில் பங்கேற்றனர் எனக் கண் டறிந்தனர். இத்தகைய நடவடிக்கைகளில் பங்கேற்பவர்களின் அளவு மிகக் குறைந்திருந்தாலும், இவர்களுக்கும், இத்தகைய நடவடிக்கைகளில் பங்கு கொள்ளாத மாணவர்களுக்கும் இடையே ஆளுமைத்தன்மையில் வேறுபாடுகள் உள்ளன. வாஷிங்டன் நகரத்தின், 218 மாணவர்களைக் கொண்ட மாணவர் பொதுத் தொண்டுக் குழு ஒன்றினைப் பேட்டி கண்டதில், நான்கில் ஒரு பகுதியினர் தங்கள் குடும்பங்கள் கடுமுனைப்பான அரசியல் கொள்கையினை உடையது எனவும், ஏனையோர், தங்கள் குடும் பங்கள் அரசியல் நடவடிக்கைகளில் பரந்த மனப்பாங்கினை யுடையது எனவும் தெரிவித்தனர். பாடப்பகுப்புகளின் அடிப் படையில் நோக்கியபோது, சமூக அறிவியல் துறைகளைச் சார்ந்த மாணவர்களே எழுச்சி நடவடிக்கைகளில் பங்கு பெறுவோரில் மூன்றில் இரு பங்கினராக இருக்கின்றனர் எனவும், இயற்பியல், உயிரியல், அல்லது கலைத்தொழில் சார்ந்த துறைகளிலிருந்து மிகக் குறைந்த எண்ணிக்கையினரே மாணவர் எழுச்சி நடவடிக்கைகளில் பங்கேற்கின்றனர் எனவும் அறியப்பட்டது. நம் நாட்டில் இவ் வகையில் தனிப்பட்ட ஆய்வுகள் ஏதும் நடத்தப் படவில்லையெனி னும் இங்கு நடைபெறும் நிகழ்ச்சிகளைப் பொதுவாக நோக்கு மிடத்து, இம்முடிவுகள் நம் நாட்டிலும் உண்மையாகவும் பொருத்தமாகவும் உள்ளன எனப் புலப்படுகின்றன. எனவே, செயற்துடிப்பின்பால் மனநாட்டம் கொண்டவர்கள், மாணவர் களில் மிகவும் குறைந்த பகுதியினரே என்பதனை அறியலாம்.

மேலும் சிகாகோ (Chicago) நகரத்தில், மாணவர் இயக்கங்களில் பங்கு கொண்ட, பங்கு கொள்ளாத மாணவர்களை ஒப்பிட்டு ஆய்ந்ததில், மாணவர் இயக்கங்களில் தீவிரமாகப் பங்கு பெற்றவர்கள், உயர்ந்த பொருளாதாரக் குடும்பத்திலிருந்து வந்தவர்களாகவும், பெரும்பாலும் அவர்களின் பெற்றோர்கள் நல்ல கல்வித் தகுதியினைப் பெற்று, அதற்கேற்ற தொழிலில் ஈடுபட்டிருந்தனர் என்றும் கண்டறியப்பட்டது. அவர்களின் தாயார்களும் நன்கு படித்தவர்களாகவும், பெரும்பாலும் ஒரு தொழிலில் ஈடுபட்டிருந்தவர்களாகவும் இருந்தனர். மாணவ இயக்கங்களில் பங்கேற்காதவர்களின் தந்தையர், 6 சதவீதத்தினர் மட்டுமே அரசியல் நடவடிக்கைகளில் பரந்த நோக்குடையவர்களாகக் காணப்பட்டனர். ஆனால் மாணவ இயக்கங்களில் பங்கேற்றவர்களின் தந்தையர் 60 சதவீதத்தினர் பரந்த நோக்குடையவர்களாக இருந்தனர். அமெரிக்காவிலுள்ள பெர்க்லி நகரத்தில், மாணவர் குழு, மூன்றின் தன்மைகளை ஆளுமைச் சோதனை ஒன்றின் மூலம் ஒப்பிட்டு ஆராய்ந்தனர். இம்மூன்று குழுவினரில் ஒரு குழுவினர், மாணவர் இயக்கங்களில் பங்குபெற்று, கைது செய்யப்பட்டவர்களாய் இருந்தனர். இவர்கள் தங்களைப் போன்று மாணவர் இயக்கங்களில் பங்கேற்காத மற்ற இரு குழுவினர்களையும் விட அகமுகத்தன்மை (Introversion), நுணக்கம் (Complexity), அழகியல் சார்புத்தன்மை (Aestheticism), சுதந்திரத்தன்மை (Autonomy), உள்துடிப்புக்களின் வெளிப்பாடு (Impulse Expression), பரந்த சமயப் போக்கு (Religious Liberalism) ஆகிய பண்புக்கூறுகளில் அதிக மதிப்பெண்களைப் பெற்றிருந்தனர். இதன் மூலம் அரசியலில் ஆர்வமுள்ள மாணவர்கள் எதனையும் ஆராய்ந்தறியும் மனப்பான்மையிலும், புறநோக்கு மனப்பான்மையிலும், இன்னும் சிந்தனைச் சுதந்திரத்திலும் மாணவர் இயக்கங்களில் பங்கு பெறுதவர்களை விட மேம்பட்டு இருப்பவர்களாகக் காணப்படுகின்றனர் என்பதை அறியலாம். மேலும், இவர்கள் சமய வழக்கங்களுக்குத் தங்களை அடிமைப்படுத்திக் கொள்ளாது, அழகியல் சார்ந்த விஷயங்களிலும், கருத்தியல் சிந்தனையிலும் அதிக ஈடுபாடு கொண்டிருந்தவர்களாகக் காணப்பட்டனர்.

கல்லூரி நிலையில் மட்டுமின்றி, உயர்நிலைப்பள்ளி இளையோர்களிடமும், மாணவர் எழுச்சி காணப்படுகின்றது. கல்லூரிகளை விட உயர்நிலைப்பள்ளிகளில் இருக்கும்போதுதான், இளையோரின் சிந்தனை, செயல் சுதந்திரத்திற்கான போராட்டம் தீவிரமடைகின்றது. கல்லூரி மாணவர் எழுச்சிகளின் கோரிக்கைகள், சமூகம், நாடு போன்ற பரந்த விஷயங்களோடு தொடர்பு கொண்டிருக்கின்றன. ஆனால், உயர்நிலைப்பள்ளி மாணவர்களின் எழுச்சிகள்,

தங்களது பள்ளி, மாணவர் சமூகம் ஆகிய பிரச்சினைகளைச் சார்ந்தே யுள்ளன. எனவே, கல்லூரி மாணவர்களின் எழுச்சி, சுயநலமற்ற தாக, சமூகம், நாடு ஆகியவற்றின் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் பொதுநல நோக்கில் செயல்படுகையில், உயர்நிலைப்பள்ளி மாணவர்களின் எழுச்சிகள் பெரும்பாலும் தங்களைப் பற்றியதாக, குறிப்பாக இளையோர் பருவத்தின் தனிப்பட்ட பிரச்சினைகளான சிந்தனை, செயல் சுதந்திரம் பெறுதல், முதிர்ந்தவர்களின் அங்கிகாரத்தினையும், ஒப்புதலினையும் பெறுதல் போன்ற பிரச்சினை களின்பால் தோன்றுவனவாகக் காணப்படுகின்றன.

மாணவர்களின் செயற்துடிப்பு ஒரு நாட்டின், சமூகத்தின் நிகழ்காலப் பிரச்சினைகளை எதிரொலிப்பதாகும். மாணவர்களின் எழுச்சிகளும் கோரிக்கைகளும் முற்றிலும் நியாயமானவை எனக் கருத இயலாவிடினும், குறைபாடுள்ள சமூகத்தின் நடவடிக்கை களைச் சரிபடுத்தும் பொருட்டு அவை ஏற்படுகின்றன எனக் கொள்ளலாம். எனவே, மாணவர் இயக்கங்களின் செயற்துடிப்பு, நடவடிக்கைகளை நாம் குறைவாக மதிப்பிடுதல் கூடாது. அவை பள்ளியில் காணும் பிரச்சினைகளையும், சமூகத்திலும், நாட்டிலும் அவர்கள் காணும் சிரமங்களையும் நமக்கு எடுத்து உணர்த்துவ தால், அவைகளுக்குப் பொருத்தமான தீர்வினைக் காணும் நோக்கில், அவற்றை அணுகவேண்டியது நமது கடமையாகும்.

**அதிகாரச் சுருக்கம் :**

இளையோன் தன் ஆற்றலைச் சோதித்தறியவும், தன் திறமை, குறைபாடு ஆகியவற்றை உணர்ந்தறிவதற்கும் வேண்டிய வாய்ப்பு களைப் பள்ளி நல்குகின்றது. பள்ளியில் இளையோர் கல்வியினைக் கற்பதோடு, வாழ்க்கையினைப் பற்றிய பல உண்மைகளையும், வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கான பயிற்சிகளையும், சமூகத் திறமைகளையும் கற்கின்றனர்.

இளையோர் பருவத்தில் பள்ளியினைப் பற்றிய விஷயங்களில் இவர்கள் மனக் குறையுடையவர்களாகக் காணப்படுகின்றனர். பெரும்பாலும் இளையோர் பருவத்தின் துவக்கமும், உயர்நிலைப் பள்ளியில் புகுதலும், ஒன்றியே நிகழ்கின்றன. புதிய பள்ளிச் சூழ்நிலையும், புதியவர்களைச் சந்திப்பதும், புதிய பாடத்தைப் படிப்பதும், புதிய சமூக, பொழுதுபோக்கு நடவடிக்கைகளும் இவர்களிடத்துப் புதுவகை நடத்தை முறைகளைத் தோற்றுவிக் கின்றன. தனக்கேற்ற பள்ளி, கல்லூரி இவைகளைத் தேர்ந்தெடுப் பதில் சிரமத்தைக் காணும் இளையோருக்குப் பெற்றோரும், வழி காட்டுநர்களும் உதவிட வேண்டும்.

பாடத்திட்டங்கள், வாழ்க்கையில் அவர்கள் பெறப்போகும் அனுபவங்களுக்கு ஏற்ற பயிற்சியாகவும், அவர்கள் முன்னேற்றத்திற்கு உறுதுணையாகவும் இருக்கும் வகையில் அமையவேண்டும். பயனுள்ள பாடத்திட்டம், குடும்ப வாழ்க்கைப் பயிற்சி, நுகர்வோர் கல்வி, செயலாற்றுதற்கான சிறந்த பழக்கங்கள், ஓய்வு நேரத்தினை ஆக்க வழியில் பயன்படுத்தல், குடிமைப் பயிற்சி, தொழில் திறமைகள், நல் வாழ்விற்கான பழக்கங்கள், அறநெறிப் பயிற்சி, ஆகியவற்றைக் கொண்டிருக்க வேண்டும் என காரிஸன் எனும் உளவியலார் வலியுறுத்துகின்றார். மேலும், படிப்பு—பழக்க வழக்கங்களையும், நல்ல சூழ்நிலையையும் அமைத்துத் தருவது மிக்க அவசியமாகும்.

ஆசிரியர்—மாணவர் தொடர்பு நண்பர்களிடையே நிலவும் நட்பின் தன்மையைப் பெற்றிருத்தல் நன்மை தரும்.

> "உடையார் முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
> கடையரே கல்லா தவர்"

என்ற வகையில், இளையோரும் தங்களை உருவாக்கிக் கொள்ள வேண்டும். ஆசிரியர் தம் மாணவரிடையே மரியாதையினையும், போற்றுதலையும் பெறவேண்டுமெனின், அவர் மாணவர்களுடன் ஒத்துழைப்பவராகவும், துன்பங்களைக் களைபவராகவும், அவர்களின் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண உதவும் ஆலோசகராயும், வழி காட்டுநருமாகத் திகழவேண்டும்.

பாடமற்ற புற நடவடிக்கைகள், இளையோனுக்கு நல்ல ஆளுமைப் பண்புகளைப் பெற வழி வகுக்கிறது. இதனை நான்கு வகைகளாகப் பிரிக்கலாம். அவை, 1. விளையாட்டு நடவடிக்கைகள், 2. மன்ற ஈடுபாடுகள், 3. பாடத்தோடு ஓரளவு தொடர்புடைய நடவடிக்கைகள், 4. குடிமைப்பயிற்சி நடவடிக்கைகள் ஆகும்.

படிப்பின் தேர்ச்சிக்கும் திறமைக்கும் இடையே உள்ள தொடர்பு மிகவும் முக்கியமானதாகும். மாணவர்கள் தங்களின் இயற்கைத்திறன், பெறுகின்ற பயிற்சி ஆகியவற்றின் விளைவாகவே தேர்வில் வெற்றிபெறுகின்றனர். இவ்விஷயங்களில் ஆசிரியரின் அரவணைப்பும், பெற்றோர்களின் ஊக்குவிப்பும் சிறப்பான பங்கைப் பெறுகின்றன. பள்ளிப் பிரச்சினைகள், படிப்பதில் பலன் மிக்க முறை, ஆசிரியர்—மாணவர் உறவு முறை, கல்வியில் தேர்ச்சி பெறுவது ஆகியவற்றோடு மட்டுமல்லாது, சக மாணவர்களுடன்

உறவு, தன்னோடு பயிலும் எதிர்ப்பாலினரிடம் கொண்டுள்ள நட்பு ஆகியவைகளையும் சார்ந்துள்ளன. இவைகளை ஏற்ற முறையில் அமைத்துக் கொண்டால், இளையோன் நல்ல பொருத்தப்பாட்டினைப் பெறலாம்.

தனித்துவம், கருத்தியற்பாங்கு, சுதந்திரத்துடிப்பு, அங்கீகாரம் பெற விழைவு, நிலைத்த பயன் மதிப்புகளின் மீதான நாட்டம் ஆகியவை இளையோர் பருவத்திற்கும், மாணவர் செயற்துடிப்பிற்கும் இடையே உள்ள ஒத்த தன்மைகளாகும். இவைகளுக்கு இடையூறு நேருங்கால், இவர்கள் கொதித்தெழுவர். மாணவர் சமூதாயத்திடம் அமைதியின்மையும், கிளர்ச்சியும் பரவலாகக் காணப்படினும், உண்மை நிலையினை நோக்குங்கால், மாணவர்களில் மிகக் குறைந்த விழுக்காடு எண்ணிக்கையினரே இத்தகைய நடவடிக்கைகளில் ஈடுபடுவது தெரிகிறது. மாணவர்களின் செயற்துடிப்பு ஒரு நாட்டின், சமூகத்தின் நிகழ்காலப் பிரச்சினைகளை எதிரொலிப்பதால், அவைகளை முற்றிலும் நியாயமற்றவை என எண்ணாது, பொருத்தமான தீர்வினைக் காணும் நோக்கில் அவற்றை அணுகவேண்டும்.

# 12. இளங்குற்ற நடத்தை

## (Juvenile Delinquency)

இளையோரின் வளர்ச்சி மாற்றத்தினால் ஏற்படும் தவிர்க்க முடியாத விளைவு, பெற்றோர்களின் பண்பாட்டிற்கும், சமூகத்தின் பழக்க வழக்கங்களுக்கும், நாட்டின் சட்டதிட்டங்களுக்கும் மாறான நடத்தைகள் இளையோரிடத்துத் தோன்றுவதாகும். இத்தகைய சட்டதிட்ட வரம்புகளை மீறி ஏற்படும் நடத்தைகள் சில வேளைகளில் மிகவும் மோசமானதாகவும், அதிகச் சேதத்தினை விளைவிப்பனவாகவும் உள்ளன. இதில் மிகச் சாதாரணமானவை இரவில் வீட்டிற்கு மிகவும் தாமதித்துத் திரும்புதல், பெற்றோர்கள் தடை செய்யும் திரைப்படங்களுக்குச் செல்லுதல் போன்ற கெட்ட பழக்கங்களாகும். இதன் மிகத் தீவிரமான வகைகள் போலிக் கையொப்பமிட்டு மோசடி செய்தல், தீ வைத்தல், அடிதடி சண்டை செய்தல், கொலை செய்தல் போன்ற பெருங் குற்றங்களாகும். சில இளைஞர்களின் இத்தகைய பொருத்தமற்ற நடத்தைகள், காலப்போக்கில் அவர்களின் சமூகப் பொருத்தப்பாட்டில் ஏற்படும் சாதாரணப் பிரச்சினைகளாக முக்கியத்துவமற்றுவிடுகின்றன. ஆனால், இவைகளே சில இளையோரிடம் பிற்காலக் குற்ற நடத்தையின் தொடக்க நிகழ்ச்சிகளாகவும் நிலைபெற்றுவிடுகின்றன.

இளம் குற்றநடத்தை, தற்காலத் தலைமுறையினரின் பிரச்சினையோ, நம் நாட்டில் மட்டுமே காணப்படும் பிரச்சினையோ அன்று. ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே எகிப்து நாட்டினர் பெற்றோர்களின் அதிகாரத்தினைப் பிள்ளைகள் அளவிற்கு மீறி எதிர்க்கச் செய்கின்றனர் எனக் கவலைப்படத் தொடங்கினர். எனவே, இளம் குற்றநடத்தை தொன்றுதொட்டு இருந்து வரும் பிரச்சினையாகும். இதுவரை இப் பிரச்சினையைக் களைய எண்ணற்ற

முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. எனினும், தொடர்ந்து முயற்சிகள் செய்யப்பட வேண்டியது அவசியமாகும்.

**இளம் குற்றநடத்தையின் சமூக முக்கியத்துவம்:**

ஒரு சங்கிலியின் உறுதி அதில் இருக்கும் இணைப்பினைப் பொறுத்துள்ளது. இதேபோன்று, ஒரு சமூகத்திலுள்ள ஒருசில தனியர்களின் குற்ற நடத்தைகளினால், அச் சமூகம் முழுவதுமே வெகுவாகப் பாதிக்கப்படுகின்றது. குடியரசு அமைப்புள்ள நம் நாட்டில், சமூகத்திற்கு எதிரான இத்தகைய நடத்தைகளின் விளைவுகள், அதனால் ஏற்படும் பாதிப்புகள் ஆகியவை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தனவாகும். நம் நாட்டில் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் தொழில்மயமாக்கம் (Industrialization), நகரமயமாக்கம் (Urbanization), விரைவான சமூக மாற்றங்கள், ஏற்றத்தாழ்வுள்ள பொருளாதார வளர்ச்சி ஆகியவற்றின் விளைவினால், இளம் குற்றநடத்தையின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டு வருகின்றது. குறிப்பாக, நம் நாட்டு மக்கள் தொகையில் 20 சதவீதத்தினர் வாழும் நகரப் பகுதிகளில் இவை குறிப்பிடத்தக்க அளவிற்கு அதிகரித்து வருவதாகத் தெரிகின்றது. குடிமக்களின் ஆக்கப்பூர்வமான ஒத்துழைப்பினைப் பொறுத்தே ஒரு நாட்டின் வலிமையும் சிறப்பும் அமைகின்றன. எனவே, தற்போது நம் நாட்டு இளையோர் எத்தகைய சமூக வளர்ச்சிகளையும், பொருத்தப்பாடுகளையும் பெற்றுள்ளனரோ, அதனைப் பொறுத்தே நம்நாட்டின் எதிர்கால முன்னேற்றமும் அமையும். இந்தக் காரணத்திற்காகத் தான் பெற்றோர்களும், ஆசிரியர்களும், அரசியல் தலைவர்களும், இளம் குற்ற நடத்தையினைத் தவிர்க்கும்பொருட்டும், இளம் குற்றவாளிகளுக்கு மறுவாழ்வு அளிக்கும் பொருட்டும் பல முயற்சிகளை மேற்கொண்டுள்ளனர்.

**இளம் குற்றநடத்தை என்பது யாது ?**

பொதுவாக இளம் வயதினர் சமூகத்திற்கு எதிராகச் செய்யும் எந்த நடத்தையும் இளம் குற்ற நடத்தையினைச் சாரும். குரோவும் குரோவும் இளம் குற்ற நடத்தையினைப் பின்வருமாறு பொருள் வரையறை செய்கின்றனர். 'ஓர் இளம்பிள்ளை பிறர் உரிமையில் தலையிட்டு அவர்களின் சொத்துகளைத் தனதாக்கிக் கொள்ளவும், அவற்றிற்குச் சேதம் விளைவிக்கவும், பாலின நடத்தையில் நியதி மீறிச் செயல்படவும் செய்தால், அவனை இளம் குற்றவாளி எனக் கருதலாம்.'

ஒரு தனியன், தன் அடிப்படை உரிமைகளையும் தேவைகளையும் பூர்த்தி செய்துகொள்வதனை மறுக்கும் சமூக நிலைக்கு எதிராகச்

செயல்படும்போது, பொதுவாக இளம் குற்றவாளியாகின்றான். இளம் குற்ற நடத்தை இவ்வாறு தவறான பொருத்தப்பாட்டின் ஒருவகையாகவும், நடத்தையின் ஒழுங்கற்ற வளர்ச்சியறிகுறியாகவும் உள்ளது. இதனால்தான் இளம் குற்றவாளியிடம் தன் சூழ்நிலையினை உடைத்தெறிந்து அழித்து, அதனை மாற்றியமைக்கும் நோக்கில் உள்ள வன்முறை நடத்தை காணப்படுகின்றது. சமூகத்திற்கு எதிரான இத்தகையவர், மனிதர்களில் ஒரு தனிப்பட்ட குழுவினைச் சார்ந்தோர் அல்லர். இவர்களின் ஆசைகளும், ஏக்கங்களும் சாதாரணமானவர்களின் (Normal) ஆசைகள் ஏக்கங்களைப் போன்றேயுள்ளன. ஆனால், இவர்கள் தவறான முறையில் வளர்க்கப்பட்டதனாலும், அவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளவர்கள் அவர்களைச் சரியாக நடத்தாததனாலும் இவர்கள் இத்தகைய இளம் குற்ற நடத்தைகளுக்கு ஆளாக நேரிடுகின்றது. எனவே, தங்கள் பாதுகாப்புணர்வினைக் குலைக்கும் வகையில் தங்கள் அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றுவதனை மறுக்கும் பெற்றோர்களிடமும், சமூக அமைப்புகளிடமும் வெறுப்பினை இவர்கள் காட்டுகின்றனர். இளம் குற்றவாளிகளில் 85 சதவீதத்தினர் தங்கள் வாழ்க்கையில், மகிழ்ச்சியற்றவர்களாகவும், மனவெழுச்சித் தூண்டல்களினாலும், அனுபவங்களினாலும் பாதிக்கப்பட்டவர்களாகவும் இருக்கின்றனர்.

ஆதலால், இளம் குற்றநடத்தையானது தனி மனிதப் பிரச்சினையன்று; மாறாக அது சூழ்நிலையில் நிலவும் பல்வேறு காரணிகள் ஒருங்கிணைந்து, தனியனைச் சமூகத்திற்கு எதிரான செயல்களில் ஈடுபடவைக்கும் பிரச்சினையாகும். நம் நாட்டில் சமூகத்திற்கு எதிரான நடத்தைகளின் காரணமாக, சட்டதிட்ட நடவடிக்கைகளின்பால் காவலர்களால் பிடிக்கப்பட்ட பிள்ளைகளின் எண்ணிக்கையினை எடுத்துக்காட்டுகின்றது. எனினும், எண்ணற்றோர் இன்னும் கைப்பற்றப்படாமலும் விசாரணைக்காக நீதிமன்றத்திற்குக் கொண்டுவரப்படாமலும் இருக்கின்றனர் என்பதால், இங்குக் கொடுக்கப்பட்டுள்ள சதவீதங்கள் நம் நாட்டிலுள்ள மொத்தத் தொகையினைக் காட்டுவது அல்ல என நாம் அறியலாம். இளம் குற்றவாளிகளில் பலர் கைப்பற்றப்படாததன் காரணம், செல்வாக்குள்ள குடும்பத்து இளம் குற்றவாளிகள் பெற்றோர்களின் செல்வத்தினாலும், செல்வாக்கினாலும் காப்பாற்றப்பட்டு, சட்டத்தின் கண்களிலிருந்து மறைக்கப்பட்டு விடுவதேயாகும். இதன் விளைவாகப் பெற்றோர்களினால் பாதுகாக்கப்பட முடியாத வசதியற்ற ஏழைச் சிறுவர்கள் மட்டுமே காவலர்களால் குற்றத்திற்காகக் கைப்பற்றப்பட்டு, நீதிமன்றத்திற்கு அழைத்துச் செல்லப்படுகின்றனர்.




வரைபடம்—12

இந்திய மாநிலங்களில் இளங் குற்றநடத்தை நிகழ்வு விவரம் (1970)

கலகம் செய்தல், கொலைபுரிதல், கொள்ளையடித்தல் போன்ற இளம் குற்றநடத்தைகள் கடந்த சில ஆண்டுகளில் மிகவும் அதிகரித்துள்ளன என்று ஆராய்ச்சிகள் காட்டுகின்றன. இதில் பாலின வேறுபாடும் ஓரளவிற்குக் காணப்படுகின்றது. பெண் இளம் குற்றவாளிகளின் எண்ணிக்கை கடந்த சில ஆண்டுகளில் குறைந்து இருக்கையில், ஆண்களில் இளம் குற்ற நடத்தையினரின் எண்ணிக்கை அதிகரித்துள்ளதாகக் காணப்படுகின்றது. வயதின் அடிப்படையில் பார்க்கும்போது, 16 முதல் 21 வயதிற்குட்பட்ட இளையோர்களில் தான், இத்தகைய இளம் குற்றநடத்தைகளின் எண்ணிக்கை அதிகரித்துள்ளதாகத் தெரியவருகின்றது. உதய சங்கர் (Uday Shankar) என்பார் டெல்லியில் 140 இளம் குற்ற வாளிகளை ஆய்ந்ததில், 108 இளம் குற்றவாளிகளின் வயது 12 -லிருந்து 16 வயதிற்குள் இருந்தன எனக் கண்டார். உண்மையில் குற்றவாளிகளின் மொத்தத் தொகையில் 28·9 சதவீதத்தினர் இளையோர்களாகவே உள்ளனர்.

பிள்ளைகள் ஏழு அல்லது எட்டு வயதினை அடையும்போது இளம் குற்ற நடத்தைக்கான விதை விதைக்கப்படுகின்றது என்றாலும், இந்த நடத்தை இளையோர் பருவத்தில்தான் தீவிர மடைகின்றது. 14 வயது வரையுள்ள பிள்ளைகளில் 50 சதவீதத் தினர், இல்லத்தில் மகிழ்ச்சிகரமான வாழ்க்கையினையும், அன்பினை யும், ஆதரவினையும் பெற்றிருக்கின்றனர். ஆனால், பூப்பின் தோற்றத்திலிருந்து இளையோர்களின் ஆர்வமும் சமூகத் தொடர்பு களும் விரிவடைவதால், அவர்கள் தங்கள் இல்லத்திற்கு வெளியே யுள்ள மகிழ்ச்சியினையும், இனிய அனுபவத்தினையும் ஏற்க நாடு கின்றனர். பிறர் தங்களை முதிர்ந்தவர்களாக நினைத்து நடக்க வேண்டுமென இளையோர் விரும்பும்போது, பெற்றோர்களும் குடும்பத்தினரும் அவர்கள் விரும்பும் தகுதியினையும் சுதந்திரத் தினையும் அவர்களுக்குத் தருவதில்லை. இதன் விளைவாக, இளையோ ரின் சுதந்திரம் பெறுவதற்கான ஆர்வம் தடைசெய்யப்பட்டு, அவர்கள் மன முறிவிற்கு ஆளாக நேரிடுகின்றது. எனவே, அவர்கள் வன்முறைத் தாக்குதல்களிலும், எதிர்ப்புகளிலும், சமூகத்திற் கெதிரான செயல்களிலும் ஈடுபடுகின்றனர். இளையோர் பருவத்தில் முரண்பாடான துடிப்புகளும், ஆவல்களும் நிறைந்து தீவிரமாகச் செயல்படுவதனால், இவர்களுக்கு சமூகப் பொருத்தப்பாடுகள் கடின மானதாக மாறுகின்றன. எனவே, ஒரு தனியனின் வளர்ச்சி வரலாற்றில், இத்தகைய தவறான பொருத்தப்பாடுகளுடைய நடத்தைகள் மற்றப் பருவங்களைவிட இளையோர் பருவத்தில்தான் அதிகமாகக் காணப்படுகின்றன.

**இளங் குற்றவாளிகளின் வகைகள் (Delinquent Types) :**

இளங் குற்றவாளிகளில் பலவிதத்தினர் காணப்படுகின்றனர். இந்த வகைகள் ஒன்றுக்கொன்று மிகுந்த வேறுபாட்டினைக் கொண்டுள்ளன. இளம் குற்ற நடத்தையினை முழுமையாக நோக்கி அதற்கான ஒரு தனிப்பட்ட விளக்கத்தினையும், குணமாக்கும் முறையினையும் காண நாம் முற்பட்டால், நம்மால் வெற்றி கொள்ள இயலாது. ஆதலால், இளங் குற்ற நடத்தையினை முழுமையாக நோக்குவதற்குப் பதிலாகத் தனிப்பட்ட பிரிவுகளாக நோக்கி அறிந்துகொள்வதே சிறந்த முறையாகும்.

இளங் குற்றநடத்தையினைக் குற்ற வகையினத்தின் அடிப்படையில் பகுத்து ஆராய்வது ஒரு முறையாகும். பள்ளிக் கள்ளர்கள் (Truants), வீட்டிலிருந்து வெளியேறுபவர்களிலிருந்து வேறுபட்டுள்ளனர். இதைப்போன்றே, இவ்விரு வகையினரும், குடித்துப் புரளுவோர், திருடுவோர், கொள்ளையடிப்போர் ஆகியவர்களிலிருந்து, குற்ற நடத்தைக்கான காரணிகள், குணமடையும் முறைகள் ஆகியவற்றின் அடிப்படையில் வேறுபட்டிருக்கின்றனர்.

இளங் குற்ற நடத்தையினை ஆராய்வதற்கான மற்றொரு முறையானது, குற்றவாளிகளைக் கீழ்த்தர வகுப்பினர், மேல்தர வகுப்பினர் என்றும் குழுவினைச் சார்ந்த குற்றவாளிகள், தனிப்பட்ட குற்றவாளிகள் என்றும் பகுத்தாய்வதாகும். இளம் குற்ற நடத்தைக்கான காரணங்கள் இவ்வகைப் பிரிவுகளில் வேறுபட்டிருக்கலாம். சான்றாகத் தனிப்பட்ட இளங் குற்றவாளி, சாதாரணமாக, நல்லுறவுள்ளதாகக் காணப்படும் இல்லச் சூழ்நிலையைச் சார்ந்திருப்பினும், அவனிடம் இருக்கும் உள உலைவுகளின் காரணமாகக் குற்றவாளியாக மாறியிருக்கலாம். ஒரு குழுவினைச்சார்ந்த குற்றவாளிகள், பொதுவாக, கீழ்த்தர, குடிசைப்பகுதியினைச் சார்ந்தவர்களாயிருப்பினும், அவர்களிடத்து உள உலைவுகள் வெகுவாகக் காணப்படுவதில்லை. எனினும், அவர்கள் குற்ற நடத்தைகளில் ஈடுபடுவது, அவர்களது சிறு குழுப் பழக்க வழக்கங்களின் பயன்மதிப்புகள் (Sub-Cultural Values) இத்தகைய நடத்தையினை ஆதரிப்பதனாலும் ஊக்குவிப்பதனாலுமேயாகும்.

இளங் குற்ற நடத்தைகளை வேறுவிதங்களிலும் பகுத்தாராய இயலும். அந்தப் பிரிவுகளை எல்லாம் நாம் இங்கு ஆராய வேண்டிய அவசியமில்லையெனினும் நாம் அறிந்துகொள்ள வேண்டியது என்னவெனில், இளங் குற்ற நடத்தை பலவகைப்பட்ட பிரிவுகளை உடையது என்பதும், ஒவ்வொரு பிரிவிலும் அவைகளுக்கான காரணங்கள் மாறுபட்டிருக்கலாம் என்பதுமேயாகும்.

**இளங் குற்றநடத்தையின் இயக்கிகள் (Dynamics of Delinquency) :**

குற்றவாளிகளைப் பற்றிய ஆராய்ச்சியாளர்களில் முன்னோடியாக விளங்கும் லாம்புரோஸோ (Lomboroso) என்பார் 'பிறவிக் குற்றவாளி' என்ற கருத்தினை முதன்முதலில் ஊகித்தார். அவர் கருத்தினை, குற்றவாளிகளின் உடல்சார்ந்த தன்மைகள், குற்றவாளிப் பகுப்புகளின் தனித்தன்மைகளைப் பற்றிய பெரும்பாலான ஆய்வுகள் பொய்யாக்கிவிட்டன.

நம் நாட்டில் குற்ற நடத்தைக்கான தன்மை உடன்பிறந்தது எனவும், இதனால் இத்தகைய நடத்தைகளைச் சீர்ப்படுத்த இயலாது எனவும் முற்காலத்தில் கருதப்பட்டது. ஆனால் சமீபத்தில் நடத்தப்பட்ட தனியாள் வரலாற்று ஆய்வுகள், இளங் குற்ற நடத்தை, ஒருவனோடு உடன்பிறப்பதன்றென்றும், மரபுநிலையின் பாற்பட்டதன்றென்றும் காட்டியுள்ளன. உண்மையில் பெற்றோர்களின் சமநிலையற்ற மனவெழுச்சித் தன்மைக்கும் அவர்களின் நரம்பு நோய் அறிகுறிகளுக்கும், குழந்தையின் சமநிலையற்ற மனவெழுச்சித் தன்மைக்கும், அதன் உணர்ச்சிவசப்படுகின்ற தன்மைக்கும் இடையே குறிப்பிடத்தக்க தொடர்பாடு காணப்படவில்லை. எனவே, குற்ற நடத்தைத் தன்மை ஒருவனிடம் உடன்பிறந்தது என்ற கருத்துக்கு அறிவியல் அடிப்படையில் சான்றுகள் எதுவுமில்லை. எனினும் ஒரு சில பிள்ளைகள் இயற்கையாகவே சமநிலையற்ற தன்மை, மிகையான நடத்தைகளுக்குரிய போக்கினைப் பெற்று இருக்கின்றனர். இத்தகையோர், தம் உளநிலையினைக் குலைக்கின்ற சூழ்நிலைக்குள்ளாயின், குற்ற நடத்தைகளுக்கு ஆளாவர்.

ஆயினும், உடலியல் சார்ந்த கோளாறுகள் இளங் குற்ற நடத்தை ஏற்படுவதற்கு மறைமுகமான காரணிகளாகச் செயல் படுகின்றன. சான்றாக, இளங் குற்றவாளிகளிடம், குற்றவாளி அல்லாதவர்களைவிட அதிகமாகச் சொத்தைப் பற்கள், அடிநா அழற்சி (Tonsilitis) போன்ற உடல்சார்ந்த கோளாறுகள் இருப்பதைப் பல ஆய்வுகள் காட்டியுள்ளன. தூக்க வியாதி (Encephalitis lethargica) போன்ற தீவிரமான பிணிகள் தனியனில் அவனுக்குத் தேவையற்றவைகளைத் திருடுதல் போன்ற பொறுப் பற்ற, வன்முறை நடத்தைகளைச் சிலவேளைகளில் உண்டாக்கினாலும், நம் நாட்டில் இப் பிணிகள் குற்ற நடத்தைகளுக்கு அவ்வளவாகக் காரணமாயில்லை. ஊட்டச்சத்தில்லா உணவினை உட்கொள்ளல், அதிலும் குறிப்பாக இனிப்புப் பொருள்களைப் பெருமை ஆகியவையே குற்றநடத்தைக்கான உடல்சார்ந்த காரணங்களாகப் பெரும்பாலும் காணப்படுகின்றன. எனவே, நீரிழிவு

நோய் (Diabetes), கரிநீரகி (Carbohydrate) குன்றிய நிலை போன்றவை சர்க்கரைக்கான ஆவலைத் தனியனிடம் ஏற்படுத்துவதால், அதன் விளைவாக இனிப்புப் பண்டங்களையும், அவற்றைப் பெறுவதற்கான பணத்தினைத் திருடுதல் சிலவேளைகளில் ஏற்படலாம். உடலுறுப்புக் குறைகளினால் (Physical deformity) அவதியுறும் பிள்ளைகள் சிலர், தங்கள் தகுதியினைக் காட்டவும் சில சமயங்களில் குற்றநடத்தையில் ஈடுபடுகின்றனர். எனினும் சிக்கல்களைக் கொண்ட மனவெழுச்சிக் காரணிகள் இல்லாதிருக்கையில், உடல் கோளாறுகள் மட்டுமே குற்றநடத்தை ஏற்படுவதற்குக் காரணமாக இருக்க இடமில்லை.

இளம் குற்ற நடத்தைக்கான காரணங்களைத் தீர்மானிக்கப் பல ஆய்வுகள் நடத்தப்பட்டன. அவைகளில் எதுவும் திருப்திகரமான முடிவுகளைத் தரவில்லை. குற்ற நடத்தைக்கான காரணங்களில் ஏழ்மையானது பெரும்பங்கு கொண்டிருக்கின்றது. ஏழ்மையில் வளரும் ஆண், பெண்பிள்ளைகள் பலர் இளங் குற்றவாளிகளாக மாறுவதில்லையெனினும் நல்ல பொருளாதார வசதியுள்ள ஆண், பெண்பிள்ளைகள் பலர் திருடுதல் போன்ற குற்றநடத்தைகளில் ஈடுபடவே செய்கின்றனர் என வாட்டென்பெர்க் (Wattenberg) என்பார் கண்டறிந்துள்ளார். வாழ்க்கையின் ஏழ்மையான சூழ்நிலை, குடிசைப்புற வாழ்க்கை, அந்தரங்க இடவசதியின்மை, பொழுதுபோக்கு நடவடிக்கைகளுக்குப் போதுமான வசதியின்மை பெற்றோர் இருவரும் வேலைக்குச் செல்வதால் பிள்ளைகளின்மேல் பெற்றோர்களின் கவனமின்மை போன்ற ஏழ்மையின் தொடர்புள்ள காரணிகள் இளங் குற்றநடத்தை ஏற்படுவதில் பெரும் பங்கினைக் கொண்டிருக்கின்றன. எனினும், இவ்வாறான சூழ்நிலைகளில் வாழும் பிள்ளைகள் பலர் இளங் குற்றவாளிகளாக மாறுவதில்லை. ஆனால், மேற்கூறப்பட்ட பாதிப்புகள் இல்லாத சூழ்நிலையில் வாழும் பிள்ளைகள் பலர், இளங் குற்றவாளிகளாக இருக்கின்றனர்.

இளங் குற்றநடத்தைக்கும் நுண்ணறிவிற்கும் இடையே எதிரிடைத் தொடர்பாடு இருப்பதைப் பல ஆய்வுகள் காட்டியுள்ளன. நுண்ணறிவு குறைந்த ஆண், பெண்பிள்ளைகள் நுண்ணறிவில் மேம்பட்டவர்களைவிட அதிக எண்ணிக்கையில் இளங் குற்றவாளிகளாகக் காணப்படுகின்றனர். நுண்ணறிவு குறைந்தவர்கள் மிக எளிதில் இளங் குற்றநடத்தைகளில் தூண்டப்படலாம் என்பதனாலும், அவர்கள் தங்கள் செயல்களின் விளைவினைச் சிந்தித்துப் பார்ப்பதில் குறைந்த திறனைக் கொண்டிருப்பதனாலும், இன்னும் இவர்கள் தங்கள் வாழ்க்கைத் தேவைகளைப் பெறுவதில்

கடினத்தைக் கொண்டிருப்பதனுலும் இளங் குற்றவாளிகளாக மாற இடமுண்டு. எனினும் நுண்ணறிவிற்கும் இளம் குற்றநடத்தைக் கும் இடையே உள்ள எதிரிடைத் தொடர்பாடு அதிகமானதாக இல்லை. மேலும், நுண்ணறிவு மிகுந்த இளங் குற்றவாளிகள் தங்கள் குற்றம் கண்டுபிடிக்கப்படாமல் தப்பித்துக்கொள்ளவும் இடமுண்டு. எனவே, நுண்ணறிவிற்கும் கைது செய்யப்படாத இளங் குற்றவாளிகளின் நடத்தைக்கும் இடையேயுள்ள தொடர் பாடு கேள்விக்குரியது.

இல்லத்து, மனவெழுச்சிப் பொருத்தப்பாடுகளைச் சார்ந்த விஷயங்களை ஆராயுங்கால், இவைகளுக்கும் இளங் குற்றநடத் தைக்கும் இடையே திட்டவட்டமான தொடர்பு இருப்பதாகத் தெரிகின்றது. சிறந்த மனவெழுச்சிப் பொருத்தப்பாட்டினை யுடைய ஆண், பெண்பிள்ளைகளில் பெற்றோர்களுடன் நன்கு பொருந்திச் செல்பவர்கள் பெரும்பாலும் இளங் குற்றவாளிகளாக மாறுவதில்லை. சில வேளைகளில் இத்தகையோரும் இளங் குற்ற நடத்தையில் ஈடுபடச் செய்கின்றனர். ஆனல், இத்தகையோரின் எண்ணிக்கை, அமைதி குலைந்த மனவெழுச்சியினை உடைய ஆண் பெண்பிள்ளைகளின் எண்ணிக்கையினைவிட மிகவும் குறைவாகவே உள்ளது. இதைப்போன்றே, சிறந்த மனவெழுச்சிப் பொருத்தப் பாட்டினையுடைய இளம் குற்றவாளிகளைவிடப், பெற்றோருடன் மனப்போராட்டங்களைக் கொண்டுள்ள இளங் குற்றவாளிகளின் எண்ணிக்கை மிக அதிகமாக உள்ளது. மேற்கண்ட உண்மைகளை ஹீலியும் பிரான்னரும் (Healy and Bronner) வெளியிட்டுள்ளனர்.

இவ்வாறு நாம் அறிந்திருக்கும் உள இயக்கி (Psycho Dynamics) நியதிகளின் அடிப்படையிலும், மருத்துவ நேர்முகப் பேட்டிகள் மூலம் ஆய்ந்து சேகரித்த குறிப்புகளின் அடிப்படையிலும், இளங் குற்றநடத்தைக்கான' காரணங்களை நாம் உடலியல், உளவியல், சமூகவியல் சார்ந்த காரணிகளாகப் பகுக்கலாம். இவற்றில் உட லியல், சமூகவியல் சார்ந்த காரணிகளைவிட, உளவியல் சார்ந்த காரணிகளே மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தனவாகவும் செல்வாக் கினையுடையனவாகவும் காணப்படுகின்றன. ஆனல், எந்த ஒரு குற்றவாளியிடத்தும், இத்தகைய காரணிகள் எல்லாம் ஒன்றி ணைந்து செயல்படுவதன் கூட்டு விளைவாகவே இளங் குற்ற நடத்தை ஏற்படுகின்றது என்பதனை நாம் மனத்தில் கொள்ள வேண்டும்.

**உடலியங்கில் காரணிகள் (Physiological Factors):**

குளுயெக்கும் குளுயெக்கும் (Glueck and Glueck) தங்கள் ஆய்வின் அடிப்படையில் இளங் குற்றநடத்தைக்கும், உடலமைப்பு

வகைக்கும் இடையே தொடர்புள்ளது என உத்தேசித்துள்ளனர். தசைபுடைத்த உடலமைப்புடையவர்கள் (Mesomorphs) இளங் குற்றவாளிகளில் அதிகமாகவுள்ளனர் என அவர்கள் கண்டறிந்த னர். இதனை விளக்குங்கால், இது ஒரு சமூக எதிர்பார்ப்பின் காரணமாக இருக்கலாம் எனவும், நல்ல உடற்கட்டு உடையவர்கள் சுறுசுறுப்பான நடத்தையினைக் கொண்டிருக்க வேண்டுமென எதிர் பார்க்கப்படுவதால், அவர்கள் அதைப்போன்றே இருக்க முயல் கையில், இளங் குற்றநடத்தைகளிலும் ஈடுபட நேரிடுகின்றது எனவும், அவர்கள் கூறியுள்ளனர். எனினும் தசைபுடைத்த உட லமைப்பு உடையவர்கள் இளங்குற்ற நடத்தையோடு தொடர்பு கொண்டுள்ள அளவுக்கூறுகளில் (Dimension), குறைந்தோ மிகுந்தோ இருக்கலாம். சான்றாகப் பல்வகைப்பட்ட உடலமைப்பு உடையவர்களில் உகந்த அளவில் எழுச்சியுறுதலின் தன்மை (Optimal level of arousal) வேறுபட்டு இருக்கலாம். திராஷரின் (Thraser) முற்காலத்திய கருத்தும், கோஹனின் (Cohen) அண்மைக் காலத்திய கருத்தும் கூட்டாளிக் குழுவினது இளங் குற்ற நடத்தையின் முக்கியப் பணியானது, உணர்ச்சியூக்கத்தினையும், கிளர்ச்சியினையும் (High-arousal) தோற்றுவிப்பதே என வலி யுறுத்துகின்றன. மேலும், உகந்த அளவு எழுச்சியுறுதலில், இயற்கையாகவோ, அனுபவத்தின் வாயிலாகவோ மாறுபட்டிருப்ப வர்கள், இளங் குற்றவாளிகளாக உருவாகும் சாத்தியக் கூறுகளிலும் நிகழ்ச்சித் தகவிலும் (Probability) மாறுபட்டிருக்கலாம். அதிக அளவில் எழுச்சியுறுபவர்கள், தூண்டல்களை மிகவும் நாடுபவர் களாகவும், மிகவும் சுறுசுறுப்பாகச் செயல்படுபவர்களாகவும் உள்ளதால் இவர்கள், இளங் குற்றநடத்தையில் ஈடுபடுவதற்கு மிகுதியான மனச்சார்பினை உடையவர்களாக இருக்க இடமுண்டு. எனவே, இளங் குற்றநடத்தைக்கான காரணங்களில், உடலியல் சார்ந்த காரணிகளும் முக்கியப் பங்கினை வகிக்கின்றன என்பதனை நாம் அறியலாம்.

**உளவியற் காரணிகள் (Psychological Factors) :**

இளங்குற்ற நடத்தையினைத் தோற்றுவிப்பதற்கான, உள வியல் காரணிகளைப் பற்றி ஆராய முற்பட்ட உளவியலார், இவ் வகையில் எண்ணற்ற காரணிகளைக் கண்டறிந்துள்ளனர். உளப் பகுப்பாய்வாளர்கள் (Psycho-Analysts) வாழ்க்கையின் தொடக்க காலங்களில், குறிப்பாக மூன்று வயதிற்குட்பட்ட காலங்களில், அநேகமாக முதல் வயதில், குழந்தை தன் தாயின் அன்பினைப் பெறாவிட்டால், அது அக் குழந்தையின் பிற்காலத்து இளங் குற்ற நடத்தைக்கு அடிப்படையாக அமையக்கூடும் என்று கருது கின்றனர். மேலும், அவர்களைப் பொறுத்தவரை, இளங் குற்ற

வாளியின் வாழ்க்கையில் இன்பக் கொள்கையானது (Pleasure-Principle) மிகையான செல்வாக்கினைக் கொண்டுள்ளது. இளங் குற்றவாளி தன் தேவைகளை உடனே நிறைவேற்றவும், உடனே இன்பத்தினை அனுபவிக்கவும் முற்படுகின்றான். எனவே, அவன் தன் உளத்துடிப்புகளுக்கு எளிதில் இலக்காக நேரிடுகின்றது. ஃபிரைட் லாண்டரைப் (Fried Lander) பொறுத்தவரை, இளங் குற்ற நடத்தைக்கு மூன்று காரணங்கள் உள்ளன. அவை, புலன் தூண்டல்களின் வலிமை, அகத்தின் (தன்னுணர்ச்சி) (Ego) வலிமைக் குறைவு, மேலகத்தின் (Superego) சுதந்திரமின்மையும் வலிமைக் குறைவும் ஆகும். இளங் குற்றவாளியால், தன் நடத்தைகளின் விளைவுகளைப் புரிந்துகொள்ள முடிவதில்லை. மேலும், அவன் தன்னுடைய உளத்துடிப்புகளையும், தேவைகளையும் அறநெறி சார்ந்த வழிகளில் கட்டுப்படுத்த இயலுவதில்லை. இவ்வாறு மெய் நிலை உண்மைகளையும், அறநெறி நோக்கத்தினையும் அவன் பின்பற்ற இயலாததனால், இளங் குற்றநடத்தைக்கு ஆளாகநேரிடுகின்றது.

பல்வகைப்பட்ட இளங்குற்றவாளிகள், குற்றமற்றோர், நரம்புப் பிணியினர், இயல்பு நிலையினர், குழந்தைகள் போன்றோரின் உளவியல் தன்மைகளைப் பற்றி ஆராயப் பல ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. இவைகளில் பல, இளங் குற்றவாளியின் ஆளுமைக்கும் குற்றமற்றோரின் ஆளுமைக்கும் இடையே குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் இருப்பதை எடுத்துக்காட்டியுள்ளன. இவர்களின் ஒரு சில ஆளுமைத் தன்மைகள், குடும்பச் சூழ்நிலையிலிருந்து தோன்றுவனவாகக் காணப்படுகின்றன. சான்றாக, இளம் குற்றவாளிகள் அதிகாரம் கொண்ட ஆண்களிடம் பொருந்தி நடப்பதில் அவர்களையொத்த குற்றவாளிகளல்லாத கட்டுப்படுத்தப்பட்ட குழுவினரைவிடப் பெரும் கடினங்களைக் காண்கின்றனர். நரம்புப் பிணியின் காரணமாகத் தனித்துச் செயல்படும் இளம் குற்றவாளிகள் சிலர், தங்கள் தாயினிடம் குழப்பமுள்ள உறவுகளைப் பெற்றிருந்தனர் எனவும், பெரும்பான்மையினரில் அத்தகைய உறவுகள் காணப்படவில்லை எனவும் ஆய்வுகள் காட்டியுள்ளன. (Richardson and Roebuck). இளம்குற்றவாளிகளைக் குற்றமற்றோரின் உடன்பிறந்தோருடன் ஒப்பிட்டு ஆய்ந்ததில், இளங் குற்றவாளிகள் அதிகக் குழப்பமுள்ள மனவெழுச்சிகளைப் பெற்றிருந்தனர் என்று கண்டறிந்தனர். அவர்களுடைய இந்த உளஉலைவுகள், அவர்களிடத்து இளங் குற்றநடத்தை தோன்றுவதற்கு முன், அவர்கள் தங்கள் பெற்றோருடன் கொண்டிருந்த உருக்குலைந்த உறவினால் ஏற்பட்டிருந்தவை என்றும் கண்டறியப்பட்டது. குளூயெக்கும் குளூயெக்கும் (Glueck and Glueck), *11* முதல் *17* வயதினையுடைய 500 இளங் குற்றவாளிகளோடு அதே எண்ணிக்கை

யினையுடைய குற்றமற்றோரினை ஒப்பிட்டு ஆய்ந்ததில், இளங் குற்ற நடத்தைக்கான முக்கியக் காரணம் விரும்பத்தகாத குடும்பச் சூழ்நிலையேயாகும் என்ற முடிவிற்கு வந்தனர். இளங் குற்ற நடத்தைக்கு அடிப்படையாகவுள்ள உளவியல் காரணிகள் சில கீழே விளக்கப்பட்டுள்ளன.

**அறிவு சார்ந்த காரணிகள் (Intellectual Causes) :**

இளம் குற்றவாளிகள் அறிவுக்கோளாறுள்ளவர்கள் (Mental defectives) என்றும், அவர்களிடம் உடல், நுண்ணறிவு சார்ந்த இருவகைக் கோளாறுகளும் உள்ளன என்றும் பொதுவாகக் கருதப்பட்டு வந்தது. இவ்வகையில் நம் நாட்டில் ஆய்வுகள் ஏதும் நடத்தப்படவில்லை யெனினும், அமெரிக்க நாட்டில் நடத்தப்பட்ட முற்கால ஆய்வுகள் இளம் குற்றவாளிகளில் 84 சத வீதத்தினர் அறிவு குன்றியவர்கள் (Feeble-minded) எனக் காட்டியுள்ளன. சமீபத்திய ஆய்வுகள், இக் கருத்தினை உறுதிப்படுத்தவில்லை. உண்மையான அறிவுக்கோளாறுக்கும் இளங் குற்ற நடத்தைக்கும் நேரிடையான காரண, காரியத் தொடர்பு ஒன்றும் காணப்படவில்லை. எனவே குற்றநடத்தையானது, குற்றவாளியின் முழுமையான ஆளுமைத் தன்மையுடன் தொடர்பு கொண்டிருப்பதே யொழிய நுண்ணறிவுடன் மட்டும் தனித்த தொடர்பினைக் கொண்டிருக்கவில்லை.

இந்தியாவில், இளங் குற்றவாளிகளைப்பற்றிச் சமீபத்தில் நடத்தப்பட்ட ஆய்வுகள், இளங் குற்றவாளிகளில் பெரும்பாலோர் அறிவுக்கோளாறு அற்றவர்களாயிருப்பினும், பெரும்பான்மையான சாதாரணப் பிள்ளைகளைவிட, இக் குற்றவாளிகள் குறைந்த அளவு நுண்ணறிவினையே பெற்றிருக்கின்றனர் எனக் காட்டியுள்ளன. எனினும், உயர்ந்த நுண்ணறிவினையுடையோர் சிலரும் குற்றவாளிகளாகக் காணப்படுகின்றனர். இவ்வகையில், நம் நாட்டில் பெருமளவில் ஆய்வுகள் ஏதும் நடத்தப்படாவிடினும், குறைந்த அளவில் செய்யப்பட்ட ஆய்வுகள், இளம் குற்றவாளிகளில் நுண்ணறிவு ஈவின் பரவல் 40 முதல் 120 வரையாகவும், அதன் சராசரி 90 ஆகவும் உள்ளது எனக் காட்டியுள்ளன. சாதாரணப் பிள்ளைகளின் சராசரி நுண்ணறிவு ஈவு, 100 ஆக இருக்கையில், இளம் குற்றவாளிகளின் சராசரி நுண்ணறிவு ஈவானது 85 என பர்ட்டும் (Burt), 83 என உதயசங்கரும், 92·5 என மெர்ரிலும் (Merril) தங்கள் ஆய்வுகளின் மூலம் அறிவித்துள்ளனர். எனவே, இந்த அறிக்கைகளின் மூலம், இளம் குற்றவாளிகளின் சராசரி நுண்ணறிவு ஈவு சாதாரணப் பிள்ளைகளின் நுண்ணறிவு ஈவினைவிடக் குறைவாகவே உள்ளது என்

பதனை அறியலாம். மேலும், இம் முடிவுகள் இளம் குற்றவாளிகள் பொதுவாக அறிவுக்கோளாறற்றவர்கள் என்றும், சராசரியினை விடக் குறைந்து மட்டுமேயுள்ளனர் என்றும் காட்டுகின்றன. இந்த ஆய்வுகளில் காணப்பட்ட குறிப்பிடத்தக்க உண்மை, நுண்ணறிவிற்கும் குற்றநடத்தையின் வகையினத்திற்கும் இடையேயுள்ள தொடர்பேயாகும். நுண்ணறிவு மிகுந்தோர் திருடுதல், ஏமாற்றுதல், போலிக் கையெழுத்திட்டு மோசடி செய்தல் போன்ற குற்றங்களில் ஈடுபடுவதாகவும், நுண்ணறிவு குறைந்தோர் சூதாடுதல், பிச்சையெடுத்தல், முறையற்ற பாலின நடத்தை போன்ற குற்றங்களில் ஈடுபடுவதாகவும் காணப்பட்டன.

இளங் குற்ற நடத்தை, கல்வியில் பின்தங்கிய நிலையுடனும் நேரிடையாகத் தொடர்பு கொண்டிருக்கின்றது என இளம் குற்றவாளிகளைப் பற்றிய இந்திய ஆய்வுகள் காட்டியுள்ளன. பள்ளி வாழ்க்கையில் மனநிறைவினை அடையாத பின்தங்கியுள்ள பிள்ளை, விரும்பத்தகாத வழிகளில் தன் பின்தங்கிய நிலையினை ஓரளவிற்கு நிவர்த்தி செய்துகொள்ள முற்படுகின்றது. நம் நாட்டுப் பள்ளிகள், தனிப்பட்டவர்களின் தேவைகளை நிறைவேற்றும் வகையில் இயங்குவதில்லை. இதன் விளைவாக, அறிவு குன்றிய ஒருவன் பள்ளி வாழ்க்கையில் தோல்வியினையும் மன முறிவினையும் அடையும்போது, தன்னைத் தன் கற்பனை உலகத்தினுள் இருத்திக்கொண்டோ, வகுப்பில் குறும்புத்தனம் மிகுந்து செயல்பட்டோ, பள்ளிக் கள்ளத்தில் ஈடுபட்டோ, திருடியோ, வன்முறையில் ஈடுபட்டோ, தீங்கு விளைவித்தோ மனநிறைவினைப் பெற முயற்சிக்கின்றான்.

## குற்ற உணர்வும் தவிப்பும் (Guilt feelings and Anxiety) :

மனவெழுச்சி விரைப்புகளினால் ஏற்படும் தவிப்பு, தான் அறிந்திராத பொருள்களின்பாலான அச்சம் ஆகியவை பெரும்பாலும் குற்ற நடத்தைகளைத் தோற்றுவிக்கலாம். ஆனால், குற்ற நடத்தை, குற்றவாளியினைத் தண்டனைக்குள்ளாக்கும் சூழ்நிலைக்கு எடுத்துச் செல்வதால், இக் குற்ற நடத்தைகளினால் தவிப்புணர்ச்சி அதிகமாகுமேயொழியக் குறையாது. ஆதலால் தவிப்புணர்ச்சியினை வெல்வதற்காகக் குற்ற நடத்தைகள் தோன்றுகின்றன எனும் கருத்துப் புதிராகத் தோன்றுகின்றது. எனினும் தவிப்புணர்ச்சியானது, சில வேளைகளில் குற்ற நடத்தைகளில் ஒருவனை ஈடுபடச் செய்கின்றது. இப் புதிரான தன்மையினை விளக்கும் பொருட்டு, உளக்குண முறையினர் (Psychotherapists) பல்வேறான கருத்துகளை, பல்வித இளங் குற்றநடத்தைகட்கும் பொருந்துமாறு தந்துள்ளனர். தவிப்பு மிகுந்தவன், தன் குற்ற

உணர்வின் காரணமாக, தான் தண்டிக்கப்பட வேண்டும் என்ற நனவிலிக் குறிக்கோளினால் தூண்டப்பட்டு, தனக்குப் பயன்படாத பொருளினைக் கவனமில்லா வகையில் திருடுகின்றான். இதற்காக அவன் பிடிக்கப்பட்டு, தண்டிக்கப்பட்டால் அவனுடைய குற்ற உணர்வின் காரணமாக அவனிடம் உண்டாகியிருந்த தண்டனைக் குள்ளாக வேண்டுமெனும் தனது நனவிலி விருப்பம் நிறை வேற்றப்படுகின்றது. இதன் மூலம், அவன் தன் குற்ற உணர்வி லிருந்து நீங்கி, உளவியல் சார்ந்த மன நிறைவினை அடையப் பெறுகின்றான். மேலும், திருடுவதனால் ஏற்படும் உணர்ச்சியூக்கம், குற்றவாளியினுள் தவிப்பினால் ஏற்பட்டிருக்கும் விரைப்புகளை மறைக்கவும் பயன்படுகின்றது (Counter-irritant). இச் செயல், உடலில் எங்காவது ஏற்பட்டிருக்கும் காயத்தில் மருந்து தடவுவ தனால் ஏற்படும் வலியினை உதட்டினை இறுகக் கடித்து மறைப்பது போலாகும்.

பாதுகாப்பின்மையும் தாழ்வு மனப்பான்மையும் (Insecurity and Inferiority) :

பாதுகாப்பற்ற உணர்வின் காரணமாக ஓர் இளையோன் திருட நேரிடுகின்றது. அவ்வாறு அவன் தான் திருடிய பொருள் களின்வழி, தன் குழுவின் ஒப்புதலினையும், அங்கீகாரத்தினையும் பெறவும் முடிகின்றது. இதனால் பாதுகாப்பற்ற உணர்வினை யுடைய இளையோன் குற்ற நடத்தைகளில் மேலும் ஈடுபட முனை கின்றான். இவ்வாறு தான் செய்வதன் காரணமாகத் தன் குழு வினர் தன் துணிச்சலினையும் திறமையினையும் பாராட்டுவர் என அவன் நம்புகின்றான். தாழ்வு மனப்பான்மை, தன்னைப் பற்றிய மோசமான கருத்து, தவறான வாழ்க்கைக் கருத்துகள் ஆகியவை யும் இத்தகைய நடத்தைகளை ஊக்குவிக்கலாம். பாதுகாப்பற்ற உணர்ச்சியுடையவன், பாதுகாப்புணர்ச்சியினைப் பெறும்பொருட்டு நனவிலித் தூண்டல்களால் உந்தப்பட்டு, குழப்பமான நடத்தை களில் ஈடுபடுகிறான். இத்தகைய நடத்தைகட்கிடையில் குற்ற நடத்தைகளும் ஏற்படுகின்றன.

பெரும்பான்மையான இளங் குற்றவாளிகளிடம் தாழ்வு மனப் பான்மை காணப்படுகின்றது. ஹீலியும் பிரான்னரும், தாங்கள் ஆய்விற்குட்படுத்திய இளம் குற்றவாளிகளில் பாதிக்கு மேற்பட் டோர் தாழ்வு மனப்பான்மையினைக் கொண்டிருந்ததனையும், அதற்கடுத்து, பாதுகாப்பற்ற உணர்ச்சியினையும், குடும்பத்தினால் புறக்கணிக்கப்பட்ட உணர்ச்சியினையும் பெற்றிருந்ததனையும் தெரி வித்துள்ளனர். மேலும், மூன்றில் ஒரு பங்கினர், தங்கள் தேவை கள் குலைக்கப்பட்டதனை உணர்ந்திருந்தனர். அதே அளவினர்,

உடன்பிறந்தோரிடைப் பொறுமையினையும் பகையினையும் கொண்டிருந்தனர். எனவே, தாழ்வு மனப்பான்மை, பாதுகாப்பின்மை, பொறுமை, தங்கள் தேவைகள் நிறைவேற்றப்படாததன் விளைவில் தோன்றும் குலைக்கப்பட்ட உணர்ச்சி ஆகிய மனவெழுச்சிப் பிரச்சினைகள் இளங் குற்றவாளிகளிடம் வெகுவாகக் காணப்படுகின்றன. ஆதலால், பாதுகாப்பின்மையினாலும், புறக்கணிக்கப்பட்ட, குலைக்கப்பட்ட உணர்ச்சிகளினாலும் உண்டாகும்; பிறரால் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கான தேவையின் எதிர்வினையாக இளம் குற்ற நடத்தை தோன்றுகின்றது. இளங் குற்றநடத்தையானது ஒரு எதிர்ப்புணர்ச்சியாகவும், தாக்கு மனப்பான்மையின் வெளிப்பாடாகவும் இருக்கின்றது. சாதகமற்ற சூழ்நிலையினைத் தகர்க்கவும், உடைக்கவும், அன்றி மாற்றியமைக்கவும் இத்தகைய நடத்தை ஏற்படுகின்றது. இந்தக் கிளர்ச்சியானது தனியனின் அடிப்படை உரிமைகளையும், தேவைகளையும் நிறைவேற்ற மறுக்கும் சமூக நிலைகளுக்கு எதிராக ஏற்படுவதால், இளங் குற்றநடத்தை அதன் வகையில் இயல்பான நடத்தையிலிருந்து மாறுபட்டிருக்கவில்லை என்றும், ஆனால் அது அளவில் மட்டுமே மாறுபட்டிருக்கின்றது என்றும் குப்புசாமி (Kuppuswamy) கருதுகின்றார்.

விரோதமும் வெறுப்பும் (Hostility and Resentment) :

பாதுகாப்பின்மையின் விளைவாக விரோத உணர்ச்சியும், வெறுப்புணர்ச்சியும் ஏற்பட்டு, அவற்றின் காரணமாகக் குற்ற நடத்தைகள் ஏற்படலாம். வெறுப்பின் இடப்பெயர்ச்சியினாலோ, தான் கைது செய்யப்பட்டதனாலோ, கைது செய்யப்படலாம் என்ற அச்சத்தினாலோ, தாங்கள் ஒன்றிணைந்த உணர்ச்சியினைக் கொள்ள முடியாத சமூகத்தின் சின்னங்களே சட்டங்களும், காவல் அதிகாரிகளும் (Police) என இவர்கள் கருதுவதனாலோ, சட்டத்திற்கு எதிரான விரோத மனப்பாங்குகள் உண்டாகி, அதன் விளைவாகப் பயனற்ற குற்றநடத்தைகள் ஏற்படுகின்றன. இந் நடத்தைகளை நாம் பயனற்றவை என்று கூறினாலும், உண்மையில் இவை பயனற்றவையல்ல. மேற்போக்காகப் பயனற்றவையாக இவை காணப்படினும், வெறுக்கப்படும் சமூகத்தினைத் தாக்குவதற்கு ஏற்ற உளவியல் சார்ந்த நோக்கங்களாகப் பயன்படுகின்றன என்று ஜாக்ரி (Zachry) என்பார் கருதுகின்றார். சமுதாயத்திலுள்ள உரிமைக் குறைவினாலும் வாழ்க்கைத் தேவைகளின் இழப்பினாலும், இன்னும் வேறு பல நிலைகளினாலும் விரோதமும் வெறுப்பும் உண்டாகின்றன. ஆனால், இத்தகைய உணர்வுகள் வேறுபட்ட பல காரணங்களினாலும் தோன்றலாம். எனவே, ஒரு குழந்தையின் நல்ல வளர்ச்சிக்கு அதனிடம் பாது

காப்புணர்ச்சியும், அன்புணர்ச்சியும், சார்புடைமையும் தோன்ற வேண்டியது அவசியமாகும்.

ஸ்டாட் (Stott) என்பார் 'இளங் குற்ற நடத்தையின் வாயிலாகக் குழந்தை தன் பெற்றோர்களின் கவனத்தினை ஈர்க்கவும், அவர்களுக்கு எதிராகத் தன் எதிர்ப்பினைத் தெரிவிக்கவும் முனைகின்றது' என்று கூறுகின்றார். இத்தகைய குற்ற நடத்தைகளின் மூலம் குழந்தை தன் பெற்றோர்கட்கு ஒரு படிப்பினை கற்றுக் கொடுக்க முயல்கின்றது. குழந்தை தன் பெற்றோர்கள் சிரமப்படவும் வருத்தப்படவும் வேண்டும் என விரும்புகின்றது. ஆதலால் தான் இளங் குற்ற நடத்தைகளைத் திருத்துவதற்குக் கடினமான முறைகளைப் பயன் படுத்துதல் சிறந்ததல்ல. ஏனெனில், இம் முறைகள் குற்றநடத்தைகளைத் திருத்துவதற்குப் பதிலாக, அவற்றை இன்னும் தீவிரமாக்கும் எதிரிடையான விளைவுகளைத் தோற்றுவிக்கின்றன. ஆதலால், பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளின் தேவைகளை நன்கறிந்து, அவர்களுக்குப் போதுமான அன்பினையும் அங்கீகாரத்தினையும் தந்து, அவர்களின் ஆழ்ந்த அடிப்படைத் தேவைகளைப் பூர்த்திசெய்யும் வகையில் செயல்பட வேண்டும்.

பாலினப் பொருத்தப்பாட்டுக் கோளாறுகள் (Sexual maladjusments) :

பாலினப் பொருத்தப்பாட்டுக் கோளாறுகளினால் ஏற்படும் விரைப்புகள் பல்வகைக் குற்றநடத்தைகளைத் தோற்றுவிக்கலாம் என உளப்பகுப்பாய்வாளர்களும், உளக்குணமுறையாளர்களும் கருதுகின்றனர். திருடுவதற்காக ஓர் இல்லத்தினில் நுழையும் போதும், பொருள்களுக்குத் தீ வைக்கும்போதும் புணர்ச்சி உச்சநிலை இன்பத்தினை (Orgasm) அனுபவித்ததாக, எண்ணற்ற ஆண் பிள்ளைகளைப் பற்றிய நேர்முகப் பேட்டிகளும், தனியாள் வரலாறுகளும் அறிவிக்கின்றன.

சூழ்நிலையின். உளவியல் காரணிகள் (Psychological aspects of Environment) :

சூழ்நிலையிலுள்ள உளவியல் சார்ந்த காரணிகள், சில வேளைகளில் இளம்குற்ற நடத்தைக்கான தன்மைகளைத் தோற்றுவிக்கின்றன. ஏதோ நோக்கில், இளையோர் கூட்டாளிக் கூட்டமாக ஒன்று கூடினால், அந்த ஒன்றுகூடுதலே குற்ற நடத்தையினைத் தோற்றுவிக்கும் உளவியல் சார்ந்த நிலையாகச் செயல்படத் தூண்டுகிறது என்று நியூமெயர் (Neumeyer) கூறுகின்றார். ஆனால், நன்கு வரையறை செய்யப்பட்ட, ஆக்கபூர்வமான நோக்கில் இளையோர் ஒன்றுபடும்போது இத்தகைய குற்ற நடத்தைகள்

ஏற்பட இடமில்லை. சான்றாக, ஒரு கால்பந்து அணியினை உருவாக்கும் பொருட்டோ, பொழுதுபோக்கு நடவடிக்கையிலுள்ள பொதுவான ஆர்வத்தின் பொருட்டோ ஒன்று கூடிய கூட்டாளிக் குழு, தன் நோக்கத்தின் பால் செயல்படுவதில் தன் நேரத்தினையும் சக்திகளினையும் செலவழிக்கின்றது. ஆதலால், இத்தகைய குழு குற்ற நடத்தையில் ஈடுபட இடமில்லை. ஆனால் நோக்கமெதுவுமின்றிக் கூடும் கூட்டாளிக் குழுவானது சலிப்புணர்ச்சியினையும் பெற்று, ஏதாவதொரு நோக்கத்தினை நாடுகையில், துணிச்சலுள்ள செயல்களின் பால் விருப்பங்கொண்டு குற்றநடத்தையின் பால் செல்கின்றது. இதனையே தமிழ்மறையும்,

"நிலத்தியல்பான் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு
நிலத்தியல்ப தாகும் அறிவு"

எனக் கூறுகிறது.

ஒரு கூட்டாளிக் குழு தன் போக்கினில் இத்தகைய நடத்தைகட்கு இழுத்துச் செல்லப்படுவதற்கு எந்த ஒரு நோக்கமும் அற்றிருப்பதும் ஒரு காரணமாகும் என்கிறார் டாப்பன் (Tappan). சூழ்நிலையிலுள்ள, உளவியல் காரணிகட்கும் குற்றநடத்தைக்கும் இடையே மிகுந்த தொடர்புள்ளது என்பது இதனால் தெளிவாவாகின்றது. எனினும் இத்தொடர்பானது குற்றநடத்தையின் சில பகுப்புகளில் தான் மேலோங்கியிருக்கும். மற்ற பகுப்புகளில் சமூகவியல் சார்ந்த காரணிகள் பெரும்பங்கினைக் கொண்டிருக்கலாம்.

3. சமூகவியல் காரணிகள் (Sociological Factors) :

இளங்குற்ற நடத்தை ஏற்படுவதில், சமூகப் பொருளாதார நிலைகளும் பெரும் பங்கினை வகிக்கின்றன. குற்றநடத்தை தனியனுக்கும், சமுதாயத்திற்கும் இடையேயிருக்கும் முரண்பாட்டின் காரணமாக ஏற்படுகின்றது. முதனிலைக் காரணிகளான குறைபாடுள்ள உடல், உள்ளத் தன்மைகள் ஒரு குறிப்பிட்ட மனப்பான்மைக்கான இயற்சாதக நிலையுடன் (Predisposition) இணைந்து இயங்கும் போது, ஒரு பிள்ளையில் குற்றநடத்தைக்கான தன்மைகள் ஏற்படலாம். ஆயினும் சமூகம், சமுதாயம் போன்ற இரண்டாந்தரக் காரணிகளே உள்ளிடைச் சாதக நிலையினை வெளிப்படையான குற்றநடத்தையாக மாறச் செய்கின்றன.

ஒரு தனியனுக்குக் குடும்பத்தில் தான் முதன் முதலில் சமூக வாழ்க்கையின் உணர்வு ஏற்படுகின்றது. குடும்பம் தான் மிகப்

பழமையான, ஆற்றல் மிகுந்த சமூக நிறுவனமாகும். எனவே, ஒரு குழந்தையின் எதிர்கால வளர்ச்சிக்குரிய அடிப்படை அமைப்பு குடும்பத்தில் தான் நிறுவப்படுகின்றது. இந்த அடிப்படை ஆதாரம், ஒருவனிடம் உறுதியற்றதாகவும் குறைவுள்ளதாகவும் இருக்குமேயானால், அவனது பிற்கால உளநல்வளர்ச்சி பாதிக்கப் பட்டு, அவன் பொருத்தப்பாட்டுக் கடினங்களுக்குள்ளாக நேரிடும். எனவே, குடும்பம்தான் மனித சமூகத்தின் அடிப்படைக் கூறாகும். குடும்ப வாழ்க்கையின் ஆதாரம் மனிதனின் உயிரியல், உளவியல் சார்ந்த தேவைகளேயாகும்.

குடும்பத்தின் பணிகள் பலவற்றினை இந் நவீன காலத்தில் வேறு பல சமூக நிறுவனங்கள் ஆற்றிவரினும், உயிரியல் உளவியல் சார்ந்த தேவைகள் பலவற்றினைக் குடும்பம் தான் நிறைவேற்ற வேண்டும். ஹாவ்லாக் எல்லிஸ் என்பார் (Havelock Ellis) தாய்ப் பாலானது குழந்தைக்கு வேறெந்த வகையிலும் எவ்வாறும் கிடைக்கப் பெறாது என்பதனை விவரித்துள்ளார். இவ்வாறே தந்தை யற்ற நிலையில் ஒருவன் இருக்கையில், அவனது முன்னிளையோர் பருவ வளர்ச்சியில், அவனது தாயானவள் மிகுந்த செல்வாக்கினைக் கொண்டிருக்கின்றாள் என உளவியலார் மெய்ப்பித்திருக்கின்றனர். பாலின உணர்ச்சிகள் குடும்பத்திற்கு வெளியில் நிறைவேற்றப் படினும், அதிலிருந்து மனவெழுச்சியின் மனநிறைவினைப் பெற இயலாது. மனிதன் ஒரு சமூக விலங்காதலால் குடும்பமற்று அவன் வாழ இயலாது. ஏனெனில், குடும்பமே தனியனைச் சமூகப் படுத்தியும், விரும்பத்தகாத நடத்தைகளில் ஈடுபடுவதிலிருந்து அவனைத் தவிர்க்கவும் செய்கின்றது. எனவே, சமுதாயத்தில் ஒரு சிறந்த குடிமகன் உருவாவது பெற்றோர்களைப் பொறுத்தேயுள்ளது. பாதுகாப்புணர்ச்சியும், அன்பும், குழந்தையின் உளத் தேவைகள் என்பதனைப் பெற்றோர்கள் நம் நாட்டில் பெரும்பாலும் அறியா திருப்பதனால் குழந்தைகள் அவற்றைச் சரிவர அடையும் வகை யில் அவர்கள் செயல்படுவதில்லை. இவ்வகையில் குழந்தைகளின் இத் தேவைகளை அவர்கள் புறக்கணிப்பதால் குறைபாடுள்ள குடும்ப உறவுகள் ஏற்படுகின்றன. இவ்வாறு போதிய நிலைத்த தன்மையினையுடைய உறவுகள் குழந்தைகளுக்கும் பெற்றோர் களுக்கும் இடையில் ஏற்படாத காரணத்தினால், நம் நாட்டு இல்லங்கள் குற்றவாளிகளையும், சமூகத்திற்கெதிரான நடத்தை களையும் வளர்க்கும் பண்ணைகளாக விளங்குகின்றன.

ஆளுமை வளர்ச்சியில் செல்வாக்கினைக் கொண்டிருக்கும் முத னிலைக்காரணிகளில் நான்கு காரணிகள் இளங் குற்றநடத்தைக்

கான தன்மைகளைப் பிள்ளைகளிடம் தோற்றுவிப்பதில் முக்கிய பங்கினைக் கொண்டிருக்கின்றன. அவையாவன :

1. இல்லத்தில் நிலவும் மோசமான ஒழுக்க நடத்தை.

2. பெற்றோர்கள் பிள்ளைகளின் பால் கொண்டுள்ள உடைமை மனப்பாங்குகள்.

3. பெற்றோர்கள் பிள்ளைகளைப் புறக்கணித்தல்.

4. குழந்தைக்கு அது பின்பற்றக் கூடிய வகையில் ஒழுக்க நெறியினையுடைய முன்மாதிரி ஒன்றும் இல்லாமை.

மோசமான ஒழுக்க நடத்தை என்பது, இல்லத்தில் மிகை யான செல்லமும், தீவிரமான கட்டுப்பாடும் கலந்திருப்பதனையும், பெற்றோர்கள் தீவிரமான கட்டுப்பாட்டினையும் ஆதிக்கத்தினையும் செலுத்துபவர்களாக இருப்பதனையும் குறிக்கின்றது. இத்தகைய சூழ்நிலையில் தனியனின் மேலகமானது (Super Ego) தீவிரமான இயல்புடையதாக மாறிவிடுகின்றது. இந்நிலையில் குழந்தை மேலோட்டத்தில் சாந்தமாகவும் நல்ல நடத்தையினை உடைய தாகவும் காணப்படினும், உண்மையில் அக் குழந்தையிடத்து உளஉலைவுகளும், கிளர்ச்சித் தன்மையும் மிகுந்திருக்கும். ஆத லால், அமைதியான, பரந்த நோக்கத்தினையுடைய குடியரசு முறையான, நிலைத்த தன்மையினையுடைய ஒழுக்க நடத்தை இல் லத்தில் நிலவுதலே, சிறந்ததும் விரும்பத்தக்கதும் ஆகும்.

பெற்றோர்கள் சிலர் பிள்ளைகளைத் தங்கள் சொந்தச் சொத் துக்களாகக் கருதி, அவர்கள் தாங்கள் விரும்பும் வண்ணமே செயல்பட வேண்டுமென விரும்புகின்றனர். இவ்வாறு குழந்தை யின் சுதந்திரத் தன்மையினைத் தீவிரமாகக் கட்டுப்படுத்துவது அதனை அடங்காத, எதிர்த்தெழுகின்ற தன்மையினையுடையதாக மாற்றிவிடுகின்றது.

பெற்றோர்களிடம் பிள்ளைகளைப் புறக்கணிக்கும் மனப்பாங்கு ஒடுங்கி இருக்கையில், அவர்கள் பால் மிகையான சரியீடு நடத்தை (Over-Compensatory Behaviour) காணப்படும். ஆனால் இம்மனப் பாங்கு வெளிப்படையாகத் தோன்றுகையில், பெற்றோர்கள் தம் பிள்ளைகளை வெகுவாகப் புறக்கணிப்பவர்களாகவும், கொடுமை யாக நடத்துபவர்களாகவும் இருப்பர். பெற்றோர்கள் பிள்ளை களுக்கு முன்மாதிரியாக விளங்க வேண்டியிருப்பதால், அறநெறி பிறழ்ந்த பெற்றோர்களின் நடத்தைகளைப் பின்பற்றும் பிள்ளைகள்,

இளங்குற்ற நடத்தையின் தன்மைகளைப் பெறுகின்றனர். நெறி கெட்ட நடத்தை, குடிப்பழக்கம், தீய பாலின நடவடிக்கைகள் ஆகியவற்றினைக் கொண்டிருக்கும் பெற்றோர்களின் பிள்ளைகள் குற்ற நடத்தைகளில் இயல்பாகவே ஈடுபடுகின்றனர் என்பதற்கான சான்றுகளுக்கும் குறைவில்லை. குழந்தைக்கு, அது பின்பற்றக்கூடிய சமூக நெறி நியதிகளும், ஒழுக்கத்திற்கான முன்மாதிரியும் தேவையாய் இருக்கின்றன. எனவே சிறந்த குறிக்கோள்களின் பால் அவனை அறிமுகப்படுத்தாவிடின், திருப்திகரமான சமூகப் பொருத்தப்பாட்டினை அவனிடம் காண்பதரிது.

நம் நாட்டில், இளங் குற்றவாளிகளைப் பற்றிய சமீபத்திய ஆய்வுகள் 46 சதவீதத்திற்கும் மேற்பட்ட இளங் குற்றநடத்தைகள், பெற்றோர், மாற்றாந்தாய் அல்லது தந்தையர், தொழிலதிபர் ஆகியோர் இளையோரிடம் நல்ல முறையில் சரிவர நடந்து கொள்ளாததன் விளைவாகவே ஏற்படுகின்றன என்று காட்டியுள்ளன. மேலும் இவ்வாய்வுகள், 34 சதவீதக் குற்றநடத்தைகள் ஏழ்மையினாலும், 23 சதவீதம் தீயவர்களின் நட்பினாலும், 66 சதவீதம் புறக்கணிக்கும், ஆதிக்கத் தன்மையினையுடைய இல்லங்களினாலும், சிதைந்த இல்லங்களினாலும் ஏற்படுகின்றன என்பதனைக் காட்டியுள்ளன. எனவே, நம் நாட்டில் இளம் குற்ற நடத்தை ஏற்படுவதற்கு முக்கியக் காரணமாக இல்லச் சூழ்நிலையே அமைகின்றது.

மணவாழ்க்கையில் பொருத்தப்பாட்டுப் பிரச்சினைகள் இக்காலத்தில் அதிகமாகிக்கொண்டு வருகின்றன. இதன் காரணமாகப் பெற்றோர்கள் தங்கள் சொந்த, தனிப்பட்ட மனவெழுச்சி, பொருளாதாரத் தேவைகளின் பிரச்சினைகளைத் தீர்ப்பதில் வெகுவாக முற்பட்டிருக்கின்றனர். எனவே, அவர்கள் தங்கள் பிள்ளைகளின் நடவடிக்கைகளில் ஈடுபடவும் கவனத்தினைச் செலுத்தவும் இயலுவதில்லை. இதன் விளைவாக, குழந்தை தன் உள்ளிடை உந்துக்களையும் தேவைகளையும் நிறைவேற்றும் பொருட்டு, தானாகவே செயல்பட வேண்டியிருக்கின்றது. மேலும், இல்லச் சூழ்நிலை ஆர்வமற்றும், விருப்பமற்றும் இருப்பதனைக் காணும் பிள்ளைகள், இல்லத்தின் தொடர்புகளிலிருந்து விடுவித்துக்கொள்கின்றனர். வெளியில், அவர்கள் தீயவர்கள் நட்பில் அகப்பட்டு விடுவதால், குற்றநடத்தைக்கு இழுத்துச் செல்லப்படுகின்றனர். இவ்வாறு, இளம் குற்றநடத்தை தீய நட்பின் காரணமாக ஊக்குவிக்கப்படுகின்றது. இதனால்தான், கோழையான குழந்தை கூட, கூட்டாளிக் குழுவின் மூலம் தைரியத்தினையும், ஊக்கத்தினையும் அடையப்பெற்று, வன்முறை நடத்தைகளிலும், எதிர்ப்பு நடத்தை

களிலும் ஈடுபட முனைகின்றது. எனவே, குடும்பச் சூழ்நிலை ஏற்றதாக இல்லாதபோது, இல்லத்திற்குப் புறத்தேயுள்ள சுற்றுப் புறச் சூழ்நிலைகள் குழந்தையின் வாழ்க்கையில் மிகுந்த செல்வாக்கினையுடையதாயிருக்கின்றன.

நம் நாட்டின் பெரும்பாலான வட்டாரங்களில், குறிப்பாகத் தாழ்ந்த வகுப்பினரும் நடுநிலை வகுப்பினரும் வாழும் இடங்களில், பிள்ளைகளின் பொழுது போக்கிற்கான வசதிகள் மிகவும் குறைவாகவேவுள்ளன. இதன் விளைவாக, அவர்களின் பொழுது போக்கு நடவடிக்கைகள் சமூகத்திற்கு எதிரான நடவடிக்கைகளாகவே ஆகிவிடுகின்றன. கூட்டாளிக் குழுக்களைப் பற்றிய துவக்க கால ஆய்வுகளில், திராஷர் (Thrasher), வைட் (Whyte), ஷா (Shaw) ஆகியோரால் செய்யப்பட்ட ஆய்வுகள் சிறப்பு வாய்ந்தவையாகும். திராஷர் என்பார், சிகாகோ கூட்டாளிக் குழுக்கள் பலவற்றினையும், வைட் என்பார், இத்தாலிய சந்திச் சிறுவர்களின் (Street-Corner Boys) கூட்டாளிக்குழு ஒன்றினையும், நெடுங் கால அளவில் ஆய்ந்தனர். மேலும், இளம் குற்றநடத்தையானது, பொதுவாக சமூக இயல்புடையது என்பதற்கு, இளம் குற்றவாளிகளுக்கான வழக்கு மன்ற (Juvenile Courts) ஏடுகளிலிருந்து அறியப்பட்ட முதற்குற்றச் செயலுக்கான எண்ணிக்கையளவுகள் ஆதாரமாக உள்ளன. சிகாகோ நகரத்து இளம் குற்றவாளிகளின் வழக்கு மன்றங்களுக்கு, ஒரு வருடத்தில் கொண்டுவரப்பட்ட ஆண்பிள்ளைகளில், 25·6 சதவீதத்தினரே குற்ற நடத்தையில் தனித்து ஈடுபட்டனர் என்றும், திருடுவதில் 11 சதவீதத்தினரே தனிமையாகச் செயல்பட்டனர் என்றும் ஷாவும், மக்கேயும் (Shaw and Mckay) குறிப்பிட்டுள்ளனர். எனவே, இளம் குற்றநடத்தையில் சமூகக் காரணிகளின் செல்வாக்கு மிகையாகவுள்ளது என அறியலாம்.

**இளம் குற்றநடத்தைக்கான உள்ளிடைத் தன்மையினைக் கண்டுபிடித்தல் (Discovering Delinquent Potentiality) :**

இளங் குற்றநடத்தைகளின் தடுப்பினைப் பற்றி வெகுவாகப் பேசப்படினும், அவற்றிற்கான உள்ளிடைத் தன்மையினை (Potentiality) உணரும்பொருட்டு முயற்சிகள் ஏதும் வெகுவாக மேற்கொள்ளப்படவில்லை. இந் நடத்தைகளுக்கான உள்ளிடைத் தன்மைகளை அடையாளங் கண்டறியும் பொருட்டு, பல சோதனைகள் இக் காலத்தில் உருவாக்கப்பட்டுள்ளன. எனினும், இளங் குற்ற நடத்தைக்கான காரணங்கள் பல்வேறுகவும், சிக்கல்கள் மிகுந்தனவாகவும் உள்ளதால் எந்த ஒரு சோதனைத் தொகுதியின் வாயிலாகவும் இதற்கான உள்ளிடைத் தன்மைகளை இனங்கண்

டறிய இயலாது. குடியினால் மயக்கமடைந்திருக்கும் இளைஞன் எவனும், ஏதாவதொரு தீய நடத்தையில் ஈடுபட இடமுண்டு. சமநிலை ஆளுமையினையுடைய ஒருவன், மிகுந்த சோர்வினை யும், தீவிரமான மனவெழுச்சியினையும் உண்டாக்கும் அனுபவங் களைத் திடீரென அடையப்பெற்றால், ஹிஸ்டீரியா போன்ற உணர்ச்சிவிண்ட நிலைகளுக்கு ஆளாக நேரிடலாம். எனவே, ஒருவனின் நிகழ்காலத் தன்மையினைக் கொண்டு, குற்றநடத் தைக்கான உள்ளிடைத் தன்மை அவனுள் உள்ளதா, இல்லையா என்பதனை நிர்ணயிப்பதில், தவறான முடிவுகளினையும் பெற இடமுண்டு. மேலும், குற்றநடத்தைக்கான எல்லாக் காரணி களையும் சோதனைகளின் மூலம் அறிய இயலாது. ஏனெனில், ஒருவனின் வாழ்க்கைச் சூழ்நிலையில் எந்த வித நிகழ்ச்சிகள் நடை பெறும் என்பதனை நாம் கணித்தல் அரிது. ஆனால் இளங் குற்ற வாளியாக மாறக்கூடியவனை நாம் முன்னரே ஓரளவிற்குக் கணிக்க இயலும்.

தனியாள் வரலாற்றினைப் பகுத்தாய்வதன் மூலம், ஒருவன் வாழ்க்கையில் ஏற்பட்டிருக்கும் சண்டித்தனங்கள், குடும்ப ஒழுக்க நெறியின் பாலான எதிர்ப்புகள், மூளைவீக்கம் (Encephalitis), சிதைந்த இல்லம், இன்னும் பல சமூகக் காரணிகளை அறிந்து கொள்ள முடியும். இதையடுத்து நேர்மைச் சோதனைகள், சட்ட திட்டங்கள், பெற்றோர்கள், தற்கொலை, ஒழுக்க நெறி போன்ற வற்றின் பால் உள்ள மனப்பாங்குகளை அறிய முற்படும் சோதனை களின் மூலம் சேகரிக்கப்பட்ட குறிப்புகளை, தனியாள் வரலாற்றின் மூலம் அறியப்பட்டவைகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, எதிர் காலத்தில் இளம் குற்றவாளிகளாக விளங்கக்கூடியவர்களை ஓரள விற்கு மாணவர் வழிகாட்டுவோர் (Student Counsellor) முன் னறிந்து கொள்ள இடமுண்டு. இவ்வாறு ஊகிக்கப்படுபவர்களை அவர்கள் அதற்கான முறைகளைக் கொண்டு நல்வழிப்படுத்தினால், பிற்கால இளம் குற்றநடத்தையினை வெகுவாகத் தவிர்க்க இயலும். இதன் பால் இக் காலத்தில் முயற்சிகள் பல மேற்கொள்ளப்படு கின்றன.

திருத்து முறைகள் (Treatment Programmes) :

ஒரு பிள்ளை இளம் குற்றவாளியாகி விடுகையில், அவனை என்ன செய்வது ? சிறைப் படுத்துதல் போன்ற தண்டனைக்குள்ளாக் குவதா, அல்லது அவனது மறுவாழ்விற்கான ஏற்பாடுகளை உரு வாக்குவதா ? தவறிழைத்தவன் அதற்கான தண்டனையினை ஏற்க வேண்டும் ; பழிக்குப்பழி வாங்கப்படவேண்டும் போன்ற பழங் காலத்து நியதிகளின் அடிப்படையில் இளம் குற்றவாளிகள் தண்

டிக்கப்படவேண்டும் என்ற கருத்து பெரும்பாலான பொதுமக்களாலும், சட்டதிட்டங்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. இதனை, இவ்வகையில் நடத்தப்பட்ட நேரிடைப் போட்டிகளும், உற்று நோக்கும் முறையும் எடுத்துக்காட்டியுள்ளன. ஆனால் இத்தகைய தண்டிக்கும் மனப்பாங்கு, தீமையினை நிலைநாட்டுவதாகவே காணப்படுகின்றது. ஏனெனில், நோயினை அமுக்கி விடுவதன் மூலம் அதைக் குணப்படுத்த முடியாது. பின்னர் அவை வேறு வழிகளின் மூலம் செயல்படத் துவங்குகின்றன. சிறைத் தண்டனைக்கான தீர்ப்பு, இவர்களின் சமூக எதிர்ப்பு நடத்தைகளை அதிகரிக்கின்றதேயொழிய, அவைகளைக் குறைப்பதில்லை. இக் காரணத்தினால்தான், பல முறை தண்டனைக்குள்ளாக்கப்பட்ட குற்றவாளிகள், தொடர்ந்து குற்றநடத்தைகளில் ஈடுபடுவதனை நாம் காண நேரிடுகின்றது. எனவே, இந்தப் பிரச்சினைக்கு, மனிதப் பண்பின் அடிப்படையிலும், பகுத்தறிவின் அடிப்படையிலும் நாம் காணவேண்டிய சிறந்த தீர்வானது, குற்றவாளியின் உள்ளிடைத் தேவைகளைக் குலைக்கும் காரணிகளைக் களைப்பதும், அவனைச் சீர்திருத்துவதுமாகும். இவ்வாறு அவனைச் சீர்திருத்தி, சமூகத்தில் அவன் தன் இடத்தினையும் தன்மானத்தினையும் பெற்று விளங்கும், மறுவாழ்விற்காக அவனை உருவாக்க வேண்டும்.

இக்காலத்தில் இளம் குற்றநடத்தைக்குத் தண்டனைக்குரிய, நிர்வாகம் சார்ந்த நோக்குகள் உள்ளனவேயொழிய, அதற்கான கல்வி சார்ந்த, உளவியல் சார்ந்த நோக்குகள் ஏதும் காணப்படவில்லை. சீர்திருத்தப் பள்ளிகள் (Approved Schools), காவல் இல்லங்கள் (Remand Homes), இளம் குற்ற வழக்கு மன்றங்கள் (Juvenile Courts) ஆகியவற்றினை நிறுவுதல், இப் பிரச்சினையின் விளிம்பினைத் தொடுகின்றதேயொழிய குற்றநடத்தைகளைக் களைந்தெறியப் பயன்படுவதில்லை. குற்றவாளிகளுக்குத் தேவையானது, சீர்திருத்தமேயொழிய, தண்டனையில்லை என்பதனையும், அவர்களைக் குணப்படுத்துவதில் எந்த ஒரு பொது நோக்கும் பயன் படாது என்பதனையும் நாம் நன்கு அறிந்து கொள்ளவேண்டும். ஒவ்வொரு குற்றவாளியும் அவனுடைய சமூகச் சூழ்நிலையின் விளைவேயாதலால், அந்தச் சமூகச் சூழ்நிலையினை மாற்ற வேண்டியது மிகவும் இன்றியமையாதது. இக்கொடிய

"நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்"

என்பதே சிறந்தது.

வழக்கமாக உபயோகிக்கப்படும் உளக்குண முறை, மறுவாழ்விற்கான திட்டம் போன்ற முறைகள் இளம் குற்றவாளிகளைத் திருத்த மேற்கொள்ளப்படினும், இக்காலத்தில் ஒரு புதிய முறை வெகுவாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. இம்முறை தனியனின் மேலகத்தினை வலுப்படுத்தும் (Super-Ego Building) வகையில் செயல்படுகின்றது. இது இளம் குற்றவாளிகளைத் திருத்தும் முயற்சியில் மிகுந்த பலனை விளைவித்துள்ளது.

இளம் குற்றவாளிகள் எல்லோரிலும் உளஉலைவுகள் வெகுவாகக் காணப்படுவதில்லை. ஆனால், ஒரு சிலரிடையே தான் இத்தகைய உலைவுகள் காணப்படுகின்றன. எனவே, உளக்குண முறையானது இக் குற்றவாளிகளின் நடத்தையினைத் திருத்தியமைப்பதில் வெகுவாகப் பயன்படுவதில்லை. குழுவழி குணப்படுத்தும் (Group Therapy) முறையின் பலனைக் கண்டறிய முற்பட்ட ஜேகப்ஸனும், விர்ட்டும் (Jacobson and Wirt), சிறைஞர்களின் பால் இம்முறை கையாளப்பட்டதனை ஒரு நீள்வகை ஆய்வின் மூலம் ஆராய்ந்தனர். இவ்வாய்வில், இம்முறை இவர்களின் நடத்தையினைத் திருத்தியமைப்பதில் நல்ல விளைவு எதனையும் ஏற்படுத்தவில்லை எனக் கண்டறியப்பட்டது. எனவே, எந்த ஒரு முறையும் எல்லாக் குற்றவாளிகளுக்கும் பயனுள்ளதாக இல்லை என்றும், சில வகை முறைகள் சில விதக் குற்றவாளிகளுக்குத் தான் பயனுள்ளதாய் இருக்கின்றன என்றும் இவ்வாய்வின் முடிவு அறிவிக்கின்றது. ஆதலால், எந்த வகை முறைகள் எத்தகைய குற்ற நடத்தைகளில் பயனுள்ளதாய் உள்ளன என்பதனைக் கண்டறிவது அவசியமானது. அதுவரை, பல்வேறு உளக்குண முறைகள் பயன்படுத்தப்பட்டு, சிலரிடம் பலனை உண்டாக்குவது போல், வேறு சிலரிடம் விபரீதத்தினையும் விளைவிக்கலாம்.

மேலகத்தினை (Super-Ego) வலுப்படுத்தும் குணமுறையில், குற்றவாளியின் ஊக்கிகளை அறிவதில் கவனத்தினைச் செலுத்துவதற்குப் பதில், குற்றவாளியினை அவன் செய்த நடத்தைக்கு அவனே பொறுப்பாளி என அறியும்படியும், அவன் தன் நடத்தையினைத் தானே திருத்தி அமைக்க முடியும் என அவன் உணரும்படியும் செய்ய முயற்சிகள் மேற் கொள்ளப்படுகின்றன. மவ்ரர் என்பார் (Mowrer) இம்முறையினை முதன் முதலில் உபயோகித்தார். பின்னர் வேறு பலர் இதனைக் கையாண்டனர்.

சமூகப் பண்பாட்டு நியதிகளின் பொருளினையும், குறிக்கோளினையும் இளம் குற்றவாளியினை நன்கு அறியச் செய்து, அவன் தன் தகுதியினையும், தன்னைப் பற்றிய பொறுப்புணர்வினையும்

அவனைப் பெறச் செய்தால் தான் குணமாக்கும் முறையில் நல்ல பலனை உருவாக்க இயலும். இம்முறையின் பலனைக் குறுகிய காலத்தில் மதிப்பிட இயலாது. எனினும், கிளாஸ்ஸர் என்பாரைப் (Glasser) பொறுத்தவரை, இம்முறையின் விளைவு ஊக்கமூட்டுவ தாய் உள்ளது என அறியலாம். எனினும், எந்தவித குணமாக்கும் முறையினைக் கையாண்டாலும், இந்தத் தீவிர, தேசிய, சமுதாயப் பிரச்சினையினைக் குறைக்கும் வழி, இத்தகைய நடத்தை ஏற்படாத வண்ணம் தவிர்ப்பதேயாகும்.

தடுப்பு முறைகள் (Prevention) :

இளம் குற்றநடத்தை ஏற்படா வண்ணம் தவிர்க்க உதவும் முறைகள் பயனுள்ளவையாக இருக்க வேண்டுமேயானால், இல்லத்தினையும், பள்ளியினையும் அவற்றின் பொறுப்பினை உணரும்படி செய்யவேண்டும்.

இளம் குற்றவாளிகளை நன்கு கட்டுப்படுத்தவும், குணமாக்கவும் ஏற்ற மிக முக்கியமான செயலாக அனுபவத்தின் அடிப்படையில் தோன்றுவது, பெற்றோர்களுக்கு அறிவு புகட்டுதலும் கல்வியளிப்பதுமேயாகும். பெற்றோர்கள் பிள்ளைகளின் மனவெழுச்சித் தேவைகளை உணராதிருக்கும் வரை, இளம் குற்றவாளிகளை உருவாக்குவதில் இல்லம் பெரும்பங்கினைக் கொண்டிருக்கும். மேலும், பள்ளியில் ஆசிரியர்—மாணவர் உறவு சிறப்பாக அமைய வேண்டியது அவசியமாகின்றது. இக்காலத்துப் பள்ளிகள் ஒரு முழுமையான குழுவின், பொதுவான உள்ளத் தேவைகளை நிறைவேற்றும் பொருட்டு செயல்படுகின்றனவேயொழிய, தனிப்பட்டவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் பொருட்டு அவை கவனத்தினைச் செலுத்துவதில்லை. இதன் விளைவாக, திறமை குறைந்தவர்கள் படிப்பில் பின்தங்கிய நிலையிலிருத்தல், மேம்பட்ட திறமுடையோர் தங்கள் திறமைகளை நன்கு சோதிக்கும் வண்ணம் பள்ளிப்படிப்பு அமையாதிருத்தல் போன்றவற்றின் காரணமாக சமூகத்திற்கெதிரான நடத்தைகள் தோன்றுகின்றன. இல்லம், பள்ளி போன்ற இந்த இரண்டு காரணிகளுடன், சுற்றுப்புறச் சூழ்நிலையானது குழந்தையின் பொழுது போக்கிற்கான வசதிகளைக் கொண்டிருந்தால், இளம் குற்றநடத்தையின் பிரச்சினைகளை நாம் வெகுவாகத் தீர்க்க இயலும். இந்தச் சிக்கலான பிரச்சினைக்கு, கட்டுப்பாடு, தண்டனைகளின் மூலம் தீர்வினைக் காண்பது மிக எளிதாகத் தோன்றுவதால், பலர் இத்தகைய முறைகளை விரும்புகின்றனர். மாறாக, வன்முறைத் தண்டனைகள் இளம் குற்றவாளியின் சமூகத்திற்கெதிரான புரட்சியினை இன்னும் தீவிரமாக்கி

விடும். ஆதலால், இத்தகைய பழங்கால முறைகளைக் கையாளுதல் சிறந்ததல்ல.

இல்லமும் பள்ளியும் இளம் குற்றநடத்தையினைத் தவிர்ப்பதில் முதன்மையான பொறுப்பினைக் கொண்டிருப்பினும், இவற்றின் இயக்கங்களுடன் மற்ற ஏற்பாடுகளும் செய்யப்படவேண்டியது அவசியமாகும். போதுமான விளையாட்டுத் திடல்கள், ஊக்கமூட்டும் சமய, மன்ற நடவடிக்கைகள் ஆகியவற்றிற்கான ஏற்பாடுகள் செய்து தரப்படவேண்டும். இதன் பொருட்டு, குடிசைப் பகுதிகளை மாற்றியமைக்கும் வாரியங்கள் (Slum Clearance Board) போன்ற பெரும் திட்டங்களைத் தமிழக அரசு மேற்கொண்டிருப்பது பாராட்டிற்குரியதாகும். மேலும், பிள்ளைகளுக்குப் பொழுது போக்கிற்கான வசதிகளை அதிகரிக்கத் தனியார் துறைகளும், அரசும் முனைந்துள்ளன. பிள்ளைகள் தெருக்களிலும், தெருக்களின் சந்திகளிலும் கூடி விளையாடுவதைத் தவிர்க்கும் பொருட்டு, அவர்கள் விளையாடுவதற்கேற்ற விளையாட்டுத் திடல்களையும், பூங்காக்களையும் ஆங்காங்கே அமைக்க நகரமைப்புத் திட்டத்திலும் வசதிகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், இளையோரின் கூட்டாளிக் கூட்டங்கள், சிறுவர்கள் கழகம் (Boy's Club) போன்றவைகளின் மூலம் ஒன்றிணைக்கப்பட்டு, பிள்ளைகள் போதுமான கண்காணிப்பிலும், மேற்பார்வையிலும் விளையாடவும், பொழுது போக்கு நடவடிக்கைகளில் ஈடுபடவும் வாய்ப்புகள் தரப்பட்டு வருகின்றன. இந்தக் காரணிகளெல்லாம் ஒன்றிணைந்து செயல் பட்டால், அவை இளம் குற்றநடத்தையினைத் தவிர்ப்பதற்குத் துணையாக விளங்கும். குழுவினைச் சார்ந்திருக்கும் விருப்பம் முன்னிளையோர் பருவத்துச் சிறுவர், சிறுமியர்களிடத்தும், இளையோர் பருவத்து ஆண், பெண், பிள்ளைகளிடத்தும் மிகுந்து காணப்படுகின்றது. ஆக்கபூர்வமான இலக்குகளைக் கொண்ட, நன்கு ஒருமுகப்படுத்தப்பட்ட, நன்கு கண்காணிக்கப்படும் சமூக அமைப்புகள், இளம் குற்றநடத்தையில் அதிகமாக ஈடுபடும் சிறு குழுக்கள் உருவாவதனைத் தவிர்ப்பதற்கு உதவியாயிருக்கும். எனவே, வளர்ச்சிப் பருவத்தில் எந்த ஒரு குழந்தையும் பாதுகாப்பான, ஆக்கபூர்வமான குடும்ப உறவுகளைப் பெற்று, பள்ளியில் ஊக்கமுள்ள மன நிறைவான, அனுபவங்களை அடைந்து, அவனுடைய உடல், அறிவாற்றல், மனவெழுச்சித் தேவைகளை நிறைவேற்றப் போதுமான வாய்ப்புகளைப் பெற்றிருந்தால் இளம் குற்றவாளியாக மாற இடமில்லை.

**அதிகாரச் சுருக்கம் :**

இளங் குற்றநடத்தை பழங்காலந்தொட்டு நிலவி வரும் ஒரு சாபக்கேடாக இருந்து வருகிறது. எத்தகைய குற்றத்திற்காக

பெரியோர் தண்டிக்கப்படுகிறுர்களோ, அதே குற்றத்தைச் சிறுவர்கள் செய்யுங்கால், அதனைச் சிறியோர் நெறி பிறழ்வு அல்லது இளங் குற்றநடத்தை என்கிறோம். தொழில்மயமாக்கம், நகர்ப்புறமாக்கம், விரைவான சமூக மாற்றங்கள், ஏற்றத்தாழ்வு நிறைந்த பொருளாதார நிலை, சிதைந்த குடும்பங்கள் ஆகியவற்றின் விளைவே இது.

கலகம் செய்தல், கொலை செய்தல், கொள்ளையடித்தல் போன்ற இளங் குற்றநடத்தைகள் கடந்த சில ஆண்டுகளில் மிகவும் அதிகரித்துள்ளன. குழந்தைகள் ஏழு அல்லது எட்டு வயதினை அடையும் போது இளங் குற்றநடத்தைக்கான வித்திடப்படுகிறது. இது சுதந்திரமடையத் துடிக்கும் இளையோர் பருவத்தில் தீவிரமடைகிறது. இளங் குற்றநடத்தை உள்ளோரை பலவகையாகப் பிரிக்கலாம்.

குற்றநடத்தை மரபு நிலையின் பாற்பட்டதன்று என்பதை அறிவியல் அடிப்படையில் கூறலாம். எனினும், உடலியக்கம் சார்ந்த கோளாறுகள் இளங் குற்றநடத்தையை ஊக்குவிக்கின்றன. சிக்கல்களைக் கொண்ட மனவெழுச்சிக் காரணிகள் இல்லாதிருக்கையில் உடல் கோளாறுகள் மட்டுமே குற்றநடத்தை ஏற்படுவதற்குக் காரணமாக இருக்க இடமில்லை. குற்றநடத்தைக்கான காரணங்களில் ஏழ்மையானது பெரும் பங்கு கொண்டிருக்கின்றது. இளங் குற்றநடத்தைக்கும், நுண்ணறிவிற்கும் இடையே எதிரிடைத் தொடர்பாடு இருப்பதைப் பல ஆய்வுகள் காட்டியுள்ளன. ஆனால் நுண்ணறிவு மிக்க இளங் குற்றவாளிகள் தங்கள் குற்றம் கண்டுபிடிக்க முடியாவகையில் செய்வதால், அவர்கள் எண்ணிக்கையினின்று விடப்பட்டிருக்கலாம். இளங் குற்றநடத்தைக்கும், உடலமைப்புக்குமிடையே தொடர்பிருப்பதை குளுயெக் கண்டறிந்தனர்.

இளங் குற்றநடத்தையினைத் தோற்றுவிப்பதற்கான, உளவியல் காரணிகளைப்பற்றி ஆராய முற்பட்ட உளவியலார், இவ்வகையில் எண்ணற்ற காரணிகளைக் கண்டனர். இளங் குற்றநடத்தைக்கான முக்கிய காரணம் விரும்பத் தகாத குடும்பச் சூழ்நிலையே ஆகும் எனத் தெரிகிறது. நம் நாட்டில் செய்த ஆய்வு ஒன்றிலிருந்து, இளங் குற்றவாளிகளின் நுண்ணறிவு ஈவின் பரவல் 40 முதல் 120 வரை இருப்பதை அறியலாம்.

மனவெழுச்சி விரைப்புகளும், தவிப்புணர்வும் குற்றநடத்தைகளைத் தோற்றுவிக்கலாம். தன் குழுவின் ஒப்புதலையும், அங்கீகாரத்தையும் பெறுவதற்காகப் பாதுகாப்பற்ற உணர்வுடைய ஒருவன்

பிறழ்நெறி நடத்தையில் ஈடுபடுகிறான். மேலும், இவ்வகையில் தாழ்வு மனப்பான்மையும் முக்கிய காரணமாகிறது. பாதுகாப் பின்மையின் விளைவாக விரோத உணர்ச்சியும், வெறுப்புணர்ச் சியும் ஏற்பட்டு, அவற்றின் காரணமாகக் குற்றநடத்தைகள் ஏற் படலாம். பாலினப் பொருத்தப்பாட்டுக் கோளாறுகளினால் ஏற் படும் விரைப்புகள், பல்வகைக் குற்றநடத்தைகளைத் தோற்றுவிக்க லாமென்றும், சூழ்நிலையிலுள்ள உளவியல் சார்ந்த காரணிகள், சில வேளைகளில் இளங் குற்றநடத்தைக்கான தன்மைகளைத் தோற்று விக்கின்றன என்றும் ஆய்வுகள் மூலம் தெரிகிறது. நெறிபிறழ் நடத்தைகள், பெற்றோர், மாற்றாந்தாய் அல்லது தந்தை, தொழி லதிபர் ஆகியோர் இளையோர்களிடம் சரிவர நடந்துகொள்ளா மையால் ஏற்படுகிறது என்பது நம் ஆராய்ச்சிகளிலிருந்து அறிய லாம். நல்ல பொழுது போக்கு வசதிகள் குறைவும் ஒரு காரண மாகும்.

சிறியோர் நெறிபிறழ்வினைத் தடுக்கும் முறைகளாக பல்வேறு வழிகள் கூறப்படுகின்றன. இளங் குற்றநடத்தையினர் தண்டிக்கப் படவேண்டும் எனக் கூறுவாரும் உளர். சீர்திருத்தப்பள்ளிகள், காவல் இல்லங்கள், இளங் குற்றவழக்கு மன்றங்கள் ஆகியவற்றினை நிறுவுதல் இப்பிரச்சினையின் ஒரு பகுதியை மட்டுமே சரிசெய்யும். எனவே, இக்கொடிய நோயின் அடிப்படையை அறிந்து, நோயின் தன்மையைத் தெரிந்து, அதைக் குணப்படுத்துகின்ற முறைகளின் அணுகு முறை, பயன் போன்றவைகளை அறிந்து, நாம் அதற்கான சிகிச்சையைச் செய்யவேண்டும்.

இல்லமும், பள்ளியும், இளங் குற்றநடத்தையினைத் தவிர்ப்பதில் முதன்மையான பொறுப்பினைக் கொண்டிருப்பினும், இவற்றோடு சமூகமும், அரசும் ஒத்துழைக்கவேண்டும். எனவே வளரும் பரு வத்திற்கான மனவெழுச்சித் தேவைகள் நிறைவேறுவதற்கான வாய்ப்புகளைப் பெற்றிருப்பின், ஒருவன் இளங் குற்றவாளியாகவும், நெறி பிறழ்ந்தவனாகவும் ஆவதற்கான சாத்தியமில்லை.

# மேற்கோள் நூற்பட்டியல்

## (Bibliography)


1. Anderson, H. H. ed, (1959) Creativity and its cultivation. New York : Harper.

2. Aram, M. (1966) Kumara Ullam,, Madras: Bureau of Tamil Publications.

3. A Survey of research in Psychology (1972) A project sponsored by the Indian Council of Social Science Research (ICSSR), New Delhi. Bombay: Popular Prakashan.

4, Barron, F. (1965) The Psychology of Creativity, in New directions in Psychology-II. New York: Holt, Rinehart and Winston.

5. Brooks, F. D. (1929) The Psychology of adolescence. Boston: Houghton Mifflin.

6. Cannon, W. B. (1932) The wisdom of the body. New York: Norton.

7. Cole, L. (1954) Psychology of adolescence (4th ed.) New York: Rinehart.

8. Conklin, E. S. (1935) Principles of Adolescent Psychology. New York: Henry Holt.

9. Cropley, A. J. (1967) Creativity. London: Longmans.

10. Crow, L. D. and Crow, A. (1956) Adolescent development and adjustment. New York: Mc Graw-Hill.

11. Freeman, F. S. (1962) Theory and practice of Psychological testing. New York: Holt, Rinehart and Winston.

12. Garrison, K. C. (1956) Psychology of adolescence (5th ed.) Englewood cliffs, N. J: Prentice- Hall.

13. Garrison, K. C. (Tamil translation by Renga Rajan, T. R., 1964) Psychology of adolescence (Ilayyor Ulaviyal) Vols. I & II. Madras: Bureau of Tamil Publications.

14. Getzels, J. W. and Jackson, P. W. (1962) Creativity and intelligence. New York: Wiley.

15. Goodenough, F. L. and Tyler, L. E. (1959) Development Psychology. New York: Appleton-Century Crofts.

16. Gordon, I. J. (1970) Human Development: Readings in research. Bombay: Taraporewala Sons.

17. Gowan, J. C., Demos, G. D. and Torrance, E. P. ed. (1967) Creativity: its educational implications. New York: John Wiley.

18. Grinder, R. E., (1963) Studies in adolescence. New York: Macmillan.

19. Gruber, H. E. Terrell, G. and Wertheimer, M. ed. (1962) Contemporary approaches to creative thinking. New York: Atherton Press.

20. Helson, H. and Bevan, W. (1964) Contemporary approaches to Psychology. New York: Van Nostrand Reinhold Co.

21. Horrocks, J. E. (1951) The Psychology of adolescence. New York: Houghton-Mifflin.

22. Hurlock, E. B. (1955) Adolescent Development. New York: McGraw-Hill.

23. Jersild, A. T. (1957) The Psychology of adolescence. New York: Macmillan.

24. Kawin, E. (1963) Later childhood and adolesence. New York: Macmillan.

25. Kinsey, A. C., Pomeroy, W. B. and Martin, C. E. (1948) Sexual behaviour in the human male. London: W. B. Saunders.

26. Kinsey, A. C., Pomeroy, W. B. and Martin, C. E. (1953) Sexual behaviour in the human female. London: W. B. Saunders.

27. Kuhlen, R. G. (1963) The Psychology of adolescent development. (2nd ed.) New York: Harper and Row.

28. Kuppusamy, B. (1961) An introduction to social Psychology. Bombay: Asia Publishing House.

29. Lowenfeld, V. and Brittain, W. L. (1964) Creative and Mental growth. London: Collier-Macmillan.

30. MacKinnon, D. W. (1970) Creativity: a multifaceted phenomenon in Roslansky, J. D. (ed.) Creativity: a discussion at the Nobel Conference. London: North Holland Publishing Co.

31. Medinnus, G. R. and Johnson, R. C. (1969) Child and Adolescent Psychology. New York: John Wiley.

32. Mednick, S. A. (1962) The associative basic of the creative process. Psychol. Rev., 69, 220-232.

33. Morgan, C. T. and Stellar, E. (1950) Physiological Psychology. (2nd ed.) New York: McGraw-Hill.

34. Paramesh, C. R. (1970) Value orientations of creative persons. Psychological studies, 15, 108-113.

35. Paramesh, C. R. (1971) Value orientations of creative high school students. J. Ind. Acad. Appl. Psychol., 8 (1 & 2), 46-49.

36. Paramesh, C. R. (1971) Adaptation of Wallach-Kogan Creativity instruments and the relationship of creativity and intelligence. Ind. J. Psychol., 46(1), 1-11.

37. Paramesh, C. R. (1972) Creativity and Personality. Madras: Janatha Book House.

38. Pikunas, J. (1961) Human Development: a science of growth. New York: McGraw-Hill.

39. Postman, L. and Egan, J. P. (1949) Experimental Psychology: an introduction. New York: Harper.

40. Staton, T. F. (1963) Dynamics of adolescent adjustment. New York: Macmillan.

41. Taylor, C. W. ed. (1964) Widening horigons in creativity. New York: Wiley.

42. Terman, L. M. (1938) Psychological factors in marital happiness. New York: McGraw-Hill.

43. Torrance, E. P. (1962) Guilding creative talent. Englewood cliffs, N. J. Prentice-Hall.

44. Wallach, M. A. and Kogan, N. (1965) Modes of thinking in young children. New York: Holt, Rinehart and Winston.

45. Wechsler, D. (1944) The measurement of adult intelligence. Baltimore: Williams and Wilkins.

46. Woodworth, R. S. and Schlosberg. H. (1955) Experimental Psychology. New York: Henry Holt.

47. Zubek, J. P. and Solberg, P. A. (1954) Human Development, New York: McGraw-Hill.

48. Thiruvalluvar (200. B.) Thirukkural.

# கலைச்சொல் அகராதி

## (Glossary)

### அ

அகமுகத் தன்மை — Introversion
அக நோக்கு — Introspection
அக முகன் — Introvert
அக்குள் முடிகள் — Axillary hairs
அச்சம் — Fear
அஞ்சல்வழி குறிப்புச் சேகரித்தல் — Mailing Technique
அடிநாஅழற்சி — Tonsilitis
அடிப்படை ஊன்ம ஆக்கச் சிதைவு மாறுபாடு — Basal Metabolism
அண்டகோசம் — Scrotum
அண்டங்கள் — Testicles
அருகாமை நிலை — Propinquity
அபாக்ரைன் வியர்வைச் சுரப்பிகள் — Apocrine sweat glands
அருந்தனித் தன்மை — Uniqueness
அருந்திறப் பிள்ளைகள் — Gifted Children
அழகியல் — Aesthetics
அழகியல் சார்புத் தன்மை — Aestheticism
அழுத்தம் — Stress
அளவிற்கு மீறிய செல்லம் — Pampering
அளவீடு — Measurement
அறநெறி — Morality, Ethics
அறிவுக் கோளாறு — Mental defect
அறிவுக்கூர்மை — Ingenuity
அறிவுத்திறன் — Intellect

அறிவுத்திற அமைப்பின் மாதிரி — Structure of Intellect Model
அனுகூலங்கள் — Facilitations
அனுபவம் — Experience
அன்பு — Love

ஆ

ஆக்கச் செயற்பாங்கு — Creative Process
ஆக்கச் சூழ்நிலை — Creative Press
ஆக்கத்திறமுடையவன் — Creative Person
ஆக்கத்திறம் — Creativity
ஆக்கபூர்வமான சாதனைகள் — Creative Achievements
ஆக்க மனநிறைவின்மை — Constructive Discontent
ஆக்க விளைவுப் பொருள் — Creative Product
ஆட்ரினலின் — Adrenalin
ஆட்ரினல் — Adrenal
ஆண் இன உறுப்பு — Penis
ஆண்ட்ரொஜன் — Androgen
ஆதிக்க உணர்வு — Dominance
ஆதிக்கத் தலைமை — Autocratic Leadership
ஆய்ந்தறி சிந்தனை — Critical Thinking
ஆய்வு — Investigation, Study
ஆர்வம், அக்கறை — Interest
ஆர்வ விருப்பத்தின் படிநிலை — Level of Aspiration
ஆலோசனை தந்து வழிகாட்டல் — Counselling, Guidance
ஆல்பா அலைகள் — Alpha Waves
ஆளுமை — Personality
ஆளுமை மதிப்பீட்டு ஆராய்ச்சி நிறுவனம் — Institute of Personality Assessment & Research (I.P.A.R.)
ஆற்றல் — Capacity

இ

இசைவிணக்கம் — Flexibility
இச்சைச் செயல்கள் — Voluntary Activities
இடம் பெயர்தல் — Locomotion
இடைவினை — Interaction
இதயம், நெஞ்சுப்பை — Heart
இயக்க வளர்ச்சி — Motor Development
இயக்கவிணக்கம் — Motor Co-ordination
இயக்கிகள் — Dynamics

| | |
|---|---|
| இயங்கு சக்தி | Dynamic Strength |
| இயல் நிகழ்ச்சி | Phenomenon |
| இயல்பாயியங்குந் தன்மை | Spontaneity |
| இயல்புநிலை நிர்ணய முறை | Normative Survey |
| இயற்சார்பு, முற்சார்பு | Pre-disposition |
| இயற்பியல் | Physics |
| இயைபுக் கொள்கை | Associative Conception |
| இயைபு மூலகங்கள் | Associative Elements |
| இரண்டாந்தரப் பாலினத் தன்மைகள் | Secondary Sex Characteristics |
| இராணுவ ஆல்பா சோதனை | Army Alpha Test |
| இராணுவ பீடா சோதனை | Army Beta Test |
| இலக்குகள், குறிக்கோள்கள் | Goals, Ideals |
| இளங்குற்றத்து உள்ளிடைத் தன்மை | Delinquent Potentiality |
| இளங்குற்ற நடத்தை | Juvenile Delinquency |
| இளங்குற்ற வழக்கு மன்றங்கள் | Juvenile Courts |
| இளங்குற்றவாளி வகைகள் | Delinquent Types |
| இளையோர் பருவம், இளமை | Adolescence |
| இளையோன் | The Adolescent |
| இனப்பெருக்கம் | Procreation, Re-production |
| இனப்பெருக்க உறுப்புகள் | Reproductive Organs |
| இன்பக் கொள்கை | Pleasure Principle |

உ

| | |
|---|---|
| உகந்த அளவில் எழுச்சியுறுதல் | Optimal level of Arousal |
| உடலியல் | Physiology |
| உடல் உருத்திரிபு | Physical Deformity |
| உடற்கூறுபாடு | Anatomy |
| உடன்பாட்டுத் தொடர்பு | Positive Correlation |
| உட்காட்சி | Insight |
| உட்கிடப்புறுப்புகள் | Visceral Organs |
| உட்குழு | Clique |
| உணர்ச்சி | Feeling |
| உணர்ந்தறிகின்ற தன்மை | Cognitive Ability |
| உணர்வு | Sense |
| உந்து | Drive, Urge |
| உமிழ்நீர்ச் சுரப்பி | Salivary Gland |
| உயிரகம் | Oxygen |
| உயிரக நுகர்வு | Oxygen Consumption |

| | | |
|---|---|---|
| உயிரி | — | Organism |
| உயிரியல் | — | Biology |
| உயிர்ப்பு வரைவி | — | Pneumograph |
| உயிர்ப்புவினை | — | Respiration |
| உயிர்ப்புவினைப் பாதைகள் | — | Respiratory Passages |
| உயிர்ப்புவினை விகிதம் | — | Rate of Respiration |
| உருவப் பலகைகள் | — | Form-Boards |
| உலைவுகள் | — | Disturbances |
| உள, உள்ள, மன | — | Mental, Psychological |
| உள அளவை | — | Psychometry |
| உள அளவைக் கருவிகள் | — | Psychometric Devices |
| உள இயக்கிகள் | — | Psycho-Dynamics |
| உளக்குண முறையினர் | — | Psychotherapist |
| உள நலம் | — | Mental Health |
| உள நாட்டம் | — | Aptitude |
| உளப்பகுப்பாய்வாளர் | — | Psychoanalyst |
| உளப்பகுப்பாய்வு | — | Psychoanalysis |
| உளப்போராட்டம் | — | Conflict |
| உள மருத்துவம் | — | Psychiatry |
| உள மின்னோட்ட மானி | — | Psycho-Galvanometer |
| உள வயது (உ. வ.) | — | Mental Age (M.A.) |
| உளவியல் | — | Psychology |
| உளவியல் கருத்துப் பொருள்கள் | — | Psychological Themes |
| உளவியல்சார்ந்த விடுதலை | — | Psychological Weaning |
| உள்ளார்ந்த | — | Intrinsic |
| உள்ளிடைச் சக்தி | — | Potentiality |
| உள்ளுணர்வுத் தன்மையுடைய | — | Intuitive |
| உற்று நோக்குதல் | — | Observation |

ஊ

| | | |
|---|---|---|
| ஊக்கி | — | Motive |
| ஊக்குவித்தல் | — | Motivation |
| ஊடுருவி அறியுந் தன்மை | — | Penetration |
| ஊட்டம் | — | Nutrition |
| ஊன்மம், திசு | — | Tissue |
| ஊன்ம ஆக்கச்சிதைவு மாறுபாடு | | Metabolism |

எ

| | | |
|---|---|---|
| எடுத்துக் காட்டுகள் | — | Instances |
| எதிரிடைத் தொடர்பாடு | — | Negative Correlation |

எதிர் பாலினம் — Opposite Sex
எதிர்பாலினரிடம் ஆர்வம் — Heterosexual Interest
எதிர்வினை — Reaction
எதிர்வினைச் செயற் காலம் — Reaction Time
எலும்பு கடினமடைதல் — Ossification
எலும்புக்கூடு — Skeleton
எலும்பு முதிர்ச்சி வயது — Skeletal Age
எழுத்துப் படைப்புகள் — Writings
எஸ்ட்ரொஜன் — Estrogen

ஏ

ஏற்பு — Acceptance
ஏற்புடைமை — Validity

ஒ

ஒத்தொழுகும் நோக்கு — Desire for Conformity
ஒப்புமை — Comparison
ஒப்புடைமைகள் — Similarities
ஒரேபாலினர் உடலுறவு — Homosexuality
ஒழுக்கு — Discharge
ஒழுங்குணர்வு — Morale
ஒளிக்கதிர் — X-Ray

க

கடந்து செல்லும் சோதனை — Pass-along Test
கட்டடக்கலை வல்லுநர் — Architect
கட்டித் தழுவல் — Petting
கட்டுப்படுத்தப்பட்ட குழு — Control Group
கட்டுப்பாடும் வழிகாட்டலும் அற்ற தலைமை — Laissez-Faire Leadership
கணக்கிடும் பெரும்பொறி — Computer
கண்மணி — Pupil
கரிநீரகி — Carbohydrate
கரிய ஈருயிரகை — Carbon-di-oxide
கருத்தியற்சிந்தனை — Abstract Thinking
கருத்தியற்பாங்கு — Idealism
கருதுகோள் — Concept
கருத்துரைகள் — Opinions
கருப்பை — Uterus, Womb

| | | |
|---|---|---|
| கருவுறுதல் | — | Fertilization |
| கருவுறும் குழாய் | — | Fallopian Tube |
| கலவி, புணர்ச்சி | — | Coitus |
| கலை அளவை | — | Art Scale |
| கல்லீரல் | — | Liver |
| கல்விச் சாதனை | — | Academic Achievement |
| கவலை | — | Worry |
| கவனம் | — | Attention |
| கழிவு | — | Excretion |
| கற்பனை | — | Fantasy, Imagination |
| கற்றல் | — | Learning |
| கனசதுரம் அமைக்கும் சோதனை | — | Cube Construction Test |
| கனவு | — | Dream |
| கன்றுக்குட்டிக் காதல் | — | Calf-Love |

கா

| | | |
|---|---|---|
| காகித, எழுதுகோல் சோதனைத் தாள்கள் | — | Paper-Pencil Tests |
| காரணி | — | Factor |
| காவல் இல்லங்கள் | — | Remand Homes |

கு

| | | |
|---|---|---|
| குடிசைப்பகுதி மாற்றுவாரியம் | — | Slum Clearance Board |
| குடிசைப்புற வாழ்க்கை | — | Slum-Dwelling |
| குடிமைப் பயிற்சி | — | Citizenship Training |
| குடியரசு தலைமை | — | Democratic Leadership |
| குதப் பகுதி | — | Anal Region |
| குரல்வளைகள் முன் தள்ளியிருத்தல் | — | Adam's Apple |
| குருதியழுத்தம் | — | Blood Pressure |
| குருதியழுத்தமானி | — | Sphygmomanometer |
| குலைத்தல் | — | Thwart |
| குவிந்த சிந்தனை, கூர்த்த சிந்தனை | — | Convergent Thinking |
| குழந்தைப் பருவம் | — | Childhood |
| குழு | — | Group |
| குழுவழிக் குணப்படுத்தல் | — | Group Therapy |
| குறளன் | — | Midget Dwarf |
| குறுகிய பகுப்பாளர் | — | Narrow Categorizer |
| குறுக்குவெட்டு ஆய்வு | — | Cross-Sectional Study |

குற்ற உணர்வு — Guilt Feeling
குற்றத்தோடு தொடர்பற்ற கேள்விகள் — Control Questions
குற்றத்தோடு தொடர்புள்ள கேள்விகள் — Check Questions
குன்றிய பாலின நிலை — Hypo-Gonadal (Hypo-Genital) State

கூ

கூடரின் விருப்பத்தேர்வுப் பதிவு — Kuder Preference Record
கூட்டம் — Crowd
கூட்டாளிக் குழு — Gang
கூருணர்வுடைய — Sensitive

கே

கேள்வி நிரல் — Questionnaire

கை

கைவினை — Masturbation

கொ

கொச்சைச் சொற்கள் — Slangs
கொள்கை, கோட்பாடு — Theory

கோ

கோழைப் பொருள் — Mucus

ச

சகிப்புத்தன்மை — Tolerance
சந்திச் சிறுவர்கள் — Street-Corner Boys
சமநிலை — Stability
சமநிலையற்ற தன்மை — Instability
சம வயதினர் — Peers
சமூகம் — Society
சமூக அங்கீகரிப்பு — Social Approval
சமூக அளவை — Sociometry
சமூகத் தன்மை — Sociability
சமூகத்தன்மை போதாநிலை — Social Insufficiency
சமூக நோய்கள் — Social Pathology
சமூகப்படுத்துதல், சமூகமயமாக்குதல், சமூகத்தன்மை பெறல் — Socialization

சமூகவியல் — Sociology
சரளத்தன்மை — Fluency
சரியீடு செய்தல் — Compensation
சலிப்பு — Boredom

சா

சாதனங்கள் — Apparatus
சாதனை — Achievement
சார்புடைமை — Belongingness

சி

சிக்கல்கள் — Complexes
சிதைந்த இல்லம் — Broken Home
சித்திர விருப்பத் தேர்வுச் சோதனை — Figure Preference Test
சினம் — Anger
சினைப்பைகள் — Ovaries
சினைமுட்டை — Ovum
சிந்தனை — Thinking
சிந்தனை இயங்கும் விதங்கள் — Modes of Thinking

சீ

சீர்திருத்தப் பள்ளிகள் — Approved Schools

சு

சுண்ணகம் — Calcium
சுண்ணம் — Lime
சுரப்பிகள் — Glands
சுரப்புகள் — Secretions
சுருங்கியக்க அழுத்தம் — Systolic Pressure
சுழற்சியான — Cyclic

சூ

சூழ்நிலை — Environment
சூழ்நிலைக் கருத்துப் பொருள்கள் — Environmental Themes

செ

செரித்தல் — Assimilation
செயற் சோதனை — Performance Test
செயற்பாங்கு — Process
செரிமானம் — Digestion

சொ

| | | |
|---|---|---|
| சொல்லிலாச் சோதனை | — | Non-verbal Test |
| சொற்சோதனை | — | Verbal Test |

சோ

| | | |
|---|---|---|
| சோதனைக்குட்படுபவர் | — | Subject |
| சோதனைக் குழு | — | Experimental Group |
| சோதனைக் குறிப்புகள் | — | Data |
| சோதனைத் தொகுதி | — | Test Battery |
| சோதனை-மறுசோதனை | — | Test-Retest |
| சோதனை உட்பிரிவுகள் | — | Sub-Tests |
| சோதிப்பவர் | — | Experimenter |

டெ

| | | |
|---|---|---|
| டெல்டா அலைகள் | — | Delta Waves |

த

| | | |
|---|---|---|
| தகாதெனும் தடை, (சமூக) விலக்கு | — | Taboo |
| தகுதி | — | Competence, Fitness |
| தசை புடைத்த உடலமைப்பு | — | Mesomorphy |
| தசை யூன்மம் | — | Muscle Tissue |
| தமனி | — | Artery |
| தரவீடு | — | Rating |
| தலைமை | — | Leadership |
| தலைவர் வழிபாடு | — | Hero-Worship |
| தவிப்பு | — | Anxiety |
| தவிர்ப்பு | — | Avoidance, Prevention |
| தழுவல் சோதனை | — | Adapted Test |
| தளர்ச்சி | — | Relaxation |
| தற்படைப்புத் தன்மை | — | Originality |
| தற்றூண்டல் | — | Self Direction |
| தன்காப்புரிமைப் பட்டயம் | — | Patent |
| தனித்துவம் | — | Identity |
| தனியன் | — | Individual |
| தனியாள் வேறுபாடுகள் | — | Individual Differences |
| தன்கருத்து வலியுறுத்தல் | — | Self-Assertion |
| தன்மயமாதல் | — | Assimilation |
| தன் தரவீடு | — | Self-Rating |
| தன் துணைச் சார்பு | — | Self-Support |
| தன்மானம் | — | Self-Esteem |
| தன்மைகள் | — | Characteristics |
| தன் மைய | — | Ego-Centric |
| தன்-மெய்நிலையடைதல், தன்னை மெய்யாக்குதல் | — | Self-Actualization |

தா

தாதுப் பொருள்கள் — Minerals
தாழ்வு மனப்பான்மை — Inferiority Feeling
தானியங்கு நரம்பு மண்டலம் — Autonomic Nervous System

தி

திடீர் துரிதவளர்ச்சி — Growth spurt
திட்டமிடல் — Planning
திறமைக் கூறுபாடு — Factor-Analysis
திறம், திறமை — Ability
திறம் குன்றிய நிலை — Sub-Normality

தீ

தீர்மானித்தல் — Decision

து

துடிப்பு — Impulse
துருவி ஆராய்தல் — Exploration
துலங்கல் — Response

தூ

தூக்கத்தில் விந்து வெளிப்பாடு — Nocturnal Emission
தூக்க வியாதி — Encephalitis Lethargica
தூண்டல் — Stimulus

தெ

தெய்வீக மனநிறைவின்மை — Divine Discontent

தே

தேக்கமடைதல் — Retardation
தேவைகள் — Needs

தை

தைராய்டு — Thyroid

தொ

தொடங்கும் தன்மை — Initiative
தொடர்பாடு — Correlation
தொடர்பாட்டுக்கெழு — Correlation Co-efficient
தொழில் — Job
தொழில் திறமைகள் — Vocational Skills
தொழில்மயமாக்கம் — Industrialization
தொழில் மனநிறைவு — Job Satisfaction

தோ

தோலின் மின்தடைச் செயல்கள் — Galvanic Skin Response (G.S.R.)

**ந**

நகரமயமாக்கம் — Urbanization
நடத்தை — Behaviour, Conduct
நடப்பு வழக்கு — Fashion
நம்பகம் — Reliability
நரம்புபிணிச் சார்பு — Neurotic Tendency
நனவிலி — Unconsciousness
நனவிலி உள்ளம் — Unconscious Mind
நனவு — Consciousness

**நா**

நாகரீகப் பகட்டு — Snobbery
நாடித் துடிப்புமானி — Sphygmograph
நாட்குறிப்பு — Diary
நாய்க்குட்டிக் காதல் — Puppy-Love
நாளச் சுரப்பிகள் — Duct Glands
நாளமிலாச் சுரப்பிகள் (எண்டோக்ரின்) — Ductless Glands (Endocrine)

**நி**

நிகழ்ச்சித் தகவு — Probability
நிலைச்சக்தி — Static Strength
நினைவு — Memory

**நீ**

நீடித்த மனநிலை — Moodiness
நீரிழிவு நோய் — Diabetes
நீள்வகை ஆய்வு — Longitudinal Study

**நு**

நுகர்வோர் கல்வி — Consumer Education
நுண்ணறிவு — Intelligence
நுண்ணறிவு ஈவு (நு. ஈ.) — Intelligence Quotient (I.Q.)
நுண்ணறிவின் பரவல் — Distribution of Intelligence

**நூ**

நூதனம் — Novelty

**நெ**

நெருக்கடி எதிர்வினைகள் — Emergency Reactions
நெருக்கு — Crush
நெற்றியின் முடிகளின் வரிசையில் வெட்டுத் தோற்றம் — Calvities Frontalis Adolescentium

**ப**

பகர்கனவு — Day dream
படம் சரியமைக்கும் சோதனை — Picture Arrangement Test

படம் நிறை சோதனை — Picture Completion Test
படித்தலின் ஆர்வவெறிக் காலம் — Reading Crazy Period
படிப்புப் பழக்கங்கள் — Study Habits
படிவப் பொருள்கள் — Pattern Meanings
பண்பாடு — Culture
பண்பாட்டின் பாதிப்பற்ற சோதனை — Culture-Free Test
பண்பாட்டுக் கோலங்கள் — Cultural Patterns
பதின்வயது — Teen Age
பயன் மதிப்புகள் — Values
பரத்தைமை — Prostitution
பரந்த பகுப்பாளர் — Broad Categorizer
பரிசோதனை — Experiment
பரிமாணம் — Dimension
பரிவு — Sympathy
பலமுகக் கருத்துக் கூறுகளைக் கொண்ட இயல நிகழ்ச்சி — Multifaceted Phenomenon
பல்வரைவி — Poly graph
பழக்கம் — Habit
பள்ளி உணர்வு — School Spirit
பள்ளிக் கள்ளர்கள் — Truants
பற்றுறுதி — Loyalty

பா

பாடத்திட்டம் — Curriculam
பாடத்துடன் ஓரளவு தொடர்புடைய நடவடிக்கைகள் — Co-curricular Activities
பாடப்புற நடவடிக்கைகள் — Extra-Curricular Activities
பாதுகாப்பற்ற உணர்வு — Sense of Insecurity
பாரமீட்டர்கள் — Parameters
பாரஸிம்பதெடிக் நரம்புமண்டலம், எதிர்ப் பரிவு நரம்பு மண்டலம் — Para-Sympathetic Nervous System
பார்வை சார்ந்த சோதனை — Visual Test
பாலினம் — Sex
பாலினச் சுரப்பியைத் தூண்டும் ஹார்மோன் — Gonadotrophic (Follicle Stimulating) Harmone
பாலினத்திற்குரிய உடலமைப்பு — Sex-Appropriate Physique
பாலின பொருத்தப்பாட்டுக் கோளாறு — Sexual Maladjustment
பால் சுரப்பிகள் — Mammary Glands

பி

பிஞ்சில் முதிரும் — Precocious
பிடியூடரி — Pituitary
பிடியூடரின் — Pituitarin

பிடியூடரி அரக்கத்தன்மை — Pituitary Gigantism
பிரச்சினை — Problem
பிறழ்நிலை — Abnormal
பிறிது சார்பற்ற மாறி — Independent Variable
பிறிது சார்புள்ள மாறி — Dependent Variable
பின்வாங்குதல் — Withdrawal
பின்னிளையோர் பருவம் — Late Adolescence

பு

புணர்ச்சியின் உச்சநிலை — Orgasm
புரதம் — Protein
புலன் காட்சி — Perception
புறக்கணித்தல், ஒதுக்குதல் — Rejection
புறணி — Cortex
புறத்தேற்றுச் செய்முறை — Projective Technique
புறநிலைச் சோதனை — Objective Test
புறமுகத் தன்மை — Extraversion
புறமுகன் — Extravert
புள்ளியியல் — Statistics

பூ

பூப்பு — Puberty
பூப்புப் பகுதிகள் — Pubic Regions
பூப்புப் போக்கு — Menarche
பூப்பு முடிகள் — Pubic Hairs

பெ

பெருமூளை — Cerebrum

பே

பேட்டி காணல் — Interview

பொ

பொய்காட்டி — Deceptograph (Liedetector)
பொருத்தப்பாடு — Adjustment
பொருந்துந்தன்மை — Adaptability
பொருளுணராக் கற்றல் — Rote Learning
பொருள்படுத்தும் திறமை — Interpretative Ability
பொருள் வரையறை — Definition
பொழுதுபோக்கு மன்றங்கள் — Clubs
பொறாமை — Jealousy

போ

போலிக் கையொப்பமிட்டு மோசடி செய்தல் — Forgery

ம

மகிழ்ச்சி — Joy
மடக்கை — Logarithm

| | | |
|---|---|---|
| மட்டு மதிப்பற்ற தன்மை | — | Impertinence |
| மட்டுமீறிய கூருணர்வு | — | Over-Sensitiveness |
| மணத்திற்கு முந்திய பாலின உறவுகள் | — | Pre-Marital Sex Relations |
| மணமாகாது கர்ப்பமடைதல் | — | Pre-Marital Pregnancy |
| மணமாகாத தாய்கள் | — | Unmarried Mothers |
| மணமுறிவு | — | Divorce |
| மணி உருவ வளைவு | — | Bell-shaped Curve |
| மதிப்பீடு | — | Scoring, Evaluation |
| மத்திய நரம்பு மண்டலம் | — | Central Nervous System |
| மயிர்க்கூச்செறிதல் | — | Pilomotor Response (Goose Pimples) |
| மரபு நிலை | — | Heredity |
| மருத்துவ உளவியல் | — | Clinical Psychology |
| மருத்துவ முறை | — | Clinical method |
| மறுப்பு வாதம் | — | Negativism |
| மறு பொருள் வரையறை | — | Redefinition |
| மறுவாழ்வு | — | Rehabilitation |
| மனநிறைவு | — | Fulfilment, Satisfaction |
| மனப்பாங்கு | — | Attitude |
| மனமுறிவு | — | Frustration |
| மனவெழுச்சி | — | Emotion |
| மனவெழுச்சிக் கட்டுப்பாடு | — | Emotional Control |

மா

| | | |
|---|---|---|
| மாணவர் செயல்துடிப்பு | — | Student Activism |
| மாணவர்க்கு வழிகாட்டுவோர் | — | Student-Counsellor |
| மாதப் போக்கு | — | Menstruation |
| மாதிரிக் குழு | — | Population Sample |
| மார்பகம் | — | Breast |
| மாறி | — | Variable |
| மாற்றுப் பயன்கள் | — | Alternate Uses |

மி

| | | |
|---|---|---|
| மிகையான சரியீடு நடத்தை | — | Over-Compensatory Behaviour |
| மிருகத்தோடு புணர்ச்சி | — | Zoo Philia |
| மின்னஸோடா பல்நோக்கு ஆளுமைச் சோதனைகள் | — | Minnesota Multiphasic Personality Inventory |

மீ

| | | |
|---|---|---|
| மீட்டாய்வு | — | Review |

மு

| | | |
|---|---|---|
| முகப்பருக்கள் | — | Pimples |
| முகுளம் | — | Medulla Oblongata |
| முதனிலை | — | Primary |
| முதிர்ச்சி | — | Maturity |

முதிர்ச்சிப் பருவம் — Adulthood
முதிர்ந்தோன் — Adult
முயன்று தவறும் முறை — Trial and Error Method
முலைக்காம்பு நிலை — Papilla (Nipple) Stage
முலைக்காம்பைச் சுற்றிய கருப்புப் பகுதி — Areola
முறைப்படி அமையாத — Informal
முன்னிளையோர் பருவம் — Early Adolescence

மூ

மூச்சுவிட்டதும் எஞ்சியுள்ள காற்றின் பரும அளவு — Functional Residual
மூலக்கூறுகள், பண்புக்கூறுகள் — Components
மூளையின் மின் அலைகள் — Electro-Encephalograms (E.E.G.)
மூளைவீக்கம் — Encephalitis

மெ

மெய்நிலை — Reality
மெய்நிலைக் கொள்கை — Reality Principle
மெராக்ரைன் சுரப்பிகள் — Merocrine Glands

மே

மேம்பட்ட — Superior
மேலகத்தினை வலுப்படுத்தல் — Super-Ego Building

மொ

மொட்டு நிலை — Bud stage

லெ

லெஹ்மன் ஆர்வக் கேள்வித்தாள் — Lehman's Interest Questionnaire

வ

வகை மாதிரிச் சோதனை — Block-Design Test
வயிற்றுப்புண்கள் — Ulcers (Peptic)
வயிற்றெரிச்சல் — Envy
வரைபட வளைவு — Graphical Curve
வரம்புஎல்லைக் கருத்து — Threshold Concept
வரைகோட்டுப் பொருள்கள் — Line Meanings
வழக்கம் — Tradition
வழிகாட்டும் உளவியல் அறிவுரையாளர் — Counselling Psychologist
வளர்ச்சி — Growth
வளர்ச்சிப் பணிகள் — Developmental Tasks
வளர்ச்சி வளைவு — Growth Curve
வளர்ப்பு இல்லம் — Foster Home

வளர்ப்பு முறை — Child-Rearing Techn'que
வன்முறை நடத்தை — Aggressive Behaviour

வா

வாதாடுதல் — Argumentation

வி

விசைகள் — Forces
விடா முயற்சி — Perseverance
விந்தணுக்கள் — Spermatozoa
விந்து வெளிப்பாடு — Ejaculation
வியர்த்தல் — Perspiration
விரிவியக்க அழுத்தம் — Diastolic Pressure
விரிந்த சிந்தனை, பரந்த சிந்தனை — Divergent Thinking
விரிவாக்குந் தன்மை — Elaboration
விருப்பங்கள் — Likes
விருப்பத் தேர்வு — Preference, Choice
விரைப்புகள் — Tensions
விரோதம் — Hostility
வில்தராசு — Spring Dynamometer
விவாதித்தல் — Discussion
விழிப்புத்தன்மை — Vigilance
விளையாட்டுமுறைப் பள்ளி — Kindergarten

வீ

வீரியம் போதா நிலை — Sexual Inadequacy

வெ

வெளிச்சார்ந்த — Extrinsic
வெளிப்பாடு — Expression
வெறுப்பு — Hatred, Resentment

வே

வேதியியல் — Chemistry

ஹா

ஹார்மோன்கள் — Harmones

ஹை

ஹைபோதலாமஸ் — Hypo-Thalamus

ஸி

ஸிம்பதெடிக் நரம்பு மண்டலம்-பரிவு நரம்பு மண்டலம் — Sympathetic Nervous System

ஸெ

ஸெபேஷியஸ் சுரப்பிகள் — Sebaceous Glands

ஸ்

ஸ்டிராங்கின் தொழில் ஆர்வத் தாள் — Strong's Vocational Interest Blank